சின்ன விஷயம் தான்

1. இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததைக் குறிப்பிடும் பண்டிகையின் பெயர் என்ன?

2. 100 பவுண்டு எடையுள்ள ஒரு வாலிபனின் உடலில் எத்தனை பவுண்டு ரத்தம் இருக்கும்?

3. பர்மாவிலுள்ள ஆறுகளில் மிக நீளமானது எது?

4. ஒட்டகம் சுமார் எவ்வளவு ராத்தல் எடையைச் சுமக்க முடியும்?

5. கஜ்ஜூர் காய் என்று கடையில் விற்கப்படும் பொருள் என்ன?

6. வீடு தேடி வந்த விருந்தாளிக்காக நிலத்தில் விதைத்த நெல்லை மீண்டும் எடுத்து வந்த நாயனார் யார்?

7. ஈப்புலி என்பது (அ) ஒரு வகை மருந்துச் சரக்கு (ஆ) கருஞ்சிறுத்தை (இ) சிலந்தி வகைகளில் ஒன்று. எது சரி?

8. காலஞ் சென்ற தேவதாஸ் காந்தி, காந்திஜியின் எத்தனையாவது பிள்ளை?

9. மருத்துவ விடுதியில் ஆபரேஷன் நடக்கும் நாளில் நோயாளிக்கு ஆகாரம் தரப்படுவதில்லை. ஏன்?

10. வெண்ணெய் எடுக்கப்பட்ட, ஆனால் தண்ணீர் கலக்கப்படாத பாலை நல்ல பால் என்று விற்பது சட்டப்படி குற்றமா?

11. அகிற்கூட்டு என்பது என்ன?

12. ஊசி போடுமுன் டாக்டர் ஊசி போட வேண்டிய இடத்தில் தடவுவது என்ன திரவம்?

13. கரிகால் சோழனுக்குத் தலை நகரமாயிருந்த ஊர் எது?

14. 27 நட்சத்திரங்களில் முதல் நட்சத்திரம் அசுவினி. கடைசி எது?

15. கட்டபொம்மனின் தாய் தந்தை பெயரென்ன?

16. தேசிய கீதமான 'ஜன கண மன' பாடலை இயற்றியவர் யார்?

17 மத்திய அரசாங்க ஊழியர்களின் சம்பள விகிதங்களை வகுக்க ஏற்பட்டுள்ள குழுவின் தலைவர் யார்?

18. சில இடியோசை நீண்ட நேரத்துக்குக் கேட்பது ஏன்?

19. வெள்ளை நிற எள் உண்டா?

20. பூர்த்தி செய்க: 'இன்னா செய்தாரை ஒறுத்தல்'

*(விடைகள் 121-ஆம் பக்கம்)*

அறுபது!

வேகத்தைக் காட்டும் மெல்லிய முள்ளைக் கவனித்தான் ரத்தினம்.

அவனுடைய வலது கால் கட்டை விரலுக்குக் கட்டுப்பட்ட அந்தப் பெரிய காரின் சக்கரங்கள் நிமிடத்துக்கு ஒரு மைல் கல்லைக் கடந்தவாறு இருளைக் கிழித்துக்கொண்டு சென்னையை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தன.

புறங் கழுத்து வலித்தது. ஓயாமல் ஓடி வரும் சாலையில் நெடு நேரமாக—கோவையிலிருந்து ராணிப்பேட்டை வரை—பார்வையைப் பதித்திருந்த தன் விளைவு போலும். கழுத்தை இப்படியும் அப்படியுமாகத் திருப்பி விட்டுக் கொண்டான். சற்று இதமாக இருந்தது.

வண்டியிலிருந்த மற்றவர்களுக்குள் பேச்சு நின்று வெகு நேரமிருக்கும். 'களைப்பு, பாவம். நன்றாகத் தூங்கட்டும்,' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான் ரத்தினம். அவனுக்கு மட்டும் என்ன, களைப்பு இல்லையா? செவ்வாயன்று காலை இரண்டே முக்காலுக்கு அவனைப் படுக்கையிலிருந்து சுண்டி இழுத்ததே 'டிரங்க் கால்', அதற்கப்புறம் அவன் இன்னும் கண்ணை மூடவே இல்லை. சரியாக முப்பத்தாறு மணி நேரம் ஆகிவிட்டது.

அவன் விழிகள் எரிச்சலால் சிவப்பேறி யிருந்தன. ஆனால் மனத்தில் ஒருவித நிறைவு. தன்னிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டுப் பிறர் கவலையற்றிருக்கும்போதெல்லாம் அவனுள் அந்த சாந்தி பால்போல் சுரக்கும். மடியில் கைக்குழந்தை அயர்ந்து தூங்கும்போது தாயின் நெஞ்சில் ஊறும் அன்பு போன்றது அது.

அவனுக்குப் பக்கத்திலிருந்து ஓர் ஓசை 'கொர்' 'கொர்' என்று விட்டு விட்டு எழுந்தது. ரத்தினம் புன்னகை செய்தான். சற்றே வாயைத் திறந்தபடி ஆனந்தமாகக் குறட்டை விடுகிறானே கோவிந்தன், அவனிடம் "ஏன் இப்படிக் குறட்டை விடுகிறாய்?" என்று பிற்பாடு கேட்டால் ஒப்புக் கொள்ளவா போகிறான்? "நானாவது குறட்டை விடுவதாவது! ஒருநாளும் கிடையாது. சும்மா புரளி பண்ணுகிறீர்கள், அண்ணா" என்று சண்டைக்கு வருவான். படிப்பு விஷயத்திலும் அப்படித்தான். பி. ஏ. பட்டத்திற்காக ஒவ்வொரு 'டியூட்டோரியல்' கல்லூரியாக வட்டமிடுகிறான். ஒரு கல்லூரி மிச்சமில்லை. ஆனால் அவனுக்கும் பி. ஏ. வுக்கும் பொருத்தமில்லை என்று சாடைமாடையாகச் சொல்லிவிட்டால் போதும், சொன்னவர்களைச் சும்மா



விடமாட்டான். அவர்களுடைய அறிவாற்றல்களைப் பரிசோதித்து, வாழ்க்கை வரலாற்றை அக்கு அக்காகப் பிரித்துக் காட்டி, "தெரியாமல் சொல்லிவிட்டேன், சாமி. என்னை விட்டுவிடு," என்று கதறும்படி செய்துவிடுவான்.

படிப்பில், செந்திலை யாரும் மிஞ்ச முடியாது. தனது இளைய தம்பியைப் பற்றி நினைக்கும்போது ரத்தினத்துக்குப் பெருமையாக இருந்தது. திரும்பிப் பார்த்தான். கோவிந்தனுக்கு அடுத்தாற்போல் கதவோரமாக உட்கார்ந்திருந்த செந்திலின் கண்கள் மூடியிருந்தன.

ஆனால் அவன் அண்ணா நினைத்தபடி செந்தில் உறங்கிக் கொண்டிருக்கவில்லை. விளிம்பில்லாத கண்ணாடி செதுக்கினாற் போன்ற மூக்கின் அழகுக்கு அழகு செய்ய, அவன் கண்களை மூடிக்கொண்டு களைப்பாறிக் கொண்டிருந்தான். அவ்வளவுதான். அடிக்கொருதரம் அவன் இமைகள் திறக்கும். உடலை அசைக்காமல் தலையைத் திருப்பாமல் சூழ் நிலையைக் கவனிப்பான். அண்ணா தூங்கி விழாமல் இருக்கிறாரா, வண்டி எவ்வளவு வேகமாகப் போகிறது, மணி என்ன, ஊர் போய்ச் சேர இன்னும் எவ்வளவு நேரம் ஆகும் முதலியவற்றை மனத்துக் குள்ளேயே கணக்கிட்டுவிட்டு மறுபடி கண்ணை மூடிக்கொள்வான்.

கோவிந்தனின் குறட்டைக்கு இடையே, வேறு ஒரு சப்தம் திடீரென்று கேட்டது.

விம்மல்!

ரத்தினத்தின் கண்கள் சட்டென்று மேலே எழும்பி, முகம் பார்க்கும் கண்ணாடியை நோக்கின. இருட்டில் என்ன தெரியப்போ

ஆனால், யார், எதற்காக அழுகிறார்கள் என்பதை அறிய அவன் கண்ணாடியைப் பார்க்க வேண்டிய அவசியமில்லை.

பின் ஆசனத்தில் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் தங்கம்மாளின் அன்பணைப்பிலுள்ள துளசிதான் அழுது கொண்டிருக்கிறாள். வேறு யார்?

ரத்தினத்துக்கு என்னவோ போலிருந்தது. அவனுடைய அமைதியை இப்போது கலக்கம் கொறிக்க ஆரம்பித்து விட்டது.

துளசி வாய்விட்டு அழுதுவிட்டாலே நல்லது என்று அவனுக்குத் தோன்றிற்று. அவளோ, அத்தையின் தூக்கத்தைக் கலைத்துவிடக் கூடாது என்ற எண்ணத்தினாலோ என்னவோ, துருத்திக் கொண்டு வரும் துயரத்தைப் பலவந்தமாக திரும்ப உள்ளே திணித்துவிட முயன்று கொண்டிருந்தாள்.

"உஸ்ஸ்! இப்போது அழுது என்ன லாபம்?" என்றான் செந்தில், மெல்லிய ஆனால் உறுதியான தொனியில்.

அழுகை உடனே அடங்கிவிட்டது.

ரத்தினத்தின் கலக்கம் இரண்டு மடங்காயிற்று. தூக்கம் கெட்டுப் போன எரிச்சலில் செந்தில் பேசிவிட்டான். இலேசாகவும் சொல்லிவிட்டான், 'அழுது என்ன லாபம்?' என்று.

லாபமும் நஷ்டமும் துளசிக்கல்லவோ தெரியும்?

இரக்கத்தால் நனைந்த ரத்தினத்தின் உள்ளம், துளசிக்குத் தேறுதல் கூறத் துடித்தது. என்னவென்று கூறுவது?

'ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்' என்று துவங்கும் பழைய பாட்டைப் பாடலாம். அது ஆறுதல் ஆகாது. மாறாக, வெந்த புண்ணில் வேலைச் செருகுவதற்கு ஒப்பாகும். மாண்டுபோன தனது அப்பா—ரத்தினத்தின் மாமா—திரும்பி வருவார் என்ற நம்பிக்கை இருந்தால் துளசி ஏன் கண்ணீர் வடிக்கப் போகிறாள்? பதினைந்து வருட காலம் தனக்குத் தாயும் தந்தையுமாக இருந்த அப்பா மண்ணோடு மண்ணாகி விட்டாரே, இனி மீளமாட்டாரே என்பதை எண்ணித்தானே அவள் அழுகிறாள்! அப்புறம் "மாண்டார் வருவரோ மாநிலத்தில்!" என்று அவளுக்கு உபதேசம் செய்வது எப்படி ஆறுதல் தரமுடியும்?

'கோவையிலிருந்தபோது கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தாய். வேளா வேளைக்குச் சாப்பாடு இன்றி, நோயாளித் தந்தையைப் பாதுகாக்கும் பொறுப்பைத் தாங்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தாய். இப்போது மாமா போய்விட்டது உண்மைதான், ஆனால் அவருடன் கூட வறுமையும் போய்விட்டது. இனி சென்னையில் உனக்கு ஒரு குறைவும் இருக்காது. எங்கள் அம்மா உன் மீது உயிராக இருப்பார்கள்,' என்று கூறலாமா?

அப்படியும் கூடாது. தங்கம்மாளின்

குளுமையான குணத்துக்கு ரத்தினத்தின் நற்சாட்சி அனுவசியம் என்பது மட்டுமல்ல. மாமாவின் பொருளாதார நிலையைப் பேச்சோடு பேச்சாகக் குறிப்பிடப் போக, அது துளசியை அவமானப் படுத்திவிடும்போல் ஆகிவிடுமோ என்று அஞ்சினான் அவன்.

முன் ஆசனத்தில், ரத்தினத்துக்கும் செந்திலுக்கும் இடையில் சுகமாக உறங்கிக் கொண்டிருந்த கோவிந்தன் நிமிர்ந்து உட்காருவதற்கும், கார் ஒரு சிற்றூருக்குள் நுழைவதற்கும் சரியாக இருந்தது.

''அதோ, டீக்கடை! நிறுத்துங்கள் அண்ணா!'' என்ற கோவிந்தனின் குரலில் சுறுசுறுப்புத் தெறித்தது.

''இன்னும் கொஞ்ச தூரம்தான் இருக்கிறது. சென்னைக்கே போய் விடுவோமே?''

ரத்தினத்தின் யோசனையை மற்றவன் ஏற்கவில்லை. ''ஒரே நிமிஷ வேலை. தயவு பண்ணுங்கள், அண்ணா.''

சாலை ஓரமாக வண்டி நிற்கவும் அந்தப் பளபளப்பான காரின் ஒவ்வொரு வளைவும் டீக்கடையின் பெட்ரோமாக்ஸ் விளக்கை ஒவ்வொரு கோணத்திலிருந்து பிரதிபலித்தது.

கதவைத் திறந்த செந்தில் கோவிந்தனுக்கு வழி விட்டான். வேறு யாரும் வண்டியைவிட்டு இறங்கவில்லை. தங்கம்மாளுக்கு நல்ல உறக்கம்.

இரண்டு கண்ணாடி டம்ளர்களை ஏந்திக்கொண்டு வந்த கோவிந்தன் ஒன்றை அண்ணாவிடம் கொடுத்தான். மற்றொன்றைத் துளசியிடம் நீட்டினான்.

துளசி கண்களைத் தாழ்த்திக் கொண்டு வேண்டாமென்று தலையசைத்த போது, தளிர் விரல்களால் பாதி மறைக்கப்பட்ட அவளது உதடுகள் சற்றே குவிந்தன.

கோவிந்தன் வற்புறுத்தினான்.

''சூடாக இருக்கிறது. சாப்பிடு. களைப்பெல்லாம் போய்விடும்.''

''கண்டதெல்லாம் வாங்கித் தின்றால் களைப்பும் போகும், காலராவும் வரும், அது இப்போது தெரியாது,'' என்றான் செந்தில் வேறு பக்கம் பார்த்துக்கொண்டு.

துளசியின் முகத்தில் கெஞ்சும் பாவனையோடு பதிந்திருந்த கோவிந்தனின் கண்கள், செந்தில் பக்கம் கோபத்துடன் தாவின.

''தம்பியப்பா செந்தில்நாதா! மூணுக் கொட்டைக்கும் உனக்கும் வித்தியாசமே தெரியவில்லையேடா. டீ சாப்பிடு என்று உன்னை எவனடா கேட்டான்? உன் கொம்பத்தனமான கொள்கைகளை உன்னோடேயே வைத்துக் கொள்,'' என்று அவன் பொரிந்து தள்ளுவதற்குள் ரத்தினம் குறுக்கிட்டான்.

''சரி, நேரம் ஆகிறது, சீக்கிரம் வா.''

கையிலிருந்த டம்ளரைக் காலிசெய்த தோடு நிற்காமல், வேண்டுமென்றே கடைக்காரனிடம், ''இன்னொரு சப்கொடு ஐயா,'' என்று வாங்கிக் குடித்துவிட்டுக் காரண்டை வந்த கோவிந்தன், ''நான் ஓட்டட்டுமா அண்ணா?'' என்று கேட்டுக் கொண்டான்.

ரத்தினம் நகர்ந்து கொள்ள, டிரைவரின் இடத்தில் கோவிந்தன் அமர, கார் நகர்ந்தது.



தேநீரால் உடலெங்கும் பரப்பப்பட்ட துருதுருப்பும், செந்திலோடு பொருதிய மோதலால் எண்ணத்தில் படர்ந்த பரபரப்பும் கோவிந்தனுக்குச் சூடேற்ற, எடுத்த எடுப்பிலேயே வண்டி பறக்கத் துவங்கி விட்டது.



"கொஞ்சம் மெதுவாகப் போகலாமே?" என்று கூற வாயெடுத்தான் ரத்தினம். ஆனால் ஒன்றும் பேசாமலே மூடிக் கொண்டு விட்டான். தனது வண்டியோட்டும் திறமையில் அண்ணனுக்கு நம்பிக்கையில்லை என்று கோவிந்தன் நினைக்க அவன் இடம் கொடுக்க விரும்பாததே காரணம்.

ஆனால் சில நிமிடங்கள் வரைதான், முறுகமேறிய நரம்புகளுடனும், படபடக்கும் இதயத்துடனும், கிட்டிய பற்களுடனும், காரின் போக்கைக் கூர்மையாகக் கவனிக்க வேண்டியிருந்தது ரத்தினத்துக்கு. கோவிந்தனின் சாமர்த்தியத்திலிருந்த அவநம்பிக்கை தேயத் தேய, சௌகரியமாகச் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு அமைதியோடு அவன் சாலையை நோக்கலானான்.

கனவுலகத்திலிருந்த அவன் அன்னை ஆழ்ந்த பெருமூச்சொன்று விடுவது கேட்டது. 'மாமாவைப் பற்றிய ஞாபகம் போலும்,' என்று ரத்தினம் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

அவரை அவன் இரண்டே தடவை தான் பார்த்ததுண்டு. உயிருடன் உட்கார்ந்திருக்கும்போது ஒரு முறை; உயிரற்றுப் படுத்திருக்கும்போது ஒரு முறை. இடையில் பதினைந்து முழு [illegible]

அப்போது அவனுக்கு வயது பத்திருக்கலாம். இரண்டாம் படிவத்தில் படித்துக்கொண்டிருந்தான். கொள்ளை கொள்ளையாகச் சம்பாதிக்கும் தந்திரத்தை அவன் அப்பா இன்னும் கற்றுக்கொள்ளாத சமயம் அது. மேலும் வியாபாரத்தில் அவருக்கு நஷ்டத்தை நஷ்டம் மிஞ்சிக் கொண்டிருந்தது. மாட மாளிகைக்கும் அவர்களுக்கும் வெகு தூரம். ஒரு வாடகை வீட்டில், ஓர் இருண்ட பகுதியில் அவர்கள் ஒண்டிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ஒரு நாள் மாலை, தடதடவென்று கதவு தட்டப் பட்டது. அப்போது அம்மா வீட்டில் இல்லை. அவள், நான்கு வயதுக் குழந்தையான செந்திலைக் கூட்டிக் கொண்டு, கொஞ்சம் பசையுள்ள உறவுக்காரரிடம் ஐந்தோ பத்தோ கடன் கேட்கப் போயிருந்தாள்.

சமையலறையிலிருந்த அப்பா, "யாரென்று பாருங்களடா!" என்று கட்டளையிடுவதற்கு முன்பே, புத்தகங்களைப் போட்டபடி போட்டுவிட்டு ரத்தினமும் கோவிந்தனும் ஓடிச் சென்று கதவைத் திறந்தார்கள்.

தலைவிரி கோலமாக உள்ளே ஓடி வந்தார் ஒரு வழுக்கைத் தலை மனிதர். இடுப்பில் ஒரு மூன்று வயதுக் குழந்தை இடைவிடாமல் அழுது கொண்டிருந்தது. அதைக் கீழே இறக்கிவிட்டு, "அப்பா எங்கே?" என்று துடித்தார் அவர்.

இதற்குள், கையிலிருந்த கரியையும் கண்ணிலிருந்த புகையையும் துடைத்தபடி வெளியே வந்த அப்பா, "யாரது? சிதம்பர மூர்த்தியா!" என்றார் வியப்போடு.

"மாப்பிள்ளை!" என்று அலறிய அந்த மனிதர், அப்பாவை அப்படியே கட்டிக் கொண்டு, "என்னை மோசம் பண்ணிவிட்டாள் மாப்பிள்ளை, என்னை மோசம் பண்ணிவிட்டாள்!' என்று உரக்கப் புலம்பினார்.

சிறுவர்கள் இருவரும் திகைத்து நின்றார்கள். தங்கள் மாமாவை அவர்கள் அதற்கு முன் கண்டது கிடையாது. பெரியவர்கள் இருவருடைய முகங்களையும் மாறி மாறிப் பார்த்தும் அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை

அந்தப் பெண் குழந்தை—துளசி—தன் தந்தையின் வேட்டியைப் பிடித்து இழுத்துக்கொண்டே ஊளையிட்டுக் குழப்பத்தை மேலும் குழப்பிக் கொண்டிருந்தது.

சிதம்பரமூர்த்தியை உட்கார வைத்து ஒருவழியாக நடந்தது என்னவென்று அவரிடமிருந்து அப்பா தெரிந்து கொண்டாரோ இல்லையோ, நிலைமை தலை கீழாக மாறவிட்டது. அடங்காச் சினத்தால் உதடுகள் துடிக்க, மாமாவைப் புடைக்கப் போகிறவர்போல் அப்பா கூச்சலிடுவதைக் கண்டதும் அவர் பிள்ளைகள் நடுநடுங்கிவிட்டனர்.

இன்னும் சற்றுப் பெரியவனான பிறகுதான், வீட்டை இரண்டு படுத்திய அந்தச் சச்சரவின் பொருள் ரத்தினத்துக்கு விளங்கிற்று.

மலேயாவில் கொடுக்கல் வாங்கல் செய்து கொண்டிருந்த சிதம்பரமூர்த்தி, "தொழில் தீவிரமாக நடந்து வருகிறது. போட்ட முதல் முழுவதையும் இன்னும் சில மாதங்களில் எடுத்து விடலாம். லாபத்தில் மாப்பிள்ளையின் கால் பங்குக்குரிய ரூபாய் பதினாயிரத்தையும் அடுத்த வாரம் அனுப்பி வைக்கிறேன். அவரைக் கவலைப்படாமல் இருக்கச் சொல்லவும். துளசியும் அவள் தாயும் சுகம். ஜப்பான்காரன் இந்தப் பக்கம் தலைகாட்ட முடியாதென்று எல்லோரும் தைரியமாயிருக்கிறார்கள்," என்று [illegible]ள்ள தன் தங்கைக்குக் கடிதம் எழுதியபோது, அந்த உறுதிமொழி எல்லாம் இவ்வளவு சீக்கிரம் பொய்த்துப் போகும் என்று எதிர்பார்க்கவேயில்லை.

போட்டிருந்த சட்டை வேட்டியோடு தான் கிளம்ப வேண்டியிருக்கும் என்பதையோ, பீதியின் விளைவாக ஏற்பட்ட நெருக்கடிக்கும் கப்பலில் ஏறும் போட்டா போட்டிக்கும் தனது மனைவி பலியாகித் தன் கண்முன்பே கூட்டத்தால மிதித்து நசுக்கப் படுவாள் என்பதையோ, இதயத்தோடு இதயமாக இருபது ஆண்டுக் காலம் ஒன்றியிருந்த அவளுக்கு இறுதிச் சடங்கு செய்யக்கூடச் சந்தர்ப்பம் கிடைக்காமல் கப்பலில் தள்ளப் படுவோம் என்பதையோ அவர் எதிர்பார்க்கவில்லை.

அவற்றை ஒருகால் அவர் எதிர்பார்த்திருக்கக்கூடும் என்றே வைத்துக் கொண்டாலும், நைந்து போன தனது வாழ்க்கையின் சோகக் கதையைச் செவியுற்றதும் தனது தங்கையின் கணவர்—தங்கம்மாளுக்கென்று அவர் பாடுபட்டுத் தேடிப் பிடித்த பொன்னான மாப்பிள்ளை—அனுதாபமாக ஒரு வார்த்தை சொல்லாமல், பரிவோடு ஒரு துளி கண்ணீர் சிந்தாமல், அரக்கத்தனமாக, ஆத்திரத்தோடு, "சம்பாதித்ததை எல்லாம் தொலைத்துவிட்டு மொட்டை மரமாக என் முன்னால் வந்து நிற்க உங்களுக்கு வெட்கமாக இல்லையா?" என்று சீறுவார் என்று எந்த விதத்திலும் எதிர்பார்த்திருக்க முடியாது.

தங்கள் தந்தைக்கு அவ்வளவு கோபம் வந்து ரத்தினமும் கோவிந்தனும் அதற்கு முன் பார்த்ததே இல்லை. அன்பே வடிவான அப்பா, பொறுமைக்கு உறைவிடமான அப்பா, மறந்தும் சுடு சொல் பேசாத அப்பா—அவரா இப்படிச் சிங்கம் கர்ஜிப்பது போல் அலறுகிறார் என்று அவர்களால் நம்பவே முடியவில்லை. அடுத்தடுத்து வந்த தோல்விகளின் விளைவு அது என்பது அவர்களுக்கு அப்போது தெரியாது.

வெறித்த நோக்கும், நடைபிணப் போக்குமாய் மாமா துளசியை எடுத்



துக்கொண்டு மறைவதையும், பறக்கும்போது சுடுபட்ட பறவை போல் அப்பா பொத்தென்று சாய்வதையும் கண்டு பையன்கள் பதறினார்கள். ரத்த அழுத்த நோய் அவரது இதயத்தை இரும்புக் கரங்களால் பற்றியிருக்கும் செய்தி, அழைத்து வரப்பட்ட டாக்டரின் மூலம் வெளியாயிற்று. மைத்துனரிடம் தான் நடந்துகொண்ட மிருகத்தனமான முறையை எண்ணியெண்ணி அவர் ரத்தக் கண்ணீர் வடிப்பது அது முதல் அவருக்கு வழக்கமாயிற்று. சிதம்பரமூர்த்தி அகப்பட்டால், அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கவும் அவர் ஆயத்தமாக இருந்தார்.

கொடுமைக்குத் தண்டனையாக அவரை நோய் பீடித்தது எனக் கொண்டால், பிழை உணர்ந்து நெஞ்சார வருந்தியதற்குப் பரிசாக அதிர்ஷ்டத்தின் கடாட்சம் அவருக்குக் கிடைத்தது எனக் கொள்வதும் பொருத்தமே. உடல் நலிய நலிய, செல்வம் கொழித்தது. கடைசியில், குடும்பப் பொறுப்பை மூத்த பிள்ளையிடம் ஒப்படைத்துவிட்டு அவர் விடை பெற்றுக் கொண்டபோது, பொறுப்பைச் சமாளிப்பதற்குப் பல லகாரங்களையும் விட்டுச்சென்றார். ஆனால் கடைசிவரை, சிதம்பரமூர்த்தியின் ஞாபகத்திலிருந்து அவரால் விடுபட முடியவில்லை.

அப்பா இறந்த தகவலைத் தெரிவித்து, சென்றதை மறந்து தங்களிடம் வந்து ஒரே குடும்பமாக வாழ்ந்தால் தான் அப்பாவின் ஆத்மா சாந்தியடையும் என்று மாமாவுக்கு நேர்படக் கடிதம் எழுதி அதைப் பத்திரிகை தவறாமல் விளம்பரம் செய்தான். ரத்தினம். பயனில்லை.

அனேகமாக நம்பிக்கையை முற்றிலும் கைவிடவேண்டிய கட்டம். அப்போதுதான் கோவையிலிருந்து செய்தி வந்தது. குடும்பமாகப் புறப்பட்டுச் சென்று, உரிய முறையில் சடலத்தைத் தகனம் செய்துவிட்டுத் துளசியைக் கையோடு அழைத்து வந்தார்கள். தாங்கள் ஒரு பக்கம் செல்வத்தில் புரண்டு கொண்டிருந்த பொழுது, வேறொரு பக்கத்தில் மாமாவும் துளசி பட்ட துயரங்களைக் கேள்வியுற்று அவர்கள் உள்ளம் நெகிழ்ந்தது.

''மாடு! மாடு!'' என்று செந்தில் திடுமென எழுப்பிய எச்சரிக்கை ரத்தினத்தைத் தூக்கி வாரிபோட்டது.

ஒரு விநாடி அவன் கல்லாய்ச் சமைந்துபோனான்.

கோவிந்தனைக் கண்காணிக்க வேண்டிய அவசியமில்லை என்ற கருத்தில் அவன் பின்னால் சாய்ந்துகொண்டு யோசனையில் ஆழ்ந்தது, ஆபத்தில் கொண்டு வந்து விட்டுவிட்டது.

கார்போகக் கூடிய வேகத்தின் எல்லையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பது கோவிந்தனின் எண்ணமோ என்னவோ, ஆக்ஸிலரேட்டரை மிதிப்பதில் தன் பலம் முழுவதையும் காட்டியிருக்கிறான்.

சாலையின் நடுவே சோதனைபோல் நின்றுகொண்டிருந்த அந்தக் காளைக்காவது தன்னை நோக்கிப்பாய்ந்து வருவது உயிரை உடலினின்று பிரிக்கும் ஆற்றல் படைத்த எமன் என்று தெரிந்திருக்கக் கூடாதா? அசட்டுத்தனமாக—அதே 'சமயத்தில் கம்பீரமாக-அந்த முரட்டுக் காளை அங்கேயே அசையாமல் நின்று, தனக்கும் தனக்கு நேரக் கூடிய விபத்துக்கும் சம்பந்தமில்லாதது போல் அமைதியுடன் அவர்களை எதிர்நோக்கிப் பார்த்து கொண்டிருந்தது.

ஹாரன் சப்தம் காதைக் குடைந்தது. இன்னும் ஒரு விநாடிதான். காளைக்கும் காருக்குமிடையே சில கஜங்களே இருந்தன. விபத்து நேரும் பட்சத்தில் அது மாட்டுக்கு மட்டும் சேதமுண்டாக்காது. கார் செல்லும் திசையைத் திருப்பிவிட்டு, சாலையோரத்திலுள்ள

---

## கலப்படம்! கலப்படர்!

### விடைகள்

*இடமிருந்துவலம்:* 1. பணம், 7. ராஜாராணி, 8. [illegible]தாரம், 9. நல்லவன், 10. பாசவலை, 12. நாம். 13. கூண்டுக்கிளி 18. அம்மா. 19. புதையல். 20. என் வீடு 21. ஜெனோவா.

*மேலிருந்து கீழ்:* 1. பராசக்தி 2. காதல். 3. குமாரி. 4. சிங்காரி. 5. நீதிபதி.6. அந்தநாள் 11. சம்சாரம்.12. நானே ராஜா 14. பூம்பாவை 15. மனிதன். 15. ஜாதகம், 17. ஸ்ரீ வள்ளி.

பள்ளத்தில் இறங்கிவிடும். அல்லது மரத்தில் மோதச் செய்துவிடும்.

கோவிந்தனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. நெற்றியில் வியர்வை முத்துக்கள் அரும்ப, விழிகள் சற்றே வெளியில் பிதுங்க, சடார் என்று பிரேக்கை மிதிக்கவும் அதே சமயம் வலது பக்கம் ஸ்டீரிங்கை ஒடிக்கவும், அவன் தயாராய் இருப்பதை ஊகித்து ரத்தினம் திடுக்கிட்டான்.

கோவிந்தன் செய்ய நினைத்திருந்த காரியம் வண்டியைக் கவிழ்த்தாலும் கவிழ்த்து விடக்கூடும் என்று உணர்த்திற்று அவனது அனுபவ அறிவு.

மாட்டை நெருங்கி விட்டது வண்டி. உள்ளே இருந்தவர்கள் அனைவரும்—ஹாரன் ஓசை கேட்டு விழித்துக் கொண்ட தங்கம்மாள் உள்பட—திகிலால் மூச்சைப் பிடித்துக்கொண்டு காத்திருந்தார்கள்.

ரத்தினம் சட்டென்று ஆனால் பதட்டமில்லாமல் சற்று முன்னால் நகர்ந்து ஸ்டீரிங்கைத் தன் இரு கைகளால் பற்றிக் கொண்டு, கோவிந்தனிடம் மெதுவாக, "பிரேக்கைக் கொஞ்சமாக அழுத்து," என்று காதுக்குள் ஓதினான். பிறகு, 'அவ்வளவுதான். மாட்டின் மீது மோதி விட்டோம்' என்று முடிவு கட்டும்படியான அந்தப் பயங்கர கட்டத்தில் ஸ்டீரிங்கை லாகவமாக வலது பக்கம் திருப்பி, அடுத்த கணமே இடது பக்கமாக வளைத்து நேர் படுத்தினான்.

மயிரிழையில் உயிர் தப்பிய காளை, தனக்கு நேரவிருந்த ஆபத்தை அப்போதுதான் உணர்ந்தாற் போல், 'அம்மா' என்று சப்தமிட்டவாறு அஞ்சி ஓடுவதைப் பின்னாலிருந்த கண்ணாடி மூலம் திரும்பிப் பார்த்துத் தெரிந்து கொண்ட தங்கம்மாள், "கோவிந்தா! பார்த்து ஓட்டப்பா!" என்றாள். மிடறு விழுங்கி உலர்ந்த தொண்டையை நனைத்துக் கொண்ட துளசி நன்றியோடு ரத்தினத்தைப் பார்த்தாள். செந்தில் தெளிவாக, காரசாரத்துடன், "முட்டாள்!" என்றான்.

தனது தவறை உணர்ந்தவன் போல் கோவிந்தன் அந்த வார்த்தையை வாங்கிக் கட்டிக் கொண்டு மௌனம் சாதித்தான். முதலில் எவ்வளவுக்கெவ்வளவு துரிதமாக வண்டி பறந்ததோ அவ்வளவுக்கவ்வளவு மெதுவாக இப்போது ஊர்ந்து கொண்டிருந்தது.

"எப்பேர்ப்பட்ட அனுபவசாலியாக இருந்தாலும் எப்போதாவது ஒரு முறை விபத்து நேருவது சகஜம்தான். தளர்ச்சி அடையாதே. தைரியமாக ஓட்டு," என்று கோவிந்தனின் முதுகில் தட்டிக்கொடுத்து ரத்தினம் தைரியமூட்டிய பொழுது, "ஹ்ம்..." என்று கேலியாக முகத்தைத் திருப்பிக் கொண்டான் செந்தில்.

"இந்தத் தோட்டக்காரர் சொல்வதைக்கேட்டீர்களா அம்மா?" என்று சிரித்தபடியே மல்லிகை குவித்த பூக் குடலையை ஊஞ்சல் பலகைமீது வைத்து விட்டு உட்கார்ந்தாள் வேலைக்காரி வள்ளி.

விடிகாலையிலேயே குளித்து முழுகித் தூய வெண்மையான ஆடையுடுத்து ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த தங்கம்மாள், வெள்ளிக் கிண்ணத்தில் ஊறிக் கொண்டிருந்த காரைப் பிடித்தபடி, "என்ன சொல்கிறான் கிழவன்?" என்றாள்.

வள்ளி பூக்குடலையை ஊஞ்சல் பலகையில் கவிழ்த்ததும் மெல்லிய மணம் எங்கும் பரவிற்று. "தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்ச இப்போதுதான் தென்பாயிருக்கிறதாம் அவருக்கு. துளசியம்மா போல இன்னும் இரண்டு பேர் இந்த வீட்டுக்கு வந்து விட்டால் அப்புறம் ஒரு குறையும் இருக்காதாம்."

தங்கம்மாளின் உள்ளத்தில் ஊறிய மகிழ்ச்சி மென்மையானதொரு புன்னகையாக வெளிப்பட்டது. "பூவை நான் தொடுக்கிறேன். நீ போய்க் காப்பி தயாராகி விட்டதா, பார், பிள்ளைகளுக்குக் கொண்டுபோய்க் கொடுக்கச் சொல்."

கோவையிலிருந்து அவர்கள் சென்னைக்குத் திரும்பிக் கிட்டத்தட்ட மூன்று வாரத்துக்கு மேல் ஆகப்போகிறது. துளசியின் வருகை அந்த வீட்டின் சூழ்நிலையையே மாற்றி விட்டது தங்கமாளுக்கும் தெரியும். முதல் சில நாட்கள் வரை துளசி சோகத்தில் மூழ்கியிருந்தாள். நாளாக ஆக, சுற்றியுள்ளவர்களின் அன்பும் அரவணைப்பும் அவளுடைய பழைய நினைவுகளை அழித்து, புதியதோர் வாழ்க்கையைப் பூக்கச் செய்து விட்டன. சீவிச் சிங்காரித்து அழகு பார்க்க ஒரு பெண் இல்லையே என்பது, தங்கம்மாளை வெகு நாளாக அரித்து வந்த ஒரு குறை. அதைத் தீர்க்க வந்துவிட்டாள் துளசி.

குளியலறைக்குச் செல்லும் வழியில் ஊஞ்சலண்டை வந்த துளசி, "அத்தை! எனக்கு வெந்நீர் பழக்கமில்லை. இன்றைக்குப் பச்சைத் தண்ணீரிலேயே குளிக்கிறேன்," என்றாள்.

அதற்கு இசையவில்லை தங்கம்மாள். "மழைகாலம். ஜலதோஷம் பிடித்துக் கொண்டு விட்டால் என்ன செய்வாய்? வெந்நீரில் தான் குளிக்க வேண்டும்."

"சரி," என்று சொல்லிவிட்டு அரை மனத்துடன் அவ்விடத்தைவிட்டு அகன்றாள் துளசி.

குளித்துவிட்டுத் தனக்கெனத் தரப்பட்ட அறைக்குச் சென்று புத்தாடை அணிந்து கொண்டு வெளியே வரும்போது, கோவிந்தன் எதிர்ப்பட்டான். உடலில் டீ ஷர்ட்டும் கையில் டென்னிஸ் மட்டையுமாக மாடிப்படியிலிருந்து இறங்கி வரும்போதே கண்டு விட்டான்.

அவள் ஓடிஒளிவதற்குள், துளசி!" என்று அழைத்துக் கொண்டே வந்தவன், "ஒவ்வொரு நாளும் ஒரு புது அழகுடன் கிறாய் நீ! முந்தின நாள் மொக்காக மணம் வீசினாய். ரோஜா மாதிரி அமைதியான அழகுடன் விளங்கினாய். இன்று சூரியகாந்தி போல் கண்ணைப் பறிக்கிறாய்," என்று பாராட்டிக் கொண்டே போய் விட்டான்.

இதயம் படபடக்க, கன்னம்சிவக்க, துளசி அத்தையிடம் வந்தாள். அத்தை நீட்டிய பெரிய மாலையை எடுத்துக் கொண்டு முன் ஹாலுக்குச் சென்று, அங்கு மாட்டி வைக்கப்பட்டிருந்த படத்துக்கு—தங்கம்மாளின் கணவருடைய போட்டோவுக்கு—மரியாதையுடன் சாத்தி விட்டுத் திரும்பும்போது, செந்திலின் முதுகு தெரிந்தது. மறைவான ஓரிடத்தில் நின்று அவன் தன்னைக் கவனித்திருக்கிறான் என்று துளசி ஊகித்துக் கொண்டாள்.

செந்தில் மாடிப் படி ஏறித் தன் அண்ணாவின் அறையை அடைந்தான். கால் வருடத் தேர்விலும் தான் வழக்கம்போல் வகுப்பில் முதலாவதாக நிற்கும் செய்தியைச் சுருக்கமாகத் தெரிவித்துவிட்டுப் போனபோது, ரத்தினத்தின் உள்ளம் பூரித்தது,

குலத்தை விளக்கப் பிறந்தவன் செந்தில் என்பது அவன் கருத்து. பி. ஏ. பட்டம் பெற்றதும் செந்திலை மேல் படிப்புக்காக அமெரிக்காவுக்கு அனுப்புவதுபற்றி தான் ரகசியமாகத் தயாரித்து வைத்திருந்த திட்டத்தை நினைத்துப் பார்த்தான். வெற்றியுடன் செந்தில் திரும்பி வந்து, நாட்டில் பெரும் புகழுடன் திகழும் நாளைக் கற்பனை செய்யும்போது அவன் உடல் புளகித்தது.

அப்போது அங்கே வந்தாள் தங்கம்மாள். "ரத்தினம்! துளசிக்கென்று வாங்கின புதுப் புடவைகளை எல்லாம் எத்தனை நாளுக்குப் பெட்டியிலேயே மடித்து வைக்க முடியும்? நல்ல அலமாரியாக ஒன்றிருந்தால் தேவலை."

"அதற்கென்ன அம்மா, ஒன்று வாங்கிவிட்டால் போயிற்று. இன்றைக்கே ஆர்டர் கொடுத்துவிடுகிறேன்." என்று எழுந்து நின்று விடையிறுத்த ரத்தினத்துக்கு அப்போது தான் ஞாபகம் வந்தது.

எங்கு அலமாரியொன்று காலியாகச் செந்திலின் அறையில் கிடக்குமே?

மேஜையறையிலிருந்து சாவிக் கொத்தை எடுத்துச் சென்று, செந்திலின் அறையிலிருந்த அலமாரியைத் திறந்த போது, ரத்தினம் மலைத்து நின்றான்.

அடுக்கடுக்காகக் கணக்குப் புத்தகங்கள்! இவை யெல்லாம் என்ன? இவற்றை யார் இங்கே கொண்டுவந்து வைத்திருக்கிறார்கள்!

ஏதும் புரியாதவனாய், அவற்றில் ஒன்றை எடுத்துப் புரட்டிப் பார்த்தவன். திகைத்தான். அவர்களுடைய வரவுசெலவு சம்பந்தமான கணக்குகள் எல்லாவற்றுக்கும் நகல்கள் அந்த அலமாரிக்குள் அடங்கியிருந்தன. ஒவ்வொரு புத்தகத்திலிருந்தும், செந்திலின் திருத்தமான கையெழுத்து அவனைப் பார்த்துச் சிரித்தது.

கல்லூரி மாணவனான செந்தில், வியாபாரக் கணக்கு வழக்கில் கவனம் செலுத்துவானேன்? தன் கைப்பட இத்தனையையும் எழுதி வைத்திருக்கிறானே! அசல் கணக்கு இவனுக்கு எப்படிக் கிடைத்திருக்க முடியும்?

விநாடிக்கு விநாடி ரத்தினத்தின் குழப்பம் அதிகரித்தது. அதே சமயம் ஒரு பயங்கரமான சந்தேகமும் அவனைக் குடைய ஆரம்பித்தது.

ஒருகால், தன்மீது நம்பிக்கையில்லாமல் செந்தில் இப்படி ரகசியமாகக் கண்காணித்து வருகிறானோ?

ரத்தினத்தின் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது.

மிதித்துச் செல்வதைப் போலிருந்தது. அதன் இரைச்சல் அடங்கியதும் காளுற்றுப் பக்கம் கண்ளுேட்டம்விட்டான் பாலு.

மாட்டுக்கு வெள்ளத்திலும் நீந்த இயலும் என்று அன்று தான் கண்டான் அவன். அரைகுறை நீச்சம் தெரிந்தவனை ஆதரவோடு அணைத்துக் கொண்டு நீந்தக் கற்றுக் கொடுப்பவனைப்போல் அந்த மாட்டுக்காரப் பையனும் கூடவே வந்தான்.

மாட்டைக் கரையில் ஏற்றியதும் அவனைக் கட்டிக் கொண்டு அழுதே விட்டான் பாலு. அந்தப் பையன் என்ன சொல்லியும் கேட்காமல் தன்னுடன் வரத்தான் வேண்டும் என்று வீட்டுக்கு அழைத்து வந்தான். மாடு சற்றே நொண்டி இழுத்தாற்போல் வந்தது.

சந்தை மூட்டை கட்டி முடித்து விட்டு, வண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தார் அருணுசலம். அவரிடம் நடந்ததையெல்லாம் பாலு கூறியதும், அவர் பதறிப்போய் மாட்டை வந்து பரிசோதித்தார். அதன் பின்னங்காலை உருவிவிட்டுக் கொண்டிருந்த மாட்டுக்காரப் பையன் தலையை நிமிர்த்தவே இல்லை.

"தம்பி, நீ எங்கே இருப்பது?" என்று அவன் முகத்தை நிமிர்த்திஞர் அருணுசலம்.

அவன் கன்னங்கள் கண்ணீரால் நனைந்திருப்பதைக் கண்டதும் பதறிப் போனுர். "ஏனப்பா அழுகிருய்?"

"இல்லே, என் அப்பாவை நினைத்துக் கொண்டேன்," என்ற பையன் தன் புறங்கையில் கண்ணையும் மூக்கையும் தேய்த்துக் கொண்டான்.

"உன் அப்பா யார்? எங்கே இருக்கிருர்?"

"ஜெயிலில்."

"ஜெயிலிலா!"

"ஆமாம்."

"ஏன்!"

"எல்லாம் என்னுல்தான். கள்ளச் சாராயம் ஊரை விட்டு ஊருக்குக் கொண்டு போனுல் ரூபாய் கொடுப்பதாக யாரோ சொன்னுர்களாம். கொண்டு போய் அகப்பட்டுக் கொண்டார். எல்லாப் பழியும் அவர் மேல் விழுந்து, இப்போது ஜெயிலில் இருக்கிருர்."

"ஐயோ பாவம்! இப்போது நீதான் சம்பாதிக்கிருயா? நம் வீட்டு மாட்டையும் வேண்டுமானுல் ஓட்டிக்கொண்டு போ. ஏய், யாரங்கே? இந்தப் பையனுக்குச் சாப்பாடு போடு," என்று உள்ளே திரும்பிச் • சொல்லிவிட்டு' வண்டி வருகிறதா என்று வழி பார்த்தார் அருணுசலம்.

"இல்லே ஐயா. இதை நான் கடனை அடைக்காமல் ஓட்டிச் செல்லக் கூடாது என்று அப்பா சொல்லிவிட்டுப் போனுர்."

தூக்கி வாரிப் போட்டது அருணுசலத்துக்கு. அவர் பையன் அருகில் வந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டார். "இந்த மாட்டை உனக்கு எப்படித் தெரியும்? உன் அப்பனுக்கு எப்படித் தெரியும்?"

பையன் திக்கித் திணறிச் சொல்லிய விவரங்களிலிருந்து அருணுசலத்துக்குக் கிடைத்த விவரம் இதுதான்.

மறக்க முடியாத அந்த நள்ளிரவில் இந்த வண்டி மாட்டை அடைமானம் வைத்துப் பணம் வாங்கிப் போனுனே ஒரு பஞ்சை, அவனுடைய மகன் இவன். யார் குணமடைய வேண்டும் என்று தன் உயிருக்குயிரான வண்டி மாட்டை இழக்கத் துணிந்தானே, எவன் நலம் பெற வேண்டுமென்று சிறை செல்லவும் சம்மதித்தானே, அவன் அந்த உத்தமனின் முத்திரை பதிந்த குணக் குன்று இதோ எதிரில் நிற்கும் சிறுவன்.

அந்த மாட்டை ஒரு முறை ஏக்கத்தோடு பார்த்துவிட்டு நடந்தான் அந்தப் பையன்.

பாலு மாட்டை அவிழ்த்துவிட்டான். அது அவன் பின்னுலேயே நடந்தது.

"வேண்டாம் முதலாளி. அப்பா பேச்சை மீறமாட்டேன் நான்," என்ருன் பையன் பரிதாபத்தோடு.

"உன் அப்பா பேச்சை எப்படி மீறியவன் ஆவாய்? நீயா மாட்டைக் கூட்டிப் போகிருய்? அதுதானே உன்னுேடு வருகிறது?" என்று ஒருவழியாக அவனைச் சமாதானப்படுத்தி, வண்டி மாட்டை அவனிடம் ஒப்படைத்தார். அருணுசலம். நெடுநாளாய் எதிர் பார்த்த நிம்மதி அப்போதுதான் அவருக்குக் கிடைத்தது.




## இரண்டு

"இது உடனடியாகக் கவனிக்க வேண்டிய புகார். ஆகவே..."

சிவப்புக் கோடிட்ட சுருக்கெழுத்துப் புத்தகமும் நகலெடுக்கும் பென்ஸிலுமாக மேஜையின் மறு பக்கம் நிமிர்ந்து உட்கார்ந்திருந்த டைப்பிஸ்ட் தாம் கடைசியாக எழுதிக்கொண்ட வாக்கியத்தை மறுபடியும் படித்து, சேலத்துக்குத் தந்திபோல் பறக்க வேண்டிய கடிதம் பத்து நிமிடங்களாக அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருக்கும் அபாயத்தையும், இடை வேளையைத் தான் எதிர்பார்க்கும் ஆவலையும் ஓர் அரை குறைக் கனைப்பின் மூலம் முதலாளிக்கு நினைவூட்டத் துணிந்தார்.

அவருடைய கனைப்புக்குப் பலன் ஏற்படாமல் போகவில்லை. ரத்தினத்தின் சிந்தனை கலைந்தது. மோவாய், கழுத்து இவை அடங்கிய எக்கச் சக்கமான வட்டாரத்தில் க்ஷவரக் கத்தியின் சாதனைகளை அமைதியாகவும் பகுதி பகுதியாகவும் பரிசோதித்த வாறு இருந்த விரல்கள் திடுக்கிட்டு, மின்சார விசிறியின் காற்றுக்கும் கண்ணாடிக் குண்டின் எடைக்கும் இடையே இலேசாகப் படபடத்துக் கொண்டிருந்த கடிதத்தைத் தடவின. இதுகாறும் மேல் நோக்கிக் கொண்டிருந்த கண்கள் சட்டெனத் தாழ்ந்தன.

"ஆகவே..." என்றான் ரத்தினம், தூக்கத்திலிருந்து விழித்தவனைப் போல்.

இரண்டாவது முறையாக ஓர் 'ஆகவே'யைக் குறித்துக் கொண்ட சுருக்கெழுத்தாளர், அதே சமயம், டைப் அடிக்கு முன் ஒரு ஆகவேயை நீக்கி விடவேண்டும், என்று மனத்துக்குள் குறித்துக் கொள்ளாமலில்லை.

"...கீழ்க்கண்ட ஏற்பாடுகளை நீங்கள் செய்து தருவதே அழகு..."

கோழி குப்பை கிளறுவதுபோல், பென்ஸில் தாளைக் கீறிற்று.

"முதலாவதாக..."

இன்னொரு கீறல்.

"முழுவதையும் அடியுங்கள். த்ஸொ, த்ஸொ. அதை எழுத வேண்டாம், ராமமூர்த்தி. முன்பு எழுதியதை எல்லாம் அடித்துவிடச் சொன்னேன். ஆயிற்று? 'கடந்த பதினைந்து ஆண்டுகளாகப் பற்பல மாவட்டங்களில் சாதாரணச் சாவடிகளிலிருந்து பெரிய பாலங்கள் வரை 'வெற்றிகரமாகக் கட்டி முடித்த கட்டிடக் கண்டிராக்டர்கள் என்ற முறையில்'..."

சுறுசுறுப்புடன் துவக்கப்பட்ட கடிதம், பத்தாவது வரியில் படுத்துக் கொண்ட காரணம் என்னவென்று சுருக்கெழுத்தாளருக்கு எப்படி விளங்கும்?

"நீங்கள் போகலாம். அப்புறம் கூப்பிடுகிறேன்," என்று விடை கொடுத்து அனுப்பப் பெற்ற டைப்பிஸ்ட் அகன்றதும், ரத்தினம் ஒரு கையால் நெற்றியையும், மற்றொரு கையால் ஒரு பொத்தானையும் அழுத்தினான்.

வந்து நின்ற காக்கிக்காரப் பையனிடம், மேஜைமீதிருந்த காகிதங்களை பைலோடு அள்ளிப் போட்டு, "உதவி மானேஜரிடம் கொடு. அவரையே கவனிக்கச் சொல்," என்று உத்தரவிட்ட போது ரத்தினம் தன்னையே வெறுத்துக்கொண்டான்.

சே! எதற்காக இந்தக் குழப்பம்,

பதட்டம் எல்லாம்? இயல்பாகவும், திறமையுடனும் இயங்கிக் கொண்டிருந்த தனது அன்றாட அலுவல் சக்கரத்தில் ஏன் எண்ணெய்க்குப் பதிலாக மண்ணை இடுகிறது இந்தக் கேடு கெட்ட மனம்? அதுதான் ரத்தினத்துக்குப் புரியவில்லை. மண் விழாது தடுக்கவும் முடியாமல், விழுந்த மண்ணை எடுக்கவும் இயலாமல் கையில்லாதவன் நமைச்சலால் தவிப்பதுபோல் அவன் திண்டாடினான். செந்திலின் அலமாரிக்குள் அடுக்கப்பட்டிருந்த கணக்குப் புத்தகங்களை அவன் எதிர்பார்க்கவில்லைதான். ஆனால் எதை அவை சுட்டிக் காட்டின? படிப்பிலே செந்தில் புலியாக இருந்தாலும், அந்தப் படிப்பையே சிறையாக்கிக் கொள்ளும் உதவாக்கரை அல்ல அவன் என்பதைச் சுட்டிக் காட்டின. வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்தும் பயிற்சிக் கூடமாகவே கல்லூரியைக் கருதியிருக்கிறான் என்பதையும், கல்லூரியின் கடைவாயிலைக் கடக்கு முன்னரே தொழிலில் இறங்கத் துடிக்கிறான் என்பதையும் சுட்டிக் காட்டின. புழுங்கத்தக்க விஷயமல்லவே அது! பெருமைப் படவேண்டிய விஷயம்தானே! கணக்குகளையும் எவ்வளவு தெளிவாக மணி மணியாகப் பதிந்து வைத்திருக்கிறான்! எத்தனை மணி நேரச் சலியாத உழைப்பு அவற்றுள் அடங்கியிருக்கிறது! பி. ஏ. பட்டம் வாங்கியதும் பாடப் புத்தகங்களை மூட்டை கட்டி வைத்துவிட்டு வந்து தொழிலில் தோள் கொடுக்க முற்பட்டானானால், அண்ணுவுக்கு வலுவுள்ள வலது கையாக விளக்கமாட்டானா செந்தில்!

எதிரில், சுவர்மீது மாட்டப்பட்டிருந்த புகைப்படத்துக்குத் தாவின ரத்தினத்தின் கண்கள். அப்பா, பிள்ளைகள் மூவர், அவர்களிடம் வேலை பார்க்கும் ஏனையோர் அடங்கிய படம் அது. ஐந்து வருடம் ஆகிறது அதை எடுத்து. அப்பாவுக்கு இடதுபுறம் உட்கார்ந்திருக்கிறானே செந்தில், பதினன்கு வயதுச் சிறுவனாக? அப்போதே அவன் முகத்தில் தெரிகின்றன அவனது நெஞ்சுரமும் உள்ளாழமும். தந்தை திடீரென்று காலமானாரே, அப்போது என்ன நடந்தது? கிணற்றில் விழுகிறேன், குளத்தில் விழுகிறேன் என்று கோவிந்தன் தெறித்து ஓட, சில்லிட்டுப்போன பாதங்களைக் கட்டிக் கொண்டு ரத்தினம் கதற கதறென்று கதற ஆகவேண்டிய காரியங்களை மற்றப் பரிவாரங்களுடன் நடத்தும் பொறுப்பைச் செந்தில் அல்லவா சமாளிக்க நேர்ந்தது?

'இவ்வளவு சமர்த்தனை தம்பி வாய்த்தது நம் அதிர்ஷ்டம்தான்,' என்று வாய்விட்டுச் சொல்லியவாறு புன்னகை செய்துகொண்டான் ரத்தினம். ஆனால், உதட்டிலே மலர்ந்த அந்தப் புன்னகையின் வேர் தொண்டைக்கு இப்புறம்தான் இருக்கிறது என்பதை உணர அவனுக்குச் சங்கடமாக இருந்தது.

மூடுமந்திரம்தான் ரத்தினத்துக்கு இனிக்கவில்லை. தம்பிக்கு இல்லாத உரிமை அண்ணுவுக்கு எங்கிருந்து வரப்போகிறது? அப்பா நிறுவிய தொழில். அதில் மூவருக்கும் சரிபங்கு உண்டு. "அண்ணு, ஓய்வு நேரத்தில் கணக்கு வழக்கைப் பார்க்கிறேன்," என்று கேட்டிருந்தால் ரத்தினம் மகிழ்ச்சியுடன் சம்மதித்திருக்க மாட்டானா? நுட்பங்களை உற்சாகத்துடன் விளக்கிச் சொல்லி, அப்பா அவனைப் பழக்கினாற்போல் அவன் தம்பியைப் பழக்கியிருக்க மாட்டானா? பின் செந்தில் ஏன் இந்தச் சாதாரண விஷயத்தைத் திரைபோட்டு மறைக்கவேண்டும்? அசல் கணக்கை வெளிப்படையாகப் பார்ப்பதற்கு உரிமை இருக்கும் போது, ஏன் கையொடிய நகலெடுத்து அதை ரகசியமாகப் பதுக்கி வைக்க வேண்டும்? அதை நினைக்கும்போதுதான் ரத்தினத்துக்கு வருத்தம் பெருமூச்சாகப் பீரிட்டது. தன் திறமையிலோ, நேர்மையிலோ செந்திலுக்கு நம்பிக்கை இல்லைபோலும் என்ற சந்தேகம் அவனைச் சீந்தச் சீந்த, புண்பட்ட தன்மானம் படமெடுத்துச் சீறலாயிற்று. பிறர் தன்னை நம்பினாலும் நம்பாவிட்டாலும், சிதறாத அமைதியுடன் தன் கடமையைச் செய்து கொண்டு போவதே முறை என்ற பகுத்தறிவு முணுமுணுப்பதும் அவன் செவியில் விழாமலில்லை. 'சந்தேகப்படுவது செந்திலின் இயற்கை. விட்டுத் தள்ளு,' என்று மனச்சாட்சிசமாதானம் கூற, 'சந்தேகத்தைத் தாங்க முடியாமல் பொருமுவது என் இயற்கை. அதற்கு நான் என்ன செய்யட்டும்?' அவன் இதயம் கலகம் செய்ய, தன்னை அறியாமலே ஆபீஸ் பையனை அழைத்து, "ஜம்பு இருக்கிறாரா? வரச்

சொல்," என்று கட்டளையிட்டு விட்டான் ரத்தினம்.

திறந்த பேரேடும் மூடாத பேனாவுமாகத் தனது பதவியைப் பேசாமல் பறை சாற்றியபடி நுழைந்த மேட்டு நெற்றிப் பேர்வழியை ரத்தினம் நிமிர்ந்து கூடப் பார்க்க

"கணக்கு சம்பந்தமான சிட்டைகள், குறிப்புகள், பேரேடுகள் எல்லாவற்றையும் இனிமேல் என் அறையில் இதோ இந்தப் பெட்டகத்தில் வைக்க வேண்டும் தெரிகிறதா? சாயங்காலம் பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு போய் விடுவேன்," என்றான் அவன்.

"அப்படியே," என்றார் அக்கௌண்டண்ட்.

அவன் மேற்கொண்டு பேச

"நீங்கள் போகலாம்."

"அப்படியே."

வழக்கத்திற்கு விரோதமாக அவன் குரலில் காணப்பட்ட கண்டிப்புத்தான் அவர் முகத்தில் அசடு வழியப் பண்ணியதோ அல்லது வெய்யிலின் கொடுமைதான் அவர் நாவை வறளச் செய்ததோ, மென்று விழுங்கியபடி அவர் அங்கேயே நின்றிருந்தார்



"என்ன அது?"

"வெகு நாளாக உங்களிடம் ஒரு விஷயம் சொல்லலாமென்று... வந்து..."

"சொல்லுங்களேன்?"

"ஒன்றுமில்லை...தம்பி செந்தில் வந்து அடிக்கடி..." என்று அவர் ஆரம்பித்த போது அவரது நீட்டலை ரத்தினம் அக்கணமே கத்திரித்துவிட்டான்.

"எல்லாம் எனக்குத் தெரியும். போய் வாருங்கள்."

"அப்படியே," என்று குனிந்த தலை நிமிராமல் வெளியேறினார் ஐம்பு.

அவர் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

துளசிக்குச் சிரிப்பு வந்தது.

அந்த உயரமான புது பீரோவின் ஆறடிக் கண்ணாடியில் தனது பளபளக்கும் தோற்றத்தைப் பார்க்கப் பார்க்க அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஆனால் அந்தச் சிரிப்பு அலையிலே சற்றுப் பெருமித நுரையும் கலக்காமலில்லை. இப்படி நாளுக்கொரு விசித்திரமாய்ப் பொட்டு வைத்துக்கொள்ளக் கோவையில் நேரம் எங்கே இருந்தது? வெண் கழுத்தின் ஒவ்வொரு வெட்டிலும் மின்னல் பொறி உதிர்க்கும் வைர நகைகளை வாங்கிக் கொட்டி, அணிந்து கொண்டே ஆகவேண்டும் என்று எந்த அத்தை கட்டாயப்படுத்தினார்கள்? தமிழ் சினிமாவுக்குப் போனால் பட்டு, இங்கிலீஷ் படத்துக்குச் சென்றால் கிரேப், கடற்கரைக்குப் புறப்பட்டால் ஜார்ஜெட் என்று தினம் ரக ரகமாய்ப் புனைவதற்குப் புடவைகளை வண்டி வண்டியாக வாங்கிக் கொடுக்க யார் இருந்தார்கள்?

ஒருவருமில்லை. ஆயினும், என்ன காரணத்தாலோ, துளசியின் மனம் நிறைவிலே திளைக்கக் காணோம். குழந்தைப் பருவமுதல் உழைத்து உழைத்து இளைத்தவளுக்கு, சென்னையில் ஓய்வு இளம் தென்றலாக இனிமையூட்டியது உண்மை. ஆழாக்கு அரிசிக்கு மேல் கண்டறியாத சோற்றுப் பானைக்கும், காலியாக இருந்து அறியாத அப்பாவின் மருந்து சீசாவுக்கும் இடையில் அகப்பட்டுப் பொலிவிழந்திருந்த பருவத்தின் பூரிப்பு, இப்போது அழகு சாதனங்களின் சேர்க்கையால் முற்ற மலர்ந்திருப்பதும் உண்மை. புறக்கடைத் தொட்டியில் கிடந்த விளையாட்டுப் படகைப் புழலேரியில் கொண்டு வந்து மிதக்க விட்டாற்போல், அவள் திகைத்து, திகைத்ததோடு திறந்தவெளிக் காற்றை நன்றாகப் புசித்து, புசித்ததோடு 'உலகம் பெரிது' என்பதை நேரிட உணர்ந்து, அந்த உணர்விலே உற்சாகம் பெற்றதும் உண்மை. ஆனால் அந்த ஓய்வுக்கும், அழகுக்கும், உற்சாகத்துக்கும் கீழே ஏதோ ஒரு குறை, ஓர் ஏக்கம், ஓர் அதிருப்தி அவள் மனத்தைக் குடைவது அவளுக்குத் தெரிந்தது. வீட்டிலுள்ள அனைவரும் தன் மீது அன்பைப் பொழிவதை அவள் அறிவாள். ஆனால் வெவ்வேறு திசையிலிருந்து வெவ்வேறு விதமாக வந்த அந்த அன்புத் தாக்குதலே துளசியின் அமைதி கலைவுறக் காரணமாக இருந்தது போலும்.

அவள் ஒரு வேலையும் செய்யக்கூடாதென்று தடுக்கும் தங்கம்மாளின் அன்புதான் எல்லாவற்றைக் காட்டிலும் அதிகச் சங்கடத்தைத் தந்தது. இந்தப்பலவந்த ஓய்வினால், உழைத்துப் பழகிப்போன துளசியின் உறுப்புக் வேதனைதான் ஏற்பட்டது.

——, அத்தை எப்போது அயர்வார்கள், எந்த அலுவலைப் பணியாட்களிடமிருந்து பறித்துக் கொள்ளலாம் என்று அவள் பதுங்கிக் காத்திருப்பாள். இப்போது அப்படியொரு சந்தர்ப்பம் கிடைத்தது. பாயை விரித்துப் படுத்துக்கொண்ட அத்தையிடம் உறங்குவது போல் பாசங்கு பண்ணிய அவள், அத்தையின் கண்ணிமைகள் ஒன்று சேர்ந்தவுடன், படுக்கையை விட்டு எழுந்து, பொழுது போகாமல் கண்ணாடியில் தன் தோற்றத்தைப் பார்த்துக்கொண்டும், அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த புடவைகளை மறுபடி பிரித்து அடுக்கியும் நேரத்தை நகர்த்த முயன்றாள். அப்போது புறக்கடைக் கிணற்றடியிலிருந்து சளார் சளாரென்று வந்த துணி துவைக்கும் சப்தம் அவள் காதுகளில் அமுதமாகப் பெய்தது. நகைகளைக் கழற்றி வைத்தாள். தனது பழைய புடவைகளில் ஒன்றை அணிந்துகொண்டு விரைந்தாள். வள்ளியும், மற்றொரு வேலையாளும் அரட்டை அடித்துக் கொண்டே ஆடைகளைத் துவைப்பது தெரிந்தது. "தள்ளு," என்று வள்ளியிடம் உத்தரவிட்டாள் துளசி. பிறகு,

பணியாட்களின் ஆட்சேபங்களைச் சற்றும் பொருட்படுத்தாமல், அத்தனை துணிகளையும்—வள்ளியுடையது உட்பட—சுத்தமாகத் துவைத்துக் கொடியில் உலர்த்தியபோது அவளுக்குப் பெரிய சுமை நீங்கிற்போலிருந்தது. சலவை சோப்பின் மணமும், ஈரத்துணிகளை முறுக்கிப் பிழியும்போது உண்டாகும் திருப்தியும், உடற்பயிற்சியும் அவளுக்குத் தெம்பை ஊட்டின.

மறுபடியும் பணக்கார வேடம் போட்டுக்கொண்டு துளசி முகப்புத் தோட்டத்தில் இறங்கியபோது மணி நான்கு இருக்கலாம். தங்க நிறத்தில் பூப் பூத்த—அவள் அதற்கு முன் கண்டிராத—அந்த மலர்ப் பாத்தியருகே உலவிக்கொண்டிருந்தபோது, அவள்மீது மோதி விடுகிறாற்போல் வந்து நின்றது ஓர் இரண்டு சக்கர வாகனம்.

அவள் திடுக்கிட்டுத் திரும்பிய காட்சியைச் சிரித்துக்கொண்டே ரசித்தான் கோவிந்தன். “பயந்துவிட்டாயா, துளசி?”

படபடக்கும் இமைகளுக்கு ஊடே, வாசலுக்கும் தான் நிற்கும் இடத்துக்கும் இடையிலுள்ள தூரத்தை அவள் கணக்கிட்டுக் கொண்டாள்.

வண்டியைவிட்டு இறங்காமல், “அம்மா எங்கே!” என்று கோவிந்தன் கேட்ட கேள்விக்கு, “தூங்குகிறார்கள்,” என்றாள் அவள், தாழ்ந்த குரலில்.

உட்கார்ந்தபடியே தரையை மிதித்து ஸ்கூட்டரை முன்னால் தள்ளியபடி அவன் அவளை நெருங்கியபோது அவனது புஷ் ஷர்ட்டிலிருந்த பொம்மைகள் அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தன.

“துளசி, எனக்கொரு சந்தேகம். உன் குரல் உன் காதிலாவது விழுவதுண்டோ?” என்று கேட்டுவிட்டு அவன் உரக்கச் சிரித்தான்.

அவள் மெள்ள நகர ஆரம்பித்தாள். கோவிந்தன் விடவில்லை.

“எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது,” என்றான் அவன், உற்சாகத்துடன். அவனுடைய ஆர்வம், பள்ளிச் சிறுவனுடைய கும்மாளத்தை நினைவூட்டிற்று. “பின்னால் உட்கார்ந்து கொள், துளசி. அப்படியே தமாஷாகச் சுற்றிவிட்டு வரலாம். வாயேன்.”

அவள் மருண்டதில் வியப்பில்லை.

விநாடிக்கு விநாடி, கோவிந்தனின் உற்சாகம் பெருகிக்கொண்டே போயிற்று. “மெள்ள ஓட்டுகிறேன். பயப்படாதே. என் தோளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டாயானால் கீழே விழமாட்டாய். ஊம், ஏறிக்கொள்.”

துளசிக்கு வேறொன்றும் தோன்றவில்லை.

“அத்தை கூப்பிடுகிறார்கள் போலிருக்கிறது,” என்று ஏதோ முணுமுணுத்தாள். அச்சம் இதயத்தை இறுக்க, விரைந்தாள் வாசலை நோக்கி.

கோவிந்தனுக்கு ஏமாற்றம் உண்டாவதற்குப் பதில் குதூகலமே பொங்கிற்று. ஓடிப் பிடித்து விளையாடும் சந்தர்ப்பத்தை ஆவலோடு வரவே றவனாய் வண்டியைச் சட்டென்று படியோரமாகச் சாத்தி வைத்து விட்டு, “எங்கே ஓடுகிறாய்? இதோ பிடித்து விட்டேன் பார்,” என்று கூவியபடி அவளை விரட்டலானான்.

விரட்டிப் பிடித்தும் விட்டான். வியர்வையில் நனைந்த அவள் கையைப் பற்றி அவன், “இந்தப் பாய்ச்சல் எல்லாம் ஐயாவிடம் பலிக்காது,” என்று வெற்றிச் சங்கு ஊதுவதற்கும், “சீ! விடு அவள் கையை!” என்ற அதட்டல் கேட்பதற்கும் சரியாக இருந்தது.

செந்தில்!

கோவிந்தன் திரும்பவும், விரல்களை உருவிக்கொண்டு உள்ளே ஓடினாள் துளசி. தங்கம்மாள் இன்னும் எழுந்திருக்கவில்லை. அத்தைக்குப் பக்கத்தில் உட்கார்ந்தவுடன் அவள் பதட்டம் சற்றுக் குறைந்தது. ஆனால் கவனத்தை வாசல் புறமிருந்து வரும் இரைச்சலினின்று துளசியால் திருப்ப முடியவில்லை. மெதுவாக எழுந்து, அடிமேல் அடி வைத்து வந்த வழியே திரும்பி,

**அனாவசிய ஆராய்ச்சி**

சாலைகளில் நடைபாதை அமைக்க வேண்டுமென்று கண்டுபிடித்தவர் ஒரு தரும சிந்தனையுள்ள நபர். பிச்சைக்காரர்கள் இருக்க இடமின்றித் தவிப்பதைக் கண்டே அவர் இந்த யோசனையை வெளியிட்டார்.

ஒரு கதவுக்குப் பின்னல் ஒளிந்து கொண்டார்.

அவளைப் பின் தொடர்ந்தபோது கோவிந்தனின் முகத்தில் தெரிந்த சிறுபிள்ளைத்தனம் இப்போது காணப் படவில்லை. சற்றே கறுத்த அவனுடைய சருமம் மேலும் கறுக்க, குரலில் காரத்தை ஏற்றி அவன் பேசிக் கொண்டிருந்தான்.

அவள் தப்பிச் சென்றதற்கும் திரும்பி வருவதற்கும் இடையே கழிந்த பத்து நிமிடங்களில், எத்தகைய சுடு சொற்கள் பரிமாறிக் கொள்ளப் பட்டன என்பதைத் துளசியால் ஊகிக்க முடியவில்லை.

ஆனல், கீழ் மன்றத்தில் தோல்வியுற்ற கட்சிக்காரன் 'மேல் கோர்ட்டில் கவனித்துக்கொள்கிறேன்,' என்று சவால் விடுவது போல, "அண்ணு வரட்டும். அவரிடத்திலேயே நியாயம் கேட்கலாம்," என்று கோவிந்தன் சொற்போரைத் தற்சமயத்துக்கு நிறுத்தி வைக்க முன்வந்தபோது, "அண்ணு என்ன மனு நீதி கண்ட சோழனு, இல்லை, கிங் சாலமனு, ஓரம் சாராமல் நியாயம் சொல்ல?" என்று தூக்கி எறிந்தாற்போல் பேசிவிட்டுச் செந்தில் டக் டக் கென்று படிகளில் இறங்கிச் சென்றபோது கோவிந்தனைப் போல் துளசியும் திகைத்துவிட்டாள்.

இரவு ஏழரை ஆகியும் இன்னும் ரத்தினத்தைக் காணேம். தோட்டத்தில் நிலா காய்ந்தது.

முன் ஹாலில் மௌனம் நிலவிற்று. ஆனல் அந்த மௌனத்தில் சாந்தி இல்லை. முறுக்கேறிய கயிறு போலவும், ஒரு பக்கமாக இழுத்துக் கட்டிய ஊஞ்சல் போலவும், எந்த நிமிடமும் கொந்தளிப்பாக மாறிவிடக் கூடிய பான்மைத்தாயிருந்தது சூழ்நிலை.

கோவிந்தன் எழுந்து சென்று ரேடியோ விசையைத் திருகினன். ஆனல் எந்த நிலயத்தையும் தொடர்ந்து அரை நிமிடம் கேட்காமல் முள்ளை முன்னும் பின்னுமாகத் திருப்பிய விதம் அவனது எண்ணச் சுழலை நன்ருகப் பிரதிபலித்தது.

மாலை நடந்த மோதலைத் தங்கம்மாள் அறிய மாட்டாள். தனது கேள்விகளுக்குப் பிள்ளைகளிடம் கிடைக்கும் அரைகுறைப் பதில்களின் தன்மையிலிருந்து ஏதோ சந்தேகப்பட்டு ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்தாள்.

செந்திலோ மாலைத் தினசரியில் மூழ்கியிருந்தான். துளசி இருப்புக் கொள்ளாமல் கண்மறைவாக அங்குமிங்கும் திரிந்து கொண்டிருந்தாள்.

வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது.

"ரத்தினம் வந்துவிட்டான்போலிருக்கிறதே!" என்ற தங்கம்மாள், "வள்ளி, இலை போடச் சொல்லு," என்று கட்டளையிட, தினத்தாளிலிருந்து தலையைச் செந்தில் சற்றே திருப்ப, கோவிந்தன் குதித்தெழ, கையில் தோல் பையுடன் சிரித்துக் கொண்டே நுழைந்தார், நாற்பத்தைந்து வயது மதிக்கத் தக்க ஒரு நெட்டையான மனிதர்.

"எல்லோரும் சௌக்கியமா? ரயில் அரைமணி லேட். டாக்ஸிக்காரன் நிற்கிருனுக்கும்," என்று அவர் பர்ஸை எடுப்பது போல் பாவனை செய்வதற்குள், "வாருங்கள். நான் கொடுக்கச் சொல்கிறேன். நீங்கள் உட்காருங்கள்," என்று தங்கம்மாள் உபசரித்தாள்.

இருந்தவற்றுள் பெரிய சோபாவில் சுகமாகச் சாய்ந்து கொண்ட மனிதர், இளைஞர்களின் முக பாவங்களைச் சற்றும் பொருட் படுத்தாமல், தனக்கு அமோக வரவேற்புக் கிடைத்தாற போல் கற்பனை செய்து கொண்டு சரளமாக உரையாட வீண் முயற்சிகள் செய்யலானுர்.

ரத்தினமும் வந்து சேர்ந்தான், கொஞ்ச நேரத்தில். வரும்போது அவன் முகத்தில் தேங்கியிருந்த கவலை, விருந்தினரை உபசரிக்கும் கடமையைச்



செய்யும்போது சற்று நீங்கினாற்போல் தெரிந்தது.

சாப்பாடு முடிந்ததும், மற்றவர் எல்லோரும் படுக்கச் சென்றனர். விருந்தினர்களுக்கு என்று ஒதுக்கப் பட்டிருந்த அறைக்கு ரத்தினம் வந்தவரை அழைத்துச் செல்லும்போது, அவர் அவன் தோள் மீது கை போட்டு, அடாபுடாஎன்று உரிமையுடன்பேசினதோடல்லாமல், கடைசியாக, "நான் காலையில் ஆறுமணிக்கெல்லாம் புறப் பட்டுவிடுவேன். அவசரமாக ஒரு ஐயாயிரம் ரூபாய் தேவைப் படுகிறது. முடிந்தால் இப்போதே கொடுத்து விடு," என்று கேட்டது ரத்தினத் துக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அப்பா காலத்திலிருந்து மனிதர்—தாமோதரம் என்ற பெயருடையவர்—ஆண்டுக்கு ஒரு முறை, இரு முறை வருவார். அவர் யார், என்ன செய்கிறார் என்பதெல்லாம் ரத்தினத்துக்குத் தெரியாது. ஒவ்வொரு தடவை வரும்போதும் அப்பாவிடம் நூறு ரூபாய் வாங்கிக்கொண்டு போவதுண்டு. அப்பா இறந்த பின்னரும், இந்த வழக்கம் நீடித்தது. ஆனால் தொகை மெள்ள உயர்ந்துகொண்டே வரலாயிற்று. சென்ற மார்ச் மாதத்தில்தான் மூன்னூறு பெற்றுக்கொண்டார்.

"முடிந்ததைத் தருகிறேன். காலையில் பார்ப்போம்," என்று சமாளித்துக்கொண்ட ரத்தினம், தாயிடம் தணிந்த குரலில் யோசனை கேட்டான்.

முதலில் புருவங்களை உயர்த்தினாள் தங்கம்மாள். பிறகு, "வம்பு எதற்கு? அவர் கேட்பதைக் கொடுத்துவிடு," என்றாள்.

"சரி," என்பதைத் தவிர ரத்தினம் வேறொன்றும் கூறவில்லை. "யார் இவர்? எதற்காக இவ்வளவு பணம் கொடுக்கவேண்டும்?" என்றும் கேட்க

அதை அவன் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாக இருந்திருந்தால் அம்மாவே சொல்லியிருப்பார்கள் என்பது அவன் கருத்து.

# சின்ன விஷயம்தான்

1. மனித வரலாற்றிலே முதன் முதலாக அணுகுண்டு எப்போது எங்கே வெடிக்கப்பட்டது?

2. அஸ்வான் அணை கீழ்க்கண்ட நதிகளில் எந்த நதியின் குறுக்கே கட்டப்பட்டுள்ளது? (அ) நைல்நதி (ஆ) கொலராடோ (இ) ஜீலம் (ஈ) வால்கா

3. தொல்காப்பியம் கிறிஸ்து பிறப்பதற்கு முன் தோன்றியதா? பின்னர் எழுதப்பட்டதா?

4. பூர்த்தி செய்க: '——— புலவர்க்கு ஔடதம்'

5. கிருஷ்ணராய தேவன்: கிருஷ்ணதேவராயன். இரண்டில் எது சரி?

6. வாசனைக்குத் தடவிக் கொள்ளும் 'ஓடிகோலோன்' சென்ட் ஒரு வைத்தியத்துக்கும் பயன்படுகிறது. அது என்ன வைத்தியம்?

7. மலையாளப் பண்டிகையான 'ஓணம்' எந்த மாதத்தில் கொண்டாடப் படுகிறது?

8. ஒலிம்பிக் ஆட்டங்கள் எத்தனை ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறுகின்றன?

9. லிஸ்பன் எந்த நாட்டுத் தலைநகரம்?

10. சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் இருப்புப் பாதையின் நீளம் என்ன?

11. பிரம்ம சமாஜமும், ஆரிய சமாஜமும் ஒன்றா? வெவ்வேறா?

12. கோயமுத்தூருக்குத் தென்னிந்திய—என்றொரு பெயர் உண்டு.

13. பக்ரா நங்கல் திட்டம் எந்த ராஜ்யத்திலிருக்கிறது?

14. இம்பீரியல் பாங்க் இப்போது என்ன பெயரால் அழைக்கப் படுகிறது?

15. ஸ்டெதாஸ்கோப்புக்கும் டெலிஸ்கோப்புக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

16. ஆகாய விமானத்தை மேலும் கீழும் செலுத்த உபயோகமாகும் பாகத்தின் பெயர் என்ன?

17. புது வகை அம்பர் சர்க்கா கண்டுபிடிப்பவர்களுக்கு அரசாங்கம் எவ்வளவு சன்மானத் தொகை கொடுக்க உத்தேசித்திருக்கிறது?

.18 'பாடகர் தக்கு ஸ்தாயியில் பாடுகிறார்' என்று சொல்லும் போது அவர் குரலை உயர்த்திப் பாடுகிறாரா, தாழ்த்திப் பாடுகிறாரா?

19. 'பதினாறும் பெற்று வாழ்' என்கிறோமே, அத்தப் பதினாறு என்னென்ன?

20. இந்த வருட சுதந்திர விழாவை ஜனாதிபதி எங்கே கொண்டாடினார்?

*(விடைகள் 83-ஆம் பக்கம் பார்க்க)*

## மூ ன் று

வெறிச்சென்ற கல்லூரி வராந்தாவில் உலவிக் கொண்டிருந்த செந்தில் ஒரு பருத்த தூண் அருகே நின்றான். கையைத் தூக்கி மணிக்கட்டைக் காதோடு பொருத்திப் பார்த்தான்.

கடியாரம் ஓடிக்கொண்டு தானிருந்தது. இன்னும் அரை மணி காத்திருக்க வேண்டும் போலிருக்கிறதே?

இரண்டு நோட்டுப் புத்தகங்களையும் கக்கத்தில் இடுக்கியவாறு, கைகளைக் கால்சட்டைப் பைகளில் புதைத்துக் கொண்டு, பாதங்களைச் சற்றே அகல ஊன்றியபடி அவன் யோசனையில் ஆழ்ந்தான்.

எதிரே, தோட்டச் சுவரையும் தாண்டிவிட்ட மணிக்கூண்டின் நிழலில், பெருமையுடன் பூத்திருந்த கல்வாழைச் செடிகள் மஞ்சளும் சிவப்புமாகத் தருக்கி நின்றன. அந்தண்டை ஓடிய மெரீனா சாலையிலும், அதற்கு அப்பால் மாலை வெய்யிலில் காய்ந்து கொண்டிருந்த மணற் பரப்பிலும் ஆள் நடமாட்டம் அதிகரிக்க இன்னும் நேரமிருந்தது. தூரத்தில், வான விளிம்பைத் தொட்ட வங்காள விரிகுடா பச்சைசக்கும் நீலத்துக்கும் இடையில் வைரக் குவியல்களை உதிர்த்துப் பகடை உருட்டிக் கொண்டிருந்தது.

வராந்தாவின் மறு கோடியிலிருந்து புறப்பட்டு டக், டக் என்று முன்னேறி வந்த பூட்ஸ் ஓசை தன்னருகே நிதானிப்பதைச் செந்தில் உணர்ந்தான்.

"என்னப்பா, காருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாயா?" என்று வினவிற்று பேராசிரியர் ஒருவரின் குரல். ஆனால் வினவியபடியே, விடையை எதிர்பார்க்காமல் போய் விட்டார் அவர். போகிற போக்கில் லேசாக அவன் தோளைத் தட்டிவிட்டுச் சென்றார்.

படிப்பில் அவன் காட்டிய அக்கறையால் அதிகமாகக் கவரப்பட்டிருந்த பேராசிரியர் அவர். அவர் அவன் தோளைத் தட்டினார் என்பதைக் காட்டிலும் தொட்டார் என்று சொல்வதே பொருத்தம். இருந்த போதிலும், தம்மை இன்னொருவர் தொடுவதைச் சகிக்க முடியாமல், செந்திலின் தோள்கள் கூனிக் குறுகின. ஆனால் அவன் மனம் சிலிர்த்துக்கொண்டது. அவர் கேட்ட கேள்வி அவனுள் எண்ணக் குழம்பைக் கிளறி விட்டுவிட்டது.

பேராசிரியருக்கு என்ன தெரியும், பாவம்? அவன் குடும்பத்தின் தரத்தை மட்டுமே, சென்னை நகரத்தின் பணக்காரப் பட்டியலில் அவர்களுக்குள்ள இடத்தை மட்டுமே, அவர் அறிவார். அந்தக் குடும்பத்தின் உறுப்பினர்களாக இருப்பவர்களின் தராதரத்தைப் பற்றி அவர் ஒன்றும் அறிய மாட்டார். அறிந்திருந்தால், இந்தக் கேள்வியைக் கேட்டிருப்பாரா!

செந்தில் மறுபடியும் கடியாரத்தைப் பார்த்தான். பிறகு, படிகளில் இறங்கி, பஸ் நிற்கவேண்டிய இடத்தை நோக்கி நடந்தான்.

அவர்கள் வீட்டில் ஒரு கார் உண்டு. நீளமான, பளபளப்பான, இருபது லட்சம் நயா பைசாக்களை விழுங்கி விட்டு மேனி மினுக்கும் வண்டி ஒன்று உண்டு. கார், குடும்பத்தைச்சேர்ந்தது. ஆனால் அதை அனுபவிக்கும் உரிமை ஒருவனுக்குதான் உண்டு. அது அந்த வீட்டுச் சட்டம். அதை நினைக்க நினைக்கச் செந்திலின் முகம் சிவந்தது. நிலத்தை நோக்கி வீசத் தொடங்கி விட்ட குளுமையான கடல் காற்றால் கூட அவனது உள்ளத்தின் வெப்பத்தைத் தணிக்க முடியவில்லை.

செந்தில் பஸ் ஸ்டாண்டுகளில் காத்திருந்து காலை ஓடித்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் அவன் கடைக்குட்டி. கோவிந்தன், ஸ்கூட்டரையும் மோட்டார் சைக்கிளையும் ஓசி வாங்குவதற்காக நண்பர்களிடம் பல்லைக் காட்டவேண்டும். ஏனென்றால் அவன் இரண்டாவதாகப் பிறந்தவன். ஆனால், ரத்தினம்? அவர் மூத்தவர். குடும்பத் தலைவர். தொழில் அதிபர். அவர் காரில்தான் உருளுவார், புரளுவார். அவர் திருப் பாதம் தரையில் பட்டால் சுளுக்கிக் கொண்டுவிடுமே!

இத்தனைக்கும் அவர்களுக்குள் வயது வித்தியாசம் எவ்வளவு? சொற்பம்தான். ரத்தினத்துக்கு இருபத்து நான்கு என்றால், கோவிந்தனுக்கு இருபத்தொன்று. செந்திலுக்குப் பதினெட்டு. ஆனால் மூத்தவர் மட்டும் லட்சாதிபதி. பெரிய கட்டிடக் கண்டிராக்டர். மற்ற இருவரும், மாதச் செலவுக்கென்று ஐம்பது ரூபாய் வாங்க அண்ணாவின் முன் கைகட்டி நிற்க வேண்டிய மாணவர்கள்.

'பாரிஸ்'ஸுக்கு ஒரு டிக்கெட் வாங்கிக்கொண்ட செந்தில் கால்மேல் கால்

போட்டு, மடிமீது புத்தகங்களை வைத்தபடி ஆசனத்தில் நன்றாகச் சாய்ந்து கொண்டான்.

மூனறு கார் வைத்துக்கொள்ள அவர்களுக்கு வசதி உண்டு. ஆனால் டிரைவர்மட்டும் கிடையாது. ஏன்? பெரியவர் சிக்கனமாக இருக்கிறாராம். செலவை மிச்சப்படுத்துகிறாராம். தம் பிகளுக்குப் பணம் சேமித்து வைக்கத் தியாகம் செய்கிறாராம். தொந்தரவைப் பார்க்காமல் தானே காரை ஓட்டிக்கொள்கிறாராம். ஆகா! என்ன பெருந்தன்மை! என்ன கருணை! அந்தக் கிறுக்கன் ஒருவன்—கோவிந்தன்—"அண்ணனைப்போல் உண்டா?" [illegible] வீழ்ந்திருப்பானே. அவன் [illegible] வேண்டுமானால் ஏமாறலாம். ஏமாறமாட்டான். ரத்தினத்தி மனத்தை அவன் அறிவான். டிரைவர் அமர்த்தி விட்டால், அப்புறம் மற்ற வர்களுக்கும்வண்டி பயன்பட்டுவிடுமே! செந்தில் கல்லூரிக்கு விடு என்பான், கோவிந்தன் சினிமாவுக்குப் போ என்பான், அம்மா கோவிலுக்கு ஓட்டு என்பாள். எல்லோரும் காரை உபயோகப் படுத்த ஆரம்பித்துவிட்டால் அப்புறம் கார் வைத்திருப்பதில் ரத்தினத்துக்கு [illegible]ரபம் இருக்க முடியும்?

அக்கௌண்ட்டண்ட் ஜம்பு மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜைமேல் வைத்தார். பின்பக்கமாகத் திரும்பி நாற்காலியில் தொங்க விடப்பட்டிருந்த கோட்டின் வலது பைக்குள் கையை விட்டார். கண்ணாடிப் பெட்டிக்குப் ப பொடி டப்பா அகப்பட்டது

அகப்பட்டதை விடுவானேன்... அன்புடன் எடுத்து. பெரிய காரியங்களைத் துவக்குவதற்கு இன்றியமையாத கம்பீரத்துடன் மூடியை இரு முறை தட்டிவிட்டுத் திறந்து, காரமும் மணமும் நிறைந்த சூரணத்தில் ஒரு சிட்டிகை எடுத்தார். விரல் நுனியில் மென்மையான ஸ்பரிசம் ஏற்பட்டவுடனே, அவருடைய நாசியில் நீர் ஊறிற்று. பொடி ஏந்திய விரல்களை சாமர்த்தியமாக ஒரு சுழற்றுச் சுழற்றி, தமது நுகரும் கருவியின் உட்புறத்தில் சாந்து பூசுவது போல் தூளை அப்பிய பிறகு, ஈடு இணையற்ற அந்தக் கிளுகிளுப்பை அரைகுறையாக மூடிய கண்களுடன் ஆனந்தித்தபடி அவர் கைக்குட்டைக்காகத் தடவிக் கொண்டிருந்த போதுதான், அந்த அதிகாரக் குரல் கேட்டது.

"ஜம்பு!"

"சார்!" என்று வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தார் ஜம்பு. ரத்தினத்தைக் காட்டிலும் செந்திலிடம்தான் அவருக்குப் பயம் அதிகம்.

அவன் அவரை அருவருப்புடன் பார்த்தான்.

"என்னய்யா ஆபாசம்! மூக்கைத் துடைத்துக்கொள்ளும்!" அவன் உட்கார்ந்தான். பிறகு, கைக்குட்டையால் முகத்தை ஒற்றிக்கொண்டு, "விசிறியைப் போட்டுவிட்டு வாரும்" என்றான்.

"அப்படியே!" என்று அவர் அவன் கட்டளைகளை நிறைவேற்றுமுன், "புத்தகங்களை இன்னும் எடுத்து வைக்கவில்லை?" என்ற அதட்டலொன்று புறப்பட்டது.

முப்பது ஆண்டு காலமாக மூதுகெலும்பில்லாமல் வாழ்ந்த வாழ்க்கை அல்லவா? குரலைக் கொஞ்சம் உயர்த்திப் பேசிவிட்டால்—பேசுகிறவன் ஆபீஸ் பையனாக இருந்தாலும் சரிதான்—அவருடைய கைகள் நடுங்கத் தொடங்கிவிடும்.

முகத்தில் வியர்வை அரும்ப, "அதுவா? வந்து...வந்து...இப்போதெல்லாம் வீட்டுக்குப் போகும்போது உங்கள் அண்ணா புத்தகங்களைத் தூக்கித் தன் அறையிலே போட்டுப் பூட்டிவிட்டுப் போய்விடுகிறார் சார். நான் என்ன பண்ணட்டும்?" என்றார் ஜம்பு.

செந்திலின் நெற்றியில் சுருக்கங்கள் விழுந்தன.

'ஏன்?"

"தெரியவில்லை சார்," என்று கைகளைத் தேய்த்தபடி ஜம்பு தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக்கொண்டு கீழ் நோக்கிப் பார்த்த பார்வை, 'இவருக்கு நன்றாகத் தெரியும். தெரியவில்லை என்று புளுகுகிறார்,' என்று அம்பலப் படுத்திற்று.

"இத்தனை வருடமாக இல்லாமல் இப்போது ஏன் இந்தப் புது ஏற்பாடு! அவருக்கு நம்பிக்கை போய் விட்டதா உம்மீது?"

"சேச்சே. என்மீது எப்போதும் நம்பிக்கைதான். ஒரு தப்புத் தண்டாவுக்குப் போகமாட்டேன் என்று அவருக்கு நன்றாகத் தெரியும். இந்தக் கம்பெனி ஆரம்பிப்பதற்குக் காரணமாக இருந்தவனே நான்தானே? அது இல்லை சார்..."

"பின்னே?"

"அவருக்குத் தெரிந்து போய்விட்டது என்று நினைக்கிறேன்." ஜம்பு மென்று விழுங்கினார். "அவர் அறியாமல் நீங்கள் கம்பெனி கணக்குகளைச் சரிபார்க்கும் விஷயம்..."

கோபத்தால் செந்திலின் முகம் கடுமையுற்ற விதம், ஜம்புவை மிரள வைத்தது.

"நிச்சயமாக ஒன்றும் சொல்வதற்கில்லை சார். ஓர் ஊகத்தைச் சொன்னேன். அவ்வளவுதான். என்னைச் சங்கடத்தில் மாட்டிவிட்டு விடாதீர்கள். நான் பிள்ளைகுட்டிகாரன்," என்று கெஞ்சினார்.

எண்ணம் எங்கேயோ திரிவதைக் கண்முன் படர்ந்த திரை அறிவிக்க, செந்தில் சிலைபோல் உட்கார்ந்திருந்தான். கைகள் மட்டும் பேனாவின் மூடியைத் திறப்பதிலும் திருகுவதிலும் ஈடுபட்டிருந்தன.

சிறிது நேரம் கழித்து, உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தியவனாய், இரண்டு நாள் வரவு செலவு பற்றிய முக்கியமான விவரங்களை ஜம்பு சொல்ல, மனத்தில் பதித்துக் கொண்டான் அவன்.

மணி ஏழு அடித்தது.

நாற்காலியை விட்டு எழுந்தவன், "அவர் எத்தனை மணிக்கு வீட்டுக்குப் புறப்பட்டார்?" என்றான்.

"இன்றைக்கு மூன்றரை மணிக்கே போய்விட்டார்," என்று சொல்லியபடி ஜம்பு விளக்குகளை அமர்த்தி விசிறியை நிறுத்தியபோது, செந்தில் "த்ஸொ, த்ஸொ," என்று சப்திப்பதைக் கேட்டு, "ஏன் சார், விளக்கைப் போடட்டுமா?" என்றார்.

"அதற்கில்லை," என்று கூறிவிட்டு அவன் நகர்ந்தான். அண்ணா அலுவலகத்தில் இருந்து தொலைப்பார் என்ற எண்ணத்தில்தான் ஐந்து மணி வரையில் அவன் கல்லூரியில் காத்துக் கிடந்தான்.

"அந்தப் பெண்ணுக்கு டிபன் வாங்கிக் கொடுப்பதற்காக நேரே காஸ்மாபாலிடன் கிளப்பிற்குப் போகிறார் என்று பையன் சொன்னான்."

"பெண்ணா! யாரது?" என்று கேட்டான் செந்தில், திகைப்பை சுவாரஸ்யம் மிஞ்ச. 'ஓஹோ! அண்ணா இந்த மார்க்கத்திலேயும் இறங்கியிருக்கிறாரா? இத்தனை நாளாக எனக்குத் தெரியாதே!' என்ற பாவம் அவன் குரலில் பளிச்சிட்டது.

அந்தப் பெண்ணைப் பிற்பகல் தன்னுடன் அலுவலகத்துக்குக் கூட்டி வந்தாரென்றும், சுமார் இரண்டு மணி நேரத்துக்குத் தமது அறையிலேயே வைத்திருந்தாரென்றும், வேறு வேலை எதையும் கவனிக்கவில்லை என்றும், இருவரும் சிரித்துப் பேசிக்கொண்டிருப்பதாக உள்ளே சென்றுவரச் சந்தர்ப்பம் பெற்றவர்கள் தகவல் தந்தார்கள் என்று ஜம்பு சொல்லிக் கொண்டே வந்தபோது, செந்தில் ஒரு லட்சிய ரசிகனாக விளங்கினான்.

ஆனால், அந்தப் பெண் யார் என்பது தெரிந்தவுடனே?

ரத்தினம் மத்தியான்னம் சாப்பிட்டுக்கொண்டிருந்த போதுதான் அவன் தாயார் அந்தப் பேச்சை எடுத்தாள்.

"முட்டைக்கோஸ் கறி இன்றைக்கு நன்றாய் அமைந்திருக்கிறது. தொடவே இல்லையே?" என்று பிள்ளையிடம் முறையிட்டவள், பேச்சோடுபேச்சாக, "ஏனப்பா, துளசிதான் பாடாகப் படுத்துகிறாள். பொழுதே போகவில்லையாம். 'டைப் அடிக்கக் கற்றுக்கொள்கிறேன், ஏதாவது பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிடச் சொல்லுங்கள்' என்று ஆளைப்போட்டுத் துளைக்கிறாள்," என்றாள்.

ஊறுகாயைத் தொட்டு வாயில் வைக்கப்போன ரத்தினத்துக்கு, தங்கம்மாள் கூறிய விஷயம் வேடிக்கையாக இருந்தது. கோவையிலிருந்து துளசியை அழைத்து வந்த பிறகு, அவளைப்பற்றிச் சிந்திக்க அவனுக்கு அவசியம் ஏற்படவில்லை. அவளும் அவன் கண்ணில் அதிகமாகத் தட்டுப்படுவது கிடையாது. தந்தையின் பிரிவையும், பழைய துயரங்களையும்

**லட்ச லட்சணம்**

**"அந்த வீட்டை நான் லட்ச ரூபாய்க்கு முடித்துத் தருகிறேன். கவலையை விடுங்கள்."**

**"எப்படி ஐயா விடுவது? இன்னும் தொண்ணூற்றொன்பதாயிரத்துத் தொளாயிரம் சேர்த்தாக வேண்டுமே!"**

மறந்து அவள் மகிழ்ச்சியோடு இருந்து வருகிறுள் என்று அவன் நினைத்திருந் தான். இப்படி ஒரு ஏக்கம் அவளுக்கு இருக்கக்கூடும் என்று எதிர்பார்க்க வில்லை.

"டைப் அடிக்கக் கற்றுக்கொண்டு என்ன செய்யப் போகிருளாம்?" என்று அவன் சிரித்தவாறு இலையை விட்டு எழுந்தான்.

தங்கம்மாள் சற்று உரக்க, "கேட் டுக் கொண்டாயாடி, துளசி? அவனும் அதைத்தான் சொல்கிருன்!" என்ருள்.

துளசியிடமிருந்து பதிலொன்றும் வரவில்லை.

கைகளைத் துடைத்துக்கொண்டே வந்த ரத்தினத்தை நோக்கித் தங்கம் மாள் புன்னகை செய்தாள். "பிடிவா தக்காரியாக இருக்கிருள். போகட்டும். மத்தியான நேரத்தில்தான் ரொம்பக் கஷ்டமாக இருக்கிறதாம். பள்ளிக் கூடத்திலேயும் அப்போது கூட்ட மிருக்காது என்று சொல்கிருள்..."

"எல்லாம் நான் ஏற்பாடு பண்ணுகி றேன் அம்மா. சாப்பிட்டதும் சொல் லுங்கள். ஆபீசுக்குக் கிளம்பும்போது துளசியை அழைத்துக் கொண்டு போகிறேன்," என்று மாடிப் படியேறி னுன் ரத்தினம்.

அவன் அலுவலகத்துக்குப் புறப் பட்டபோது, காரின் பின் கதவைத் திறந்து, துளசியைத் தங்கம்மாள் ஏற்றி விட்டாள்.

வண்டி கொஞ்ச தூரம் சென்றிருக் கும்.

"நீ எது வரைக்கும் படித்திருக் கிருய்?" என்று ரத்தினம் வினவினுன், சாலையைவிட்டுக் கண்களை எடுக்காமல்.

அவள் ஏதோ சொன்னுள். வளை யொலி மட்டும் கேட்டது. பதில் தெளி வாக இல்லை.

"மூன்ரும் பாரமா?" என்ருன் அவன், ஊகமாக.

"எஸ். எஸ். எல். ஸி," என்ருள் அவள், நெகிழ்ந்த குரலில்.

அவன் "தேவலையே!" என்றபோது, அதில் உண்மையாகவே பாராட்டு தொனித்தது. அப்பாவுடன் நடத்திய வறுமை வாழ்க்கையில் அவள் ஒழுங் காகப் படிக்க வாய்ப்பு இருந்திருக் காது என்று அவன் அதுவரை எண்ணி யிருந்தான்.

"முன்பே தெரிந்திருந்தால் கல்லூரி யில் சேர்த்து விட்டிருப்பேனே! பொழுது போக்குக்குப் பொழுது போக்காகவும் படிப்புக்குப் படிப்பாக வும் இருந்திருக்கும்."

அவள் ஏதோ கேட்க விரும்புகிருள் என்று அவனுக்குத் தோன்றிற்று.

"இனிமேல் முடியாதா?" என்ருள்.

அவள் கேட்ட முறை அவனை என் னவோ செய்தது. அதில் அடங்கி யிருந்த ஆவலையும், ஏக்கத்தையும், கெஞ்சும் தொனியையும், குழைவை யும் அவன் முழுமையாக உணர்ந்தான்.

தெருவில் அதிக நடமாட்டமில்லை. சட்டென ஒரு முறை கண்களை உயர்த்தி, கண்ணுடியில் தெரியும் உரு வத்தை நோக்கினுன் ரத்தினம். அயர்ந்து போனுன்.

இவள்தான் துளசியா!

இதுகாறும் அவன் மன அகராதி யில் துளசி என்பதற்குப் பொருள் 'மாமாவின் மகள்' என்றுதான் இருந்து வந்தது. மகள் என்ருல் பெண். உலகத் திலுள்ள கோடிக்கணக்கான பெண் களில் ஒருத்தி. கோடிக்கணக்கான புடவைகட்டும் பிராணிகளில் ஒன்று. ஆனுல் இப்போது அந்த அகராதி தன்னைத்தானே புரட்சிகரமாக மாற்றிக் கொண்டுவிட்டது.

ரத்தினம் கண்களைத் தாழ்த்திக் கொண்டான்.

கண்ணுடியில் அவன் கண்டது துள சியை அல்ல. மாமாவின் மகளை அல்ல. புடவை கட்டும் பிராணிகளில் ஒன் றையும் அல்ல. அவர்களைத்தான் அவன் முன்பே பார்த்திருக்கிருனே? எத்தனையோ முறை பார்த்திருக்கிருன். ஆனுல் ஒரு தடவையாவது, இப்போது ஏற்பட்ட இன்பப் படபடப்பு அவ னுள் ஏற்பட்டதில்லை!

அவளது பருவத்தின் வனப்பு அவ னது வாலிப உள்ளத்தைக் காந்தம் போல் கவர, அன்பே வடிவான அவ னது ஆண்மையை அவளது கெஞ்சும் விழிகள் கவ்வ, படிப்பிலே அவள் காட் டிய ஆர்வம் அவனிடத்தில் நட்புணர்ச் சியைத் தூண்ட, அவன் ஒரு புது அனுபவத்திற்கு ஆளானுன். அவளது விருப்பத்தை நிறைவேற்றும் நிலையில் அவன் இல்லாத குறையானது, அவன் அவளுக்குக் கடமைப் பட்டவன் போன்ற ஒரு பந்தத்தை உண்டாக்கி விட்டது—கடைசிப் பொற்காசும் கொடுத்தான பிறகு வந்துசேரும் புல வனிடம் வள்ளலுக்கு உண்டாகும் பரிவைப்போல.

அதேசமயம் அவனுக்கு ஒருயோசனை தோன்றிற்று. "இனிமேல் எந்தக் கல்லூரியில் இடம் கிடைக்கப்போகிறது?" என்றவன், அவளது ஏமாற்றத்தைத் தணிக்கும் நோக்கத்துடன், "அடுத்த வருடம் நிச்சயமாகச் சேர்ந்துவிடலாம். அதுவரைக்கும் செந்திலே உனக்குப் பாடம் நடத்தச் சொல்கிறேன்," என்றான்.

பாம்பைக் கண்டவள்போல் மிரண்டாள் துளசி. "வேண்டாம், வேண்டாம்" என்று அவள் பதறிய விதம் அவனுக்கு ஆச்சரியத்தைத் தூண்டிற்று.

"ஏன் அப்படிப் பயப்படுகிறாய்?" என்று விசாரித்தான். "அவன் என்ன பண்ணினான்?"

சமாளித்துக்கொண்ட துளசி, "ஒன்றும் பண்ணவில்லை," என்று இழுத்தாள். "ஆனால் அவரைப் பார்க்கிறபோதெல்லாம் என் முதுகில் ஏதோ பூச்சி நெளிகிறாற்போல் தோன்றுகிறது."

அவன் வாய்விட்டுச் சிரித்தான். "கோவிந்தனைப் பார்க்கிறபோது?"

"தீராத விளையாட்டுப்பிள்ளை அவர். அவர் வந்துவிட்டாரென்றால் மூலை முடுக்கில் பதுங்கிக்கொண்டுவிடுவேன். இல்லாவிட்டால் ஏதாவது குறும்பு பண்ணிச் சந்திக்கு இழுத்துமானத்தை வாங்கிவிடுவார்."

"நான்?"

மௌனம்.

ரத்தினம் கண்ணாடியைப் பார்த்தான். கை வளையல்களை நோக்கியபடி இருந்தாள் அவள். அவற்றைக் காரணமில்லாமல் திருப்பிக் கொண்டிருந்தாள் போலும். நாணம் கலந்த இளநகை ஒன்று அவளது அதரங்களைச் சுற்றிச் சுற்றி ஓடிவந்து, அவற்றை மூடவும் விடாமல் திறக்கவும் விடாமல் கஷ்டப் படுத்திக்கொண்டிருந்தது. தன் தோற்றத்தைக் கண்ணாடியில் அவன் பார்த்துக்கொண்டிருப்பது அவளுக்கு எப்படித் தெரியும்? அவளது அகத்தின் அழகு ரத்தினத்துக்குப் பரவசம் ஊட்டிற்று.

"இதுதான் டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட்டா?" என்றாள் அவள், கார் நின்றதும்.

"இதுதான் நமது அலுவலகம். இறங்கி வா," என்றான் அவன்.

வாசலில் நின்ற காவலாள் மரியாதையுடன் அவளுக்குக் கதவைத் திறந்துவிட்டான்.



**அதனால்தான்**

பெரியவர் கேட்டார்: இந்த வயதில் நீ பீடி பிடிக்கிறாயே! வெட்கமாயில்லை?

சிறுவன் சொன்னான்: என்ன செய்யறது? சிகரெட்டு மலிவாயில்லையே?

"அப்படியானால் டைப்ரைட்டிங்...?"

"வாயேன், சொல்லுகிறேன்."

ரத்தினத்தைப் பின்தொடரும்போது இருபது ஜோடிக் கண்கள் தன்னைத் திகைப்புடன் எடைபோடுவதை அவள் உணர்ந்தாள். குனிந்த தலை நிமிரவில்லை.

தனது அறையை அடைந்ததும், மணி அடித்து, தட்டெழுத்து யந்திரத்தை எடுத்துவரச் செய்தான் ரத்தினம்.

"உனக்கு டைப்ரைட்டிங் கற்றுத்தர நானாயிற்று. சம்மதம்தானே?" என்று அறிவித்துவிட்டு, உருளைக்குள் ஒரு வெள்ளைத் தாளைச் செருகினான். விரல்களை எப்படி உபயோகிக்க வேண்டும் என்பதைக் காண்பித்து, முதல் பயிற்சியைத் துவக்கி வைத்த பின்னரே தன் வேலையைக் கவனிக்கலானான்.

அதாவது, வேலையைக் கவனிக்க முயன்றான். முடியவில்லை. அவனுக்கு அப்போது கட்டிடக் காண்டிராக்டைக் காட்டிலும், தட்டெழுத்து ஆசிரியர் தொழிலே மிகவும் பிடித்திருந்தது.

ஒவ்வொரு சமயம் சுண்டு விரலால் அழுத்தச் சக்தியற்று துளசி உடம்பை நெளிப்பதையும், ஓர் எழுத்துக்குப் பதில் இன்னொரு எழுத்தை அடித்துவிட்டு "இஸ்ஸ்" என்று முத்துப் பற்களிடையே காற்றை உறிஞ்சுவதையும்

தீவிர முயற்சி காரணமாகச் சின்னஞ் சிறு வியர்வைத் துளிகள் அவளுடைய மேலுதட்டில் விளிம்பு கட்டுவதையும் ரசிக்கவே அவனுக்கு நேரம் சரியாக இருந்தது.

பொழுது போனதே தெரியவில்லை.

“பாவம், துளசி,” என்று அவள் மீது அனுதாபப்பட்டு, அவன் அவளை மீட்டபோது, “ஐயையோ! நான்கு மணியாகிவிட்டதே! கோபிக்கப் போகிறார்கள் அத்தை,” என்று துடித்துப்போனாள் அவள்.

அன்றிரவு. ஒவ்வொரு செங்கல்லும் உவகையால் பூரிக்க, மூலை முடுக்கில் தொங்கிய 25 வாட் விளக்குகள்கூட உற்சாகத்துடன் ஒளி வீச, நிலவில் குளித்த ஒவ்வொரு புல்லும் இலையும் புன்முறுவலிக்க, அந்த வீடே குதூகலத்தில் ஆழ்ந்திருந்தது. ரத்தினம், துளசி, இவர்களுடைய உள்ளத்தில் உற்பத்தியான ஆனந்தம் கோவிந்தனுக்கும் தங்கம்மாளுக்கும் தாவி, அவர்களிடமிருந்து பேரலைகளாகப் பரவிப் பணியாட்களின் நெஞ்சுகளையும் கைப்பற்றிவிட்டது.

சர்க்கஸுக்கு ஒன்பதரை மணி ஆட்டத்துக்குச் செல்வதெனத் தீர்மானித்து, எல்லோருக்கும் டிக்கட் வாங்கியிருந்தான் ரத்தினம்.

செந்தில் வரவேண்டியதுதான் பாக்கி. உணவருந்திவிட்டுப் புறப்படுவதாகத் திட்டம்.

போர்ட்டிகோவில் கார் நின்று கொண்டிருந்தது. வராந்தாவில் உலவிக் கொண்டிருந்த ரத்தினம், தோட்டத்து வாசலில் பூட்ஸ் ஓசையுடன் யாரோ நுழைவதைக் கவனித்ததும், “யாரது, செந்திலா?” என்றான்.

செந்தில் குரல் கொடுக்கவில்லை.

“ஏன் தம்பி இவ்வளவு நேரம்? வா சாப்பிடுவோம். சர்க்கஸுக்கு டிக்கட் வாங்கியிருக்கிறது,” என்றான் ரத்தினம். காதலைக் கண்டுபிடித்த பெருமிதத்தில், செந்திலிடம் அவனுக்கு ஏற்பட்டிருந்த லேசான அதிருப்தி எப்போதோ மூழ்கி மறைந்துவிட்டிருந்தது.

செந்தில், காரின் முன் கதவைத் திறந்து, குனிந்து, அதன் சாவியை உருவினான். பிறகு, பின்புறத்திலுள்ள பெட்டியின் மூடியைத் தூக்கினான். பழுது பார்க்கும் கருவிகள் அடங்கிய பையை அவிழ்த்து, அதற்குள்ளிருந்த ஒரு கனமான சுத்தியலை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் பிரவேசித்தான்.

விளக்கொளி விழுந்தது செந்திலின் முகத்தில்.

ரத்தினமும் கோவிந்தனும் திடுக்கிட்டு ஒருவரை ஒருவர் மௌனமாகப் பார்த்துக் கொண்டார்கள். கையில் சுத்தியலுடன் நின்ற தம்பியின் தோற்றம் அவர்களுக்குக் கலக்கத்தை உண்டாக்கியதில் வியப்பில்லை.

ஆனால் ஒரு வினாடிக்குள், கலக்கத்தைப் பாசம் நெட்டித் தள்ள, “ஒரு மாதிரியாக இருக்கிறாயே, ஏன் அப்பா?” என்று வினவியபடி செந்திலை நெருங்கினான் மூத்தவன்.

இதற்குள் தங்கம்மாளின் அழைப்பு உள்ளேயிருந்து புறப்பட்டது. “செந்திலா வந்திருக்கிறான்? எல்லோரும் வாருங்கள், சாப்பிட!”

ரத்தினம், “சுத்தியல் எதற்கு, செந்தில்?” என்றான்.

தம்பிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ என்ற சந்தேகம் கோவிந்தனைப் பற்றி ஆட்டிற்று. அவன் தொண்டை வரண்டது.

தற்செயலாக உட்புறமிருந்து எட்டிப் பார்த்த துளசி, அப்படியே பிரமித்து நின்றாள்.

பிள்ளைகள் வராததைக் கண்டு பொறுமையிழந்து முன் ஹாலுக்கு விரைந்த தங்கம்மாள், அங்கே நிலவிய திகில் சுமந்த மௌனத்தையும், துளசி, கோவிந்தன், ரத்தினம் ஆகியவர்களுடைய முகங்களில்படர்ந்திருந்த திகைப்புக்குக் காரணத்தையும் கவனித்தாளோ இல்லையோ, விடுவிடுவென்று செந்திலிடம் நடந்து சென்று தாயின் உரிமையுடன் அவன் தோள்களைப் பிடித்து உலுக்கினாள்.

“செந்தில்! என்னடா இது? ஏண்டா இப்படிப் பித்துப் பிடித்தவனாட்டம் நிற்கிறாய்? சொல்லுடா!”



# தமாஷ்!

### ஸவச சர்க்கஸ்

"இந்தாருங்கள், குழந்தை ஒரேயடியாக அடம் பிடிக்கிறது. ஏதாவது வேடிக்கை காட்டக் கூடாதா?"



"என்ன வேடி ?"

"ஷேவ் செய்து கொள்ளுங்களேன்!"

### உரிமை முழக்கம்

*கணவன்:* நாம் இப்படி ஒருவரை யொருவர் திட்டிக்கொள்வதைப் பார்த்துத் தெருவே சிரிக்கிறது.

*மனைவி:* எனக்கும்தான் அவமானமாக இருக்கிறது. நீங்கள் எதிர்த்து எதிர்த்துப் பேசுவதை எப்போது தான் விடப் போகிறீர்களோ?

### பெரியது கேட்கின்...

*மரக் குதிரை வாங்குவதற்காக விளையாட்டுச் சாமான்கடையில் நுழைந்தவர் ஐம்பதுக்கும் மேற்பட்ட குதிரைகளைப் பார்த்தும் திருப்தி அடையவில்லை.* "ரகம் கொஞ்சம் உயர்ந்ததாக இலலையா?"



"தாராளமாயிருக்கிறது—அரேபிய நாட்டில்!" என்றார் கடைக்காரர்.

### கோரப் பிடி

*நர்ஸ்:* டாக்டர்! அந்த நோயாளி இறந்து விட்டார்.

*டாக்டர்:* அட, பாவமே! உயிர் பிரிவதற்கு முன் ஏதாவது சொன்னாரா?

*நர்ஸ்:* சொன்னார், 'பிழைத்தேன்' என்று.

### ஜீவ ராசி

*ஆசிரியர்:* உங்கள் கதையில் கொஞ்சம் கூட ஜீவன் இல்லையே, எப்படி சார் போடுவது?

*எழுத்தாளர்:* அப்படிச் சொல்லி விடக் கூடாது. என்னை நம்பி நிறைய ஜீவன்கள் வீட்டில் இருக்கின்றன.

### கருவி

*வேலை கற்றுக்கொள்ள வந்தவரிடம் மின்சார என்ஜினீயர் சொன்னார்:* "வேலையெல்லாம் எப்படிச் செய்தேன், பார்த்தீர்களா? இப்போது போய் ஸ்விட்சைப் போடுங்கள், 'ஷாக்' அடிக்கிறதா பார்ப்போம்.

### தன்னைத் தான் அறிதல்

"எங்கள் முதலாளி ரொம்ப ரொம்ப ஞாபக மறதியானவர். அதனால் எங்களுக்கெல்லாம் ஒரே சந்தோஷம்."

"எப்படி?"

"எல்லாக் காரியத்தையும் தானே சொல்லிவிட்டு 'எந்தக் கழுதைசொன்னது? எந்தக் கழுதை சொன்னது!' என்று எங்களைக் கேட்பார்."

### கண்ணாடியுடையார்

*கணவன்:* டாக்டர் சொல்லி விட்டார். உனக்குக் கண்ணாடி அவசியமில்லையாம்.

*மனைவி:* அவருக்கென்ன தெரியும்? சிநேகிதிகளெல்லாம் சொல்கிறார்கள் என் முகத்துக்குக் கண்ணாடி ரொம்ப எடுப்பாக இருக்குமென்று.

### நரம்புக்குரியவர்

நரம்புத் தளர்ச்சியினால் அவதிப்படுகிறீர்களா? எங்கள் வைத்தியருக்குத் தெரிவியுங்கள். உங்கள் உடம்பில் ஒரு நரம்பில்லாமல் எடுத்துவிடுவார்!





# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## நான்கு

“ஏதற்கடா இது?” என்றாள் தங்கம்மாள், அவன் கையிலிருந்த கருவியைச் சுட்டிக் காட்டியபடி.

“பூட்டை உடைக்க,” என்றான் செந்தில், சுத்தியலால் இடது உள்ளங் கையைத் தட்டிக்கொண்டே. ரத்தினத்தை அவன் ஓரக்கண்ணால் நோக்கியதையும், அதில் பொங்கிய உணர்ச்சிகளையும் அவன் அன்னை கவனிக்கவில்லை.

அவளது விழிகளில் சற்றுத் தெளிவு பிறந்தது. செந்திலுடைய மேஜை அல்லது பீரோ சாவி தொலைந்து போய்விட்டது போலும். அதற்காகப் பூட்டை உடைக்கலாமா?

“நாளைக்கே சாவிக்காரனைக் கூட்டி வரச் சொல்லி வேறு சாவி போட்டு விடலாம்,” என்றாள் அவள், சிறு குழந்தையைத் தேற்றுவதுபோல. “சுத்தியலை அப்படி வையப்பா. எல்லோரும் சாப்பிட வாருங்கள். நேரமாகிறது.”

தன்னை யாரும் பின்பற்றவில்லை என்பது, கதவண்டை சென்ற பிறகு தான் அவளுக்குத் தெரிந்தது. “இன்னும் ஏன் நின்று கொண்டிருக்கிறீர்கள்?” என்றாள், திரும்பி நோக்கியபடி.

பிள்ளைகள் மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். ஒவ்வொரு பார்வை ஒவ்வொரு விதமாக இருந்தது. அவள் சொற்கள் அவர்கள் காதுகளை எட்டியதாகவே தெரியவில்லை. தங்கம்மாளுக்கு என்னவோ போலிருந்தது. சொந்தப் பிள்ளைகளே ஆனாலும், அவர்கள் முற்றிலும் தனக்குச் சொந்தமானவர்கள் அல்ல என்ற அச்சமூட்டும் உண்மையை அவள் அப்போதுதான் உணர்ந்தாள். பிள்ளைகள் வளர்ந்து பெரியவர்கள் ஆகிவிட்டார்கள். ஒவ்வொருவரும் தன்னைத் தனித் தனியே ‘அம்மா’ என்று அழைத்த போதிலும், அவர்களுக்கிடையே அவள் சம்பந்தப்படாத ஒரு புது உலகம் ஏற்பட்டுவிட்டது. அதில் அவளுக்கு இடம் கிடையாது.

“அண்ணா!” என்று அழைத்தான் செந்தில். “கணக்கைப் பூட்டிவைக்க ஒருவரிடம் சாவி இருந்தால், அந்தப் பூட்டை உடைத்து எறிய இன்னொருவரிடம் சுத்தியல் இருக்கும்.”

“சுத்தியல் மட்டும் என்ன? சிறை வாசமும் உண்டு!” என்றான் கோவிந்தன், பளிச்சென்று. செந்தில் வீட்டிற்குள் நுழைந்ததுமுதல் நடந்துகொள்ளும் முறையிலிருந்தும், ரத்தினத்தைப் பார்க்கும்போதெல்லாம் அவன கண்களில் பீரிடும் ஆத்திரத்திலிருந்தும், அண்ணாவுடன் தம்பி மோதப் போகிறான் என்பதைச் சற்று முன்கூட்டியே ஊகித்துவிட்டான் கோவிந்தன். மோதவேண்டிய அவசியம் என்ன என்பது மட்டும் புதிராக இருந்தது. அது ஓரளவு வெளியானதும் அவனால் தனது உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

ஆனால் செந்தில் கோவிந்தனைச் சட்டை செய்தானா?

கண்களில் கோபம் மின்ன, புன்னகையில் ஏகத்தாளம் கொப்புளிக்க, “மடியில் கனமிருந்தால்தான் வழியில் பயம் என்பார்கள். அண்ணா விஷயத்தில் எப்படியோ?” என்றான்.

வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல் சொல்லப்பட்ட வார்த்தைகள் ரத்தினத்தின் தலையில் சம்மட்டி அடியாக விழுந்தன.

“செந்தில்!” என்றான் ரத்தினம், வியப்பும் துயரமும் பந்து போல் தொண்டையை அடைக்க. வார்த்தையொன்றும் அதற்குமேல் வரவில்லை. நிற்க இயலாது சோபாவில் உட்கார்ந்துவிட்டான்.

"பூட்டை மட்டுமல்ல; அண்ணாவின் மனத்தை உடைக்கவும் உன்னிடம் சுத்தியல் இருக்கிறது!" என்றான் கோவிந்தன்.

"அது என்ன கண்ணாடிச் சாமானா, உடைவதற்கு?" என்று கேட்டான் செந்தில். "அது அசல் ஜம்ஷத்பூர் சரக்கு. எஃகால் ஆனது."

அவன் மற்றொரு சோபாவில் உட்கார்ந்து கொண்டான். "அப்படியே உடைவதாக வைத்துக் கொள்வோம். என் மானத்தை வாங்க அவர் துணிந்துவிட்ட பிறகு, அவர் மனம் உடைவதைப்பற்றி நான் ஏன் கவலைப் பட வேண்டும்?"

ரத்தினம் நிமிர்ந்து உட்கார்ந்தான். "உன் மானத்தை நான் வாங்கி விட்டேனா! எப்போது?"

"ஹூம்," என்றான் செந்தில். "இப்போதுதான் விளங்குகிறது, நடிப்பென்றால் என்னவென்று. அடுத்தபடியாக, உங்கள் மானத்தை நான் வாங்கி விட்டேன் என்று பழியை என் மேலேயே திருப்பிவிடுவீர்கள் போலிருக்கிறதே!"

"ஆமாம், இவர் பெரிய உத்தம சகோதரர்தான்! இவர்தான் இத்தனை நாளாக உயிரைக் கொடுத்து அண்ணாவின் மானத்தைக் காப்பாற்றி வந்திருக்கிறார். டேய் மண்டை வீங்கி! நமது அண்ணாகச்சே பொறுத்துக் கொண்டிருக்கிறார். வேறு யாராவது அவர் நிலையில் இருந்திருந்தால், இந்நேரம் நீ நடந்துகொள்ளும் விதத்துக்கு உன் தலையைத் தவிடாக்கியிருப்பார்!" என்று திமிறிய கோவிந்தனை அடக்கினான் ரத்தினம்.

"உஸ்! கோவிந்தா, கொஞ்சம் சும்மா இரேன். செந்தில்! இப்படி வா. இப்படி வந்து உட்கார்."

ரத்தினம் சோபாவைத் தட்டியது தான் மிச்சம். தான் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை செந்தில்.

"என்மேல் உனக்கு என்ன கோபம்? சொல்."

"ஜம்புவின் பார்வையிலிருந்த கணக்குகளை உங்கள் அறைக்கு மாற்றிக் கொண்டீர்களே, அது ஏன்? நான் பார்க்கக்கூடாது என்றுதானே?"

"அப்படியில்லை, செந்தில்." ரத்தினத்தின் குரல் கரகரத்தது. "எனக்கு இருக்கும் உரிமை உனக்கு இல்லாமல் போய்விடுமா? என்னிடத்தில் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், எல்லாவற்றையும் சந்தோஷமாக நானே எடுத்துக் காட்ட மாட்டேனா? படிக்கிற பிள்ளையாயிற்றே, கவனத்தைச் சிதறடிக்கக் கூடாது என்று சும்மா இருந்தேன். தொழிலில் இவ்வளவு அக்கறை இருக்கிறது என்று தெரிந்திருந்தால், உனது புத்திக்கூர்மையையும் திறமையையும் எப்போதிருந்தோ பயன்படுத்திக் கொண்டிருப்பேன். இரண்டு நாள் முன்பு, உன் அறையிலிருந்த அலமாரியைத் திறக்க நேரிட்டது..."

"ஓகோ," என்றான் செந்தில், சுவாரஸ்யத்தோடு. "சாவி?"

"அதற்கு இரண்டு சாவி உண்டு. ஒன்றைத்தான் உன்னிடம் கொடுத்து வைத்திருந்தேன். அலமாரி தேவையாயிருப்பதாக அம்மா சொன்னார்கள். உன் அறையிலுள்ளது காலியாக இருந்ததாக ஞாபகம்..." இந்த இடத்தில் செந்தில் ஒரு நமுட்டுச் சிரிப்புச் சிரித்தான். அதை ரத்தினம் பொருட்படுத்தவில்லை. தொடர்ந்தான். "தொழில் சம்பந்தமான கணக்குகள் எல்லாவற்றுக்கும் நீ நகல் எடுத்து வைத்திருப்பதைக் கண்டதும் எனக்கு ஒரே அதிர்ச்சியாக இருந்தது. வெளிப்படையாக ஒரு வார்த்தை சொல்லாமல், ரகசியமாக என்னைக் கண்காணித்து வந்திருக்கிறாய் என்று தெரிந்து கொண்டேன். செந்தில்! என் திறமையைப் பற்றி எனக்கு அவ்வளவு உயர்ந்த அபிப்பிராயம் கிடையாது. ஆனால், பிறர் என் மீது நம்பிக்கை வைக்கும் போது, பத்து மடங்கு பலம் எனக்குத் தானாகவே கிடைத்துவிடும். ஆனால் யார் மீது நான் அன்பை அதிகமாகப் பொழிந்தேனோ, யாரை நினைக்கும் போதெல்லாம் என் நெஞ்சு பெருமையால் பூரிக்குமோ அவன் என் நாணயத்தில் சந்தேகப் படுகிறான் என்று தெரிந்ததும், எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. சங்கடமாக இருந்தது. அக்கௌண்டண்ட் உன்னிடம் கணக்குகளைக் காண்பித்தது சரி. இந்த மாதிரி மற்றவர்களிடமும் காண்பிக்க மாட்டார் என்பது என்ன நிச்சயம்? உன்மீது ஏற்பட்ட வருத்தம் தவிர, ஜம்புவை எச்சரிக்க வேண்டும் என்பதற்காகவும் புது ஏற்பாட்டைச் செய்தேன்."

கால்மேல் கால் போட்டவாறு, உத்தரத்தை நோக்கியபடி செந்தில் வினவினான். "நான் உங்களை ஒரு

வார்த்தை கேட்கவில்லை என்று வருத்தப்பட்டதாகச் சொல்கிறீர்கள். சரி. வருத்தம் உண்டான பிறகு, என்னைக் கூப்பிட்டு நீங்கள் ஏன் ஒரு வார்த்தை கேட்டிருக்கக் கூடாது?"

"தவறுதான்," என்று ஒப்புக் கொண்டான் மூத்தவன், முகம் மேலும் வாட்டமடைய.

"உரிமையாளரில் ஒருவன் என்ற முறையில் எனக்கு மதிப்புக் கொடுத்து அந்த அக்கௌண்டண்ட் கணக்கைக் காட்டி வந்தார். அதற்காக அவரை மறைமுகமாகக் கண்டித்திருக்கிறீர்கள். என்னைப்பற்றி அவர் என்ன நினைப்பார்? அதை எண்ணிப் பார்த்தீர்களா?"

ரத்தினம் எழுந்து வந்து தம்பியின் கைகளைப் பிடித்துக் கொண்டான். "நிதானமிழந்து ஏதேதோ செய்து விட்டேன். செந்தில்! என்னை மன்னித்துக் கொள்."

"அண்ணா!" என்று அதட்டினான் கோவிந்தன். "என்ன இது! அவன் என்னடா என்றால் மேலே மேலே போய்க்



கொண்டே இருக்கிறான். நீங்கள் படிப்படியாகத் தாழ்ந்து, அவன் காலைப் பிடிக்கும் கட்டத்துக்கு இறங்கி விட்டீர்கள்! சுண்டைக்காய்ப் பயல், இவன். இவனிடம் மன்னிப்புக் கேட்பதாவது! இப்படி வாருங்கள், சொல்கிறேன்!'' என்று ரத்தினத்தைப் பிடித்து இழுத்தான்.



அவனுடைய சினத்தைப் பன்மடங்காக்கும் கட்டம் அடுத்தாற்போல் வந்தது. செந்திலிடம் அண்ணா மன்னிப்புக் கேட்பதைக் கண்டே அவன் குமுறினான். ஆனால் அண்ணாவை மண்டியிட வைத்ததோடு செந்தில் திருப்தி அடையவில்லை. முகத்தைச் சுளித்தபடி ரத்தினத்தின் பிடியிலிருந்து தன் கைகளை உருவிக்கொண்டு, அருவருப்புடன், "இதென்ன அசட்டுத்தனம்! விடுங்கள்! உணர்ச்சி வசப்பட்டுக் கண்கலங்க நீங்கள் பெண் இல்லையே!" என்று பரிகசித்தான். ரத்தினத்தின் பணிவு அவனுடைய எரிச்சலை ஆற்றியதாகத் தெரியவில்லை. மேலும் தூண்டிவிட்டது போல் தோன்றிற்று.

இல்லாவிட்டால், இரட்டிப்புத் தீவிரத்தோடு அவன் மறுபடியும் ரத்தினத்தைத் தாக்கத் துவங்கியிருப்பானா? "உங்கள் பெயரைப் பற்றித் தான் உங்களுக்குக் கவலை கிடையாது. நம் வீட்டைச் சேர்ந்த குடும்பப் பெண்களையும் சந்தி சிரிக்கவைக்க வேண்டுமா?" என்று பாய்ந்திருப்பானா?

"என்னடா? உளறுகிறாய்?" என்று குறுக்கிட்டான் கோவிந்தன்.

அனலைக் கக்கிற்று செந்திலின் நா.

"வயது வந்த பெண். கல்யாணத்துக்கு நிற்கிறவள். டைப்ரைட்டிங் கற்றுக் கொடுப்பதாகச் சொல்லி அவளைப் பகல் முழுவதும் ஆபீஸ் அறையில் அடைத்து வைத்துக் கொண்டால், அங்கு வேலை பார்க்கிறவன் எல்லாம் கை கொட்டிச் சிரிக்கமாட்டான்? இது அலுவலகமா, வேறு எதுவுமா என்று தலையில் அடித்துக்கொள்ள மாட்டான்?"

யாரும் அவனுக்கு விடையிறுக்கத் துணியவில்லை. இவ்வளவுக்கும், வர வரச் செந்திலின் குரல் தணிந்துகொண்டே வந்து, கடைசியில் இட்டத் தட்டக் கிசுகிசுப்பு நிலையை அடைந்துவிட்டது. ஆனால் அழுத்தம் திருத்தமாக உச்சரிக்கப்பட்ட அந்தச் சொற்கள் கூர்மையில் கத்தி முனையை மிஞ்சிவிட்டன.

## அனுவசிய ஆராய்ச்சி

பாலில் மோர் கலந்தால் தயிராக மாறும்; தண்ணீர் கலந்தால் காசாக மாறும்.

திடீரென்று மௌனத்தைக் கலைத்தது கோவிந்தனின் சிரிப்பு.

"ஆஹ்ஹா!" என்று எக்காளமிட்டபடி, அவன் நாற்காலியில் உட்கார்ந்து தன் தொடையைத் தானே ஓங்கித் தட்டிக் கொண்டான். "கண்டு பிடித்துவிட்டேன்! கண்டு பிடித்து விட்டேன்!"

சில விநாடிகளுக்கு முன்பு, புருவங்கள் உரச, பல்லை நறநறவென்று கடித்தபடி தம்பியை எரித்துவிடுபவன் போல் விழித்துக்கொண்டிருந்த கோவிந்தனா இப்போது குதூகலம் தாங்க முடியாமல் கும்மாளம் போடுகிறான்!

"அம்மா!" என்று கூவினான் கோவிந்தன், ஒரு மூலையில் உட்கார்ந்தபடி வாய்திறவாச் சாட்சியாக அனைத்தையும் கவனித்துக்கொண்டிருந்த தங்கம்மாளிடம். "உங்கள் கடைசிப் பையனுக்கு முதலில் ஒரு கல்யாணத்தைப் பண்ணி வையுங்கள் சொல்கிறேன். எல்லாம் சரியாகப் போய்விடும். விளையாட்டு இல்லை அம்மா, நிஜமாக! அவனுக்கும் நல்லது, —மற்றவர்களுக்கும் நிம்மதி."

கடந்த முப்பது நிமிடங்களாக, சகோதரர்களுக்குள் நிகழும் கலவரத்தைக் கண்டு மேலும் மேலும் கவலையில் தோய்ந்த தங்கம்மாளின் முகத்தில், கோவிந்தனின் கேலிப் பேச்சு சற்று மலர்ச்சியைத் தோற்றுவித்தது.

கோவிந்தன் எழுந்து சென்று அம்மாவின் முன்பு நின்றான். "பையனுக்கு வேறொன்றும் இல்லை அம்மா. பொறாமை! பொறாமைதான் அவனை அரித்துத் தின்கிறது. நேற்று நான் துளசியுடன் விளையாடினபோது வள்ளென்று விழுந்தானா? இன்றைக்கு அதே காரணத்துக்காகத்தான் அண்ணாவோடு குஸ்தியில் இறங்கியிருக்கிறான். சாவி, பூட்டு என்பதெல்லாம் வெறும் சாக்கு. சந்தேகமே கிடையாது. ஆத்திரத்துக்குக் காரணமே வேறு!" என்று பொரிந்து தள்ளினான். "அவனை நீயே வேண்டுமானாலும் கேட்டுப் பாரேன்!"

கல்யாணப் பிரசினை தலைகாட்டிய வுடன், தங்கம்மாளின் உள்ளத்தில் அவளை அறியாமல் ஊக்கம் பிறந்தது. புன்னகை செய்தவாறு, பிள்ளைகளுக்குள் சமரசம் ஏற்படுத்திவைக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது என்ற மகிழ்ச்சியோடு, "கோவிந்தன் சொல்வதைக் கேட்டாயா, செந்தில்?" என்றாள்.

அதைக் காட்டிலும் பெரிய தவறை அப்போது அவளால் செய்திருக்க முடியாது.

செந்திலின் முகத்திலிருந்த ரத்தமெல்லாம் வடிந்து, முகம் வெளிறிற்று. கையும் களவுமாகப் பிடிபட்ட புதுத் திருடனைப் போல, அவமானம் தாங்காமல் தலையைக் கவிழ்த்துக்கொண்டான்.

அடுத்த விநாடி அவன் முகத்தை நிமிர்த்திய போது, எதற்கும் துணிந்து விட்ட தைரியம் அதில் முத்திரையிட்டிருப்பது தெரிந்தது.

"அண்ணா!" என்றான் செந்தில், மடங்காத பார்வையை ரத்தினத்தின் மீது செலுத்தியபடி. "நேற்றிரவு வந்த தாமோதரத்துக்கு எவ்வளவு கொடுத்தீர்கள்?"

"ஐயாயிரம். ஏன்?"

"அதைத்தான் நானும் கேட்கிறேன்."

ரத்தினம் தயங்கினான்.

"அவர் அந்தக் காலம் தொட்டே அப்பாவுக்கு மிகவும் வேண்டியவர். தேவையிருக்கிறது என்று சொன்னார்."

"அதற்காக ஐயாயிரம் ரூபாயைத் தூக்கிக் கொடுத்து விடுவதா?"

"நானாகக் கொடுக்கவில்லை. அம்மாவைக் கேட்டு, அவர்கள் சொன்னதைத்தான் செய்தேன்."

செந்தில் மூச்சை நன்றாக இழுத்து விட்டுக் கொண்டான்.

"பணம் திரும்பி வருமா?"

ரத்தினம் இருப்புக் கொள்ளாமல் தவித்தான். "வருமென்று தோன்றவில்லை."

"தாமோதரம் யார், எங்கே இருக்கிறார், என்ன செய்கிறார்—ஏதாவது உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது."

"அவர் கேட்டவுடனே அவருக்கு ஐயாயிரத்தைத் தூக்கிக் கொடுக்குமாறு அம்மா கட்டளையிடக் காரணம்?"

"அதுதான் சொன்னேனே, தாமோதரம் அப்பாவுக்கு மிகவும் வேண்டியவர் என்று.'

செந்தில் முறுவலித்தான்.

"அப்பாவுக்கா, இல்லை..."

அரை விநாடிக்கு, அங்கே பூரண மௌனம்நிலவிற்று. தலைமயிர் உதிர்ந்து விழுந்திருந்தால் கூட ஓசை கேட்டிருக்கும்.

மறு விநாடி, மற்ற எல்லோருக்கும் மேனி சிலிர்த்தது.

"சண்டாளா! என்னடா சொன்னாய்!" என்று கர்ஜித்தபடி, பாய்ந்து வந்து, சுத்தியலைப் பறித்துக் கையை ஓங்கினான் கோவிந்தன்.

"நில்!" என்றது ஒரு குரல்,

அது தங்கம்மாளுடையது.

இதற்குள், ரத்தினம் எழுந்து தம்பிமார் இருவருக்கும் இடையில் புகுந்து, கோவிந்தனைக் கட்டுப்படுத்தி விட்டான்.

தங்கம்மாள், அமைதியுடன் செந்திலின் முகத்தை ஏறிட்டு நோக்கினாள்.

செந்தில், சிலைபோல நின்றான். அவன் உள்ளத்தில் சுழலும் உணர்ச்சி எதையும் அவன் கண்கள் காட்டிக் கொடுக்கவில்லை.

தங்கம்மாள் தன் புடவைத் தலைப்பால் அவன் நெற்றியில் கோத்திருந்த வியர்வைத் துளிகளை ஒற்றி எடுத்தாள்.

அவன் கண்கள் கலங்கியிருந்தன.

மாலை, அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டதும், நேரே வீடு செல்ல ரத்தினத்துக்குப் பிடிக்கவில்லை. தனிமையை அவன் உள்ளம் நாடிற்று. கடற்கரையை நோக்கிச் சக்கரங்களைத் திருப்பினான்.

பல்கலைக் கழகக் கட்டிடம் வந்தது. அதற்கு எதிரில், நடைபாதை ஓரமாக

வண்டியை நிறுத்தினான். உட்கார்ந்த படியே, பிடிகளை ஒவ்வொன்றாகச் சுழற்றி, நான்கு கதவுகளின் கண்ணாடி ஜன்னல்களையும் மேலே ஏற்றினான். காரைவிட்டு இறங்கி, கதவைச் சாத்தி, கைப்பிடியிலிருந்த துவாரத்தில் சாவியைச் செருகிப் பூட்டப் போனான். நினைவில் ஏதோ பளிச்சிட்டது போலும். பூட்டாமல் சாவியை உருவிப் பைக்குள் போட்டுக்கொண்டு தெற்கு நோக்கி நடக்கலானான்.

வானத்தில் மேகங்கள் அடை அடையாகப் பிடித்துப்போயிருந்தன. எல்லாம், கவர்ச்சியற்ற ஈய நிறம். எங்கோ ஓரிடத்தில். அழுக்கு மஞ்சளும் சாம்பலும் குழப்பி வைக்கப்பட்டாற்போல் சந்திரன் அழுது வடிந்துகொண்டிருந்தான்.

'காற்றை மருந்துக்குக்கூடக் காணோமே!' என்று வியந்த ரத்தினம், நடையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டு. கடற்பக்கம் பார்வையைத் திருப்பினான். வானம் எது, கடல் எது என்று தெரியாதபடி பனி மூடியிருந்தது.

திருவல்லிக்கேணிக் கூட்டத்தைக் கடந்து அவன் பெஸண்ட் சிலைக்கு எதிரில் வந்து கொண்டிருக்கும்போது, யாரோ தன் பெயர் சொல்லிக் கை தட்டி அழைப்பது கேட்டது.

நின்றான்.

இரண்டு நிமிடத்தில் அவர் அவனை எட்டிப் பிடித்து விட்டார். ஸில்க் மேல் துண்டை ஒரு தோளில் போட்டு இடையின் மறுபக்கம் முடிந்து விட்டுக் கொண்டிருந்த அவர் வரும்போதே ரத்தினம் அடையாளம் கண்டு கொண்டுவிட்டான்.

தாமோதரம்!

"எத்தனை தடவை உன் ஆபீஸுக்கு டயல் பண்ணுவது?" என்று குறைப் பட்டுக் கொண்டார் தாமோதரம். "ஒரு தடவைகூட போன் கிடைக்க வில்லை. எடுத்துக் கீழே வைத்துவிடுவீர்களோ?"

ரத்தினம் பேசாமலிருந்தான். அவர் மீது அவனுக்கு வெறுப்பு என்று கூற முடியாது. இருந்தாலும், அவரிடம் ஒட்டாமல் ஒதுங்கி நின்ற முறை, அவனது இயல்புக்கு முரணாக இருந்தது.

"என்ன சேதி?" என்றான் அவன்.

"உன்னிடம் ஐயாயிரம் வாங்கிக் கொண்டேனா? நான் நினைத்த விலைக்கு ஆள் படியமாட்டேன் என்கிறான். இன்னும் ஓர் இரண்டாயிரம் கிடைத்தால், இன்றைக்கு ராத்திரியே வேலையை முடித்துக்கொண்டு ஊருக்குப் போய் விடுவேன். எப்போது வரட்டும்!"

பேச்சை வளர்த்த ரத்தினம் விரும்ப வில்லை.

"இப்போது சௌகரியப்படாது என்று நினைக்கிறேன்," என்றான்.

அவருக்கு அப்படி மூணுக்கென்று கோபம் வருமென அவன் எதிர்பார்த்திருக்க முடியாது.

"எனக்கு ரொம்ப முடையாயிருக்கிறது," என்றார் கடுகடுப்புடன்.

"வேறு ஏற்பாடு பண்ணிக்கொள்வது நல்லது," என்றான் ரத்தினம் அமைதியாக.

அவர் விறைப்பாக நின்றார். உயரத்தில் இன்னும் ஆறங்குலம் கூடிவிட்டாற்போல் தோன்றிற்று.

"லட்சக் கணக்கில் வருமானத்தைக் கொட்டிக் கொள்கிறாய். கேவலம் இரண்டாயிரத்தை வீச உனக்குக் கசக்கிறதா?"

ரத்தினத்தின் உறுதி கலையவில்லை. தந்தையின் நண்பராயிற்றே என்ற எண்ணம் அவனிடம் இருக்கத்தான் செய்தது. பத்து நாட்களுக்கு முன்பு அவர் இப்படிக் கேட்டிருந்தால் ஒரு கால் தொகையைத் தந்தாலும் தந்திருப்பான். ஆனால் நேற்று இரவு இந்த மனிதரையொட்டித் தாய்க்கு நேர்ந்த சங்கடம் அவ்வளவு எளிதில் அவன் மனத்தை விட்டு அகல்வதாக இல்லை. 'ஊர்பேர்' தெரியாத தாமோதரத்துக்கு உதவி செய்து, மறுபடியும் தங்கம்மாளுக்குச் செந்திலைப் போன்றவரிடமிருந்து ஏச்சைத் தேடித் தர ரத்தினத்தின் உள்ளம் கண்டிப்பாக மறுத்தது.

ஒரு தடவை பட்டது போதும் என்ற தீர்மானத்துடன், "நான் சொல்லக்கூடியதைச் செய்தாயிற்று, போய் வருகிறேன்," என்று புறப்பட்டான்,

ஆனால் அவர் அனுமதிக்கவில்லை. "டேய் ரத்தினம்! என்னை யாரென்று நினைத்தாய்!" என்று சவால் விட்டார், உரத்த குரலில்.

"உன்னைப்பெற்ற தகப்பனடா நான், தகப்பன்!"

# சொன்னதும்

*திரு. கிருஷ்ண மேனன்:*

ஐ. நா. ஆயுதப் பரிகரணக் குழு தன்னாலியன்றதைச் செய்து வருகிறது.

—ஆயுதப் பரிகரணம் ஏற்பட்டு விடாமலிருக்க.

*திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி:*

உள்நாட்டு நிதி நிலைமை பற்றி நான கவலைப்படவில்லை.

நடுங்கிச் சாகிறேன்.

*ஒரு சோஷலிஸ்டு தலைவர்:*

இரண்டு சோஷலிஸ்டு கட்சிகளும் இணைந்து ஒன்றாக இருக்க வேண்டுமென்று பெரும்பாலோர் விரும்புகிறார்கள்.

கொஞ்ச நாளில் அந்த ஒன்றும் மறைந்து விடலாமென இன்னும் சிலர் விரும்புகிறார்கள்.

*ஒரு நிபுணர்:*

டெல்லிக்கருகே மீன் மழை பெய்தது, விஞ்ஞானிகளுக்குப் பெரிய அதிசயமல்ல.

அந்த மீன்களுக்குத்தான் அதிசயமாயிருந்திருக்கும்.

*ஒரு துறைமுக அதிகாரி:*

# சொல்ல

இந்தியத் துறைமுகங்களில் இப்போது உடனுக்குடன் கப்பல்களைத் திருப்பியனுப்புவது சாத்தியமாகியிருக்கிறது.

இதற்காக வேண்டி, துறைமுகங்களின் நாற்றத்தைப் பன்மடங்கு அதிகரித்திருக்கிறோம்.

*கேரள முதலமைச்சர்:*

தங்கள் திட்டங்களையும் கொள்கைகளையும் அடிக்கடி மாற்றிக் கொள்பவர்கள்தான் புத்திசாலிகள்.

பதவியில் அவர்கள் நிரந்தரமாக இருப்பதே இதற்கு அத்தாட்சி.

*ஓர் அமைச்சர்:*

வெறும் செல்வமும் சொத்தும் மகிழ்ச்சி தந்து விடாது.

அமைச்சர் பதவி ஒன்று தான் அவற்றைத் தரும்.

*ஒரு மைசூர் மந்திரி:*

ரப்பர் வளையல் அணியக் கூடாதெனத் தடை செய்ய எனக்கு அதிகாரமில்லை.

நான் கல்யாணமானவன்.

*திரு. கே. வி. ரெட்டி:*

பொதுத் தேர்தல் காலத்தில் காங்கிரசிலிருந்து ராஜினாமா செய்தவர்களைத் திரும்பக் காங்கிரஸ் கட்சியில் சேர்த்துக் கொள்ளக்கூடாது.

தேர்தலில் வெற்றி பெற்றவர்களை மட்டுமே சேர்த்துக் கொள்ளலாம்.

# மறந்ததும்

# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## ஐந்து

காரின் ஜன்னல் விளிம்பில் விழுந்த மழைத் சிதறி அவன் தெறித்திருக்காவிடில், ஒன்பதரை மணி ஆகிவிட்டதை அறியாத ரத்தினம் இன்னும் எவ்வளவு நேரத்திற்கு வண்டிக்குள் அப்படியே உட்கார்ந்திருந்திருப்பானோ, தெரியாது.

திடுக்கிட்டவனாய், பல்கலைக் கழக மணிக்கூண்டை நோக்கியவன் பிறகு விசைகளை முடுக்கி வண்டியை நகர்த்தினான்.

சோவென்று பெய்தது மழை. கண்ணாடி துடைக்கும் கருவியின் ரீங்காரம் கேட்டதே ஒழிய, அதனால் பலனொன்றும் காணோம். காரின் சக்தி நிறைந்த விளக்குகள் கூட, நீர்த் திரையைத் துளைக்க முடியவில்லை. சற்று முன்னுக்கு வந்து, நெற்றியைச் சுளித்தபடி, பாதையைவிட்டு வண்டி விலகாதபடி மெள்ள ஓட்டினான் ரத்தினம்.

வெளியே மழை. உள்ளத்திலோ? புயல்.

தாமோதரத்தை அவன் சந்தித்து மூன்று மணிக்குமேல் ஆகிவிட்டது. ஆனால் அவரால் கிளப்பி விடப்பட்ட சூறாவளி இன்னும் அடங்கவில்லை. மாறாக, ஒவ்வொரு விநாடியும் வலுத்துக் கொண்டே வந்தது.

அந்த மனிதர் கோபத்தில் வீசியெறிந்த சொற்களைக் கேட்டவுடன், ரத்தினத்துக்கு ஏற்பட்ட சந்தேகம், 'ஆசாமிக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ!' என்பதுதான். உயர்ந்த குடும்பத்தில் பிறந்த ஓர் இளைஞனைப் பார்த்து, அதிகப் பழக்கமில்லாத ஒரு மனிதர், கடற்கரையில் பகிரங்கமாக, திடீரென்று, "நான் தான் உன் அப்பா!" என்று இரைவதென்றால், மூளை குழம்பியவரைத் தவிர வேறு யாரால் இயலும் இந்த அசட்டுக் காரியம்?

ஆனால் அடுத்தாற்போல், வேறு ஓர் உணர்ச்சி ரத்தினத்தின் உள்ளத்தில் பொங்கிற்று. அவன் அதற்கு முன் அனுபவித்திராத உணர்ச்சி அது. மூச்சிலே வெப்பத்தைப் புகுத்தி, நெற்றி நரம்புகளைப் புடைக்கச் செய்து, விரல் நகங்களை உள்ளங்கையில் பதிய வைத்த அந்தக் கோபம், அவன் உடலெங்கும் படர்ந்தது. தாமோதரத்திடம் அனுதாபமாக ஆரம்பித்த உணர்ச்சி, அவருடைய பேச்சில் பொதிந்த அவமானத்தை அவன் புரிந்து கொண்டவுடன் தீக்குழம்பாகக் கொப்புளிக்கலாயிற்று.

ஆயினும், அவன் எரிமலையாய் வெடித்து அந்த அனற் குழம்பைக் கக்குமுன், ஏதோ ஒன்று அவனைத் தடுத்து நிறுத்திற்று. அவன் ரத்தத்தில் ஊறிய பண்பாடு, என்றைக்கும் அமைதியையே நாடும் குணம், பொது இடத்தில் காட்சிப் பொருளாகிவிடக் கூடாது என்ற எச்சரிக்கை—இவை அனைத்தும் அவன் தன் கோபத்தை அடக்கிக் கொண்டதற்குக் காரணமாக இருக்கலாம். ஆனால் எல்லாவற்றுக்கும் மேலாக மற்றொரு காரணமும் உண்டு. அதுதான் அவனது உள்ளுணர்வு.

பணம் கிடைக்கவில்லை என்ற ஏமாற்றம் தாமோதரத்தின் கோபத்தைத் தூண்டிவிட்டது உண்மையே. அந்த மனிதருடைய குரலில் தொனித்த தன்னம்பிக்கையும், உறுதியும் ரத்தினத்தின் கவ முற்றிலும் கடந்து விட சற்றும் சம்பந்தமில்லாத வழிப்போக்கராக இருந்தால் கிறுக்கு என்று அவரை ஒதுக்கி விடலாம். ஆனால் அவர் வழிப்போக்கரல்ல, குடும்ப நண்பர். நண்பருக்குரிய குணங் அவரிடத்தில் ரத்தினம் காணாமல் இருந்திருக்கலாம். அடிக்கடி வந்து பணம் பறிப்பதைத் தவிர அவர்களுடன் அவர் வேறெந்தத் தொடர்பும் கொள்ளாமல் இருந்திருக்கலாம். ஆயினும் அவர் அன்னியர் இன்னும் சொல்லப்

போனால், அவருக்கு அவர்கள் அத்தனை பணம் கொடுத்து வந்ததற்கு ஏதேனும் காரணம் இருக்கத்தான் வேண்டும். ஒரு மூன்றும் மனிதருக்கோ, தெருவில் போகிறவருக்கோ, இன்றில்லாவிடில் என்றோ ஒரு காலத்திலாவது ஒத்தாசை செய்திராதவருக்கோ, இவ்வளவு சலுகைகள் தரப்பட்டு வந்திருக்க முடியாது.

அந்த ஒரு கணத்தில், தாமோதரத்தின் சொற்களைச் செவியுற்ற அந்த விநாடியில், இந்த எண்ணங்கள் எல்லாம், முழு உருவில் இல்லாவிட்டாலும் கரு அளவிலேனும் ரத்தினத்தின் மனத்தில் படுவேகமாக மின்வெட்டு வெட்டின.

தாமோதரம் எப்படித் தனக்குத் தந்தையாக இருக்க முடியும்? இரண்டு மூன்று பதில்களே அப்போது அவனுள் உதித்தன. ஆனால் எதுவுமே நம்பக் கூடியதாக இல்லை. அவன் குழம்பினான்.

ரத்தினம் அதிர்ச்சியுற்றான் என்றால், தாமோதரம் பிரமித்துப் போனார் என்று சொல்ல வேண்டும். அந்தச் சொற்கள் அவரை அறியாமலே வெளி வந்துவிட்டன என்பது தெளிவாகத் தெரிந்தது.

அவன் கலக்கத்தைக் கண்டு தடுமாறியவராய், "திடுமென நான் இப்படி வெளியிட்டிருக்கக்கூடாது," என்றார், வருத்தம் கலந்த தொனியில். பிறகு "பிற்பாடு வந்து பார்க்கிறேன்" என்று விடை பெற்றுக்கொண்டு ரத்தினம் வாயைத் திறக்குமுன் கூட்டத்தில் கலந்து மறைந்துவிட்டார்.

மௌண்ட் ரோடு பஸ் ஸ்டாண்டைக் கடக்கும் பொழுது, யாரோ கைதட்டி அழைத்தார்கள்.

ரத்தினம் நின்றான்.

பின் கதவு திறக்கப்பட்டது, மழையில் சொட்டச் சொட்ட நனைந்த நான்கைந்து இளைஞர்கள் சிரித்துக் கும்மாளம் அடித்தபடி வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தார்கள்.

எதிர்பாராத இந்தப் படையெடுப்புக் குறித்து ரத்தினம் வியப்படையுமுன், முன் கதவைத் திறந்து கொண்டு ஏறினான் கோவிந்தன், "சரியான சமயத்தில் வந்தீர்கள் அண்ணா! இவர்கள் என் சிநேகிதர்கள். இங்கிலீஷ் படம் ஒன்று பார்த்துவிட்டு வருகிறோம்," என்று விளக்கியபடி.

வழியில் நான்கு இடத்தில் காரை நிறுத்தச் சொல்லி, தன் நண்பர்களை ஒவ்வொருவராகக் கோவிந்தன் இறக்கி விட்டபோது, மாணவர்களின் குதூகலமான அரட்டையும், வேடிக்கைப் பேச்சும், ரத்தினத்தின் இதயத்தில் கவிந்திருந்த இருண்ட மேகங்களைக் கலைக்க ஓரளவு பயன்பட்டன. மழையும் ஓய்ந்தது.

கைக்குட்டையால் தலையைத் துவட்டித் துவட்டிக் காருக்கு வெளியே பிழிந்த கோவிந்தன், திடீரென்று, "என்ன அண்ணா ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்!" என்றான்.

ரத்தினத்துக்குத் துணுக்கென்றது.

"ஒன்றுமில்லையே!" என்று மழுப்பினான். அதே சமயம், அகத்தின் நிலையை முகம் காட்டுகிறது என்பதைத் தெரிந்துகொண்டு ஒரு செயற்கையான உற்சாகத்தை வரவழைத்துக் கொள்ள முற்பட்டான்.

தான் பார்த்த படத்தின் கதையைத் தம்பி காட்சி காட்சியாக விவரித்துக் கொண்டிருக்க, அண்ணாவோ 'ஊம்' கூட்டுவதில் குரலையும், சினிமாவுக்குச் சற்றும் தொடர்பில்லாத விஷயத்தில் சிந்தனையையும் செலுத்திக் கொண்டிருந்தான்.

வீடு நெருங்க நெருங்க விசித்திரமான ஒரு மனநிலையில் அவன் சிக்கிக் கொண்டான். கோவிந்தனுடைய சரளமான பேச்சையும் அதில் அடங்கியிருந்த சகோதர அன்பையும், அதில் அடிபட்ட சாதாரண அன்றாட விஷயங்களையும் கேட்கக் கேட்க, கடற்கரையில் நடந்த சம்பவம் எட்ட எட்டப் போய்க் கொண்டிருந்தது. காலையில் கண் விழித்ததும், கண்டதெல்லாம் வெறும் கனவு என்ற உணர்வு ஏற்பட்டு, அதை யொட்டி ஒரு பக்கம் மகிழ்ச்சியும், மறு பக்கம், 'அதை உண்மை என்று நம்பி நடுங்கினோமே! எவ்வளவு அசடு நாம்' என்ற நாணமும் உண்டாவதுபோல் ரத்தினம் கொஞ்சம் கொஞ்சமாகத் தனது இயல்பான நிலைக்குத் திரும்ப முயன்றான்.

அதே சமயம், 'மாலை நிகழ்ந்தது கனவல்ல, உண்மை. தாமோதரத்தை நீ சந்தித்ததும், அவர் அதிர்ச்சி தரும் செய்தி ஒன்றைச் சொன்னதும் கலப்படமற்ற உண்மை. அந்தச் செய்தி பொய்யானதா இல்லையா என்று கண்டு பிடிப்பதே உன் கடமை,'



என்றொரு எண்ணம் அவனை உறுத்தலாயிற்று.

'இவ்வளவு கலங்குவானேன்? நடந்ததை அம்மாவிடம் சொல்லிவிடுவோம். அத்துடன் பொறுப்பு விட்டது,' என்ற முடிவுக்கு அவன் வந்த சமயம், வண்டியும் வீட்டை அடைந்தது.

ஆனால் தங்கம்மாளைக் கண்டதுமோ அந்தத் தீர்மானம் மனத்துக்குள்ளே முடங்கிக்கொண்டு வெளிவர மறுத்துவிட்டது.

அவர்களுடைய வரவுக்காகச் சாப்பிடாமல் காத்திருந்த அவன் தாயார், "இரண்டு பேருமாக எங்கே போய்விட்டு வருகிறீர்கள்? பொழுதோடு வருவதில்லையா? கோவிந்தனைப் பாரேன்! சீக்கிரம் தலையைத் துவட்டிக்கொண்டு உடை மாற்றிக் கொள்!" என்று வரவேற்றபோது, ரத்தினத்துக்கு ஏனோ அவளை நிமிர்ந்து நோக்கவே தைரியமில்லை.

தாமோதரத்தை அன்றோடு மறந்துவிடுவதே அழகு என்று அவன் மனச்சாட்சி கண்டித்தது. 'அதைப் பற்றி எண்ணி மருகுதல், தாயை அவமதிப்பதற்கு ஒப்பாகும் என்று அவனுக்குத் தோன்றிற்று. வைராக்கி

யத்துடன், தாமோதரத்தின் நினைவையும் அவர் கூறிய சொற்களையும் மனத்திலிருந்து கிள்ளி எறிந்தான்.

பாதாளச் சிறையிலிருந்து விடுபட்டு நீல வானத்தையும் தூய காற்றையும் முதன் முதலாகச் சுவாசிக்கும் கைதியைப் போல அவன் களிப்பெய்தினான்.

நாட்கள் செல்லச் செல்ல, அலுவலகத்திலும் சரி, வீட்டிலும் சரி, சகோதரர்களின் நிலையிலே ஒரு மாறுதல் ஏற்படத் தொடங்கிற்று.

மூத்தவன் அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டிருப்பான் என்று உறுதி செய்து கொண்டு, ஐம்புவைத் தவிர வேறு யாருமில்லாத வேளையில் ரகசியமாக நுழைந்து கணக்குகளைச் செந்தில் சரிபார்த்த காலம் மலையேறிவிட்டது. உரிமையாளரின் அறையிலே இப்போது இன்னொரு மேஜை போடப் பட்டுவிட்டது. மூலையிலே அல்ல, நட்ட நடுவிலே. மின் விசிறியின் காற்று ரத்தினத்தின்மீது எவ்வளவு படுமோ, அந்த அளவு செந்தில் மீதும் வீசும்படியான அமைப்பு! முக்கியமான கடிதமோ, வரவு செலவோ, திட்டமோ, எதுவாக இருந்தாலும், செந்திலின் கைக்கு வராமல் இருக்கலாகாது. இது ரத்தினத்தின் ஏற்பாடு. ரத்தினத்துக்குத் தெரியாமல் ஒருகாரியம் நடப்பதற்கு ஏதுவிருந்தது. ஆனால் இளையவன் அறியாமல் அந்த அலுவலகத்தில் ஒரு துரும்பு கூட அசைய வழியில்லை.

காருக்கு ஒரு டிரைவர் சேர்த்தாயிற்று, காலையில் எட்டு மணிக்கே செந்தில் வீட்டை விட்டுப் புறப்பட்டு நேரே அலுவலகத்திற்குச் செல்வான், சட்டப்படி அது பத்து மணிக்கே திறக்கப்படும் என்றாலும், செந்திலின் உத்தரவுப்படி சில முக்கியமான உறுப்பினர்கள், அவனுக்கு முன்னால் வந்திருந்து அவனை வரவேற்கக் கடமைப் பட்டவர் ஆனார்கள். கல்லூரியில் இறங்கிக் கொண்டு செந்தில் காரைத் திருப்பி அனுப்புவான். ரத்தினம் பத்தரை மணிக்கு அலுவலகத்திற்குப் புறப்படுவான். கல்லூரி முடிந்ததும் அனேகமாக வாரத்தில் நான்கு நாட்கள், தேனீ மலரை நாடுவது போல் செந்தில் நேரே அலுவலகத்துக்கு வண்டியை விடச் சொல்லுவான்.

நிர்வாகம் கை மாறிவிட்டது என்று சொல்லும் அளவுக்குக் காரியாலயத்தில் ஒவ்வொரு இலாகாவிலும் புதுப் புதுத் திருத்தங்கள் செய்யப்பட்டன. அவை எல்லாவற்றையும் ரத்தினம் ஆதரித்தான் என்று சொல்ல முடியாது. ஆனால் அவன் ஒன்றையுமே எதிர்ப்பதில்லை. சிலவற்றில் செந்திலின் புத்திக் கூர்மை வெளிப்பட்டது. சில, தொழிலில் அவர்கள் அடைந்த முட்டுக்களையே கவிழ்த்துவிடக் கூடியவையாக இருந்தன. ஒவ்வொரு சமயம், செந்தில் எல்லை மீறியும் போய் விடுவதுண்டு. இப்படித்தான் ஒரு நாள், ரத்தினம் அலுவலகத்துக்கு வந்தபோது, மேஜைமீது ஒரு டைப் அடித்த காகிதம் இருக்கக் கண்டான்.

பெரும் தொகை சம்பந்தப்பட்ட ஓர் ஒப்பந்தத்தை முடிப்பதற்காக ஒரு புகழ்பெற்ற எஞ்ஜினியர் அன்று பன்னிரண்டு மணிக்கு அவ்விடம் வருவதாக இருந்தார். அவருடன் எப்படி உரையாடவேண்டும், ஒப்பந்தத்தின் விவரங்களை விவாதிக்கும்போது எந்தச் சொற்களை உபயோகிக்கவேண்டும் என்பதைக்கூட நாடக பாத்திரங்கள் பேசிக்கொள்வதுபோல் முழுக்க எழுதி வைத்துச் சென்றிருந்தான் செந்தில். ஒவ்வோர் இடத்தில், எதிராளி இன்ன முறையில் பேச்சைத் துவக்கினால் ரத்தினம் இன்ன விதத்தில் பதில் அளிக்கவேண்டும் என்றும், மற்றவர் வேறு வழியைக் கையாண்டால் இவன் இன்னபாதையில் செல்ல வேண்டும் என்றுகூட அண்ணாவுக்கு உபதேசித்திருந்தான்! ரத்தினத்தின் குணத்துக்கும் அதற்கும் ஒத்து வராது. அவன் அரச பாட்டையில் செல்பவன். ஒற்றையடிப் பாதைகளும், சுரங்க வழிகளும் அவனுக்குப் பயன்படுவதில்லை. ஆனாலும், செந்திலின் சாமர்த்தியம் ரத்தினத்துக்குப் பெரு வியப்பை ஊட்டிற்று.

அலுவலகத்தை நடத்தும் முறையில் மட்டுமா செந்தில் மாறுதல்களைப் புகுத்தினான்? நிச்சயமாக லாபம் தரக்கூடிய சிறிய வேலைகளைமட்டும் மேற்கொள்வது என்பது அதுகாறும் ரத்தினத்தின் கொள்கையாக இருந்து வந்தது. நஷ்டம் நேர்ந்தாலும், நாலாயிரம் ஐயாயிரத்தோடு போகட்டும் என்பது அவன் நோக்கம். பேராசை பெரு நஷ்டம் என்ற போதனையை அவன் தந்தை அவனிடம் அவ்வளவு ஆழமாக விதைத்திருந்தார். ஆனால்



### நன்னம்பிக்கை

"என்னங்க, நம்ம வாதத்திலே பாயிண்டே இல்லீங்களாமே? நிச்சயம் தோற்றுப் போயிடுமாமே?"

'எவனய்யா சொன்னது?"

"எவனா? எதிர்க்கட்சி வக்கீலய்யாவே சொன்னாருங்களாமே!"

செந்திலின் எண்ணங்கள் எதிர்த் திசையில் ஓடின. கோடிக் கணக்கான ரூபாய்களைச் செலவிட்டு அரசாங்கம் தேசமெங்கும் ஏராளமான அணைக்கட்டுக்களையும். பிரம்மாண்டமான தொழிற்சாலைகளையும் எழுப்பிக் கொண்டிருக்கும் சமயத்தில், தொழிலை விரிக்க அஞ்சுவது குறுகிய நோக்கத்துக்கும் பிற்போக்குக் கொள்கைக்கும் அடையாளம் என்பது செந்திலின் கருத்து. ஆகவே, முன்னைக் காட்டிலும் பெரிய பெரிய முயற்சிகளில் இறங்கலானான். அதனால் ஒரு நற்பயன் விளைந்தது. அலுவலகத்தில் பரபரப்பு அதிகரித்தது. உறுப்பினரின் எண்ணிக்கை பெருகிற்று. இளையவனின் கண்டிப்பும் கறாரும் முதலில் அங்கு வேலை பார்ப்பவரிடையே எவ்வளவு எரிச்சலையும் அச்சத்தையும் கிளப்பிவிட்டனவோ, அவ்வளவுக்கவ்வளவு இப்போது உற்சாகமும் சுறுசுறுப்பும் கூடலாயின.

இவற்றை எல்லாம் கண்டு, செந்திலைத் திருப்தி செய்துவிட்டதாக நினைத்து ரத்தினம் அமைதி அடைய முயன்றான். ஆனால் அது கிடைக்கவில்லை.

அன்று விடுமுறை.

துளசிக்கு எல்லா நாளும் விடுமுறைதான். ஆனால் அன்று ஏனோ அவளுக்குக் குதூகலம் பொத்துக்கொண்டு வந்தது. சுட்டுப் போட்டாலும் அவளுக்கு இசை வராது. ஆனால் அன்று அவள் ஏதோ ஒரு பாட்டை முணு

ஒரு தடவை அந்தப் பெரிய கண்ணாடிமுன் நின்று, இடுப்பில் கைவைத்துக்கொண்டு, புருவங்களை நெறித்தபடி, "இன்றைக்கு என்ன உனக்கு அப்படி உற்சாகம் பொங்கி வழிகிறது?" என்று அதட்டிக் கேட்டுப் பார்த்தாள். கண்ணாடியில் தெரிந்த உருவம் அவளுக்குப் பதில் கூறாமல் புன்னகை செய்தது. அப்புறம் எவ்வளவுதான் கட்டுப்படுத்தியும் அவளால் அதனுடன் சேர்ந்து சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

தங்கம்மாள் அடுப்படியில் புகுந்துகொண்டு ஏதோ புதுப் பலகாரம் செய்கிறேன் என்று உட்கார்ந்துவிட்டாள். துளசியின் உதவியை அவள் நாடாதது மட்டுமல்ல. அவள் சமையலறைக்குள் நுழையக் கூடாது என்று கட்டளையிட்டு விட்டாள். கூடமாட ஒத்தாசை செய்ய ஆள்கூட இல்லை. "இது ஒன்றும் பிரமாத வேலையல்ல. நான் பார்த்துக் கொள்கிறேன். நீ போ," என்று விரட்டப்பட்டபோதுகூட, துளசியின் மனம் துவளவில்லை.

கோவிந்தனுடைய அறையிலிருந்து ஏதோ டொக், டொக் என்று ஓசை எழும்பிக் கொண்டிருந்தது. காதைத் துளைத்தது சப்தம். ஏதோ ரம்பம், பலகை, ஆணி, இவற்றைத் தூக்கிக் கொண்டு அவன் திரிந்ததிலிருந்து, அவன் ஏதோ மரச் சாமான் செய்துகொண்டிருக்கிறான் என்பதைத் துளசி ஊகித்துக் கொண்டாள். அது என்னவென்று தெரியவில்லை, என்னதான் உள்ளத்தில் உவகை நிரம்பியிருந்தாலும், வலியச் சென்று அதைத் தெரிந்துகொண்டு வரும் அளவுக்குத் துளசியிடம் தைரியம் ஏது!

செந்திலின் அறை உள்பக்கம் தாழிடப்பட்டிருந்தது. கோவிந்தன் போடும் சப்தத்திலிருந்து தன்னை ஓரளவு காத்துக் கொள்ளவே செந்தில் கதவைச் சாத்திக் கொண்டிருக்கிறான் என்பதைத் துளசி அறிவாள்.

ரத்தினம்?

ரத்தினத்தைத் தான் காணோம். வாசலில் கார் நின்றது, அவன் எங்கும் வெளியே போனதாகத் தெரியவில்லை.

துளசி மறுபடியும் கண்ணாடியண்டை வந்து தன்னைப் பார்த்துக் கொண்டாள். அவன் அவளுக்குத் தட்டெழுத்துக் கற்றுக் கொடுக்க முயன்றபொழுது அவள் அணிந்திருந்த சேலை இது. இதைக் காட்டிலும் அழகிய புடவைகள் எத்தனையோ அவளுக்கு வாங்கித் தரப்பட்டிருந்தன.

ஆனால் இதைக் கட்டிக் கொள்ளும் போது ஏற்படும் உற்சாகம், வேறு எதை அணிந்து கொண்டாலும் உண்டாவதில்லை.

முதல் முறையாக இன்று அவள் இரட்டைப் பின்னல் போட்டிருந்தாள். இரண்டு பின்னலையும் முன் பக்கமாகப் போட்டுக்கொண்டு அவள் கண்ணாடியை நோக்கினாள். பிறகு ஒன்றை முன்புறமாகவும், ஒன்றைப் பின்புறமாகவும் விட்டு, சற்றே திரும்பினாள், பக்கவாட்டில் தோற்றம் எப்படியிருக்கிறது என்று பரிசோதிக்க.

ஒவ்வொரு விதமாகப் பரீட்சை செய்து பார்க்கப் பார்க்க, அவளுக்கு ரத்தினத்தைக் காணவேண்டும் என்ற ஆவல் கடுமையாகிக் கொண்டே வந்தது. வீட்டின் உள்ளும் புறமும் ஒவ்வொரு இடமாக அவள் அலசிக் கொண்டே வந்தபோது, அவள் சற்றும் எதிர்பாராத மூலையில் அவனைக் கண்டு பிடித்தாள். மாட்டுக் கொட்டிலில்!

துளசி கன்றுக் குட்டியை அணைத்துக் கொண்டு அதன் முகத்துடன் தன் முகத்தை வைத்துக் கொஞ்சிக் கொண்டிருக்கும்போது அவனுடைய இருமல் சப்தம் கேட்டுத் திரும்பியிராவிட்டால், அவனைக் கண்டு பிடித்தே இருக்கமுடியாது.

அவனது தோற்றம் அவளைத் துணுக்குறச் செய்ததில் ஆச்சரியமில்லை. அவன் ஏன் இப்படி இடிந்து போய் உட்கார்ந்திருக்கிறான்? தலையில் கை வைத்தபடி ஏன் அசையாத பதுமையாக உட்கார்ந்திருக்கிறான்?

அப்போதுதான் அந்தக் கடிதம் அவள் பார்வையில் விழுந்தது. அவன் கையில் பிடித்திருந்தான்.

அவனுடைய வாழ்க்கை அமைப்பையே தகர்த்து எறிந்து அதைத் தலைகீழாக மாற்றிவிட்டப் போகும் கடிதம் அது என்று அவளுக்குத் தெரியாது.

தாமோதரம் எழுதியிருந்தார். பத்துப் பக்கங்களுக்கு மனிதர் எழுதியிருந்தார். ஆனால் அதன் சுருக்கத்தைப் பத்தே வரிகளில் கூறிவிடலாம்.

ரத்தினத்தின் சரித்திரம் அதில் அடங்கியிருந்தது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, ரத்தினத்தின் பெற்றோர் வறுமையில் உழன்ற காலத்தில், தாமோதரத்தின் குடும்பமும் அவர்களுடன் ஒண்டுக் குடித்தனமாக வாழ்ந்தது. தாமோதரத்தின் மனைவி லட்சுமியும் தங்கம்மாளும் உயிருக்குயிராக இருந்தார்கள். லட்சுமிக்குப் பிறந்தவன் ரத்தினம். அவள் குழந்தையைப் பெற்ற பிறகு நோய்வாய்ப் பட்டாள். அச்சமயம் தங்கம்மாளும் கருவுற்றிருந்தாள். ஆகவே குழந்தை மீது அளவு கடந்த அன்பு காட்டி, அதைத் தன் பிள்ளை போல் பாலூட்டித் தாலாட்டிச் சீராட்டி வந்தாள். பத்தாவது மாதம் தங்கம்மாள் பிரசவித்தாள். ஆனால் பிறக்கும்போதே சிசுவுக்கு உயிரில்லை. தங்கம்மாள் தாங்கொணாத் துக்கம் அடைந்தாள்.
னும் துக்கத்தை மறக்கவைக்க.
னம் இருந்தான். இதற்குள், லட்சுமிக்கு உடம்பு அதிகமாகி அவள் காலமானாள். அவள் கணவனுக்குக் குடும்பப் பொறுப்புக் கிடையாது என்பது அவள் கருத்து. ஆகவே, இறக்கும் தறுவாயில் தங்கம்மாளிடம் ரத்தினத்தைச் சுட்டிக் காட்டி, "இது வரைக்கும் பெயரளவிலாவது என் பிள்ளையாக இருந்தான்; இனி முழுக்க முழுக்க அவன் உன் பிள்ளை," என்று கண்ணை மூடிவிட்டாள். அன்று முதல், தங்கம்மாளும் அவள் கணவரும் ரத்தினத்தைச் சொந்தக் குழந்தையாகவே பேணலானார்கள். கோவிந்தன், செந்தில் இவர்கள் பிறந்த போதும் அவர்கள் மனம் மாறவில்லை. வறுமை நீங்கி, செல்வம் கொழிக்க ஆரம்பித்தபோதும் மனம் மாறவில்லை. வீட்டுக்கு மூத்தவன் என்ற உரிமையையும் பெருமையையும் மகிழ்ச்சியுடன் அவனுக்குத் தந்தார்கள்.

"அத்தான்!" என்றாள் துளசி.

அவன் பதில் பேசவில்லை.

**மியாவ் இல்லம்**

"சாதாரண வீடு ஒன்று பார்த்திருக்கேன் இருபது ரூபாய் வாடகையில்."

"சாதாரண வீடா? என்ன சார் விளையாடுகிறீர்கள்? ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறீர்கள்!"

"அடடா! வீடு எனக்கில்லை. பூனைப் பட்டாளத் திற்கு. ... [illegible]"




## ஆறு

"அத்தான்!" என்று துளசி இரண்டாவது முறை அழைக்கவில்லை.

முதல் தடவையாக அந்தச் சொல் முன்னறிவிப்பின்றி அவள் அதரங்களை விட்டுப் புறப்பட்ட உடனேயே அவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். அவமானம் அவளைப் பிடுங்கித் தின்றது. 'நம்மை அவர் அவ்வளவு அலட்சியப் படுத்தும் பொழுது, நாம் மட்டும் மேலே மேலே போய் வீழுவானேன்?' என்ற ரோஷம் அவளைக் கிள்ளிற்று.

விருட்டென்று திரும்பிச் சென்று விடலாமா என்று கூட ஒரு யோசனை. "துளசி! துளசி! எங்கே போகிறாய்? என்மேல் கோபமா?" என்று அவர் ஆர்வத்துடன் கூவினால் கூடப் பதில் இறுக்காமல் போய் விட்டால் என்ன என்று எண்ணிப் பார்த்த மாத்திரத்தில், சிலுப்பிக்கொண்டு நின்ற அவளது தன்மானம் ஆறுதலுற்றது.

ஆம். இன்றைக்கு என்று இல்லை. பதினைந்து நாட்களுக்கு முன்பு, குடும்பத்திலுள்ள பெண்ணைக் கூட்டிச் சென்று அலுவலகத்தில் கும்மாளம் அடிப்பதாக எப்போது செந்தில் குற்றம் சுமத்தினானோ, அப்போது முதல் ரத்தினத்தின் போக்கில் துளசி ஒரு பெரும் மாறுதலைக் கண்டாள். அதற்கு முன், அவள் ஒருத்தி வீட்டில் இருக்கிறாள் என்பது ரத்தினத்துக்கு ஞாபகமில்லாமல் இருந்தது. அதற்குப் பின், செந்திலின் குற்றச்சாட்டு அவன் நினைவிலேயே நின்றது. அவளைத் தற்செயலாகக் காண நேர்ந்தாலும் உயிரற்ற ஒரு பொம்மையைச் சந்தித்தாற் போல் பார்த்தும் பார்க்காமல் கடந்து விடுவான்.

அதுதான் துளசியின் வருத்தத்துக்குக் காரணம். டைப்ரைட்டிங் பாடத்தில் அழகாக ஆரம்பித்த உறவு, ஆறு மணி நேரத்துக்குள் திடீரென்று துண்டித்துப் போனதற்குச் செந்தில்தான் பொறுப்பாளி என்று அவள் உணர்ந்திருந்தும், கோபம் என்னவோ ரத்தினத்தின் மீதுதான் பாய்ந்தது. தம்பி மீது அவ்வளவு அன்பிருந்தால், அவன் மனம் நோகக்கூடாது என்று அண்ணன் கருதினால், தொழில் நிர்வாகத்திலும், வாழ்க்கை வசதியிலும் இன்னும் அதிகப் பங்கு கொடுத்துச் சமாதானம் செய்து கொள்ளட்டும். நியாயம். ஆனால், அதற்காகத் துளசியைக் காணும் போதெல்லாம் ரத்தினம் முகத்தை 'உம்' மென்று வைத்துக் கொள்ளவேண்டிய அவசியம் என்ன? நாலு பேர் இருக்கும் போது அவர் ஒன்றும் சிரித்துப் பேச வேண்டாம். தற்செயலாக, அதுவும் தனிமையில் சந்திக்க நேரும்போது கூடவா, பூனையைக் கண்ட எலிமாதிரி அவன் ஓடிப் பதுங்க வேண்டும்? கோவிந்தனைப் பார்த்ததும் அவள் ஓட்டம் எடுப்பது போல், ரத்ினம் துளசியைக் கண்டதும் ஒளிய ஆரம்பித்துவிட்டான்!

சென்ற செவ்வாய்க்கிழமை நடந்த சம்பவத்தை நினைத்துப் பார்க்கும் போதெல்லாம், அவள் முகம் அவமானத்தால் சிவந்து போகும்.

எங்கேயோ தூங்கிக் கொண்டிருந்த இஸ்திரிப் பெட்டி ஒன்று அவள் கண்ணில் பட்டதோ இல்லையோ துளசி அத்தையைத் துளைத்தெடுக்க ஆரம்பித்து விட்டாள். தங்கம்மாளின்

அனுமதி பெற்று, துணிமணிகளை வீட்டிலேயே துவைக்கச் செய்து, அவற்றைத் 'தேய்ப்பதை'த் தன் பொறுப்பாக்கிக் கொண்டாள். பளபளப்பான அந்த மின்சாரப் பெட்டி அவளது பொழுதைப் போக்கப் பெருமளவில் உதவி செய்தது.

அன்று காலை, வழக்கம்போல் தன் வேலையைச் செய்து கொண்டிருந்தாள் துளசி. துவைத்த சட்டைகளிலிருந்து ஒன்றை எடுத்து மேஜைமீது விரித்தாள். ஒரு கையால் கழுத்துப் பட்டையைப் பிடித்துக்கொண்டு, மற்றொரு கையால் அதை மேலாகத் தடவிச் சுருள்களை நீக்கும்போது, பையில் ஏதோ தட்டுப்பட்டது.

எடுத்தாள். காகிதத் துண்டு. கூட்டலும், கழித்தலுமாய், எண்கள் நிறைந்த கிறுக்கல் அது. கசக்கி எறிந்துவிட்டாள். அப்புறம் தான் அவளுக்கு நினைவு வந்தது, மேஜைமீதிருப்பது ரத்தினத்தின் சட்டை என்று.

மூலையில் விழுந்த கிடந்த காகித உருண்டையை மீட்டவுடன், சற்று அச்சம் தலை காட்டிற்று. முக்கியமான காகிதமோ என்னவோ? கசங்கிப் போய்விட்டதே! மேஜைமீது வைத்து விரல்களால் தேய்த்து, கூடியவரை சரிப்படுத்தினாள். இரண்டாக மடித்து, மடிப்பின்மீது பெருவிரல் நகத்தை ஓட்டினாள். பிறகு அதை எச்சரிக்கையாக ஒரு மூலையில் வைத்துவிட்டு, மேற்கொண்டு வேலையைத் தொடர்ந்தாள்.

கால் மணி கழித்து, இணைப்புக் கட்டையை வெளியே இழுத்து, பெட்டியை ஆறப் போட்டவுடன், இளம் சூட்டினால் மொறமொறத்திருந்த ஆடைகளை மூன்று பிரிவுகளாகத் தனித் தனியே அடுக்கினாள். உரியவர்களிடம் அவற்றைச் சேர்ப்பது வேலைக்காரனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

தான் கண்டெடுத்த காகிதத்தைத் துளசி அத்தையிடம் நீட்டியபோது, பால்காரரின் கணக்கைத் தீர்த்துக் கொண்டிருந்த தங்கம்மாள், "என்ன அது?" என்றாள். 'பெரியவ'னுடைய சட்டையில் இருந்தது என்று அறிந்ததும், "மாடியில்தான் இருக்கிறான் போலிருக்கிறது. நீயே கொடுத்து விடேன்?" என்று சொல்லிவிட்டுக் காரியத்தைக் கவனிக்கலானாள்.

ஆவல் படபடக்க, துளசி மாடிப்படி ஏறினாள். கதவருகே சென்றதும் சற்றுத் தயக்கம் ஏற்பட்டது. உள்ளே செல்லத் துணிச்சல் இல்லை.

கட்டிடப் 'பிளான்' அடங்கிய அகலமான இளநீலக் காகிதம் [illegible]

[illegible] நோக்குவதில் ஈடுபட்டிருந்த ரத்தினத்தின் கவனம், அறைக்குள் வீச ஆரம்பித்த மல்லிகை மணத்தினால் கலைந்துவிட்டது போலும்.

அன்பு செறிந்த வியப்புடன், "துளசி!" என்று வரவேற்கப் போன



வனின் முகம் திடீரென்று மாறிய போது, துளசி உற்சாகம் இழந்தாள்.

''என்ன அது. காகிதம்?'' என்று அவன் கதவுக்கு வந்தான்.

''உங்கள் சட்டையில் இருந்தது.''

''ஓ.''

அதை அவன் வாங்கிப் பிரித்தான்.

''சரி,'' என்ருன்.

அதற்கு என்ன பொருள்? ''நீ போகலாமே?'' என்பது தவிர வேறென்ன?

படிகளில் இறங்கி வரும்பொழுது அவள் நெஞ்சு விம்மிற்று. ரத்தினத்தின் உள்ளம் அவளுக்குத் தெரியும். அவள் மனம் புண்பட்டு விட்டதை ஊகித்து, அதை எண்ணி எண்ணி அவன் உள்ளம் இன்னும் பன்மடங்காக அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் என்பதை அவள் அறிவாள். அது அவள் சோகத்துக்குச் சினத்தின் செம்மையைப் பூசிற்று. அவர் ஏன் இப்படிப் பிறருக்காகத் தன்னைச் சித்திரவதை செய்துகொள்ளவேண்டும்? அவளுக்கும் ரத்தினத்துக்கும் இருக்கும் உறவைத் துண்டிக்கச் செந்தில் யார்? செந்தில் ஒருவர் இருந்துவிட்



டால் அவருக்குப் போதுமாக்கும்? வேறு யாருமே வேண்டாம் போலும்! துளசியின் கண்கள் கலங்கின. செந்தில், தம்பியாகத்தான் இருக்க முடியும். காதலியாக இருக்கமுடியாதே! மனைவியாகப் பதவி யேற்றுக் குடும்பம் நடத்த முடியாதே?

செவ்வாய்க்கிழமை இப்படி நடந்ததா? அதற்கு அடுத்த நாள் இன்னொன்றுநடந்ததுமாடியிலுள்ளதிறந்த வெளியில் மாவற்றல் உலர்த்தப் படுவதை மேற்பார்த்துக் கொண்டிருந்த தங்கம்மாளைத் துளசி கூப்பிடச் சென்றாள். திருமண அழைப்புக் கொடுக்க வந்த உறவுக்காரர் சிலர் கீழே காத்துக் கொண்டிருந்தார்கள்.

பத்துப் படி ஏறியிருப்பாள் துளசி. ரத்தினம் இறங்கி வருவது தெரிந்தது. தனது மன நிலையை அவனுக்கு நன்றாக உறைக்கிறாற்போல் காட்டவேண்டும் என்பது அவளுடைய எண்ணம். முகத்தைக் கடுகடுவென்று வைத்துக்கொண்டு, கண்களைத் தாழ்த்தியபடி சுவரோடு சுவராக ஒட்டியவாறு அவள் ஏறினாள். இரண்டுபேரும்




எழுத்தாளர்: என் நாவலை நீங்கள் வெளியிடுவதற்குப் பயப்பட வேண்டாம். என் கதையில் வரும் கதாநாயகனும் எழுத்தாளனே. அவன் கதையைப் பிரசுரிப்பதன்மூலம் லக்ஷாதிபதியாகிறார்!

கடக்கும்போது, குறைந்தது ஒன்றரை அடியேனும் இடைவெளி இருக்கட்டும் என்ற நோக்கம் அவளுடையது.

அடுத்தடுத்துப் படிகள் வந்தன. ஆனால் ரத்தினம் வரவே இல்லை. உச்சிக்குப்போனதும்தான் அவளுக்குப் புரிந்தது. கீழே இறங்கியவன் திரும்பிச் சென்று, அவள் தன்னைக் கடந்து செல்வதற்காகக் காத்துக்கொண்டிருந்தான். ஆத்திரம் பொங்க அவள் நிமிர்ந்தபோது, சுவரில் மாட்டியிருந்த படம் எதையோ பார்த்துக் கொண்டிருந்தான். அவன் முதுகு மட்டுமே அவளுக்குத் தெரிந்தது.

இதுபோன்ற சம்பவங்கள் அவளுக்கு ஒருவித எரிச்சலை மூட்டியதில் வியப்பில்லை. தொழுவத்தில் அவனை அவள் எதிர்பாராத காரணத்தால்தான், தன்னை அறியாமலே அப்படிக் கூவிவிட்டாள்.

அந்த இடத்தில் தொடர்ந்து நிற்பதற்குத் தன்மானம் இடம் கொடுக்க மறுத்தது. திரும்பிச் செல்வதற்கோ, அவள் இதயம் அனுமதிக்கவில்லை. தயங்கினாள்.

கன்றின் குரல், வைக்கோலின் சரசரப்பு, தீவனத் தொட்டியில் வாயை ஆழ்த்திவிட்டுத் தூக்கும் பசுவின் ஈரப் பெருமூச்சு எல்லாம் கூடி மாட்டுத் தொழுவத்தின் சூழ்நிலையை நினைவுபடுத்தின.

இந்த முறை அவன் தன்னை அலட்சியப் படுத்துவதற்கு வேறு காரணம் இருக்க வேண்டும் என்று அவள் உள்ளுணர்வு கூறிற்று. பெண்களுக்கு மட்டுமே கிடைக்கும் வாய்ப்புக்களைப் பயன் படுத்திக்கொண்டு, மறைவிடங்களிலிருந்தபடி அவனது வெவ்வேறு முக பாவங்களை வெவ்வேறு சந்தர்ப்பங்களில் கூர்ந்து கவனித்திருக்கிறாள். ஆனால் ரத்தினம் இப்படிக் கற்பதுமைபோல் சூழலின் நினைவின்றி உட்கார்ந்திருந்து அவள் கண்டதில்லை.

நெஞ்சில் இரக்கம் சுரந்தது. அவனை மெள்ள அணுகினாள்.

அன்று எண்ணெய்தேய்த்துக் குளித்திருந்தான். தலைமயிர் வாரப்பட்டிருந்தும், படியவில்லை. பளபளப்பின்றி. அடர்த்தியாகக் காணப்பட்டது. அவனுடைய கைக்கடிகாரத்தில் மணி ஒன்பதரை.

சில விநாடிகள் கழிந்தன. அவன் தலையை நிமிர்த்தினான். !மன்

னைக் கிளறிக்கொண்டிருந்த சுட்டு விரலில் தொடங்கி, இழுத்து இடையில் செருகியிருந்த சேலைத் தலைப்பைக் கடந்து, அவன் பார்வை அவள் முகத்துக்கு உயர்ந்தது. கண்ணோடு கண் பொருந்தியதும், பளிச்சென்று ஒரு மின்னொளி. அடுத்த விநாடி அது மறைந்துவிட்டது. மின்னலைப் போலவே. கால் விநாடிப் பொழுது அந்த வெளிச்சத்தில் குளித்த துளசியின் வதனம் மறுபடி இருளடைந்தது.

"வருகிறேன் என்று சொல்...போ," என்றான் அவன். தன்னைக் காண யாரோ காத்திருப்பதாகவும், அதைத் தெரிவிக்கவே அவள் வந்திருப்பதாகவும் அவன் ஊகம்.

அவள் வாளாவிருக்கவே, "யார் வந்திருக்கிறார்கள்?" என்றான்.

"ஒருவரும் வரவில்லை," என்று தலையை அசைத்தாள் துளசி. "கன்றுக் குட்டியைப் பார்க்கலாமென்று வந்தேன். நீங்கள் இங்கே..."

"ம்." என்றான் அவன். அதில் சற்று நிம்மதி தெரிந்தது.

பிறகு, அவள் அங்கேயே நிற்பதைக் கண்டதும் அந்த நிம்மதி கலைந்துவிட்டது. வேறெதைக் காட்டிலும் அவன் அப்போது தனிமையை விரும்பினான்.

"அத்தை தேட மாட்டார்கள்?"

அவளுக்குச் சுருக்கென்றது. அதே சமயம், அவனைத் தனியே விடலாகாது என்ற உறுதி ஏற்பட்டது. அவன் கூப்பிட்டாலும் திரும்பிப் பார்க்கக் கூடாது என்று வீறாப்பாக நினைத்தவள், அவன் பிடித்துத் தள்ளினாலும் போகலாகாது என்று முடிவுக்கு இப்போது வந்துவிட்டாள்.

அவனைக் கவலையில் ஆழ்த்தி விட்ட சிந்தனையிலிருந்து மீட்க அவளுக்கு ஒரே வழிதான் தோன்றிற்று.

அவள் சிணுங்கினாள். "அத்தை! அத்தை! அத்தை! அத்தைக்கு நான் துணை, எனக்கு அவர்கள் துணை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு, இருபத்து நான்கு மணியும் உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்!"

அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. அவளது புகார் அவனை உலுக்கி விட்டுவிட்டது,

அவன் திகைப்பதைப் புரிந்து கொண்டு அவள் தொடர்ந்தாள். "சர்க்கஸ், சர்க்கஸ் என்று ஊரே இரண்டு போயிற்று. அத்தையையும், என்னையும் தவிர."

பிறர் [illegible]
போது, அவனால் தன் சொந்தக் க
யிலேயே மூழ்கியிருக்க முடியாது.

"புதிதாக இரண்டு மூன்று ப
வந்திருக்கிறதே 'பார்த்துவிட்டு வந்
போயிற்று. அத்தையிடம் சொல்
கோவிந்தன் டிக்கட் வாங்கிக்கொ
வருவான். போய்விட்டு வாருங்க

"நீங்கள்?" என்றாள் துளசி.

"நானா!"

அவள் ஏதோ விசித்திரமான
கேள்வி கேட்டு விட்டாற்பே
விழித்தான் ரத்தினம். பி
கையிலிருந்த கடிதத்தை மடித்
பையில் வைத்தவாறு, "என் கதை
சினிமாவாகத்தானே இருக்கிறத
என்றான்.

"அப்படியானால் சினிமா எதற்
உங்கள் கதையையே கேட்கிறே
செலவு மிச்சம்."

புழுதியென்றும் பாராமல், அவ
முன்னால் அவள் கால்களை மடித்
கொண்டு உட்கார்ந்து விட்டாள்.

அவள் திட்டமிட்டு வேலை செ
றாள் என்பது அவனுக்குப் புரி
போய் விட்டது. புத்திக் கூர்மை
குழந்தைத்தனமும் இழைந்த
அழகுக் கலவை அவள் முகத்தி
மிளிர்வதைக் கண்டான்.

அவன் புன்னகை செய்தான்.

அவளுக்குத் துணிச்சல் பிறந்த.
ஏனோ தெரியவில்லை; ரத்தினத்தி
முன்னிலையில் அவளுடைய போக்
வேறு மாதிரியாக இருந்தது. பிறருட
இருக்கும்பொழுது, அது அத்தை
கவே இருக்கட்டும், அவளுக்கு மன
விட்டுப் பேசத் தோன்றாது. ஆனால்
தினத்திடம் மட்டும், பல வருடமா
பழகிப் பண்பட்டாற் போன்ற உற
உண்டாகிவிடும். பிற்பாடு அவளே
'நாமா இப்படிப் பேசினோம்!' என்
நினைத்துப் பெருவியப்பு எய்துவதுண்

அவள் அறிவித்தாள்:

"கதையைச் சொன்னாலும் ச
அல்லது அந்தக் கடிதத்தைக் கொடு
தாலும் சரி."

அவனுக்கு உண்மையிலேயே ஆ
சரியம்.

"கடிதத்துக்கும் என் கதைக்கு
என்ன சம்பந்தம்?" என்றான்.

"கடிதத்தின் அழகு வதனத்தி
தெரிகிறது."

"அப்படியா? இதை யார் எழு

நக்கிறார்கள் என்பதும் உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?''

''தெரியாமல் என்ன?'' துளசி, லட்சியமாக ஒரு பின்னலை எடுத்து ன்னால் போட்டுக்கொண்டு, அதன் னியில் முடிந்திருந்த மஞ்சள் ரிப் னைச் சரி செய்தாள். ''தாமோதரம் ன் எழுதியிருக்கிறார்.''

அவன் அயர்ச்சி சில விநாடிகளுக்கு த்தது—கடித உறையின் பின் பக் கத்தைத் திருப்பிப் பார்க்கும்வரை. ங்கே தாமோதரம், தான் தங்கியிருக் ம் இடத்தின் முகவரியைத் தெளி ாக எழுதியிருந்தார்.

''கெட்டிக்காரிதான்!'' என்று வன் சிரித்தான்.

''நன்றி,'' என்று அவள் கை கூப்பி ள்.

எழுந்து நின்று புடவையில் படிந் ருந்த தூசியைத் தட்டிவிட்டதும், அத்தை தேடுவார்கள். நான் போகி றேன்,'' என்று கிளம்பினாள்.

''துளசி! துளசி! இங்கே வாயேன்?'' ன்று அவன் ஆர்வத்துடன் கூவிய பாழுது அவளுக்கு மகிழ்ச்சி பொங் ற்று.

''துணைக்குத்தான் கடிதம் இருக் றதே? நான் எதற்கு?'' என்றாள், றுக்கு.

''துளசி!''

''அத்தான்!''

அவள் திரும்பினாள். ஆனால் அதற் ள் அவன் முகம் சுருங்கிவிட்டது.

'அத்தான்' என்றல்லவா அழைத் ாள்! தாமோதரம் எழுதியிருப்பது ண்மையாக இருந்தால்...? அவன் னத்தில் சங்கடம் உண்டாயிற்று.

அவனது முக மாறுதல் அவள் உற் ாகத்தை உறிஞ்சிவிட்டது. அவனை நருங்கி, நெகிழ்ந்த குரலில். ''ஏன்?'' ன்று வினவினாள்.

''ஒன்றுமில்லை.''

அவன் எழுந்து விட்டான். ஆனால் மையபடி நினைவு வேறெங்கோ சன்றுவிட்டது. இங்குமங்கும் உல த் துவங்கினான்.

துளசியின் நெஞ்சாழத்திலிருந்து ஒரு பருமூச்சுப் பீரிட்டது. இனி அங்கே ற்பதில் பயனில்லை. இன்னும் அரை ணி பொறுத்துப் பார்க்கலாம். ரத்தி ம் வராவிடில் அத்தையைக் காண்டு அழைத்து வரச் செய்யலாம் ன்ற முடிவுக்கு வந்தவளாய், அவ் டத்தைவிட்டு அகன்றாள்.

ரத்தினம் ஒரு முடிவுக்கு வந்து டான்.

இனி நாள் கடத்தக்கூடாது. தாமோ தரம் கூறுவது உண்மையான வரலாறு தானா என்பதை நிச்சயம் செய்து கொண்டு விடவேண்டும். இல்லாவிடில் ஐயம் அணு அணுவாக அரித்துவிடும். அவர்எழுதியிருப்பது பொய்யாக இருக் குமோ என்ற வினா எப்போதாவது ஒரு முறை தலைகாட்டும். 'இருக்காது' என்று உடனுக்குடனே அவன் உள் ளுணர்வு மறுத்துவிடும்.

அம்மாவிடம் எப்படிக் கேட்பது?

பக்குவமாக விஷயத்தை ஆரம்பிக்க வேண்டும். உண்மையில் அவன் அவர் களுக்குப் பிறந்தவன் இல்லையென்றால், அதை மறைக்க அவர்கள் எவ்வளவு பாடு பட்டிருக்க வேண்டும்? அவன் மீது எத்தனை அன்பிருந்தால், மற்ற இருவரைப்போல் அவனையும் நடத்தி வந்திருக்க வேண்டும்? அன்பைப் பகிர்ந்து கொடுத்ததோடு, சொத்தை யும் அல்லவா பகிர்ந்துதரத் துணிந் திருக்கிறார்கள்! பெற்றோரின் உள்ளத் தைப்பற்றி நினைக்கையில் அவன் உணர்ச்சி வசப்பட்டான்.

ஆயினும் இந்த மர்மத்தைப் பாது காப்பது என்பது, மடியில் வெடிகுண் டைக் கட்டிக் கொள்வதற்கு ஒப்பா கும்.

அவன் கற்பனை சிறகடித்தது.

அம்மா தனியே இருக்கிறாள். காய் கறி நறுக்குவதில் ஈடுபட்டிருக்கிறாள். அவனைக் கண்டதும், ''என்னப்பா வேண்டும்?'' என்று கேட்கிறாள்.

''அம்மா!'' என்கிறான். அதற்கு மேல் நா எழவில்லை.

அவனது தயக்கம் அவளுக்கு அச்சம் ஊட்டுகிறது.

''தாமோதரம்...'' என்று அவன் ஆரம்பிக்கிறான், பதினைந்து நாட் களுக்கு முன்னால் நடந்த சம்பவம் கண்முன்னால் வந்து நிற்கிறது. ''மேற் கொண்டு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கேட்டார் அம்மா. ஐயாயிரம் போதாதாம்!''

''அப்படியா!'' அவள் திகைக்கிறாள்.

''மனிதன் இந்த ரூபாயெல்லாம் வாங்கி எங்கேதான் கொண்டு போய்க் கொட்டுவாரோ!''

அவளது யோசனைக்கு இடையில் நுழைகிறது அவன் கேள்வி.

''தாமோதரம் யார் அம்மா?''

இவன் கேட்ட தோரணை அவளை

எச்சரித்துவிடுகிறது. ரத்தினத்துக்கு உள்ளுக்குள் உதைப்பு. நேரடியாக விசாரியாமல், சுற்றி வளைத்துக் கேட்பது, ஏதோ தவறு செய்யும் உணர்ச்சியை ஏற்படுத்துகிறது.

"அவர் உன்னிடம் என்ன சொன்னார்?" என்கிருள் தங்கம்மாள் சந்தேகத்துடன்.

இதற்குள், ஜன்னலுக்கு அப்பால் நின்று கொண்டிருந்த துளசியின் உருவம் ரத்தினத்தின் கண்ணில் பட்டுவிடுகிறது.

தாழ்ந்த குரலில், "அம்மா..." என்கிருன்.

இந்தக் கட்டத்தில் மாட்டுத் தொழுவத்தில் உலவிக் கொண்டிருந்த ரத்தினத்தின் கற்பனையைப் பட்டென்று கிழித்தது, வீட்டிலிருந்து எழும்பிய கூச்சலும் இரைச்சலும்.

வீட்டுக்கும் கொட்டிலுக்கும் இடையிலிருந்த தோட்டம், ஓசையை மட்டுப்படுத்திய போதிலும், அது மிதந்து வந்து அவன் செவிகளில் மோதிய வேகம் அவனைத் தூக்கி வாரிப் போட்டது.

வேதனையால் கிறீச்சிட்ட அந்தப் பெண் குரல் வேறு எங்கிருந்தும் வந்திருக்குமோ?

ரத்தினம் நிதானித்தான். இல்லை. அவன் வீட்டிலிருந்துதான் அது கிளம்பி யிருக்க வேண்டும்.

மயிர்க் கால்கள் குத்திட்டு நின்றன. இரண்டே எட்டில் தொழுவத்தை விட்டு நீங்கினன். புறக்கடைக் கதவு வழியே பாய்ந்தான். வினடிக்கு வினடி அதிகமாகிக் கொண்டிருந்தது கூச்சல்.

புகை!

அவன் சமையலறைக்குள் பாய்ந்தான்.

துணி பற்றி எரியும் நெடியும், சதை பொசுங்கும் நாற்றமும் அவன் நாசியைத் தாக்கின.



# சொல்லாதே!

**எஸ்.ஏ.பி.**

## ஏழு

திகில் அவனை ஓங்கி அறைந்தது.

சமையற்கட்டிற்குள் பாய்ந்த ரத்தினம் செயலற்று நின்றான். தீயின் சினத்துக்கு ஆளாகி மூர்ச்சித்துக் கிடக்கும் அந்த உடலைக் காணச் சகிக்காமல் நெற்றி சுருங்க, கண்களில் துயரம் ததும்ப, சிற்பமாக நின்றிருந்த அவன் உள்ளத்தை வேதனை பிய்த்துத் தின்றது.

சுற்றிலும் ஒரே சந்தடி. இரைச்சல். புகை அடங்கினாலும் இவை அடங்கவில்லை.

"அண்ணா!" என்று யாரோ அவன் காதண்டை உரக்க அழைத்தார்கள். "டாக்டருக்குப் போன் பண்ணினேன், கிடைக்கவில்லை. சீக்கிரம் வண்டியை எடுங்கள். ஜி. ஹெச். க்கே கொண்டு போய்விடுவோம்."

செந்திலின் குரல்.

பரபரப்பினூடே ஒரு பட்டாளத் தலைவனின் சுறுசுறுப்பும், அமைதியும் அதில் தொனித்தன.

விழிப்புணர்வு பெற்ற ரத்தினம், கட்டளையை நிறைவேற்றக் கிளம்பினான். அன்று விட்டுமுறையாதலால் டிரைவரைக் காணோம். அவன் முந்தின இரவு வண்டியை நிறுத்திவிட்டு 'ஷெட்' சாவியை எங்கே வைத்துச் சென்றான் என்று தெரியவில்லை. அதைத் தேடுவதில் இரண்டு பொன்னான நிமிடங்கள் வீணாகிவிட்டன.

வண்டியை வாசலுக்குக் கொண்டு வருவதற்குள், ரத்தினத்தின் ஸில்க் சட்டையை அவன் உடலோடு ஒட்ட வைத்துவிட்டது வியர்வை.

வைத்தியசாலைக்கும், இறக்கை கட்டாமலே பறந்து கொண்டிருந்த காருக்குமிடையில் இரண்டு மைல் இருக்கும்பொழுது, முச்சந்தியில் முதுகைக் காட்டிக்கொண்டு நின்ற ஒரு வெள்ளை உடைப் போலீஸ்காரரின் புறங்கை திடீரென்று இடது பக்கம் நீண்டு அவர்களைத் திக்குமுக்காட வைத்துவிட்டது.

பிரேக்கில் கால் வைக்கப்போன ரத்தினம், "நிறுத்த வேண்டாம்! ஓட்டுங்கள்!" என்ற செந்திலின் அதட்டலைக் கேட்டுத் திடுக்கிட்டு, வேகத்தை இம்மியும் குறைக்காமல் வண்டியை அப்படியே செலுத்தினான்.

மயிரிழையில் தப்பினார்கள். தார்ச் சாலையும் ரப்பர்ச் சக்கரமும் ஊளையிட்டவாறு உரசி உருக, குறுக்கே பாய்ந்த அந்த மற்றொரு கார் சரியான சமயத்தில் நின்றிராவிடில், அத்தனை பேரையும் அழைத்துச் செல்ல இரண்டு 'ஆம்புலன்ஸ்' வண்டிகள் தேவைப்பட்டிருக்கும். ஆனால் இதற்குள் இவர்கள் வண்டி ஒரு பர்லாங்கைக் கடந்துவிட்டது.

கோவிந்தன் கோபத்துடன் திரும்பிப் பார்த்தான்.

போலீஸ்காரர் அவசரம் அவசரமாக அவர்கள் கார் எண்ணைக் குறித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

"அவ்வளவு தூரத்திலிருந்து ஹாரன் அடித்துக்கொண்டு வருகிறோம், திடீரென்று கையை நீட்டுகிறாயா [illegible] மடையா!" என்று முணுமுணுத்தான் கோவிந்தன் "எங்கள் நம்பரைக் குறித்து இன்ஸ்பெக்டரிடம் தானே கொடுப்பாய்! உன் நம்பரை நான் கமிஷனரிடமே கொடுத்து விடுகிறேன், இரு!"

ஜெனரல் ஆஸ்பத்திரி நெருங்க

நெருங்க, போக்குவரத்தின் நெரிசல் அதிகமாயிற்று.

இருந்தாற் போலிருந்து ரத்தினத்துக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கோவிந்தன் கைக்குட்டையால் முகத்தை மூடிக்கொண்டான். அவன் மூச மூசென்று விசித்து அழும் ஓசை கேட்டது.

அந்த ஒலி, திகைப்பாலும் பரபரப்பாலும் ஓரளவு மரத்துப் போயிருந்த ரத்தினத்தின் நெஞ்சை நெகிழ வைத்தது. உதட்டைக் கடித்துக் கொண்டு அடக்கிக் கொண்டிராவிடில், மடை திறந்தாற் போல் பொங்கியிருக்கக்கூடிய துயரம் அவனை மூழ்கடித்திருக்கும்.

ஒரு கையால் ஸ்டீரிங்கைப் பிடித்தபடி, மற்றக் கையால் தம்பியின் முழங்காலைப் பரிவுடன் தொட்டான் ரத்தினம். கோவிந்தன் சற்றுத் தேறுதல் அடைந்தான். கைக்குட்டையால் கண்ணையும் மூக்கையும் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"விபத்து எப்படி நிகழ்ந்தது?" என்று விசாரித்தார், அவசர சிகிச்சைப் பகுதியைச் சேர்ந்த ஒரு டாக்டர், அச்சடித்த காகிதம் ஒன்றில் விவரங்களைப் பதிந்தவாறு.

ரத்தினம் செந்திலை நோக்கினன்.

தட்டிக்கு அப்பால், விபத்துக்குள்ளானவளைப் படுக்க வைத்து, உடனடியாகப் பண்ண வேண்டிய வைத்தியத்தைச் செய்து கொண்டிருந்தார்கள்.

"துளசியைத்தான் கேட்க வேண்டும்," என்றான் செந்தில்.

தங்கம்மாளின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த துளசி அழைத்து வரப்பட்டாள். ஆளே அடையாளம் தெரியவில்லை. கண்கள் இரண்டும் செக்கச்செவேலென்று சிவந்து



போயிருந்தன. கூந்தல் 'ஒரே அலங்கோலம். முகத்தில் கரி.'

அவள் சொன்னாள். தங்கம்மாளின் புடவையில் தீப் பிடிப்பதற்கும் துளசி சமையலறைக்குள் நுழைவதற்கும் சரியாக இருந்தது. புது மாதிரி மண்ணெண்ணெய் 'ஸ்டவ்'வை மலேயாவிலிருந்து வந்த யாரோ தந்துவிட்டுப் போயிருந்தார்கள். அதை உபயோகப்படுத்திப் பார்க்கத் தங்கம்மாள் முயன்றிருக்கிறாள். கண்ணாடிக் கூடத்தில் மண்ணெண்ணெய் ஊற்றும் போது சேலையில் ஒரு பகுதி மீது சிந்திவிட்டது போலும். அதை அவள் கவனிக்கவில்லை. நெருப்புக் குச்சியைக் கிழித்தவுடன் அது கை நழுவி விழுந்து சேலையில் பட்டிருக்க வேண்டும். நடந்ததை விவரிக்கும்போது துளசிக்குத் தொண்டையை அடைத்தது.

தங்கம்மாள் ஒரு வண்டியில் வைத்துத் தள்ளிச் செல்லப்பட்டாள்.

"உயிருக்கு ஒன்றும் ஆபத்து இல்லையே, டாக்டர்?" என்று கேட்டான் ரத்தினம்.




"இந்தப் பேனா மை ரொம்ப உயர்ந்த ரகம். எழுதும்போழுதே காய்ந்து கொண்டு வரும் என்று சொன்னீரே?"

"ஆமாம், அதற்கு இப்பொழுது என்ன?"

"எழுதுவதற்கு முன்னாலேயே மை காய்ந்துவிடுகிறதே?"

"இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை," என்றார் அவர் அடுத்த நோயாளியைக் கவனிக்க ஆயத்தம் செய்தபடி.

"மூர்ச்சை இன்னும் தெளியக் காணோமே?" என்று கோவிந்தன் கவலைப்பட்டான்.

"மூர்ச்சை போட்டிராவிட்டால் இவ்வளவு வேதனையை அவர்களால் தாங்கியிருக்க முடியாது. துடிதுடித்துப் போயிருப்பார்கள். இந்த மாதிரி கேஸில் நினைவு திரும்ப இருபத்து நான்கு மணி நேரத்துக்கு மேலேகூட ஆகலாம்."

வண்டியை ஓட்டித் துளசியும், அவளுக்குப் பின்னால் மூன்று சகோதரர்களுமாகக் குறிப்பிடப்பட்ட வார்டை அடைந்தார்கள்.

இதற்குமுன் ஒரே ஒரு தரம் ரத்தினம் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தான். நோயாளிகளின் ஒளியிழந்த முகங்களும், மெலிந்த உடல்களும், சக்தியற்ற விழிகளும் அவனது பரிவைத் தூண்டினாலும், அதே சமயம் ஆஸ்பத்திரியின் நாற்றமும், வியாதி படர்ந்த சூழ்நிலையும் அவனுக்குச் சற்று அருவருப்பைத்தான் அப்போது தந்தன. நாலைந்து மருத்துவக் கல்லூரி மாணவர்கள் சிரித்துப் பேசிக்கொண்டு சென்றார்கள். இந்த இடத்தில் இவர்களுக்கு எப்படிச் சிரிப்பு வரமுடியும் என்று ரத்தினம் அன்று வியப்படைந்தான். அவர்களுடைய உற்சாகம் இரக்கமின்மையைக் காட்டுவதாகவும், அவர்களுடைய சிரிப்பு நோயாளிகளை அவமதிப்பதாகவும் அவனுக்குப் பட்டது. தான் காணச் சென்ற நண்பரைச் சீக்கிரம் பார்த்துவிட்டு, வைத்தியசாலையின் எல்லையை விட்டு வேகமாக வெளியேறிவிட்டான். வெளி உலகில், அனேகமாக நூற்றில் ஒருவர் உடல் நலமிழந்து படுத்திருக்கக் கூடும். ஆனால் பெரும்பான்மையோர் ஓடியாடித் திரிந்து கொண்டிருப்பார்கள். 'சிற்றுண்டி சாலைகளும் சினிமாவும், பஸ்ஸும் பத்திரிகையும், அரசியலும் திருவிழாவும், பூவும் வண்ணமும் நிறைந்த அந்த உலகத்துக்கும், நோயாளிகளையே பிரஜைகளாகக் கொண்ட ஆஸ்பத்திரி ராஜ்யத்திற்கும் எவ்வளவு வித்தியாசம்!' என்று எண்ணிக்கொண்டு, டாக்டர் ரங்காச்சாரியின் சிலையைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் அவன் சென்றுவிட்டான்.

ஆனால் இன்றோ?

அருவருப்புக்குப் பதிலாக ஆஸ்பத்திரியிடம் தனக்கு ஒருவித ஈடுபாடு ஏற்படுவதைக் கண்டு அவனே ஆச்சரியப்பட்டான். ஆஸ்பத்திரியின் நாற்றமும், வியாதி படர்ந்த சூழ்நிலையும் அவனுக்கு இப்போது முகச்சுளிப்பைத் தரவில்லை. நோயாளிகளின் வற்றிய உடல்களும் அவனுக்கு இப்போது அன்னியமாகக் காட்சியளிக்கவில்லை. அங்கிருந்து அவனை விரட்டவில்லை. அங்கே பணி புரிவோரின் மன நிலையும் அவனுக்குப் புரிந்தது. ஓரளவுக்குச் சிரித்துப் பேசி உற்சாகமாக இராவிடில், அவர்களுடைய தெம்பையும் சேர்த்து உறிஞ்சி அவர்களையும் படுக்கையில் தள்ளிவிடும் அந்தச் சூழ்நிலை. அது மட்டுமல்ல. அந்தக் குதூகலமும் உற்சாகமும்தான், நோயாளிகளை வெளி உலகத்தோடுபிணைக்கும் பாலம். வெளி உலகத்தின் சுதந்திரத்தையும் இனிமையையும் நினைவூட்டி, தமது வியாதியைத் தீர்க்கச் செய்யப்படும் முயற்சிகளில் முழு மனத்தோடு நோயாளிகளை ஒத்துழைக்கத் தூண்டுவன அவை. இம்மாதிரி எண்ணங்கள், ரத்தினம் காலார ஆஸ்பத்திரி வராந்தாக்களில் நடந்து பார்க்கும்போது தோன்றும்.

அன்றிரவு, சுமார் ஒரு மணி இருக்கும்.

கட்டுப் போட்டு உருத் தெரியாமல் படுத்திருந்த தங்கம்மாளின் பக்கத்தில் ரத்தினம் உட்கார்ந்து, அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

செந்திலும் கோவிந்தனும் வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

கட்டிலுக்கு மறுபக்கம், கீழே ஒரு பாயை விரித்து அதில் படுத்திருந்தாள் துளசி.

இலேசாக முனகல் சப்தம் கேட்டது.

கண்களிலிருந்து தூக்கத்தைத் துடைத்தெறிந்துவிட்டு ரத்தினம் தங்கம்மாளிடம் வந்தான்.

தங்கம்மாள் விழித்துக் கொண்டு விட்டாள். விழிகள் சற்று நேரம் முகட்டு வளையில் பதிந்திருந்தன. தலை முதல் கால் வரை ஒரே கட்டுத்தான். புருவங்கள் வேறு பொசுங்கிப் போயிருந்ததால், அவள் பார்வையே ஒரு விதமாக இருந்தது.

ரத்தினத்தின் மீது அவள் விழிகள் படிந்தன. அடையாளம் புரிந்துகொண்டுவிட்டாள்.

"அம்மா!" என்றான் ரத்தினம். அவளுக்கு மூர்ச்சை தெளிந்துவிட்டது என்ற மகிழ்ச்சியுடன், கண்ணீரும் முட்டிக்கொண்டு வந்தது.

ஒரு விநாடிக்கு அவன் முகத்தையே அவள் பார்த்துக்கொண்டு இருந்தாள். ஒன்றும் பேச முயலவில்லை.

"துளசி! போய் டாக்டரைக் கூப்பிடு," என்று அவளை எழுப்பினான் ரத்தினம். மூர்ச்சை தெளிந்தவுடன் தனக்குத் தெரிவிக்குமாறு 'ஹவுஸ் சர்ஜன்' சொல்லியிருந்தார்.

பாயைவிட்டு எழுந்த துளசி, "அத்தை!" என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூவிவிட்டாள். தங்கம்மாளின் கண்கள் கலங்கின.

துளசியைத் தொந்தரவு செய்யாமல் தானே டாக்டரை அழைத்துவர ரத்தினம் புறப்பட்டான்.

தங்கம்மாள் சுற்றுமுற்றும் நோக்கினாள்.

அவளது பார்வையின் பொருளைப் புரிந்துகொண்ட துளசி, செந்திலையும் கோவிந்தனையும் மனத்தில் கொண்டு, "இரண்டு பேரும் எட்டு மணிவரை, இங்கேதான் இருந்தார்கள். கூட்டம் போடக்கூடாது என்று டாக்டர் சொன்னார். அதனால்தான் போய்விட்டார்கள். காலையில் வருவார்கள்," என்றாள்.

அடுத்த வாரம் முழுவதும் தங்கம்மாள் ஆஸ்பத்திரியில்தான் இருந்தாள். அவளுக்குத் தொண்டு செய்வதில், சகோதரர்கள் ஒருவருக்கொருவர் சளைக்கவில்லை. துளசியோ, அத்தையின் கட்டிலை விட்டு நகர்வதே கிடையாது.

கடைசியில், கண்டம் தாண்டியாயிற்று என்று பெரிய டாக்டர் அறிவித்த போது, எல்லோரிடமிருந்தும் ஒரு நிம்மதிப் பெருமூச்சுக் கிளம்பிற்று. அவர்களுடைய முகங்கள் வெளிவாங்கின. கோவிந்தன் பழையபடி டியுடோரியல் கல்லூரிக்குச்செல்ல ஆரம்பித்தான். அலுவலகம் செந்திலை மறுபடியும் இழுத்துக்கொண்டது.

ஆனால் இருந்தாற்போலிருந்து, தங்கம்மாளின் உடல் நிலையில் ஒரு திடீர்த் திருப்பம் ஏற்பட்டது.

காலையில் ஐந்தரைக்கே எழுந்து குளித்துவிட்டு ஆஸ்பத்திரிக்கு வந்த

ரத்தினம், துளசியின் முகத்தைக் கண்டு திடுக்கிட்டான்.

"உடல் கொதிக்கிறது," என்றாள் அவள்.

தங்கம்மாளின் நெற்றியில் கை வைத்துப் பார்த்தவன் திடுக்கிட்டான்.

"திடீரென்று எப்படி ஜுரம் வந்தது?" என்றான். அவனுடைய முகத்தில் கவலை குடி புகுந்தது.

பரபரப்புடன் டாக்டரை விசாரித்தான். இரண்டு நாளில் தெரிந்து விட்டது உண்மை.

தங்கம்மாளுக்கு நியுமோனியா!

"நீங்கள் கடைசியாக ஆபீஸுக்கு வந்தது, போன சனிக்கிழமை என்று நினைக்கிறேன்," என்றான் செந்தில், ஐஸ் பெட்டியில் வைக்கப்பட்ட கோப்பைத் தயிரைச் சாதத்தில் கொட்டிப் பிசைந்துகொண்டே.

சாப்பிட்டதாகப் பெயர் பண்ணி விட்டுத் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்த ரத்தினம், லோட்டாவைக் கீழே வைத்தான். "ஆமாம், ஏன்?"

இரண்டு வாய் சாப்பிட்டு முடிக்கும் வரை செந்தில் பேசவில்லை.

"அணைக்கட்டு ஒப்பந்தம் ஒன்றுக்கு டெண்டர் போடலாமென்று யோசனை. நீங்களும் ஒரு முறை அதைச் சரி பார்த்து விட்டால் நல்லது. பின்னால் தகராறு ஒன்றும் வரக் கூடாது பாருங்கள்!"

ரத்தினத்துக்கு என்னவோ போலிருந்தது.

"நீ பார்த்துப் பண்ணினால் எல்லாம் சரியாகத்தான் இருக்கும். டெண்டர் எவ்வளவுக்கு?"

"மூன்று லட்சத்துக்கு."

செந்தில் சாதாரணமாகச் சொல்லி விட்டான். ரத்தினத்துக்கோ, தலை சுற்றிற்று. தம்பி ஆழம் தெரிந்துதான் காலை விடுகிறானா? அவனுடைய திறமையில் ரத்தினத்துக்கு நம்பிக்கை உண்டு. ஆனால், இவ்வளவு பெரிய வேலையை மேற்கொண்டு வெற்றிகரமாக நடத்தி முடிப்பது எளிய காரியமல்லவே.

"குறைந்தது ஒரு லட்ச ரூபாயாவது மிஞ்சும் என்பது என் கணக்கு. வலை பெரிதாக இருந்தால்தான் முரட்டு மீனைக் கிடைக்கும்."

தான் யோசிப்பது தெரிந்தால் செந்தில் அதையே குற்றமாக எடுத்துக் கொள்ளக் கூடும் என்று தோன்றிற்று ரத்தினத்துக்கு. அச்சத்தை மறைத்தபடி, "நீ சொல்வது போல், தைரியமாக இறங்க வேண்டியதுதான். உன் இஷ்டப்படி செய்," என்றான்.

"நாளை மறு நாள் நான் டில்லிக்குப் புறப்படுகிறேன்," என்று அறிவித்து விட்டுச் செந்தில் போய்விட்டான்.

ரத்தினத்துக்கு ஒன்றுமே ஓடவில்லை.

சாத்துக்குடிப் பழத்தை உரித்துக் கொண்டிருந்தாள் துளசி. முதல் சுளையின் தோலை நீக்கி, கொட்டைகளை அகற்றி, அத்தையின் வாயருகே கொண்டு சென்றதும், தங்கம்மாள் முகத்தைத் திருப்பிக்கொண்டு விட்டாள்.

"இரண்டே இரண்டு சுளை சாப்பிடுங்கள், அத்தை அப்புறம் உங்கள் பிள்ளை வந்தால் கோபிப்பார்," என்று கெஞ்சலோடு ஓர் எச்சரிக்கையையும் கலந்து விடுத்தாள் துளசி.

பக்கத்தில் யாரோ வந்து நிற்கவே, நிமிர்ந்து பார்த்தாள். பிறகு "உட்காருங்கள்," என்று ஒரு முக்காலியை இழுத்துப் போட்டாள்.

தங்கம்மாளைப் பார்த்து, "ப்ஸொ, ப்ஸொ" என்று அனுதாபம் தெரிவித்தார் தாமோதரம். "இப்போதுதான் கேள்விப்பட்டேன். உடனே ஓடிவந்தேன், இன்றைக்கு எப்படி இருக்கிறது?"

தங்கம்மாளின் உதடுகள் அசைந்தன.

"இப்போது தேவலை."

போர்வையைச் சரி செய்யும் சாக்கில், வழுக்கைத் தலை மனிதரைப் பின்னாலிருந்து கவனித்தாள் துளசி. இவர் எழுதிய கடிதத்தைப் படித்து விட்டுத்தானே அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த நாளன்று அத்தான் கவலையில் மூழ்கிவிட்டார்?

சற்று நேரம் கழித்து, "ரத்தினம் ஏதாவது சொன்னானா?" என்றார் தாமோதரம், அசட்டுச் சிரிப்புடன்.

தங்கம்மாளுக்கு ஒன்றும் புரியவில்லை. "இல்லை," என்று தலையசைத்தாள்.

"உங்களிடம் தனியாகக் கொஞ்சம் பேசவேண்டும்," என்றார் அவர்.

வெந்நீர் கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டுத் துளசி அகன்றாள்.

வெகு நேரம் கழித்துத்தான் தாமோதரம் சென்றார். அவர் முகம் கடுகடு வென்று இருந்தது.

துளசியைக் கண்டதும், "இன்னும்

ரத்தினம் வரவில்லையா? வரச் சொல்லிப் போன் பண்ணேன்?" என்றாள் தங்கம்மாள்.

துளசி திரும்புவதற்குள் ரத்தினமே வந்துவிட்டான். ஆஸ்பத்திரி வாசலில் நுழையும்போது தாமோதரம் வெளியேறுவதை அவன் கவனித்திருந்தான். தங்கம்மாளைத்தான் அவர் சந்தித்திருக்க வேண்டும் என்று ஊகிக்க அவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

அவனைக் கண்டதும், தன் விழிகளாலேயே அவனை அணைத்துக் கொண்டாள் தங்கம்மாள்.

"உண்மை உனக்குத் தெரிந்து போய்விட்டதாக அந்த மனிதர் சொன்னார்," என்றாள் அவள். கண்களிலிருந்து நீர் கரகரவென்று பெருகிற்று. "நீ என் வயிற்றில் பிறக்காவிட்டால் என்ன? நீ என் பிள்ளைதான். என் சொந்தப் பிள்ளைதான்."

உணர்ச்சி வசப்பட்டு அவன் உதடுகள் துடித்தன.

ஆனால் நா எழவில்லை.

"பம்பாய், கல்கத்தா, டில்லி செல்லும் பிரயாணிகள் தயவு செய்து தமது விமானத்தில் ஏறிக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்," என்று அறிவித்தது ஒலிபெருக்கி.

ட்வீட் ஸூட்டும் டேட்டால் டையுமாகப் புத்தகக் கடையருகே நின்றிருந்த செந்தில், தான் புரட்டிக்கொண்டிருந்த பத்திரிகையைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, கட்டிடத்தின் படிகளை விட்டு இறங்கும்போது, "சார்! சார்!" என்ற குரலைக் கேட்டுத் திரும்பினான்.

சூரியனின் கதிர்கள் அவன் மூக்குக் கண்ணாடியில் பட்டு மின்னின.

கூப்பிட்டது அவர்கள் வீட்டு டிரைவர்தான். மூச்சு வாங்கிற்று அவனுக்கு

"என்ன?" என்று அதட்டியபடி, முறைத்துப் பார்த்தான் செந்தில். கூட்டத்திலிருந்த அத்தனை பேருடைய கண்களுக்கும் தன்னை இலக்காக்கி விட்ட டிரைவர் மீது அவனுக்கு எரிச்சல். முக்கால் மணி நேரத்துக்கு முன் அவனைக் கொண்டு வந்து மீனம்பாக்கத்தில் இறக்கிவிட்டுச் சென்றவன் இப்போது ஏன் திரும்பி வந்திருக்கிறான்?

வியர்த்து விறுவிறுத்துப் போயிருந்த வண்டியோட்டியின் வாயிலிருந்து அந்தச் செய்தி வெளிவந்ததும், செந்தில் ஒரு விநாடி அப்படியே நின்றான்.

விமானத்தை நோக்கிப் பிரயாணிகள் வரிசையாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

சற்றும் பதட்டம் அடையாமல், கீழுதட்டைக் கடித்தபடி செந்தில் யோசனையில் ஆழ்ந்தான்.

நூறு அடிக்கு அப்பால், பட்டியலைக் கையில் வைத்துக் கொண்டு நின்ற விமான நிலைய அதிகாரிகள், பாக்கியுள்ள பிரயாணி எங்கே என்று விசாரிக்கலாயினர்.

அம்மாவுக்காக விட வேண்டிய கண்ணீரை ஆகாய விமானத்திலும் உகுக்கலாம். லட்ச ரூபாய் லாபத்தை இடுகாட்டில் அடைய முடியாதே?

"நீ வருவதற்குள் பிளேன் புறப்பட்டுவிட்டது என்று சொல், போ!" என்றான் செந்தில். பிறகு விமானத்தை நோக்கி விரைந்தான்.




## இதுவரை.

நள்ளிரவில், கோவையிலிருந்து சென்னை வரும் சாலையில் ஒரு பெரிய கார் வேகமாக வந்து கொண்டிருக்கிறது.

அதை ஓட்டிக் கொண்டிருப்பவன் ரத்தினம் என்ற வாலிபன். கட்டிடக் கண்டிராக்ட் கம்பெனியின் தலைவன்.

அவனுக்குப் பக்கத்தில் தம்பி கோவிந்தன் தூங்கி வழிந்து கொண்டிருக்கிறான். விளையாட்டு புத்திக்காரன். டியூட்டோரியல் கல்லூரியில் படிக்கிறான்.

அவனுக்கு அடுத்தாற்போல், தூங்கியும் தூங்காமல் உட்கார்ந்திருப்பவன் தான் செந்தில். கல்லூரி மாணவன். கெட்டிக்காரன். உழைப்பாளி

பின் ஆசனத்திலிருந்து விசும்பல் ஓசை கேட்கிறது. அழுபவள் துளசி. அவள் தந்தை—ரத்தினத்தின் மாமா—கோவையில் காலமாகி விட்டார். அவளை அழைத்து வரவே இவர்கள் எல்லோரும் சென்னையிலிருந்து புறப்பட்டுச் சென்றார்கள்.

துளசிக்கு அடுத்தாற்போல் இருப்பவள் தங்கம்மாள்—அவள் அத்தை

ஒரு நாள் துளசியின் புடவைகளை வைக்க ஓர் அலமாரி தேவை என்று தங்கம்மாள் சொல்கிறாள். தற்செயலாகச் செந்திலின் அலமாரியைத் திறந்த ரத்தினம், அதில் அடுக்கடுக்காகக் கணக்குப் புத்தகங்கள் இருப்பதைக் கண்டு திகைக்கிறான். படிப்பையும் கவனித்துக்கொண்டு, அதே சமயம் அண்ணா ஒழுங்காகத் தொழில் நடத்துகிறாரா என்று அவன் ரகசியமாக சரி பார்த்து வந்திருக்கிறான். தினம் அலுவலகம் சென்று, அன்றாட வரவு செலவுக்கு நகல் எடுத்துவரும் வழக்கத்தைக் கடைப்பிடித்திருக்கிறான்.

ரத்தினத்துக்கு வருத்தம், தன் மீது தம்பிக்கு நம்பிக்கை இல்லையே என்று.

ஒரு நாள், பொழுது போகவில்லை என்று தவித்த துளசிக்கு டைப்ரைட்டிங் கற்றுக் கொடுக்க அலுவலகத்துக்கு அழைத்துச் செல்கிறான் ரத்தினம்.

கணக்குகளை வேறு யாரும் பார்க்க முடியாதபடி அவன் செய்திருந்த ஒரு ஏற்பாட்டினால் கோபமுற்ற செந்தில் துளசி விஷயத்தில் பொறாமைப்படுகிறான்.

அண்ணாவுடன் சண்டைக்கு வருகிறான்.

இதற்கிடையில், தாமோதரம் என்ற மர்ம மனிதருக்கு ரூபாய் 5000 கொடுக்கத் தங்கம்மாள் கட்டளையிட்டிருந்தாள். செந்தில் அதைச் சுட்டிக் காட்டி, அம்மாவைப்பற்றி அவதூறாகப் பேசுகிறான். இதற்குப் பிறகு தொழில் நடத்தும் உரிமை அவன் கைக்கு மாறுகிறது.

கடற்கரையில் ரத்தினத்தைச் சந்தித்த தாமோதரம், அவன் தனக்குப் பிறந்தவன் என்று கூறுகிறார். பிறகு ஒரு கடித மூலம், ரத்தினம், தாமோதரத்துக்கும் லட்சுமி என்பவளுக்கும் பிறந்தவன் என்றும், லட்சுமி காலமானதும் தங்கம்மாள் அவனை வளர்க்கலானாள் என்றும் அறிவிக்கிறார்.

ரத்தினம் குழம்புகிறான்,

தங்கம்மாள் தீ விபத்துக்கு ஆளாகிறாள். தாமோதரம் சொல்வது உண்மையென்று ஒப்புக்கொள்கிறாள்.

விமான நிலையத்திலுள்ள செந்திலுக்கு, துயரச் செய்தி வருகிறது. ஒரு பெரிய அணைக்கட்டில் பங்கு கொள்வது சம்பந்தமாகப் புது டில்லிக்குப் புறப்படும் செந்தில், செய்தி கொண்டு வந்த டிரைவரிடம், "நீ வருவதற்குள் பிளேன் புறப்பட்டு விட்டதென்று போய்ச் சொல்," என்று கூறிவிட்டு, விமானத்தை நோக்கி நடக்கிறான்.

## எட்டு

பொத்தானை அழுத்தினான் ரத்தினம்.

அவனது முதுகுக்குப் பின்னாலிருந்த சாளரத்தின் வழியே மழைத்துளிகள் அனுமதியின்றி நுழைந்து அவனது ஆடைகளையும் புறங் கழுத்தையும் நனைத்ததோடு மட்டுமல்லாமல் மேஜைமீதிருந்த காகிதங்களையும் ஈரமாக்கிக்கொண்டிருந்தன.

காக்கி உடை அணிந்த பையன் அவன் முன் வந்து நிற்க இரண்டு நிமிடம் ஆயிற்று.

"ஜன்னல் கதவைச் சாத்தி விடுகிறாயா" என்றான் ரத்தினம். கையை உயர்த்திப் பெருவிரலைப் பின்பக்கம் சுட்டியபடி.

பையன் ஓரடி எடுத்து வைத்திருப்பான்

"ஏய்! காஷியரைக் கூப்பிடு!" என்றது அதிகாரம் செறிந்த ஒரு குரல் அது அடுத்த மேஜையிலிருந்து வந்தது

ஜன்னலை நோக்கி நிதானமாகப் புறப்பட்ட பையன், செந்திலின் குரலைக் கேட்டதும் கணக்காளரை அழைத்துவரப் பாய்ந்து ஓடினான்.

சூழ்நிலையை மறந்தவனாகத் தனது வேலையில் ஈடுபட்டிருந்த செந்தில், கணக்காளர் வந்ததும் அவருடன் பேசிக்கொண்டே ஆபீஸ் பையனுக்கு வேலைமீது வேலையாகச் சுமத்திக் கொண்டிருந்தான்.

பத்து நிமிடம் கழிந்தது

ரத்தினம் தானே எழுந்து ஜன்னலை நோக்கி நடந்தான், கதவுகளைச் சாத்தி,



தாழ் போட்டபோது, ஜன்னலின் ஓர் இடைவெளியினின்று தண்ணீர் ஒழுகிக் கொண்டிருப்பதைக் கவனித்தான். ஒரு வாரத்துக்கு முன்பு அடை மழை பெய்தபோது, அலுவலக உதவி நிர்வாகியிடம் இந்தக் குறையைச் சுட்டிக் காட்டி அதைச் சரி செய்யும்படி கூறியிருந்தான்.

உதவி நிர்வாகியை அழைத்து வரச் சொல்வதற்காகப் பொத்தானை மறுபடியும் அழுத்தப் போனான் ரத்தினம். ஆனால் அழுத்தவில்லை. வெளியே போகும்போது உதவிநிர்வாகியின் மேஜையைக் கடக்க வேண்டியிருக்கும். போகிற போக்கில் இந்த விஷயத்தை அவரிடம் நினைவு மூட்டினால் போதும் என்ற எண்ணத்துடன் அவன் பொத்தானிலிருந்து விரலை இழுத்துக் கொள்வதற்கும், அறைக்குள் நாலைந்து பேர் நுழைவதற்கும் சரியாக இருந்தது.

எல்லோரும் கட்டிடத் தொழிலில் சம்பந்தம் வைத்துக் கொண்டு, கண்டிராக்டர்களின் தயவால் பிழைப்பு



நடத்துகிறவர்கள். அனைவரும் தத்தமக்குப் பழக்கமான முறையில் செந்திலுக்கு வணக்கம் செலுத்திவிட்டு, அவன் எதிரில் உட்கார்ந்து கொண்டார்கள். இருவருக்கு நாற்காலியில்லை.

ஆபீஸ் பையன் விரைந்து வந்து ரத்தினத்துக்கு எதிரில் இருந்த இரண்டு நாற்காலியையும் விருட்டென்று இழுத்து, நின்று கொண்டிருந்தவர்களை அமரச் செய்தான்.

தனது முகத்திலே எவ்விதமான உணர்ச்சியையும் காட்டாமல், அவர்களுக்கு வெகு அண்மையில் இருந்த போதிலும் எட்டத்தில் உள்ளவன் போல் செந்தில், பத்து வார்த்தைகளடங்கிய கேள்விக்கு ஒரு சொல்லில் விடையளித்துக் கொண்டிருக்க, வந்திருந்தவர்கள் ஒருவர் மேல் ஒருவர் விழுந்து, பொய்ச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு அவனைப் பாராட்டும் போட்டியில் முழு மனத்துடன் ஆழ்ந்திருந்தார்கள்.

நடுவிலே வகிடெடுத்துத் தலை வாரிக் கொண்டிருந்த ஒரு குள்ளமான ஆள்—இந்தக் கோடியில் உட்கார்ந்திருந்தவர்—தற்செயலாகத் தலையைத் திருப்பியபோது ரத்தினத்தின் கண்களைச் சந்தித்த நேரிட்டுவிட்டது. ஆறு மாதங்களுக்கு முன், இதே அறைக்குள் உட்கார்ந்து இதே புகழ் மொழிகளைப் பொழிந்து கொண்டிருந்தது அவருக்கு ஞாபகம் வந்தது போலும். அப்போது இந்த அறையில் ரத்தினம் மட்டுமே இருந்தான் என்பதை நினைத்துக் கொண்டாரோ என்னவோ அவர் முகத்தில் அசடு வழிந்தது. அரை மனத்தோடு ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டு தலையைச் சற்று அசைத்து ரத்தினத்துக்கு மரியாதை செய்யலாமா வேண்டாமா என்று யோசித்தவர், செந்தில் தன்னை நோக்கி ஏதோ கேட்டுக் கொண்டிருந்தான் என்பதை உணர்ந்ததும், "ஆமாம் சார்," என்று ஒரு பொதுவான பதிலைச் சமர்ப்பித்துவிட்டுப் பிறகு தான் கொடுத்தது பொருத்தமான விடைதானா என்று சரி பார்த்துக் கொள்ளச் சுற்றியிருந்தவர்களின் முகங்களை உற்றுப் பார்த்தார்.

அவனைப் பொறுத்த வரையில் ரத்தினத்துக்கு முற்பகல் வேலை முடிந்தது. மேஜை மீதிருந்த பைல்களை எடுத்துச் செல்லுமாறு பையனிடம் கூறிவிட்டு, அவன் அந்த அறையைவிட்டு அகன்றான்.

உதவி நிர்வாகியின் மேஜையை நெருங்கியதும் ஜன்னல் விஷயத்தைப் பற்றி நினைவூட்ட நின்றவன், "முட்டாள், உனக்குப் புத்தி கித்தி இருக்கிறதா இல்லையா?" என்று அவர் யாரையோ உரக்கக் கடிந்து கொண்டிருப்பதையும், தன்னைக் கண்டும் அந்தக் குரலின் கடுமை தணியாமல் இருப்பதையும் கவனித்துவிட்டு, மேலே நடந்தான்.

அவன் உள்ளம் நிறைந்தது. செந்திலின் தொழில் திறமையைப் பற்றி அவனுக்கு இரண்டொரு சந்தேகம் ஆரம்பத்தில் இருந்திருக்கும் பட்சத்தில், ஆறு மாத காலத்தில் அவற்றைச் சிதறியோடச் செய்துவிட்டது தம்பியின் சாதனை. இப்போதெல்லாம் செந்திலின் கவனம் கல்விக்கும் தொழிலுக்கும் இடையே பிளவு படவில்லை. அணைக்கட்டு சம்பந்தமாக அவன் கொடுத்த டெண்டர் என்றைக்கு ஏற்றுக்கொள்ளப் பட்டதோ அதற்குப் பிறகு அவன் கல்லூரியில் கால் வைக்கவில்லை. அவனது கவனம் திறமை, நேரம் எல்லாவற்றையும் அனேகமாக அவனது தொழில் ஒன்றே கைப்பற்றிவிட்டது என்று சொல்லலாம். கிடுகிடுவென்று முன்னேறிவிட்டான். அவர்களுடைய தொழிலின் முன்னணியில் நிற்கும் இரண்டொரு பிரம்மாண்டமான ஸ்தாபனங்கள் கூட அவனது துணிச்சலான திட்டங்களையும் சாமர்த்தியம் நிறைந்த செயல் முறைகளையும் கண்டு 'இப்படியொரு கூட்டாளி நமக்குக் கிடைக்காமல் போய்விட்டானே' என்று ஒவ்வொரு சமயம் பெருமூச்சு விடும் அளவுக்கு அவனுடைய வெற்றிகள் அடுக்கடுக்காக அமையலாயின.

திட்டம் தீட்டுவதில் மட்டுமல்லாமல், அதைச் செயலாற்றுவதிலும் செந்தில் ஒருவனுடைய திறமையே அந்த ஸ்தாபனத்துக்குப் போதுமானதாயிருந்தது. இதை ரத்தினமும் உணர்வான். செந்திலும் அறிவான். தம்பிக்குத் தான் கற்றுக் கொடுக்க வேண்டியது ஏதுமில்லை என்று தெரிந்ததும் ரத்தினம் முற்றிலும் ஒதுங்கிக் கொண்டுவிட்டான். ஒப்புக்காவது அவனைக் கலந்தாலோசிப்பது என்று செந்தில் வைத்துக் கொண்டிருந்த பழக்கம் கொஞ்சம்

கொஞ்சமாக வலுவிழந்து, நைந்து இறுதியில் முழுவதுமாக மறைந்து விட்டது. தான் எதிர்பார்த்ததற்கு மேலாகச் செந்தில் அவர்களுடைய குடும்பத்துக்குப் புகழும் ஸ்தாபனத்துக்கு லாபமும் சம்பாதித்துத் தருவதைக் கண்டு ரத்தினம் அகமகிழ்ந்தான்.

ஆனால், ஒரு கட்டத்தில் செந்திலின் முன்னேற்றம் ரத்தினத்துக்கு ஏக்கத்தைத் தந்தது. அவனுக்கு வேலையில்லாமல் செய்துவிட்டான் செந்தில். பெயரும் புகழும் ரத்தினத்துக்குத் தேவைப்படவில்லை. திறமைக்கேற்ற பொறுப்பை ஏற்று நடத்தவே அவன் விரும்பினான். இப்போதுள்ள நிலைமை அவனை வெற்று மனிதன் ஆக்கிவிட்டது. பொழுதிருந்தும் பொறுப்பு இல்லாமல், சாமர்த்தியமிருந்தும் அதைச் செலுத்த வாய்ப்பில்லாமல் அவன் வீணாகிக் கொண்டிருந்தான். ஆனால் தனது உண்மையான நிலையைப்பற்றிப் பெருமூச்சுவிட அவன் தன் மனத்தை அனுமதிப்பதில்லை. துருப்பிடித்துப் போகும் தனது திறமையைப் பற்றி எப்போதாவது ஏக்கம் எழுந்தால், பளபளக்கும் செந்திலின் புகழை நினைத்து அதைத் தணித்துக் கொள்வான்.

இதற்குள் கிளம்பி விட்டாரே என்ற ஐயப் பார்வையுடன் தெருவில் நிறுத்தியிருந்த காருக்குப் பக்கத்தில் நின்ற டிரைவர் ரத்தினத்தை ஏறிட்டு நோக்கினான். 'கார் வேண்டாம்' என்று சைகை காட்டிய ரத்தினம் நடைபாதையில் இறங்கிய போது, இடது தோளுக்கும் வலது இடைக்குமாக முடி போட்ட ஜரிகை அங்கவஸ்திரத்துடன் வந்த ஒரு மனிதருடன் மோதிக்கொண்டான்.

''உன்னைத்தானடா பார்க்க வந்தேன்,'' என்றார் தாமோதரம்.

இவன் அவரை எதிர்பார்க்கவில்லை. ஒரு விநாடி பிரமித்து நின்றவன் கைகூப்பி, ''வாருங்கள்,'' என்று வரவேற்றான்.

தங்கம்மாளுடைய மரணத்துக்குப் பிறகு, தாமோதரம் ரத்தினத்தை முற்றுகையே செய்துவிட்டார் என்று சொல்லலாம். அலுவலகத்திலோ வீட்டிலோ அவன் தனிமையில் இருக்கும் சமயம் பார்த்துப் பிடித்துக்கொண்டு விடுவார். கடற்கரையில் அவர் அவனுக்கு அறிவித்த செய்தி உண்மைதான் என்று தங்கம்மாள் வாயிலாகவே உறுதியானபின், ரத்தினம் முன்னைக் காட்டிலும் மதிப்பு வைத்து அவரிடம் மரியாதை காட்டலானான். அந்த வயதிலும் சற்றும் உதிராமல் இருந்த அந்தச் சுருள் சுருளான கேசமும், நீண்ட முகமும், நெடிய உருவமும் ஜரிகை அங்கவஸ்திரமும் அவனுடைய மனத்தைக் கவராவிடினும், அவருக்கும் தனக்கும் அறுத்தெறிய முடியாத ரத்த சம்பந்தம் உண்டு என்பது ரத்தினத்தின் மனத்தில் நன்கு பதிந்து விட்டது. அது பாசமாகப் பழுக்காவிட்டாலும் மரியாதை என்ற அளவிலாவது நிலை பெற்று நீடிக்க வேண்டும் என்று அவன் மனச் சாட்சி கூறி வந்தது. அதை அவன் முழு மனத்துடன் ஏற்றுக்கொண்டான்.

இதற்குள் செந்திலைப் பேட்டி காண வந்த கூட்டம் கலைந்துவிட்டது. செந்தில் காரில் ஏறிக்கொண்டு எங்கோ கிளம்புவதைக் கண்டதும் தாமோதரத்தை அழைத்துக்கொண்டு ரத்தினம் அலுவலக அறைக்குத் திரும்பினான். அவரை உட்காரச் செய்துவிட்டு, ''தாகத்துக்கு ஏதாவது வாங்கிவரச் சொல்லட்டுமா?'' என்று அவன் உபசரித்தபோது அவர் புன்னகை செய்தார்.

''சாப்பிடுவதற்காக நான் வரவில்லை. சாப்பாட்டுக்கு அழைப்பதற்காக வந்திருக்கிறேன்,'' என்றார்.

ரத்தினம் திக்குமுக்காடினான்.

''காலையில் நீ பலகாரம் தானே சாப்பிட்டாய்?''

ரத்தினம் இழுத்தான். ''ஆமாம்...''

''அப்படியானால் புறப்படு. நான் தனியாகத் திரும்பினால் உன் அம்மா விறகுக் கட்டையை எடுத்துக்கொண்டு வருவாள். உன்னைப் பார்க்க வேண்டும் என்று அவ்வளவு ஆவல் அவளுக்கு.''

அம்மா!

எத்தனை அம்மாக்கள் ரத்தினத்துக்கு! அவனுடைய பிறவிக்குக் காரணமாய் இருந்தவள் ஓர் அம்மா. பெற்றவளைக் காட்டிலும் சீரும் சிறப்புமாகப் பாலூட்டி வளர்த்தவள் ஓர் அம்மா, இப்போது மூன்றாவதாக, தான் கண்டும் கேட்டுமிராத மற்றோர் அம்மா! அம்மா என்ற சொல்லுக்குப் பொருள்தான் என்ன?

ரத்தினம் தயங்கினான். தாமோதரத்தையாவது தந்தையாக மதித்து அந்த உறவைக் கடைசிவரை

காப்பாற்றிவிடலாம். முன் பின் தெரியாத அவர் மனைவியோடு எப்படிப் பழகுவது? எவ்வாறு நடந்து கொள்வது?

தங்கம்மாள் மறைந்த ஒரு மாதத்துக்குள். பெங்களூரிலிருந்து தனது குடும்பத்தைத் தாமோதரம் சென்னைக்கு வரவழைத்துவிட்டார் என்பது அவனுக்குத் தெரியும். சொல்லப் போனால் அவனுக்கு முன்னறிவிப்புக் கொடுத்துவிட்டே அவர் அப்படிச் செய்தார். குடும்பம் என்று ஒன்று அவருக்கு இருப்பதாக அவனுக்கு அதுகாறும் தெரியாது. வளர்ப்புத் தந்தையும் தாயும் காலமாகிவிட்ட காரணத்தால் அவனுடன் இருந்து அவனைக் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு தன் தலையில் விழுந்துவிட்டதைப் போல் அவர் பேசினார். ஆனால் அவருக்குத் தன்னிடம் இவ்வளவு அக்கறை உண்டாவதற்குக் காரணம் என்ன என்பதை ரத்தினம் அறியாதவனல்ல ஆயினும் எந்த ஊரில் குடியிருப்பதற்கும் அவருக்கு உரிமையுண்டு என்றும், அவரைத் தடுக்கத் தனக்கு அதிகாரமில்லை என்றும் ரத்தினம் கருதினான். பணத்தைப்பொறுத்தவரையில் அனைத்துமே செந்திலின் கைக்கு மாறிவிட்டபடியால், அவனைக் கொண்டு தாமோதரம் பலன் அடைவதற்கு ஏதுவில்லை, அதைச் சாடைமாடையாக ரத்தினம் அவரிடம் சொல்லியும் விட்டான். அதை அவர் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. எதிர்காலத்தில் அறுவடைக்கு வரக் கூடிய எதையோ மனத்தில் வைத்துக்கொண்டு, அவனிடம் தனக்குள்ள உறவைச் சீர்ப்படுத்திச் செப்பனிடுவதில் தீவிரமாக முனைந்துவிட்டார்.

ஆனால் இவ்வளவு தூரத்துக்கு வருமென்று அவன் நினைக்கவே இல்லை. அவரை அப்பாவாக ஏற்றுக்கொண்டதும் அவருடைய மனைவி 'அம்மா' பதவிக்கு உயர்ந்து விடுவாள் என்றோ, அவர்கள் வீட்டோடு போக்குவரத்து வைத்துக்கொள்ள நேருமென்றோ அவன் கனவிலும் கருதவில்லை.

''மன்னித்துக் கொள்ள வேண்டும். இன்னொரு நாளைக்கு ஆகட்டும்.'' என்று அவன் தட்டிச் சொல்லிய போது. சட்டென்று அவருக்கு வந்த கோபத்தைப் பார்க்க வேண்டுமே!

நாசி படைக்க, ''பெற்ற தகப்பன் கூப்பிடுகிறேன். நீ முடியாது என்கிறாயா? பெரியபிரபு என்ற எண்ணமோ? வெள்ளித் தட்டில் சாப்பிட முடியாவிட்டாலும் நாங்கள் தினபதும் சோறுதான்,'' என்று அவர் கூச்சலிட ஆரம்பித்ததும், அவர் மனத்துக்கு அனாவசியமாக வருத்தம் தந்துவிட்டோமே என்று கவலையுற்ற ரத்தினம், உடனே அவருடன் கிளம்பச் சம்மதித்தான்.

பெட்டியை எடுத்துக் கொண்டு துளசி புறப்பட்டபொழுது முகப்பு அறையிலிருந்த கடியாரத்தின் சிறிய முள் ஐந்தைக் காட்டிற்று. ஆனால் மணியடிக்கவில்லை.

காரணம் துளசிக்குத் தெரியும். ஒவ்வொரு புதன்கிழமை காலையும் அதற்குச் சாவி கொடுக்க வேண்டிய பொறுப்பு அவளிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இரண்டு நாளாக அவள் மனதில் வீசிக் கொண்டிருந்த புயலில் இம்மாதிரிச் சாதாரண விஷயங்களெல்லாம் மூலைமுடுக்கில் சென்று ஒளிந்துகொண்டுவிட்டன.

ஒரு விநாடி யோசித்தவர் பெட்டியைச் சோபாமீது வைத்தாள். கடியாரத்துக்குக் கீழே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, கண்ணாடி பதித்த கடியாரக் கதவைத் திறந்து அதற்குச் சாவி கொடுக்கலானாள். இரண்டு திருகு திருகியதுமே ஊமைக்கு வாக்கு வந்தாற்போல் அது உற்சாகத்துடன் மணி அடிக்க ஆரம்பித்தது.

கீழே இறங்கிய துளசி, மாமா, அத்தை இவர்கள் படத்துக்கு முன்னால் நின்று கண்களை மூடினாள். அத்தையைப்பற்றி நினைக்கும்பொழுது அவளுடைய கண்களில் நீர் சுரந்தது. எவ்வளவு நேரம் அப்படி நின்று கொண்டிருந்தாளோ, திடீரென்று விழிப்புப் பெற்றவளாய்க் கண்களைத் துடைத்துக்கொண்டு பெட்டியை எடுத்துக்கொண்டாள்,

வீட்டில் ஆள் நடமாட்டமேயில்லை. ரத்தினம், கோவிந்தன், செந்தில் இவர்களில் யாராவது வருவதற்கு இன்னும் கொஞ்ச நேரம் ஆகலாம்," பணியாட்கள் எல்லோரும் தோட்டக்காரனுடைய குடிசைக்குப் பக்கத்தில் கூடி வம்பளந்துகொண்டிருக்கும் நேரம்.

துளசி கதவைத் திறந்துகொண்டு வராந்தாவுக்கு வந்தாள், படிகளை

விட்டு இறங்குவதற்கு மனமே வரா மல் மற்ெருரு முறை திரும்பிப் பார்த் தாள். அவளுடைய உள்ளம் பாறை போல் கனத்தது.

கோட்டைபோன்ற அந்த வீட்டில் பாதுகாப்பை விட்டு நீங்கி அபாய மும் ஆபத்தும் நிறைந்த வெளி உலகத் திலே அவள் தன்னந் தனியாக அடி யெடுத்து வைக்கிருள். அவளுக்குத் துணை அவள் தான்.

பையில் பணமே இல்லை. பணமெல் லாம்தான் அவள் மனத்துக்கு ஏறிவிட் டதே. மாற்று உடையும் இருபத் தைந்து ரூபாயும் பெட்டிக்குள் இருந் தன. அழகைத் தவிர வேறு ஆபரண மில்லை. எல்லாவற்றையும் கழற்றிப் பொட்டலமாகக் கட்டிப் புடவைகள் நிறைந்த தனது அலமாரியிலே வைத் துப் பூட்டிச் சாவியை ரத்தினத்தின் மேஜை மீது வைத்துவிட்டு வந்திருந் தாள்.

ரத்தினம்! ரத்தினத்தின் முகம் அவள் முன் தோன்றியதும் அங்க மெங்கும் நோவு எடுத்தது. வெகு நேரம் கழித்து மறுபடியும் தான் செய் வது சரிதானு என்ற கேள்வி எழுந்து பிள்ளைப் பூச்சியாய்க் குடைந்தது. அவள் எழுதி வைத்திருந்த கடிதத்தை அவன் எப்போது படிப்பான்? அந்தக் காகிதத்தைக் கையில் பிடித்திருக்கும் போது அவன் கைகள் எவ்வாறு நடுங் கும்! அந்த விழிகள் எப்படி விரிந்து அந்த வரிகளைப் பரபரப்புடன் வாசிக் கும்! அவனுடைய முகத்தில் எவ்விதம் வேதனை படரும்!

துளசிக்கு அழுகை குமுறிக்கொண்டு வந்தது. பழம் நறுக்குவது போல் யாரோ தன் இதயத்தைத் துண்டு போடுவதாகத் தோன்றிற்று.

ஆனல் வேறு வழி? அவள் பல்லைக் கடித்துக்கொண்டாள். கண்ணீரை விழுங்கினுள். பலவீனத்தைக் கிள்ளி யெறிந்து திரும்பிப் பாராமல் ஆவேசத் துடன் நடந்தாள்.

மற்ற எதைக் காட்டிலும் அவ னுக்கு அப்போது அதிக மாகத் தேவையாயிருந்தது ஒரு தலை வலி மாத்திரை.

சென்ட்ரல் ஸ்டேஷன் பிளாட்பாரத் தில் உலவிக்கொண்டிருந்த ரத்தினம், சற்றுக் காலியாக இருந்த ஒரு பெஞ் சில் உட்கார்ந்துகொண்டான். நெற் றிப் பொட்டுக்கள் இரண்டும் விண்



## ஒன்பது

புகையும் அடுப்போடு தாமோதரத்தின் மனைவி போராடிக்கொண்டிருந்தாள். சேலைத் தலைப்பை அவள் இன்னொருமுறை மூக்கருகே கொண்டு சென்று ஆடையைப் பேரொலியுடன் ஈரமாக்கியபோது, அடுத்தாற்போலிருந்த அறையிலிருந்து பீரிட்ட சிரிப்பொலியும் கைதட்டலும் கும்மாளமும் அவள் காதுகளைச் செவிடாக்கின.

“அங்கே என்ன சப்தம்? பாப்பா! இரண்டு கழுதை வயதாகிறது. பசங்களோடு சேர்ந்துகொண்டு கொட்டமடிப்பதில் குறைச்சலில்லை. இங்கே வருகிறாயா இல்லையா?” என்று அவள் ஓர் அதட்டல் போட்டாள்.

ஆனால அந்த அதட்டலுக்கு ஒரு வினாடி காலத்துக்குத்தான் பலன் இருந்தது. பாப்பாவின் சேட்டைகளைப் பார்த்துக்கொண்டு யாரால் சிரிக்காமல் இருக்கமுடியும்? இடுப்பில் கை வைத்தபடி அவள் கம்பீரமாக நின்ற தோற்றத்துக்கு, உதட்டுக்கு மேலே தொத்திக்கொண்டிருந்த பொய் மீசையும், தலையிலே கவிழ்க்கப்பட்டிருந்த ஓட்டைப் பாத்திரமும், செங்கோலாகப் பிடித்திருந்த கைத்தடியும் ஒரு தனி மிடுக்கை அளித்திருப்பது கண்டு அவளது உடன் பிறந்தாரும் உறவினரும் அடங்கிய சிறுவர் குழாம் பெரு மகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்தது.

மேலும் உற்சாகமடைந்தாள் பாப்பா. தாவணிக்கு மேல் அணிந்திருந்த சட்டையின் கைகளை முழங்கை வரை சுருட்டி விட்டுக்கொண்டு, ஏற்கனவே சிரிப்பை அடக்க முடியாமல் தவித்துக்கொண்டிருந்த தன் கடைசித் தம்பி மாணிக்கத்தைப் பார்த்து, அழகு காட்டினாளோ இல்லையோ, மேலும்கீழுமாக அசைந்த அந்த முரட்டு மீசை மூக்கினின்றும் நழுவிவிட்டது. பாப்பா அதைப் பரபரப்புடன் பிடிப்பதற்காகக் குனிய, தலையிலிருந்த ‘மணிமுடி’ திடீரென்று கவிழ்ந்து அண்ணன் ராஜாபாதரின் மூக்கு நுனியைப் பதம் பார்க்க, ‘அச் அச்’ சென்று அவன் இரண்டு முறை தும்மி முடித்தவுடன் தன் கையிலிருந்த பீடி நுனியால் பாப்பாவின் பாதங்களிலே முத்திரை பதித்துவிட்டான்.

'வீல்' என்று எழுந்த பாப்பாவின் கூச்சல் குறைந்தது அரைமைல் வட்டத்துக்காவது கேளாமல் இருந்திராது. வேடிக்கை செய்ய ஆரம்பித்த பாப்பா வீராங்கனையாக மாறிச் 'செங்கோலைக் கொண்டு சிலம்பம் விளையாடிய வேகத்தில் கொலுமண்டபம் போர்க்களமாக மாறிவிட்டது. அதிர்ச்சியுற்ற எதிரிகள் தம்மைச் சமாளித்துக்கொண்டு பாப்பாவின் மீது வீசிய தலையணை சற்றே குறி தவறி, அப்போதுதான் அவசரம் அவசரமாக, ''மங்களம்''மங்களம்''' என்று அழைத்தபடி உள்ளே நுழைந்த தாமோதரத்தின் மீது மோதி, தொப்பென்று அவர் காலடியில் விழுந்தது. வியக்கத்தக்க முறையில் சந்தடி மௌனமாக மாறிற்று. எல்லோரும் அவரவர் இடத்தில் சிலைகளாய் நின்றனர். முகம் கோபத்தால் தகதகக்க, கால்களை உதறி மிதியடி இரண்டையும் தூர எறிந்த தாமோதரம், இதற்கெல்லாம் மூலகாரணம் யார் என்று அங்கிருந்தவர்களைத்



துருவுவதற்குள், "அப்பா...அப்பா!" என்று தேம்பித் தேம்பி அழுது கொண்டே பாப்பா அவரை நோக்கி ஓடினாள்.

அவர் குரலில் சற்றுக் கனிவு தோன்ற, "என்னம்மா, என்ன நடந்தது?" என்று தாமோதரம் விசாரித்து, விசும்பல்களுக்கிடையே அவள் அந்தச் சம்பவத்தை விவரிப்பதற்குள், அதிசயிக்கத் தக்க வேகத்துடன் அத்தனை பேரும் மாயமாய் மறைந்து விட்டார்கள்.

பையன்கள் மீதிருந்த கோபத்தை மனைவிமீது திருப்பினார் தாமோதரம். "ஏய் எருமை மாடு! உனக்குப் புத்திகித்தி இருக்கிறதா இல்லையா? நீ இங்கேதானே நந்தியாட்டம் குந்திக்கொண்டிருந்தாய்? இந்தப் போக்கிரிகளை அடக்கி வைக்கக் கூடாது? பாவம், பாப்பா அழுகிறாள் பார்."

"உங்கள் பாப்பாவை நீங்கள்தான் மெச்சிக்கொள்ள வேண்டும். அடிக்கிற லூட்டியெல்லாம் அவள்தான். இவள் சொல்லிக் கொடுத்துத்தானே மற்றவர்கள் கற்றுக் கொள்கிறார்கள்!"

வந்த வேலை இப்பொழுதுதான் தாமோதரத்துக்கு நினைவு வந்தது போலும்.



**அனுவசிய ஆராய்ச்சி**

**முடி வெட்டும் கலை முற்காலத்தில் இப்போதுபோல் முன்னேறியிருக்கவில்லை. சிகையின் கோரத்தை மறைக்க வேண்டித்தான் அக்காலத்து மன்னர்கள் மகுடம் அணிந்தார்கள்.**

''இந்தக் கலாட்டாவில் நான் சொல்ல வந்ததை மறந்துவிட்டேன், பார். நான் கூட்டி வருவதாகச் சொல்லவில்லை, அந்தக் கூத்தனூர் மிராசுதார்...'' என்று பரபரப்புடன் ஆரம்பித்தவர், தன் வாயைப் பாப்பா கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பதைக் கண்டதும், ''நீ போம்மா, போய் விளையாடு,'' என்றார்.

''ஆமாம். பச்சைக் குழந்தை பாருங்கள். சொப்பு வைத்து விளையாடட்டும். ஏண்டி நின்று கொண்டிருக்கிறாய்? உலை கொதித்துவிட்டது. வடித்து வை. போ,'' என்றாள் தாய்.

பாப்பா புருவங்களை நெறித்தபடி அதரங்களைக் குவித்துக்கொண்டு ஏதோ முணுமுணுத்தவாறு வேண்டாவெறுப்பாக அடுப்படிக்குள் நுழைந்தாள்.

தணிந்த குரலில், ''குழந்தை பேரில் ஏன் சள்புள்ளென்று விழுகிறாய்? அவளை வைத்துத்தானே நாம்...'' என்று தாமோதரம் ஆரம்பித்ததை அவர் மனைவி நடுவிலேயே வெட்டி விட்டாள்.

''அதெல்லாம் எனக்குத் தெரியும். அவரை எப்போது வரச் சொல்லியிருக்கிறீர்கள்?''

''எப்போது வரச் சொல்லியிருக்கிறேனா! இந்நேரம் வீட்டிலிருந்து புறப்பட்டுப் பாதி தூரம் வந்திருப்பான்.''

''ஐயையோ!'' என்று கூவிய மங்களம், ''சாயங்காலம் வருவார் என்றல்லவா ஓர் ஏற்பாடும் பண்ணாமல் இருந்துவிட்டேன். இப்போது என்ன செய்வது?'' என்று பதறியவள், சுவரில் மாட்டப்பட்டிருந்த கண்ணாடியருகே ஓடினாள்.

''ஏய் எருமை மாடு! பையன் பாப்பாவைப் பார்க்க வருகிறான். உன்னையல்ல!'' என்று சீறி விழுந்தார் தாமோதரம். ''அவளைக் கவனி. நான் கடைத் தெருவுக்குப் போய்விட்டு வருகிறேன்.''

பெண்ணின் கையைத் தரதரவென்று பிடித்திழுத்து வந்து உட்கார வைத்த மங்களம், அலங்கார பொருள்களைச் சேகரிக்கும் முயற்சியில் பம்பரமாய்ச் சுழல ஆரம்பித்துவிட்டாள்.

ஐம்பதடி சென்ற தாமோதரம் திரும்பி வந்து, வாசலில் நின்றபடியே தலையை நீட்டி, ''அந்தப் பசங்களில் யாரும் ஒரு மணி நேரத்துக்கு இந்தப் பக்கம் தலைகாட்டக் கூடாது என்று சொல்லி வை. இல்லாவிட்டால் முதுகுத் தோலை உரித்துவிடுவேன் என்று பயமுறுத்தி வை,'' என்று ஓர் எச்சரிக்கை விடுத்தார்.

வாசனை எண்ணெயை அள்ளிப் பாப்பாவின் கூந்தலில் வைத்தபடி, ''அப்படியே வரும்பொழுது நாயர் கடையில் இரண்டு டீ ஸ்பெஷலாகப் போடச் சொல்லி வாங்கி வாருங்கள். இதோ இருக்கிறது ஏனம்,'' என்று பாத்திரத்தைத் தள்ளிவிட்டாள் மங்களம்.

''அடடாடாடா! பக்கத்திலிருக்கும் டீக் கடைக்கு நீ போய்விட்டு வரக் கூடாதா?'' என்று அலுத்துக்கொண்டபடி பாத்திரத்தை எடுத்தவர், ''துலக்கியிருக்கும் அழகைப் பாரேன். சோற்றுப் பருக்கை கூடப் போகவில்லை,'' என்று சுட்டிக் காட்டியவர் அதை மறந்துவிட்டு, ''இங்கே கொஞ்சம் வாயேன்,'' என்று கண்களால் சாடை செய்தார்.

''என் காது ஒன்றும் செவிடில்லை. சும்மா, சொல்லுங்கள்,'' என்றாள் மங்களம், பின்னல் நுனியில் குஞ்சத்தை முடிந்தபடி.

''உஸ்ஸ்'' என்று ஓசையிட்டு, முதுகைக் காட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த பாப்பாவைக் குறிப்பிட்டார் தாமோதரம்.

மங்களம் எழுந்து வந்தாள். அவர் எச்சரித்தார்:

''நான் திரும்புவதற்குள் வந்தாலும் வந்துவிடுவான். இருக்கச் சொல்லி உபசாரம் செய். ஆனால் ஐந்து நிமிடத்தில் இந்த அலங்காரமெல்லாம் முடிந்துவிட வேண்டும், உம்? பார்ப்போம் உன் கைவரிசையை. தெரிந்ததா?''

தன்னை அவர் எச்சரிக்கத் தேவையில்லை என்று தொனிக்கும்படியாக, ''போய் உங்கள் வேலையைப் பாருங்கள்,'' என்று அலட்சியமாகக் கூறிவிட்டு உள்ளே நடந்தாள் மங்களம்.

தன் தாய் பொட்டுத் தகட்டைத் தன் நெற்றியில் வைத்துச் சிவப்புச் சாந்தால் நிரப்பும் பொழுது, "அம்மா! யார் வரப் போகிறுர்கள்?" என்ருள் பாப்பா.

"அசைக்காதே!" இந்த அதட்டலே பதில்.

தகட்டை எடுத்துவிட்டு மங்களம் தன் பெண்ணின் முகத்தை ஏறிட்டு நோக்கினுள். உதயசூரியன் பதிந்திருந்த விதம் அவளுக்குத் திருப்தி தந்தது.

பளிச்சென்றிருந்த ஒரு கிரேப் புடவையை எடுத்துக் கொடுத்து, "சீக்கிரம் கட்டிக்கொள்!" என்ற மங்களம் அடுத்தபடியாகத் தன் அலங்காரத்தைக் கவனிக்கலானுள்.

பாப்பா அந்த இடத்தைவிட்டு நகரவில்லை. "யார் வரப் போகிறுர்கள் என்று சொன்னுல்தான் புடவை மாற்றிக் கொள்வேன்," என்று அடம் பிடித்தாள்.

"இந்தச் செல்லத்தை எல்லாம் உன் அப்பாவிடம் வைத்துக் கொள். கன்னம் அரிக்கிறதோ? செம்பிவிடுவேன் செம்பி!" என்ற பயமுறுத்தல் பாப்பாவின் கண்களுக்குத் தீ வைத்தது.

மங்களம் ஒரு படி இறங்க வேண்டியதாகிவிட்டது. பெண்ணினுடைய பிடிவாதத்தின் திண்மையையோ அவளது கன்னத்தின் உறுதியையோ பரீட்சை பார்க்க இது சமயமில்லை என்று தீர்மானித்தவளாய், ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "அசடாக இருக்கிறுயே! ஒரு வயசுப் பெண்ணை யார் பார்க்க வருவார்கள்? உன் கழுத்தில் மூன்று முடிச்சை ஏற்றத்தான் இந்த ஏற்பாடெல்லாம்!" என்று பாப்பாவின் மோவாயைத் தொட்டு அசைத்தாள்.

மங்களத்தின் நா, பொய் சொல்லிச் சொல்லிச் சொரணை இழந்து விட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால், உண்மையைத் திரித்துக் கூறும்போது அவள் முகத்தில் துளிகூடச் சலனம் ஏற்படாமல் இருந்திருக்குமா?

"என் கண்ணல்ல? புடவை மாற்றிக்கொண்டு ஜில்லென்று வரவேண்டும். போ!" என்று அவள் கேட்டுக் கொண்டாள். குரலில் அன்பு ஒழுகிற்று. பெண்ணைப் பணம் காய்ச்சி மரமாக்கும் முயற்சியில் முதல் படி தாண்டியாகிவிட்ட பூரிப்பு அவளுக்கு உற்சாகத்தை ஊட்டிற்று.

மங்களம் சோப்புப் போட்டு முகம் கழுவிக்கொண்டிருக்கும் போதுதானு வாசலில் கார் வந்து நின்று, கதவு திறந்து சாத்தப்படும் ஓசை கேட்க வேண்டும்? ஐயையோ! பையன் வந்துவிட்டான் போலிருக்கிறதே! இனி எப்போது முகம் கழுவி, மா பூசி, பொட்டிட்டு, புடவை மாற்றி...சேச்சே சே! மங்களம் பதறினுள்.

இதற்குள், காரிலிருந்து இறங்கிய இளைஞன் சுற்றுமுற்றும் பார்த்தான். வண்டியைச் சூழ்ந்துகொண்டுவிட்ட தாமோதரத்தின் வாரிசுகளில் மூத்தவனை நோக்கி, "இது தாமோதரத்தின் வீடுதானே?" என்றுன்.

காரின் பளபளப்பில் தெரிந்த தன் உருவத்தைக் கண்டு கை காலை ஆட்டி ஆனந்தித்துக் கொண்டிருந்த குழந்தையும், மறுபுறத்தில் மறைவாக உட்கார்ந்து ஒருகூரிய கல்லால் வண்டியின் வண்ணப் பூச்சைப் பரிசோதித்துக் கொண்டிருந்த சந்தேகியும், பின் சக்கரத்தில் இணைத்திருந்த சிறு மூடியைக் கழற்றிவிட்டால் காற்று இறங்குகிறதா இல்லையா பார்போம் என்று திட்டமிட்டுக்கொண்டிருந்த போக்கிரியும், அவன் கேள்விக்கு உச்ச ஸ்தாயியில் பதிலிறுத்தனர்.

ஏழு இளம் தொண்டைகளிலிருந்து பல்வேறு சுருதிகளில் தொனித்த "ஆமாம்!" என்ற விடை, அந்த இளைஞனுக்கு உற்சாகம் ஊட்டிற்று.

சட்டை போடாமல் வெறும் ஜங்கியுடன் நின்று கொண்டிருந்த மாணிக்கத்தை வாரி எடுத்துக்கொண்டு, பையிலிருந்த பொட்டலம் ஒன்றைஅவிழ்த்து, புழுதி படிந்த ஒவ்வொரு கையிலும் ஒரு மிட்டாயை வைத்ததும், "எனக்கு! எனக்கு!" என்று எல்லோரும் அவனைப் பிய்க்க ஆரம்பித்துவிட்டார்கள்.

"எல்லோருக்கும் தருகிறேன். நிறைய இருக்கிறது," என்று சமாதானம் செய்தவாறு அவன் வீட்டுக் கதவைப் தட்டினுன்.

கதவு திறக்கப்பட்டது.

இளைஞன் தம்பித்து நின்றுன். குழியிலிருந்து விழிகள் தெறித்து விழுந்து விடுவனபோல் பிதுங்கின.

எதிரிலுள்ளது மனித உருவம்தான் என்பதில் சந்தேகமில்லை. பதினுறு வயது நிறைந்த அந்த நபரின் உடைகளையும், கருவிழிகளையும், பின்னலையும் பார்க்கப் பெண் போலிருந்தது. ஆனுல்...ஆனுல்...

அந்த மீசை' கன்னங் கரேலென்று, அடர்த்தியாக, மூக்கின் கீழே முறுக்கி விடப்பட்டிருந்த அந்த ஆண்மையின் சின்னமே அவன் திக்கு முக்காடியதற்குக் காரணம்.

அம்மா அந்தண்டை சென்றதும், மறுபடியும் பொய் மீசையை எடுத்துச் செருகிக்கொண்டு கண்ணுடியில் தன்னை 'அழகு' பார்த்துகொண்டிருந்த பாப்பா, யாரோ கதவைத் தட்டும் ஓசை கேட்டதும் தானிருக்கும் கோலத்தை மறந்து கதவைத் திறந்து விட்டாள். மாணிக்கத்தைத் தூக்கிய படி வாசலில் நின்று கொண்டிருந்த வாலிபன் தன்னைக் கண்டு ஏன் அப்படி விழிக்க வேண்டும் என்பது முதலில் அவளுக்கு புரியவில்லை.

குழந்தைகளுக்கும் இப்போதுதான் பாப்பாவின் வேடம் கண்ணில் பட்டது போலும். "ஊய்!" என்று எல்லோரும் கூச்சலிட்டு அவள் முகத்தைச் சுட்டிக் காட்டவே, அவளுக்கு அப்போதுதான் மீசையின் நினைவு வந்தது.

ஒரு கையால் அதை வெடுக்கென்று உருவி முதுகுக்குப் பின்னுல் மறைத்த படி, ஒன்றுமே நடவாததுபோல் அமைதியாக, "யார்? என்ன வேண்டும்?" என்று அவள் விசாரித்த விதம் அவனுடைய திகைப்பைப் போக்கி, அந்த இடத்தில் மகிழ்ச்சியை நாட்டிற்று.

"தாமோதரம் இருக்கிருரா?"

"இல்லை," என்று சொல்லி அவள் கதவைச் சாத்த முயன்றபோது, "பாப்பா! அவரை உள்ளே வந்து உட்காரச் சொல்லு, இதோ வந்துவிட்டேன்!" என்று மங்களத்தின் குரல் உள்ளிருந்து கேட்டது.

அதைத் தொடர்ந்து மங்களமேவந்து விட்டாள். பாப்பாவை இழுத்து அந்தண்டை தள்ளி, "வாருங்கள்! வாருங்கள்!" என்று வாயெல்லாம் பல்லாக வாலிபனை வரவேற்று, எரித்து விடுபவள்போல் நோக்கிக் குழந்தைப் பட்டாளத்தை விரட்டினுள். அனைத்தும் ஒரே விஞடியில் நடைபெற்ற நிகழ்ச்சிகள்.

மூலையில் கிடந்த நாற்காலி முன்னுக்குக் கொண்டுவரப்பட்டது. "நிற்கிறீர்களே? உட்காருங்கள். அவர் வெளியே போயிருக்கிருர். இதோ வந்துவிடுவார்," என்று உபசரித்து விட்டு, "தெருவிற்குப் போய் விளையாடுங்கள், போங்கள்!" என்று குழந்தைகளை நோக்கிக் கையை ஓங்கினுள் மங்களம்.

அதற்குள் அந்த இளைஞன், "பரவாயில்லை, இங்கேயே இருக்கட்டும். குழந்தைகள் என்ருல் எனக்கு ரொம்பப் பிடிக்கும்," என்ருன், நாற்காலியில் உட்கார்ந்தபடி. மங்களத்தின் கோபப் பார்வைகளைச் சட்டை செய்யாமல், அவளது படைப்புக்கள் அத்தனையும் உள்ளே புகுந்துவிட்டன.

"உன் பெயர் என்ன?" என்ருன் வந்தவன்.

"மாணிக்கம்," என்ருன் அவன் மடியிலிருந்த சிறுவன், கையிலிருந்த மிட்டாயை நக்கி அதன் பிசுபிசுப்பை முகமெங்கும் பரப்பியபடி.

"மாணிக்கம்! உன்னை எனக்குப் பிடிக்கிறது. என்னை உனக்குப் பிடிக்கிறதோ?"

பயல் கருமமே கண்ணுயிருந்தான்.

"சொல்ல மாட்டாய்?"

"இன்னெரு மிட்டாய் தருவாயா?"

"ஊம்."

"அப்போ உன்னையும் எனக்குப் பிடிக்கிறது."

"தராவிட்டால்?" என்ருன் இளைஞன்.

"பிடிக்காது."

கல கலவென்று நகைத்தாள் பாப்பா. அவன் அவளைத் திரும்பிப் பார்த்தான். கள்ளமற்ற அந்தச் சிரிப்பு அவன் நெஞ்சைக் கவ்வி விட்டது என்ற உண்மையைச் சமையலறைக் கதவருகே நின்ற மங்களம் புரிந்துகொண்டபோது, அவள் பெருமிதத்தால் பூரித்தாள். மிராசுதாரைப் பற்றி தாமோதரம் ஏற்கெனவே அவளிடம் சொல்லியிருந்த விவரங்களை நினைத்துப் பார்க்கையில், வெற்றி இருமடங்காக இனித்தது. தேனுக்காக ஏங்கும் வண்டானுலும், பையன் கண்ட கண்ட மலரில் எல்லாம் உட்காருவதில்லை என்றும், பரம ரசிகன் என்றும், ஒரு முறை அவர்கள் வீட்டுக்கு விஜயம் செய்ய அவனைச் சம்மதிக்கவைப்பதற்குள் தனக்குப் போதும் போதுமென்று ஆகிவிட்டது என்றும் அவர் சொல்லியிருந்தார். வலையை வீசியதும் வீசாததுமாக மீன் சிக்கிவிட்டதைக் கண்டதும், மங்களத்துக்குத் தன் வயதில் பத்து குறைந்துவிட்டாற் போல் தோன்றிற்று.

தொல்லைகளாக இந்நேரம் காட்சியளித்த குழந்தைகள் இப்போது

அரிய கருவிகளாக அவனுக்குத் தென்பட்டன. மிராசுதாருக்கும் பாப்பாவுக்கும் பொதுவாகச் சின்னஞ்சிறுசுகள் மீது பிரியம் இருப்பதையும், இருவரையும் இணைக்கும் பாலமாக அவர்கள் உபயோகப்படுவார்கள் என்பதையும் ஊகிக்க அவனுக்கு அதிக நேரம் ஆகவில்லை.

''எல்லோரும் அவர் மேல் போய் விழக்கூடாது. வட்டமாகத் தரையில் உட்கார்ந்து, ஆளுக்கொரு பாட்டுப் பாடுங்கள்,'' என்றான்.

''கமலி! நீ 'அம்மா பெண்ணே ராமக்கா' பாடு!'' என்று கட்டளையிட்டுக்கொண்டு, கும்பலில் வந்து சேர்ந்து கொண்டாள் பாப்பா.

''முதலில் நீ பாடு,'' என்றான் இளைஞன்.

அவள் புன்னகை செய்தபடி, ''எனக்குப் பாட்டே வராது,'' என்றாள்.

''பொய்! பாப்பா நன்றாகப் பாடும்!'' என்று ராஜாபாதர் காட்டிக் கொடுத்தான்.

''ஏமாற்றவா பார்க்கிறாய்? பாடு,'' என்றான் விருந்தினன்.

''நீங்கள் முதலில் பாடுங்கள். அப்புறம் நான் பாடுகிறேன்,'' என்று அவள் தட்டைத் திருப்பியதும் ''நானா! நான் பக்க வாத்தியம் இல்லாமல் குரலைக் காட்டுவதில்லையே!'' என்று அவன் குறும்பாகப் பேசினான்.

''அதற்கு நான் ஏற்பாடு செய்கின்றேன்,'' என்று எழுந்த பாப்பா, ஒரு தகர டப்பா, ஓர் ஊதகங்குழல், ஒரு பானை இவற்றை அள்ளி வந்து, கீழே உட்கார்ந்திருந்தவர்களிடம் வினியோகித்தாள்.

வயலின் இல்லாத குறையை ராஜாபாதரின் தொண்டை ஈடு செய்ய, ''பாடுங்கள்! பாடுங்கள்!'' என்ற கோஷம் அலை அலையாக எழுந்தது.

தான் ஒதுங்கியிருக்கும் வரை நல்லது என்று முடிவு செய்த மங்களம், வாசலுக்குப் போனபோது, கைக்கொரு தேனீர் கிளாஸை ஏந்திக்கொண்டு, கக்கத்தில் சில பொட்டலங்களை அடக்கியபடி வந்து சேர்ந்தார் தாமோதரம்.

காரைக் கண்டதும் அவர் திகைப்பதை மங்களம் கவனிக்கவில்லை.

''இப்போது டீயும் வேண்டாம் மண்ணும் வேண்டாம். இங்கேயே நின்று கேளுங்கள்,'' என்ற அவள் தடையுத்தரவைத் தாமோதரத்தால் மீறமுடியவில்லை.

குதூகலத்தில் மிதக்கும் பிஞ்சுகளின் மத்தியில் உட்கார்ந்திருந்த வாலிபன், தடபுடலாக ஆயத்தம் செய்துவிட்டு வாயைத் திறந்தானோ இல்லையோ, இசைக்கும் அவனுக்கும் உள்ள விரோதம் தெள்ளத் தெளியத் தெரிந்துவிட்டது. பாப்பா விழுந்து விழுந்து சிரிப்பதைக் கண்ட அவன், தன் குரலை வேண்டுமென்றே மேலும் கோரமாக்கிக் கொண்டு கும்மாளத்துக்குத் தூபம் போட்டான்.

தாமோதரத்தின் முகத்தை அவர் மனைவி முதன் முறையாகக் கவனித்தாள்.

''என்ன அது? ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்?''

தாமோதரத்தின் சந்தேகம் வலுத்ததுபோலும். அது கூத்தனூர்ப் பையனின் குரல் அல்லவே! தலைக் கனம் நிறைந்த அவன், குழந்தைகளோடு கூடிக்கொண்டு இப்படிக் காட்டுத்தனமாகக் கத்தக்கூடியவன் அல்லவே.

ஐயம் மேலிட, கொண்டுவந்த பொருள்களை மங்களத்திடம் கொடுத்துவிட்டு உள்ளே எட்டிப் பார்த்தார். அவர் முகம் கறுத்தது. அவர் நினைத்தது சரியாகப் போய்விட்டது.

கோபத்தால் உதடுகள் துடிக்க, ''ஏய் எருமை மாடு! இவனையா மிராசுதார் என்று நினைத்துக்கொண்டு சொகுசாகச் சாய்ந்து கொண்டிருக்கிறாய்?'' என்று அவள் காதுக்குள் சீறினார்.

''பின்னே யாராம்?''

''நமது ரத்தினம் இல்லை? அவனுடைய தம்பி இவன். கோவிந்தன் இவன் பெயர்!''

சின்ன விஷயம்தான்

# சின்ன விஷயம்தான்

1. மார்ஷல் மாலிநோவிஸ்கி.

2. கஃபா. இதுவே 'ஆதி மஸ்ஜித்' எனக் கருதப்படுகிறது.

3. தெரியாது.

4. பஞ்சமும் வறுமையும் கிடைக்கும்! அந்தச் சொல்லுக்கு அதுவே பொருள்.

5. 1889-ஆம் ஆண்டு. அமெரிக்காவில்.

6. 25.

7. அங்கேயுள்ள இடைவெளியை நீக்கி, இரண்டு சொற்களையும் இணைத்துப் போடவும் என்று பொருள்.

8. ஆல்பர்ட் காமஸ் என்ற பிரெஞ்சு நாவலாசிரியர்.

9. கொழுக்கட்டை வெந்தால் சரி.''

10. ஐக்கிய நாடுகள் கல்வி, சமூக, கலாசார ஸ்தாபனம். (யுனைடெட் நேஷன்ஸ் எஜுகேஷனல், சோஷல் அண்ட் கல்சுரல் ஆர்கனைசேஷன்.)

11. துருக்கி.

12. 17 அங்குலம், 13½ அங்குலம்.

13. (அ) நண்டு.

14. 37 ஆண்டுகள்.

15. க்யூபிட்.

16. கோயம்புத்தூர் மாவட்டத்தில். அட்டப்பாடி மலையில் இவர்களது குடியிருப்புக்கள் நிறைய இருக்கின்றன.

17. ஒன்றே.

18. முடியும். உறக்க நிலையிலிருந்தாலும், தம்மைத் தாமே காப்பாற்றிக் கொள்ளும் அறிவு அவர்களுக்கு இருக்கும்.

19. ஒரு முதன்மை நீதிபதியைத் தவிர, ஏழு நீதிபதிகள்.

20. கடலின் கீழும் இருக்கும்.

# பத்து

மங்களம் விழித்தாள்.

"அப்படியானால் இவன் நீங்கள் சொன்ன மிராசுதார் இல்லையா?"

சிரிக்கும்போது ஒருவித களையையும், சினம் கொள்ளும்போது சற்றுச் சிவப்பையும் பெறும் பழக்கமுடைய அவள் முகம், அசடு வழியும்போது கோரமாகத் தோற்றமளித்தது.

"உன் தலைமண்டை!" என்று குதித்தார் தாமோதரம், திரும்பவும் வாசலுக்கு வந்தவராய். "இவன் மூஞ்சியைப் பார்த்தால் மிராசுதார் மாதிரியா இருக்கிறது? வெறும் பயல்! இவனை ஏன் உள்ளே விட்டாய்?"

"ரொம்ப ஒழுங்குதான்!" என்று அவள் பல்லைக் கடித்த விதத்தில், அடுத்த சில நிமிடங்களுக்கு யார் கை ஓங்கியிருக்கும் என்பது சூசகமாகத் தெரிந்தது. "'நான் திரும்புவதற்குள் வந்தாலும் வந்துவிடுவான். உள்ளே உட்காரவைத்து உபசாரம் பண்ணு,' என்று படித்துப் படித்துச் சொல்லிவிட்டுப் போனீர்களே! அது நினைவு இல்லையாக்கும்!"

கிளாஸ்களிலிருந்த தேனீரைக் கோபத்துடன் கீழேகொட்டினார் தாமோதரம். மண்ணும் தேனீரும் கலந்த துளிகள் தாவியெழுந்து தன் உடைகளைக் கறைப்படுத்தி விட்டதையும் பொருட்படுத்தாமல், "எருமை மாடு! எருமை மாடு!" என்று இரண்டு முறை அழைப்பதற்குள் அவர் தொண்டை அடைத்துக் கொண்டுவிட்டது. "அதற்காகத் தெருவில் போகிறவனை எல்லாமா கூப்பிட்டு உபசாரம் செய்யச் சொன்னேன்?"

"தெருவில் போகிறவன் எல்லாம் காரில் வந்து இறங்கிக் கதவைத் தட்டுவானாக்கும்?"

"பழைய வாசனை எங்கே போகும்? தட்டுகிறவனுக்கெல்லாம் கதவைத் திறந்து பழக்கம். காரிலே வந்திருக்கிறான் என்று தெரிந்தவுடன் பல்லைக் காட்டிக்கொண்டு இளித்திருப்பாய்..."

"இதோ பாருங்கள்!"

அவர் பார்த்தார்.

நாசி விடைக்க, கண்களிரண்டும் குத்தூசிகளாகக் குறுக, அவளது அரை ரூபாய் அகலப் பொட்டும், சரியாகப் படியாமலிருந்த தலைமயிரும், இடுப்பில் கை வைக்கப்பட்டிருந்த தோரணையும் அவரது காட்டுத்தனமான கோபத்தைக் கடிவாளமிட்டு நிறுத்தின போலும்.

சடாரென்று அவர் முகத்தில் ஒரு மாறுதல். ஆவேசம் மறைந்து அந்த இடத்தில் அச்சமும் வெறுப்பும் பதுங்கி நின்றன.

மங்களமும் இறங்கி வந்தாள். கணவன் காதுக்குள், "பாப்பா அதிர்ஷ்டக்காரி," என்றாள்.

எப்படி என்று தாமோ தரத்துக்கு விளங்கவில்லை.

"எடுத்த எடுப்பிலேயே அவளுக்கு இரண்டு பணக் காரர்களின் சிநேகம் கிடைத்திருக்கிறது அல் லவா?"

இரண்டு பணக்காரர்க ளின் சிநேகமாவது?

மங்களத்துக்குக் குதூ கலம். "ரத்தினத்தின் தம் பிதானே கோவிந்தன்?"

"ஆமாம்."

"அப்படியானால் ரத்தி னத்துக்கு ஈடாக இவ னுக்கும் குடும்பச் சொத் தில் ஒரு பங்கு இருக்கத் தானே வேண்டும்? 'வெறும் பயல்' என்றீர் களே, அது எப்படி?"

தனது பிழையையும் மனைவியின் புத்திசாலித்த னத்தையும் தாமோதரம் ஒரே சமயத்தில் உணர்ந்து கொண்டார். "உண்மை தான். பையன் விளையாட் டுத்தனமாகச் சுற்றுகிறான் என்பதை வைத்து நான் கணக்கைத் தப்பாகப் போட்டு விட்டேன்." அவளுடைய உற்சாகம் அவருக்கும் தொத்திக் கொண்டு விட்டது.

"பார்த்தமாத்திரத்திலே ஆசாமி சொக்கிப் போய் விட்டான். வாருங்கள், காட்டுகிறேன்," என்று அவர் கையைப் பிடித்து மங்களம் இழுத்தாள்.

ஆனால் அந்த ஆனந்தக் காட்சியை அவர் கண்டு களிக்கக் கூத்தனூர் மிராசுதார் அனுமதிக்கவில்லை. அவர் மீது ஏற்றி விடுபவன் போல் தன் காரை ஓட்டி வந்து கிறீச்சென்று நிறுத் திக் காது கிழியுமாறு ஹாரனை அழுத்தினான்.

தாமோதரத்துக்குத் திக்கென்றது. தூண்டிலை வீசிய முதல் முறையே இரண்டு கொழுத்த மீன் கள் சிக்கிவிட்டன என்று



தன் மனைவி தீட்டிய கற்பனையில் மூழ்கி யிருந்தவர்' அடுத் தாற்போல் தன்னை எதிர்நோக்கவிருக் கும் நெருக்கடியை மறந்துவிட்டாரே!

கைகளைக் கூப்பி, காதுக்குக் காது வாயை விரித்து, "வர வேண்டும், வர வேண்டும்," என்று வினயமாகக் கூறிய படி காரை நோக்கி நடந்தபோது, தர்ம சங்கடத்தினின்று தப்பும் வழியுண்டா என்று மூளை அசுர வேகத்தில் துருவிக் கொண்டிருந்தது. வீட்டிலிருக்கும் வானர சேனையை

## விடை

*அடிப்படையான சுதந்திரம் பறிபோனால் இந்திய அரசியல் சட்டம் 226-ஆவது ஷரத்துப்படி உயர்நீதி மன்றங்களுக்கும், 32-ஆவது ஷரத்துப்படி சுப்ரீம்கோர்ட்டிற்கும் 'ரிட்' என்று சொல்லப்படுகின்ற அடிப்படை உரிமையைக் கோரிப் பெறலாம். கல்லூரிகளில் ஒழுக்கத்தை வற்புறுத்த வேண்டிக் கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப் படுகின்றன. அவை எல்லாம் மாணவர்களின் அடிப்படைச் சுதந்திரத்தைப் பறிப்பனவாக இருந்தால் 'சிண்டிகேட்' என்று சொல்லப் படுகின்ற கல்லூரியின் அதிகார சபைக்கே தெரிவிக்க வேண்டும். உயர் நீதி மன்றங்கள் மேற்கூறிய வழக்குகளை விசாரித்து 'ரிட்' அளிப்பது முறையற்றதாகும்.*

*[கல்கத்தா உயர் நீதிமன்றம் அளித்த தீர்ப்பு ஒன்றை (ஹ. ஐ. ஆர். 1952. கல். 238) அடிப்படையாகக் கொண்டது.]*

வீரட்டிவிட்டுப் பாப்பாவுடன் மிராசுதார் பத்து நிமிடமேனும் தனித்திருக்க வேண்டுமென்று அவர் ஆரம்பத்தில் செய்த ஏற்பாடுகள் எங்கே? வீடு ஒரு தெருக்கூத்து மேடையாக மாறிவிட்ட அலங்கோலம் எங்கே?

கூத்தனூர்ப் பையன் காரைவிட்டு இறங்கினான். வஞ்சமின்றி வளர்ந்திருந்த வளப்பமான உடலையும் அந்தச் செழுமையான நிறத்தையும் கண்டா மங்களத்தின் உள்ளம் அப்படிக் கும்மியடிக்க ஆரம்பித்தது? இல்லை. மென்மையின் இலக்கணமாக விளங்கிய அந்த சில்க் ஜிப்பாவும், தடித்த கழுத்தை வலம் வந்த தங்கச் சங்கிலியும், மணிக்கட்டிலிருந்து தொங்கிய வைர ஆபரணமும், பாப்பாவின் சார்பாக அவளை மதி மயங்கச் செய்துவிட்டன.

"என்ன தாமோதரம், உன்னை ரொம்ப நேரம் காக்க வைத்துவிட்டேனோ?" என்று வினவினான் மிராசுதார், மங்களமிருந்த திக்கில் நோட்டம் விட்டபடி. அத்தர் வாசனை கம்மென்று வீசியது.

மங்களம் தலையைக் குனிந்துகொண்டு "தெருவில் நிற்க வைத்துப் பேசிக்கொண்டிருக்கிறீர்களே? உள்ளே அழைத்து வாருங்கள்," என்றாள்.

தாமோதரத்தின் தடுமாற்றம் வினாடிக்கு வினாடி அதிகமாயிற்று. வாசலில் மற்றொரு கார் நிற்பதைக் கண்டதுமே ஒருகால் மிராசுதாரின் மனம் கோணியிருக்கக்கூடும். அப்போது கோணியிராவிடில், பாப்பாவுடன் வேறொருவன் கொட்டமடிப்பதைப் பார்த்த பிறகுமா சும்மா இருக்கப் போகிறது? அவன் ஓர் ஐந்து நிமிடம் தாமதித்து வந்திருந்தால் ஏதாவது ஏற்பாடு பண்ணியிருக்கலாம். இப்போது எப்படிச் சமாளிப்பது?

வியர்க்க விறுவிறுக்க அவர் மூளையைக் குழப்பிக்கொண்டிருந்த சமயத்தில் உள்ளேயிருந்து கேட்ட ஆரவாரம் சற்று ஒடுங்கிற்று.

"யாரோ வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது," என்று அறிவித்தாள் பாப்பா, தனக்கு நேரே திறந்திருந்த சாளரத்தின் வழியாக வாசலில் நடப்பதைக் கவனித்து.

மடியில் கவிழ்த்திருந்த பானையை எடுத்து ராஜாபாதரிடம் கொடுத்துவிட்டு, "யார் அது?" என்றான் கோவிந்தன்.

"அப்பாதான் யாரையோ அழைத்துக்கொண்டு வருகிறார்," என்றாள் அவள், நெற்றி வியர்வையைச் சேலைத் தலைப்பால் துடைத்து, அம்மா அக்கறையுடன் இட்டிருந்த பொட்டில் பாதியை நாசம் செய்தபடி.

கோவிந்தன் எட்டிப் பார்த்தான்.

பிறகு முகம் மலர, "அடே! கனக சபையா? நீ எப்படியப்பா இங்கே வந்தாய்?" என்று மகிழ்ச்சியுடன் முன்னே நடந்து, வந்தவனை அணைத்துக் கொண்டுவிட்டான். "எப்படிப் பருத்து விட்டாய்! இத்தனை அகலமாகக் கையை விரித்தேன், பாதி ஆள்தானே அகப்பட்டிருக்கிறாய்!" என்று அவன் வியந்தபோது, "இவர்களை உனக்கு முன்பே தெரியுமா, கோவிந்தா?" என்று ஆவலுடன் கேட்டார் தாமோதரம். பிறகு, கோவிந்தன் இப்போதுதான் முதல் தடவையாக வந்திருக்கிறான் என்பதை விளக்க, "ஆமாம், எங்கள் வீட்டை எப்படிக் கண்டுபிடித்தாய்?" என்று ஒரு கேள்வியும் போட்டுவைத்தார்.

அவரது கேள்வியையும், "அண்ணாதான் விவரமாகச் சொல்லியனுப்பி

...ர!'' என்ற இவன் பதிலேயும் ஒரு காதில் வாங்கிக்கொண்ட மிராசுதார் குழந்தைகளுக்கு மத்தியில் நின்று கொண்டிருந்த பாப்பாவை, எடை போட்டுப் பழக்கப்பட்ட கண்களுடன் பரிசோதித்தான்.

கனகசபைக்குப் பின்னுல் நின்று கொண்டிருந்த மங்களம் மகளேக் கவனித்தாள். ஓடிந்து வளேந்து ஓடிப் பதுங்க வேண்டிய சமயத்தில், அப்பாவுடன் பேசிக் கொண்டிருப்பவர்களே வேடிக்கை பார்த்தபடி உருவழிந்த பொட்டும் வியர்வை ஒழுகும் முகமுமாக நின்ற பாப்பாவை நோக்கி ஏதோ ஜாடை காட்டினுள்.

அதைப் புரிந்து கொள்ளாமல் நின்றதோடு, ''என்னம்மா சொல்கிருய்? ஒன்றும் புரியவில்லே,'' என்ருள் பாப்பா. இசைக் கச்சேரி, இடையில் நின்றுபோன வருத்தம் அவளுக்கு.

''நானு? நான் ஒன்றும் சொல்லவில்லேயே!'' என்று பின்வாங்கினுள் தாய். பிறகு தன் கணவனின் விலாவை முழங்கையால் உறைக்கிருற்போல் ஓர் இடி இடித்து, ''ஊ?'' என்று கிசுகிசுத்தாள்.

தனது கடமைகளின் நினேவு அப்போதுதான்வந்தது தாமோதரத்துக்கு. இரண்டாவது நாற்காலி இல்லாததால் பாயை விரித்து விருந்தினர்களே உட்கார வைத்தார். ராஜாபாதரை ஒரு பக்கமாக அழைத்து, கிளாஸ்களே எடுத்துப்போய் இரண்டு தேனீர் வாங்கிவரச் சொல்லிவிட்டு அவர் திரும்பியபோது, பாப்பாவைப் பாடுமாறு அவள் தாய் வற்புறுத்துவதையும், அவள் சண்டித்தனம் செய்வதையும் கண்டார்.

என்ன காரணத்தாலோ தெரியவில்லே, பாப்பா கடைசிவரை வாயைத் திறக்க மறுத்துவிட்டாள்.

''குணம் கெட்ட கழுதை! இரு சொல்கிறேன். கரண்டியைக் காய வைத்து இரண்டு இழுப்பு இழுக்கவில்லே என்ருல் என் பெயர் மங்களம் இல்லே,'' என்று உள்ளுக்குள் கறுவினுள் மங்களம்.

''நமக்கு நீ வாடா!'' என்று மாணிக்கத்தை அழைத்தான் கோவிந்தன். ''இந்த மாமாவுக்கு ஒரு பாட்டுப் பாடிக் காண்பி!''

''நேரமாயிற்று. நாம் புறப்படலாமே?'' என்று எழுந்தான் கனகசபை.

''தயவு செய்து ஒரு நிமிடம் இருங்கள். டீ வந்துவிடட்டும்,'' என்று கெஞ்சினுர் தாமோதரம்.

''டீக்கு என்ன ஐயா. இன்னெரு நாள் வந்து சாப்பிட்டுக்கொண்டால் போகிறது,'' என்று கோவிந்தனேயும் தன்னுடன் அழைத்தான் அவன்.

தாமோதரமும் மங்களமும் மிராசுதாரை வழியனுப்ப வாசலுக்குச் சென்றனர்.

குழந்தைகள் எல்லோரும் கோவிந்தனேச் சூழ்ந்து கொண்டுவிட்டனர், கனகசபையை அவன் பின்தொடரவொட்டாமல்.

''குண்டு மாமா போகட்டும். நீ இரு!'' என்று பிடிவாதம் செய்தான் மாணிக்கம்.

''அட படவா! குண்டு மாமா காதிலே விழுந்தால் உன்னே இரண்டு பண்ணிவிடுவாரடா!'' என்று உரக்க அவன் கன்னத்தில் முத்தமிட்டுப் பாப்பாவைப் பார்த்தான் கோவிந்தன்.

குழந்தை கன்னத்தில் அவன் இட்ட முத்தம், கன்னியின் கன்னத்தைச் சிவக்க வைத்துவிட்டது.

அவன் வாசலுக்கு வந்தபோது, ''ரத்தினம் ஏதும் சொல்லி அனுப்பினுளு?'' என்ருர் தாமோதரம்.

''குழந்தைகளுக்குத் தின்பண்டம் வாங்கிக் கொடுத்துவிட்டு, எல்லாம் சௌகரியமாக இருக்கிறதா என்று பார்த்து வரச் சொன்னுர். விசேஷம் ஒன்றுமில்லே,'' என்று கோவிந்தன் விளக்கியபோது, கனகசபை கேட்டான். ''டிரைவரைக் கூட்டி வரக் கூடாதோ?''

''கேலி பண்ணுகிருயா?'' என்ருன் கோவிந்தன், நண்பனின் காதை விளேயாட்டாகத் திருகியபடி. ''தஞ்சாவூர் மகாராஜாவே செல்ப் டிரைவிங்கில் இறங்கிவிட்டாய்! ஓசியிலே கார் வாங்கி ஓட்டுகிற நான் டிரைவருக்கு எங்கே போவேன்?''

மகாராஜாவாக இருந்து சென்னேயில் என்ன லாபம்? பட்டிக்காட்டான் பருப்பு பட்டணக் கரையில் வேகவில்லேயே?''

''அப்படி என்ன ஆகவேண்டும் உனக்கு?''

கனகசபை, மற்றவனுடைய கழுத்தில் கை வைத்து, தலேயைத் தாழச் செய்து, காதிற்குள் ஏதோ ஓதினுன்.

தரையில் பார்வையைப் பதித்துச் சற்றுநேரம் யோசித்தான் கோவிந்தன்



''ஏய் குப்பு, நான்கும் நான்கும் எவ்வளவு?''

''ஸார்! என்னைக் கேட்காதீர்கள்! நான் எட்டு என்று தப்பாய்ச் சொல்லுவேன், நீங்கள் அப்புறம் என்னை அடிப்பீர்கள்.''

---

''எத்தனை பாட்டில் வேண்டும்?''

''ஒன்று போதும், ஏராளம்.''

''சரி, புறப்படு. என்னோடு வா.''

கனகசபை அகமகிழ்ந்தான். ''உன் பெர்மிட்டிலேயே வாங்கித் தரப்போகிறாயா?''

''எனக்குப் பெர்மிட்டுமில்லை மண்ணுமில்லை. நான் அதைத் தொடுவதுகூடக் கிடையாது. ஆனால் உன்மாதிரி சிநேகிதர்கள் பலர் உண்டு. புறப்படு. முதலில் இந்தக் காரைக் கொண்டுபோய்த் தள்ளிவிட்டு, உன் வண்டியில் காரியத்தை முடித்துக்கொள்வோம்.''

இரண்டு வண்டிகளும் ஒரே சமயத்தில் நகர ஆரம்பித்தன.

''எப்படி நினைக்கிறீர்கள்?'' என்றாள் மங்களம்.

''இன்னொருதரம் வருகிறேன் என்று சொன்னாரே, காதில் விழவில்லையா?'' என்று சிரித்தார் தாமோதரம்.

இதற்குள், தேநீருடன் ராஜாபாதர் திரும்பி வந்தான்.

''இந்நேரம் கழித்து வாங்கி வருகிறாயே, மக்கு!'' என்றார் தந்தை.

''போகிறது நீங்கள் சாப்பிடுங்கள்.'' இது மனைவியின் உபசாரம்.

''எனக்கு! எனக்கு!'' இது குழந்தைகளின் கூச்சல்.

''ஒருத்தருக்கும் கிடையாது!'' என்று அத்தனை பேரையும்—மாணிக்கம் உள்பட—விரட்டினாள் மங்களம். பிறகு எஞ்சியிருந்த கிளாஸை எடுத்து உறிஞ்சப் போனாள்.

''ஏய், எருமை மாடு' பாப்பாவுக்குக் கொஞ்சம் கொடுத்துவிட்டு, அப்புறம் நீ மொக்கலாம்''

''ஆமாம்' அவள் நடந்துகொண்ட லட்சணத்துக்கு டீ ஒன்றுதான் குறைவு!''

''ஏன், அவள் நடந்துகொண்டதில் என்ன குறைச்சலாம்?''

''சரி, சும்மா தொண தொணக்காதீர்கள். டீ ஆறிப்போகிறது,'' என்று சொல்லி, மடக் மடக்கென்று கிளாஸைக் காலியாக்கினாள் மங்களம்.

''நானும் வரட்டுமா செந்தில்?''

செந்தில் பதிலே சொல்லவில்லை. மேஜைமீதிருந்த காகிதக் கற்றையைத் தோல் பைக்குள் திணித்து மூடியவன், அலமாரியைத் திறந்து, இரட்டை இரட்டையாகத் தொங்கிக்கொண்டிருந்த பலவித ஆடைகளிலிருந்து ஒரு கோட்டையும் காற் சட்டையையும் தேர்ந்தெடுத்து, குளியலறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டான்.

அவன் வெளியே வரும்வரை ரத்தினம் அந்த இடத்தைவிட்டு நகரவே இல்லை.

''அவர் உன்னைப்பற்றித் தவறாக நினைத்துக் கொண்டுவிடக் கூடாது பார்! நடந்ததை நானே அவரிடம் சொல்கிறேன். பாவம், வரவேற்க ஒருவரும் வராததைக் கண்டு எவ்வளவு ஏமாற்றமாக இருந்ததோ? எத்தனை சிரமப்பட்டாரோ? பிழை முழுவதும் என்னுடையது என்பதை விளக்கி அவரிடம் மன்னிப்புக் கேட்காத வரை ஆறுதல் ஏற்படாது.''

கழற்றி வைத்துவிட்டுப் போன விளிம்பில்லாத கண்ணாடியை மறுபடியும் அணிந்துகொண்ட செந்தில், அழகாக மடித்த கைக் குட்டையைக் கோட்டுப் பையில் நாசுக்காகச் செருகியபடி, தோல் பையை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

மாடிப் படிகளில் தம்பியும் அண்ணனும் ஒருவர் பின் ஒருவராக இறங்கிய போது, அகந்தையும், அடக்கமும் வடிவெடுத்து வந்தாற்போன்று தோன்றிற்று, போர்டிகோவில் காத்துக்கொண்டிருந்த டிரைவருக்கு.

வண்டியோட்டியிடம், ''நேரே ஆபீசுக்கு வந்துவிடு,'' என்றான் செந்தில், முன்னே உள்ள ஆசனத்தில் உட்கார்ந்து காரைக் கிளப்பியவாறு.

வட்டப் புல்வெளியைக் கடந்து, வாயிலைத் தாண்டிச் சாலையில் திரும்பி மறைந்தது வண்டி.

ரத்தினம் வராந்தாவிலேயே நின்று கொண்டிருந்தான்.

செந்தில் வேகமாகப் போய்க்கொண்டிருந்தான். அண்ணாவின் மீது அவனுக்கு அடங்காக் கோபம். ரத்தினம் எவ்வளவு பொறுப்பற்ற முறையில் நடந்துகொண்டு விட்டான்? செந்தில் போட்டிருந்த திட்டத்தைத் தகர்க்கவேண்டும் என்ற எண்ணம் இல்லாவிட்டால், முந்தின நாள் மாலை புதுடில்லிக்காரரை வரவேற்பதற்காக அனுப்பப்பட்டவன், அவரைச் சந்திக்காமல் வந்திருப்பானா? செந்தில் சந்தேகப்பட்டது சரியே என்பதற்கு இந்தச் சம்பவத்தைக் காட்டிலும் என்ன அத்தாட்சி வேண்டும்? ரத்தினத்துக்குப் பொறாமை. அக்கினிக் குழம்பாக அது அவன் குடலை எரித்துக்கொண்டிருந்தது. நிர்வாக மாற்றம் ஏற்பட்ட மாத்திரத்தில், தொழில் இவ்வளவு விரைவாக முன்னேறும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. புத்தகங்களைக் கட்டிக்கொண்டு அழுவதற்குத்தான் 'லாயக்கு' என்று அவன் செந்திலைப்பற்றிக் கொண்டிருந்த கருத்திற்கு எத்தகைய அதிர்ச்சி! விட்டுப் பிடித்தால் எல்லாம் சரியாகப் போய்விடும் என்று நினைத்திருந்த அவனுக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம்! ஆயிரக் கணக்கில் லாபம் பார்த்த கர்வம், செந்தில் பதினாயிரக் கணக்கில் சம்பாதிப்பதைக் கண்டு பொருமிற்று.

''அந்த ஆத்திரத்தின்தான் அண்ணா இப்படிச் செய்திருக்கிறார்,'' என்று செந்தில் பத்தாவது தடவையாகத் தனக்குள் சொல்லிக்கொண்டான். எதிர்பாராமல் யாரையோ சிற்றுண்டிச் சாலையில் சந்தித்ததாகவும், பேச்சு சுவாரஸ்யத்தில் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸின் வருகையை மறந்து போய்விட்டதாகவும் ரத்தினம் அளந்த கதையை அவன் நம்பத் தயாராக இல்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். இந்த அண்ணா, வழிநெடுக முட்களைப் பரப்பி வைத்தாலும் சரி; அடிக்கு அடி குறுக்குச் சுவர் எழுப்பினாலும் சரி; செந்திலின் முன்னேற்றத்தைத் தடை செய்ய முடியாது. புதுடில்லிக்காரர் விஷயத்தையே எடுத்துக் கொள்ளலாமே? அவரிடத்தில் செந்திலைப் பற்றி அவநம்பிக்கையோ அதிருப்தியோ விதைத்து விட்டதாக அண்ணா கருதினால், அவரைப்போல் அப்பாவி யாரும் இருக்க முடியாது. ஒட்டிக்கு இரட்டியாக வேலை செய்து, அந்த நபருக்கு வேண்டியதை எல்லாம் உரிய இடத்தில் தகுந்த சமயத்தில் கிடைக்கப் பண்ணி, ஆளை அவன் பைக்குள் போட்டுக்கொண்டுவிட்ட விவரம் ரத்தினத்துக்கு எங்கே தெரியப் போகிறது?

செந்தில் தனக்குள் சிரித்தான்.

நடைபாதையில் நின்ற ஒரு மனிதர் உரிமையோடு கையை ஆட்டி அவனை நிறுத்தினார்.

கதவைத் திறந்து அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, ''நான் ஒரு ஸி. ஐ. டி. அதிகாரி. முன்னால் போகிறதே கார், அதைத் தயவுசெய்து துரத்துங்கள். சீக்கிரம்!'' என்றார்.

''ஏன்?'' என்றான் செந்தில்.

''மதுவிலக்குச் சட்டத்தின் கீழ் அவர்களைப்பிடிக்க வேண்டும்!''

ஸ்டியரைப் போட்டபடி, அந்தக் காரைக் கவனித்தான் செந்தில்.

தஞ்சையைச் சேர்ந்த வண்டி அது.

### அடியினிது !



''பள்ளிக்கூடம் போகிறேன் என்று ஏமாற்றிவிட்டுச் சினிமாவுக்கா போனாய்? உன்னைக் கொன்றுவிடுகிறேன் பார். உள்ளே போய்ச் சாப்பிடு. அம்மா என்னவோ செய்திருக்கிறாள்.''

# சின்ன விஷயம்தான்

சின்ன விஷயம்தான்

சின்ன விஷயம்தான்

1. திருமறைக்காடு.

2. தீயினாற் சுட்ட புண் உள்ளாறும்.

3. சரி.

4. பொருந்தாது. பெரியவர்கள் (பெருமையுடையவர்கள்) வரலாற்றைக் கூறுவதாலேயே அப்பெயர் ஏற்பட்டது. (பெரியர்+புராணம்=பெரிய புராணம்.)

5. (அ) ஆப்தெல்மாஸ்கோப்.

6. குறைவானது. சுமார் 9 அல்லது 10 அவுன்ஸ் எடையுள்ளது இருதயம்.

7. இல்லை. வண்ணாத்திப் பூச்சி இலைகளைத் தின்பதில்லை. தேனை மட்டுமே அருந்தும்.

8. 1922-ம் ஆண்டில்.

9. இல்லை. பிராடஸ்டண்ட் பிரிவினர், ரோமபுரி போப்பாண்டவரின் அதிகாரத்தை மறுப்பவர்கள்.

10. ரூபாய் நாலாயிரம்.

11. புளித்த கீரை. (காச்சிரிக்கை நார்ச் செடி என்றும் கூறுவார்கள்.)

12. (ஆ) நியூட்டன்.

13. கிழக்குப் பாகிஸ்தானின் தலைநகரம்.

14. வெண்ணெய்.

15. விவேகானந்தர்.

16. ஒரிஸ்ஸா ராஜ்யத்தில்.

17. லெய்கா.

18. (அ) ரவிக்கை.

19. சரி.

20. பற்களுள்ள திமிங்கிலமும் உண்டு. பற்களில்லாத திமிங்கிலமும் உண்டு.




அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை. "நீங்கள் விடாதீர்கள் சொல்கிறேன்," என்று நெளிந்தார்.

வேகத்தை அளக்கும் கருவியைச் செந்திலின் கண்கள் கவலையுடன் நாடின.

"எப்படி?" என்றான் கனகசபை, ஹாரனை விட்டுக் கைகளை எடுக்காமல். ஊளையைக் கேட்டுக் கால் மைலுக்கு அப்பால் நடந்து கொண்டிருந்த ஓரிருவர் பாதையைவிட்டு அவசரம் அவசரமாக விலகிக் கொண்டனர்.

கோவிந்தன், "பிரமாதமான பிக்-அப்!" என்று பாராட்டினான் குதூகலமாக.

திருப்தியுடன் கனகசபை காலைத் தளர்த்தவும், வேகம் குறைந்தது.

## பதினொன்று

"நாம் பின்தொடர்ந்து கொண்டிருப்பது அவர்களுக்குத் தெரியாது," என்று அகமகிழ்ந்தார் ரகசிய போலீஸ் அதிகாரி. "அதனால்தான் மெதுவாகப் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஓர் அழுத்து அழுத்துங்கள், சார். பிடித்துவிடலாம்."

செந்தில் பக்கவாட்டில்கவனித்தான். சாதாரண உடையிலிருந்த அதிகாரியின் முகத்தில் எவ்வளவு பரபரப்பு!

கோவிந்தனுக்குத் தன் நண்பனின் கார் மிகவும் பிடித்திருந்தது.

"கனகசபை! என்ன இருந்தாலும் நீ ரசிகன்தானப்பா!" என்றான் அவன், வண்டியின் உள் அழகைப் பருகியவாறு. "பெட்ரோல் ரொம்பச் சாப்பிடுகிறதோ?"

"ஆமாம். காலனுக்குப் பதினைந்து மைல் போனால் அதிகம்."

"வேகம் எப்படி?"

"நீயே பாரேன்," பெருமையுடன் ஆக்ஸலரேட்டரை மிதித்தான் கனகசபை.

ஸி.ஐ. டி.க்காரர் வருத்தத்துடனும் ஆத்திரத்துடனும் "த்ஸோ, த்ஸோ!" என்றார். "எப்படியோ தெரிந்துபோய்விட்டது சார். கிளப்பிக்கொண்டு போகிறார்கள் பாருங்கள்."

பின்னால் வந்து கொண்டிருந்த காரிலிருந்தவர் துள்ளினார்.

"சரியான சந்தர்ப்பம்! முந்துங்கள் சார்! முந்தும்போது இடது பக்கமாக ஓட்டி அவர்கள் வழியை மறியுங்கள்!"

செந்தில் தயங்கினான்.

"யோசிக்காதீர்கள்," என்று உற்சாகமூட்டினார் அதிகாரி. "நான் இருக்கிறேன். சும்மா ஓட்டுங்கள்."

வண்டியின் ஓட்டத்தில் ஒருமாறுதலைக் கண்ட கோவிந்தன், "ஒரு பக்கமாக வாருகிறாற் போலிருக்கிறதே?" என்று சந்தேகப்பட்டான்.

கார் நிறுத்தப்பட்டது.

உட்கார்ந்த இடத்திலிருந்து எட்டிப் பார்த்த கோவிந்தன் உதட்டைப் பிதுக்கினான், உற்சாகமிழந்தவனாய்.

"பங்ச்சரா?" என்றான் கனகசபை.

கோவிந்தன் தலையை ஆட்டுவதற்கும், அவர்களைத் துரத்தி வந்த கார் அவர்களைக் கடந்து கிறீச்சிட்டுக் குறுக்கே நிற்பதற்கும் சரியாக இருந்தது. பளிச்சென்று இறங்கிய போலீஸ்காரர், "நான் ஸி ஐ. டி. அதிகாரி. உங்கள் காரைப் பரி



சோதனை செய்யவேண்டும்!'' என்று சுருக்கமாக அறிவித்துவிட்டு, பதிலுக்குக் காத்திராமல் பின் கதவைத் திறந்தார்.

கனகசபையும் கோவிந்தனும் திகைப்புடன் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கிக் கொண்டே கீழே இறங்கினர். தனது நண்பன் ஸி. ஐ. டி.க்காரரைக் கவனிக்க, பொத்துப்போன சக்கரத்தைக் கோவிந்தன் தடவிப் பார்க்கலானான்.

ஆழப் பதிந்திருந்த ஓர் ஆணியின் தலை அவன் கையில் தட்டுப்பட்டது.

பழுதாகிவிட்ட சக்கரத்தைக் கழற்றிவிட்டு, உதிரியாக உள்ளதை மாட்டும் நோக்கத்துடன், ''ஜாக்கி இருக்காப்பா?'' என்று அவன் உட்கார்ந்தபடியே கனகசபையிடம் வினவியபோது, ''ஜாக்கி இல்லை; பாட்டில்தான் இருக்கிறது,'' என்று துடுக்காகப் பதிலிறுத்தது, எதிர்பாராத ஒரு குரல்.

கோவிந்தன் சட்டென்று நிமிர்ந்தான்.

''நீயா! நீ எப்படி இங்கே வந்தாய்?''

செந்தில், காரமாகப் புன்னகை செய்தான். வேறு வேலையாகப் போய்க் கொண்டிருந்த தன்னைப் போலீஸ் அதிகாரி பயன்படுத்திக்கொண்ட விதத்தை கூறிவிட்டு, ''புதுப் பழக்கமெல்லாம் கற்றுக்கொள்கிறாற் போலிருக்கிறது?'' என்று வினவினான்.

சண்டைக் கோழிபோல் கோவிந்தன் சிலுப்பிக்கொண்டான். ஆனால் செந்தில் விடவில்லை.

''எல்லாம் சீமைச்சரக்கா, இல்லை...''

''சீ, வாயைக் கழுவு!'' என்று சீறினான் கோவிந்தன்.

''எதற்காக?'' என்றான் செந்தில். ''எந்த மதுவிலக்குச் சட்டத்துக்குப் பயந்து நான் வாயைக் கழுவ வேண்டும்?''



"இதோ பார்!" கோவிந்தன் கையினின்று தூசியைத் தட்டினான். "நான் அண்ணா மாதிரி இல்லை, ஆமாம். என் பேச்சுக்கு வந்தாயோ நாக்கைத் திருப்பிவைத்துத் தைத்து விடுவேன், ஜாக்கிரதை."

ஏதோ சொல்லச் செந்தில் வாயெடுத்தான். அதற்குள், போலீஸ் அதிகாரி தன் தோளைத் தொடுவதை உணர்ந்தான்.

அவர் அவனைச் சற்று ஒதுப்புறமாக அழைத்துச் சென்றபோது, அசடு வழிந்து கொண்டிருந்த அவர் முகத்தை அவன் நோக்க நேர்ந்தது.

"உங்களுக்கு ரொம்பச் சிரமம் கொடுத்துவிட்டேன்," என்று இழுத்தார். அவர் குரலில் உயிரே இல்லை.

"எத்தனை பாட்டில் அகப்பட்டது?" என்று ஆவலுடன் விசாரித்தான் செந்தில்.

"ஒன்றையுமே காணோம் சார்," என்றார் அவர். "ஒவ்வொரு சமயம் இப்படித்தான் தவறான தகவல் கொடுத்து விடுவார்கள். பாவம், உங்கள் நேரத்தை வீணாக்கிவிட்டேன். பெட்ரோலுக்கு இதோ பணம்..."

அவர் நீட்டிய நோட்டை அவன் மறுத்தபடி, "பரவாயில்லை. என் கடமையை நான் செய்தேன்," என்றான்.

அவனது சுருங்கிய முகத்தைக் கண்டு அதிகாரி ஆச்சரியப்பட்டார். அவரைக் காட்டிலும் அவனல்லவா அதிக ஏமாற்றம் அடைந்தவன்போல் தோற்றமளிக்கிறான்?

கோவிந்தன் தன் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தான். பரிசோதனையின் முடிவு என்னவாக இருக்கும் என்பதை ஏற்கனவே அறிந்தவனாதலின், அவன் அதைச் சட்டை செய்யவே இல்லை. மடியில் கனமில்லாத போது அவன் எதற்காகப் பதற வேண்டும்? அவன் தேடிச் சென்ற நண்பர் அகப்படாததால், கனகசபையின் விருப்பம் நிறைவேறாமல் நின்று விட்டது.

வேறு சக்கரம் பூட்டுவதற்காகக் கருவிகள் எதுவும் கனகசபையின் வண்டியில் காணோம். தங்கள் காரில் உள்ள

வற்றைப் பயன் படுத்திக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன், தன் தம்பி ஓட்டிவந்த மோட்டாரின் பெட்டியைத் திறந்த கோவிந்தன், தம்பித்து நின்றான்.

ஒன்றல்ல இரண்டல்ல; ஒரு விஸ்கி பாட்டிலும், பன்னிரண்டு பீர் புட்டிகளும் அணிவகுத்து நின்றன. அரைகுறையாகத் திறந்திருந்த பெட்டியின் மூடியும், அதை விடப் பெரிதாகத் திறந்திருந்த அவன் வாயும், செந்தில் குபீரென்று பாய்ந்து முரட்டுத்தனமாகக் கோவிந்தனைப் பிடித்துத் தள்ளியபோதுதான் தமது இயல்பான நிலைக்கு வந்தன.

நிலைமையைப் புரிந்து கொள்ளக் கோவிந்தனுக்கு ஒரு நிமிடம் பிடித்தது.

எதும் நடவாதது போல் செந்தில் நின்றிருந்தான். ஆனால் அவன் கண்களில் தேங்கிக் கிடந்த திகிலைக் கோவிந்தன் கவனிக்கத் தவறவில்லை. ''அயோக்கிய ராஸ்கல்!'' என்று முணுமுணுத்தன அவன் உதடுகள்.

இருபதே அடிக்கு அப்பால், கனகசபையுடன் பேசிக் கொண்டிருக்கும் சட்டத்தின் பிரதிநிதியை நோக்கினான்.

கூப்பிடலாமா?

வஞ்சம் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்ற வேகம் அவன் மீது மோதிற்று. ஆயினும் ரத்தினத்தின் நினைவு அவனைத் தடுத்தது. அண்ணாவின் வருத்தத்துக்குக் காரணமாயிருக்க அவன் விரும்பவில்லை.

செயலில் காட்டாவிட்டாலும், பேச்சளவிலாவது செந்திலை அச்சுறுத்தி வேடிக்கை பார்க்க ஆசையாயிருந்தது கோவிந்தனுக்கு.

''எல்லாம் சீமைச் சரக்குத் தான் போலிருக்கிறது,'' என்று சீண்டினான்.

''எனக்கில்லை,'' என்றான் செந்தில். ''புதுடில்லிக்காரருக்கு.''

''ஸி. ஐ. டி. யைக் கூப்பிட்டுக் காட்டினால் என்ன செய்வாய்?''



**புகைமை**

**விறகு ஈரம், கண்ணை எரிகிறது என்று ஒரேயடியாய்க் கூச்சல் போட்டாயே, இப்போது வந்து பார்!...என்ன சொல்கிறாய்? சமையல் வேலையெல்லாம் முடிந்து விட்டதா! அதை முன்பே சொல்வதற்கென்ன? ஒரு மணி நேரமாய் அடுப்பை ஊதி ஊதி என் கண்ணெல்லாம் ஒரே எரிச்சல்!**

செந்தில் இமை மூடாமல் அமைதியாகச் சொன்னான்.

''அதிகாரி வேறு பக்கம் தேடிய போது அந்த வண்டியில் இருந்ததை நீ இங்கே கொண்டு வந்து ஒளித்திருக்கிறாய் என்பேன்.''

அடுத்து வந்த ஒன்பது மணி நேரத்தையும் கனகசபையுடன் கழித்தான் கோவிந்தன். நாலைந்துவருடமாக — இண்டரில் மூன்றாவது முறையாகத்தான் இடறி விழுந்த பின்னர்— சந்திக்க இயலாது போன பழைய கல்லூரித் தோழனை விட்டு அவனால் அவ்வளவு சுலபமாகப் பிரிய முடியவில்லை.

பழைய நினைவுகளை இருவரும் விழுந்து விழுந்து பரிமாறிக்கொண்டார்கள்.

''கனகசபை! நீ போனப்புறம் காலேஜே உருப்படாமல் போய்விட்டதப்பா!'' என்று பெருமூச்சுவிட்டான் கோவிந்தன்.

தந்தை இறந்துவிட்டதாகத் தந்தி வந்ததால், படிப்புக்கு முழுக்குப் போட்டுவிட்டுக் கனகசபை ஊருக்குப் பயணமாகிவிட்டான். அப்போதெல்லாம் அவன் இப்படியா கசாப்புக் குன்றாக இருப்பான்? ஈர்க்குச்சிக்கு அண்ணன்தான். ஆனால் அசாத்திய பலம். ஒரு ஹாக்கிப் பந்தயத்தின்போது, எதிரியின் காலில் வேண்டுமென்று வளைதடியைக் கொடுத்து வீழ்த்திய அந்த மாணவனின் கன்னம் இன்றைக்கும் கனகசபையைக் கண்டால் உப்பிக் கொண்டுவிடும். கனகசபை என்றால் கல்லூரியே அலறுமே! முக்கியமாக மாணவர் விடுதிக்குக் கனகசபைதான் ராஜா. இல்லை, சர்வாதிகாரி.

விடுதியில் புதிதாகச் சேர்பவர்கள் கனகசபையிடம் பட்டபாட்டை நினைக்கும்போது கோவிந்தனுக்குச் சிரிப்புப் பொத்துக்கொண்டு வந்தது. கல்லூரி திறக்கப்பட்டவுடன், கனகசபையும் அவன் போன்ற நாலைந்து முரடர்களுமாகச் சேர்ந்துகொண்டு

விடுதியில் நுழைபவர்கள் மீது கண்ணோட்டம் விட்டபடி இருப்பார்கள். ஒருவருடனும் சேராமல் ஒதுங்கிக் கொள்ளும் உம்மணா மூஞ்சி யார்? புத்தகப் புழு யார்? நாக்கிழியப் பொய் சொல்கிறவன் யார்? செருக்குப் பிடித்தவன் யார்? என்று கவனித்து, தங்களுக்குள் கலந்து பேசி ஒரு பட்டியல் தயாரித்து விடுவார்கள்.

திடீரென்று, சனி அல்லது ஞாயிறின் போது, மாணவர் விடுதி அல்லோல கல்லோலப்படும். குண்டர்கள் பட்டாளம் புறப்பட்டு விட்டதென்ற செய்தி காட்டுத் தீ போல் பரவி, நோஞ்சான்கள் நெஞ்சை நடுங்க வைத்துவிடும். பட்டியலில் கண்டவர்கள் யாரும், படையின் கையிலிருந்து தப்ப முடியாது. சிலர் பக்கிங்ஹாம் கால்வாயில் அரச மரியாதைகளுடன் நீராட்டப்படுவர். சிலர், முன்னூறு பேருக்கு நடுவே நின்று தங்கள் இசைத் திறனைக் காட்ட வேண்டியிருக்கும், கால் புட்டி விளக்கெண்ணெயை ஒரு பையனுடைய வாயில் ஊற்றி, அவனை அவன் அறைக்குள்ளே தள்ளிப் பூட்டிவிட்டு வந்த சம்பவம் கோவிந்தனுக்கு நன்றாக நினைவிருந்தது. அளவுக்கு மிஞ்சிக் கூச்சமுடைய ஒரு மாணவன், மேஜை மீதேறி நின்று, ஆடைகளைக் களைந்து விட்டு நாட்டியம் ஆடக்கூட நேர்ந்திருக்கிறது. அகப்பட்டுக் கொண்டவர் சிலராகவும், ரசிப்பவர் பெரும்பான்மையினராகவும் இருப்பார்கள். ஆகவே எங்கும் ஒரே கூச்சலும் கும்மாளமும்தான். பேராசிரியர்களுக்குத் தெரியாது என்பதில்லை. நன்றாகத் தெரியும். ஆனால் மூச்சுவிட மாட்டார்கள். மாணவர்களாயிருக்கும்போது அவர்களும் இந்தமாதிரி 'விழா'வில் பங்கெடுத்துக் கொண்டவர்கள்தானே? தொன்று தொட்டு வரும் இந்த வழக்கத்தை அவர்கள் ஆட்சேபிப்பது கிடையாது.

ஆனால் வர வர, இந்த விழாவில் சுவாரஸ்யமே இருப்பதில்லை. இங்கிலாந்திலுள்ள கல்லூரிகளை யொட்டி ஏற்பட்ட இந்த விழா, இங்கிலீஷ்காரர்கள் பின்வாங்கியதும் வலுவிழந்து விட்டது.

"காலேஜ் கிடக்கட்டும், உன் படிப்பு உருப்படுமா, உருப்படாதா?" என்றான் கனகசபை, ஸ்பென்சரில் வாங்கிய சாமான்களுடன் காரில் ஏறியபடி.

அவன் அடிக்கடி சென்னைக்கு வருவதில்லை. வந்தால், ஐயாயிரம் ஆறாயிரத்துக்கு வேட்டு வைக்காமல் திரும்ப மாட்டான்.

"என்ன இது, நீயே இப்படிக் கேட்டுவிட்டாய்!" என்றான் கோவிந்தன். "படித்துப் படித்து இதுவரை மூளை மழுங்கியது போதாதாக்கும்? தள்ளு குப்பை!"

"ஏதாவது பிஸினஸ் செய்வதாக உத்தேசமா?"

"அண்ணா வளர்த்து வைத்திருக்கிறார், பிரமாதமான ஒரு பிஸினஸை. நான் தலையிடாதவரை ரொம்ப நன்றாக நடக்கும்."

சிவப்பு விளக்கெதிரில் வண்டியை நிறுத்திய கனகசபை, கோவிந்தனைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

"நீ என்னதான் பண்ணிக் கொண்டிருக்கிறாய்? பொழுது எப்படிப் போகிறது?"

"எனக்கு இன்னும் இருபத்துநான்கு மணி இருந்தால் தேவலை போலிருக்கிறது. இவன் ஒருத்தன். சம்பாதித்துப் போட அண்ணா உண்டு. சாப்பிட நான் உண்டு. சண்டை போட என் அப்பன் செந்தில்நாதன் உண்டு. அப்புறம் எனக்கு என்ன குறைச்சல்? பயத்தைத் தரப் பரீட்சையும், அபயம் தர ட்யுடோரியல் காலேஜும் இருக்




"ஏன் ஸார்! இது என்ன ஹைதர் காலத்துப் பேனா போலிருக்கிறதே!"

"சந்தேகங்களுக்கு அடுத்த ஜன்னலில் கேளுங்கள்!"

கின்றன. கடற்கரை என்ன, சினிமா என்ன, நாடகம் என்ன, பொதுக்கூட்டம் என்ன, எல்லாம் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன. வாழ்க்கை ஜாம் ஜாமென்று போய்க் கொண்டிருக்கிறது,'' என்று கோவிந்தன் முழங்கினான்.

''பிறத்தியார் உனக்கு இவ்வளவும் செய்கிறார்கள். அவர்களுக்கு நீ என்ன செய்யப் போகிறாய்?''

முக்காலத்தையும் உணர்ந்தவன் போல் கோவிந்தன் மண்டையை ஆட்டிக் கொண்டே பேசினான். ''பெரிதாக ஒன்றைச் செய்து உங்கள் எல்லோரையும் மலைத்துப் போக வைக்கிறேன். பார்த்துக் கொண்டே இரு!''

கோவிந்தன் வீட்டுக்குத் திரும்புவதாகச் சொல்லி விட்டுத் தான் கனகசபையிடம் விடை பெற்றுக் கொண்டான். ஆனால் அவனது கால்கள் என்னவோ அவனை வேறு திசையில் இழுத்துச் சென்றன. பனி இருட்டு.

ஏதாவது வாங்கிக் கொண்டு போக ஆசை. பையைப் பரிசோதித்தான். சில்லறைக்கோ பஞ்சம். எதிர்த்தாற் போல் பலூன் விற்றுக்கொண்டு ஒரு பையன் வந்தான். அவற்றில் இரண்டை வாங்கிக் கையில் பிடித்தபடி பஸ் ஏறினான்.

தாமோதரத்தின் வீட்டை அடைந்தான். என்ன ஏமாற்றம்! பூட்டியிருந்தது.

வாசற்படியிலேயே நின்றுகொண்டிருந்தான். கதவிடுக்கு வழியாகப் புறப்பட்ட வெளிச்சம் அவன் சட்டையில் கோடு கிழித்தது.

யாரோ விளக்கு ஏற்றியிருக்கிறார்கள்.

அடுத்தாற்போல் ஒருசந்து. சந்தைப் பார்த்த ஜன்னல் திறந்திருந்தது. எட்டிப் பார்த்தான்.

கோவிந்தனுக்கு உற்சாகம் பீரிட்டது.

''பாப்பா!'' என்றான்.

அறையின் குறுக்கும் நெடுக்குமாக நூலைக் கட்டி, தேய்த்துக் கொண்டிருந்த அவள் திரும்பினாள். அவனைக் கண்டதும் அவள் முகம் மலர்ந்தது.

''என்னை உள்ளே வைத்துப் பூட்டி விட்டுப் போய்விட்டார்கள்.''

''த்ஸொ, த்ஸொ. ஏன்?''

''அம்மாவுடன் சண்டை பிடித்ததற்காக.''

''அதற்காகச் சிறைவாசமா?''

அவள் மோகனமாகச் சிரித்தாள்.

### விடை

இது சரிதான். கி. பி. கோ. 42-ஆவது பிரிவுப்படி, போலீஸ் அதிகாரிகளோ நீதிபதிகளோ ஒருவனைக் கைது செய்ய முயலும் போதோ அல்லது கைது செய்யப்பட்ட ஒருவன் தப்பித்து ஓடாமற் தடுக்கும் போதோ பொதுமக்களின் உதவியை நாடினால் அவர்கள் கட்டாயமாக உதவி செய்தாக வேண்டும். அப்படி அவர்கள் உதவி செய்ய மறுத்தாலும் சரி அல்லது உதவி செய்யாமல் வாளா இருந்தாலும் சரி அவர்கள் இ. பி. கோ. 187-ஆவது பிரிவுப்படி குற்றவாளியாவார்கள்.

வை. ச. சு.

''நீ என்ன பண்ணிக் கொண்டிருந்தாய்?''

''மாஞ்சா போட்டுக் கொண்டிருந்தேன்.''

அவனுக்கு விளங்கவில்லை.

''மாஞ்சாவா?''

''மாஞ்சா என்றால் தெரியாது? கண்ணாடியைத் தூள் செய்து காற்றாடி நூலுக்குப் போடுவது. கத்தி மாதிரி அறுக்கும்.''

''எங்கே, காட்டு?''

அவள் கையை விரித்தாள். அவளது உள்ளங் கையிலிருப்பதைக் கவனிப்பதற்காக ஜன்னலுக்கு இப்பாலிருந்தபடி அவளது விரல்களின் நுனியைப் பிடித்த கோவிந்தனுக்கு என்றைக்குமில்லாத ஆனந்தம் வெள்ளமாகப் பெருக்கெடுத்தது.

1. ஜப்பானில்.

2. தேம்பாவணி.

3. சுவர்களில் படங்களின் அடியிலும் மற்றவிடங்களிலு வாழ்ந்து, புத்தகம், துணி முதலிய பொருள்களை அரிக்கும பூச்சிக்கு இராமபாணம் என்று பெயர்.

4. இராசேந்திரன்.

5. சோடியம் சிட்ரேட்டு என்னும் உப்பைக் கலக்கிருர்கள்.

6. சென்னை கோஷ்டியினர்.

7. நிக்கலும் எஃகும்.

8. சாந்தி என்று பொருள்படும் ஸலாயத் என்னும் சொல் லின் சார்பாய் இஸ்லாம் என்ற சொல் தோன்றியிருக்கிறது.

9. நியூ ஆம்ஸ்டர்டாம்.

10. பதினையாயிரம் ருபாய்.

11. சிரத்தையுடன் அருகே உட்காருவது.

12. ஆல்டிமீட்டர்.

13. ஆம்.

14. அன்டோனின ஜபொடாக்கி.

15. லாலா லஜபதி ராய்.

16. 4 அடி. 3:2 என்ற விகிதத்தில் தேசியக் கொடியின் நீளஅகலங்கள் இருக்க வேண்டும்.

17. கோட்டு வாத்தியத்துக்கு.

18. இல்லை. விவாதிக்கலாம். ஆனுல் தீர்மானங்களின் மீது வாக் கெடுப்பு நடத்திஞல் அது செல்லாது.

19. 7 பேர்.

20. இந்தியாவில் உணவு தானியங்களின் உற்பத்தி, வினியோகம் ஆகியவற்றைப் பரிசிலனை செய்து, யோசனைகள் கூறுவதற்காக



## தமாஷ்!

### நாட்டுப் பெண்

"அம்மா! தாத்தாவுக்கு எண்பது வயதாகிறது. எதற்குத் தினமும் இப்படி நாலுமைல் தூரம் நடக்கிறார்?"

"சாப்பிடுவது ஜீரணமாகத்தான். சரியாக அரைப்படி சாப்பிடுகிறாரல்லவா?"

### வெண்ணெயெலி

...ஹலோ! டாக்டர் வீடா? நீங்கள் சொன்னபடி குழந்தையின் உதட்டு வெடிப்புக்கு நேற்று ராத்திரி வெண்ணெய் தடவித் தொலைத்தேன். தயவு செய்து எலிக் கடிக்கு ஏதாவது மருந்து எடுத்துக்கொண்டு உடனே வாருங்கள்!

### கிரகாதகன்!

ஓர் அமெரிக்க விஞ்ஞானி, ரஷிய விஞ்ஞானி ஒருவரைச் சந்தித்தார். நெடுநேரம் இருவரும் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் பிரிந்தார்கள். "அடுத்த வாரம் மறுபடி சந்திப்போமா?" என்றார் அமெரிக்க விஞ்ஞானி.

"சந்திக்கநேரம் இருக்காது என்று நினைக்கிறேன். நாளைக்குச் சந்திரனுக்குப் போகிறேன். நாளை மறுநாள் அங்கிருந்து செவ்வாய் கிரகம். செவ்வாயில் சாயந்திரம் கிளம்பிச் சனிக் கிரகத்துக்குப் போயவிட்டு...முடிந்தால் வெள்ளியையும் எட்டிப் பார்த்துவிட்டு...ஊம்...எங்கே நேரம் இருக்கப் போகிறது?" என்பது பதில்.

### விதி கொடிது!

'விதி கொடிது' என்ற படத்தை நாங்கள் எடுப்பதைக் கைவிடுகிறோம். சகோதரப் படக் கம்பெனி ஒன்று அதை எடுப்பதே காரணம், யார் நஷ்டமடைந்தால் என்ன?



### பாவம்!

ரயில்வே மந்திரி அவர்களுக்குத் தங்கள் இலாகாவால் பாதிக்கப்பட்ட ஓர் நல்ல ஆத்மா:

புதிதாகப் போடப்படும் ரயில்பாதை எங்கள் ஊர் வழியாக செல்லப் போவதை வன்மையாகக் கண்டிக்கிறேன். இது சர்க்கார் எனக்குத் தனிபட்ட முறையில் இழைக்கும் அநியாயம். சரியான பிரயாண வசதி இல்லாதிருக்கும் போதே என் மாமனார் குடும்பத்தினர் மாதத்தில் நாலு நாள் இங்கே 'காமப்'அடிக்க வந்துவிடுகிறார்கள்.

பாதிக்கப்பட்டவன்.

### அசாத்தியக் கூறு

அசாத்திய அவநம்பிக்கை பிடித்த காதலியிடம் காதலன் உறுதிகூறினான்: "உன்னைத் தவிர வேறு பெண்ணையோ ஆணையோ நான் மணக்கமாட்டேன்."

### லட்சியக் கனவு

## தமாஷ்!

சாப்பிட வருபவர் ஓட்டல்காரரிடம் சொன்னார் "நேற்று ஒரு கனவு கண்டேன் பாருங்கள்."

"என்ன கனவு?"

"நீங்கள் அடுக்கி வைத்திருக்கிற இவ்வளவு ஸ்வீட்டுகளும் விற்றுப் போய்விடுகின்றன. நீங்கள் புதிய ஸ்வீட் தயார் செய்கிறீர்கள்."

### புதிர் விகாரம்

மனைவியிடம் பயமுள்ள கணவன் கேட்டான்: "பெட்டியிலிருந்த பணம் குறைகிறது. நமக்கோ குழந்தைகள் இல்லை. நானோ செலவு செய்யவில்லை. எப்படிப் போயிருக்குமென்று கண்டுபிடித்துச் சொல்லேன். ஜம்மென்று புதுப் புடவை கட்டிக்கொண்டிருக்கிறாயே!"



## தமாஷ்!



# சொல்லாதே!

**எஸ்.ஏ.பி.**

பன்னிரண்டு

கார்ச் சாவியைக் கார்சட்டைப் பைக்குள் போட்டபடி முகப்பு ஹாலில் நுழைந்த செந்திலின் மனநிலைக்கும், அரைத் தூக்கத்தில் கண் சிமிட்டிக் கொண்டிருந்த நாற்பது வாட் பல்புக்கும் கொஞ்சம்கூடப் பொருத்தம் இருக்கவில்லை.

அவன் ஒரு விசையைத் தட்டினான். புதிதாக அமைக்கப்பட்ட நான்கு ஜோடி குழல் விளக்குகள் குபீரென்று எட்டுத் திசையினின்றும் தண்ணொளி பொழிந்தன.

தன் அறையை நோக்கி அடியெடுத்து வைத்தவன் தயங்கினான். சுவரில் மாட்டப்பட்டிருந்த தந்தையின் பெரிய புகைப்படம் அவனை ஈர்த்தது போலும். பூட்ஸ் காலுடன் அதன் முன் போய் நின்றான்.

ஏளனப் புன்னகை ஒன்று அவன் உதடுகளில் படர்ந்து, வெற்றிப் பெருமிதத்தால் மின்னிக் கொண்டிருந்த அவன் கண்களுக்குப் பின்னணி செய்தது.

அந்தச் சரிகைத் தொப்பியும், மீசையும், க்ளோஸ் கோட்டும்! அவனுக்குச் சிரிப்பு வந்தது. அவர் முகத்தை வைத்துக்கொண்டிருக்கும் விதத்தைப் பாரேன்! மனத்துக்குள் பெரிய தொழிலதிபர் என்று எண்ணம். அபூர்வமாக மாதம் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கும் கண்டிராக்டர் அல்லவா? பெருமை பொங்கி வழிகிறது!

அதே சமயம், தன்னுடைய திறமையைப் பற்றிச் செந்தில் நினைத்துக் கொண்டான். அவனுடைய கால் தூசிக்கு வருமா அவனது தந்தையின் சாமர்த்தியம்?

அவன் திட்டமிட்டபடி புதுடில்லிக்காரர் அவனது அடியார்க்கு அடியார் ஆகிவிட்டார். சுளை சுளையாக விழுங்கச் சந்தர்ப்பம் தரப்போகும் அணைக்கட்டு வேலை செந்திலின் மடியில் கொஞ்சிக் கொண்டிருந்தது. பிரமிக்க வைக்கும் தனது மகத்தான தொழில் திட்டங்கள் எங்கே, அணு அணுவாகச் சுரண்டிச் சேர்த்த அப்பாவின் நத்தை வேகம் எங்கே?

செந்தில் திரும்பினான். ஆனால் ஏதோ சந்தேகம் மூளைக்கவே, மறுபடியும் அந்தப் புகைப்படத்தை ஏறிட்டு நோக்கினான்.

"ஏய்! யாரங்கே?"

ஓடி வந்த பணியாளிடம் படத்தைச் சுட்டிக் காட்டி, "ஏன் இன்றைக்கு மாலை கட்டிப் போடவில்லை?" என்று அதட்டினான்.

வேலைக்காரன், அந்த உலர்ந்த மலர்களை அப்போதுதான் கவனித்தான் போலும். ஒரு முக்காலியைப் போட்டு அதன் மீதேறிப் பழைய மாலையை அப்புறப்படுத்தியபடி, பணிவான குரலில், "தன் கையாலேதான் போட வேணுமென்று துளசியம்மா சொல்வாங்க," என்றான்.

துளசியின் பெயர், செந்திலின் எண்ண ஓட்டத்துக்கு வேறொரு திருப்பத்தைக் கொடுத்ததோ என்னவோ? சோபாவில் உட்கார்ந்து பூட்ஸ்களைக் கழற்றிவிட்டு, மௌனமாக உள்ளே நுழைந்தான்.

சில நிமிடங்கள் கழித்து அவன் முகப்பு ஹாலுக்குத் திரும்பியபோது, ஏமாற்றம் அவன் முகத்தில் எழுதி ஒட்டப்பட்டிருந்தது.

"வீட்டில் யாரும் இல்லை?" என்று வினவினான் பணியாளிடம்.

"இல்லிங்க. பெரிய எஜமான் இன்னும் வரவில்லை. கோவிந்தையா, வர நேரமாகுமென்று சொல்லிட்டுப்

போயிருக்கிறார்.''

செந்தில் ஏதோ கேட்க வாயெடுத்தான். அதற்குள், தலையைச் சொறிந்து கொண்டு அவனுக்குப் பின்னால் வந்து நின்ற சமையற்காரர், மௌனமாக ஒரு காகிதத்தைச் சின்ன எஜமானிடம் நீட்டினார்.

சமையல்காரர் எப்படி வாய் திறவாமல் சீட்டை நீட்டினாரோ, அதேபோல் மௌனமாகப் பெற்றுக் கொண்ட செந்தில் அதைத் துண்டு துண்டாகக் கிழித்து, சிகரட் தட்டுவதற்கென வைக்கப்பட்டிருந்த சாம்பல் கிண்ணத்துக்குள் ஒவ்வொரு சுக்கலாகப் போட்டான்.

''ஐயையோ!'' என்றார் சமையல்காரர் அதிர்ச்சியுற்றவராய். ''அது துளசியம்மா எழுதி வைத்திருந்த கடிதமுங்க' உங்களிடம் காட்டச் சொல்லிப் பெரிய எஜமான் கொடுத்துவிட்டுப் போனார்!''

''எல்லாம் எனக்குத் தெரியும்,'' என்றான் செந்தில், பற்களைக் கடித்தவனுய. ''போங்கள்.''

எந்த விதமான பரபரப்பும் அடையாமல், கால்மேல் கால் போட்டபடி மாலைப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்த செந்திலின் தோற்றம், அமைதியின் வடிவமாகத்தான் காட்சியளித்தது.

சாப்பாடு வேண்டாமென்றும், பால் மட்டும் போதுமென்றும் சொல்லிவிட்டுத் தன் அறைக்கு அவன் சென்றுவிட்ட பிறகு, குழல் விளக்குகளை அணைப்பதற்காக ஹாலுக்குள் நுழைந்தான் பணியாள். சாம்பல் கிண்ணத்தைக் காணோம்.

அதேசமயம், செந்தில் தன் அறையில் இங்குமங்கும் உலவிக் கொண்டிருந்தான்.

சமையற்காரர் வழக்கம்போல் கடனுக்கு மனுப் போடுகிறார் என்று முடிவு கட்டி அவன் கிழித்துப் போட்ட துண்டுகளை ஒன்று சேர்க்க அவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

ஆனால் அந்தச் சுருக்கமான செய்தியினால் அவன் உள்ளத்தில் கிளறப்பட்ட ஆத்திரம் அடங்க வெகு நேரம் ஆகிவிட்டது.

அவனது கொடி இப்போது பாதிக் கம்பத்திலே பறந்தது. அவன் விட்ட பெருமூச்சில்தான் எவ்வளவு கொதிப்பு!

படுக்கையில் படுத்துக்கொண்டான் செந்தில். ஆனால் மனம் ஓயவில்லை. எண்ணங்கள் துளசியைச் சுற்றி வட்டமிட்ட வண்ணமிருந்தன. அனாதையான அந்தப் பெண், அவ்வளவு தைரியமாக வீட்டை விட்டு எப்படிப் போயிருக்க முடியும்? எங்கே போவாள், என்ன செய்வாள்?

நேற்று சாயந்தரமே அவள் புறப்பட்டிருக்கிறாள். ஆனால் இருபத்து நான்கு மணி நேரம் கழித்துத்தான் செந்திலுக்குத் தகவல் எட்டுகிறது.

'பெரிய எஜமான் கொடுக்கச் சொன்னார்' என்ற சமையற்காரரின் சொற்கள் அவன் காதுகளில் ஒலித்தன.

செந்திலுக்குள் கோபம் சீறிற்று. ரத்தினத்துக்குத்தான் விஷயம் முன்பே தெரிந்திருக்கிறதே, உடனே அவன் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டான்? போலீசுக்குத் தகவல் தெரிவித்தானா? அல்லது ஆட்களை நாலா பக்கத்திலும் விட்டுத் தேடச்சொன்னானா? தங்கள் குடும்பத்தில் ஒருத்தி—மாமாவின் பெண்—காணாமல் போய்விட்டாள்; ரத்தினம் எந்த விதமான கவலையும் படாமல், செந்திலைச் சந்தித்து வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யாமல், கேவலம் சமையற்காரரிடம் கடிதத்தைக் கொடுத்துவிட்டுக் கையை வீசிக் கொண்டு போயிருக்கிறான்.

அதுவும் எப்பேர்ப்பட்ட கடிதம்? நான்கே வரிகள் உடையதானாலும், ஒவ்வொரு சொல்லிலும் தீயைத் திணித்துச் சென்றிருக்கிறாளே துளசி? அதை நினைத்தபோது செந்திலின் முகம் அவமானத்தால் சிவந்தது.

துளசி வீட்டைவிட்டுப் போவதற்கு யார் காரணம் என்று அவனுக்கு இப்போது தெரிந்துவிட்டது. அண்ணா' ஆம். எல்லாம் ரத்தினம் செய்யும் சூழ்ச்சிதான். வெளிக்குப் பரம சாது போல் வேடம் போடும் அந்த மனிதனின் ரத்தக் குழாய்களில் ஓடுவது உதிரம்தானா அல்லது விஷமா?

செந்திலுக்கு உடம்பெல்லாம் எரிந்தது.

அவ்வளவு சுவையுள்ள பானத்தைக் கோவிந்தன் அதற்கு முன் சாப்பிட்டதே கிடையாது. கெட்டிப் பாலுக்கும் பாதாம் பருப்புக்கும் இத்தனை இன்ப சக்தி உண்டா?

ஒவ்வொரு வாய் பருகும்பொழுதும் முதுகிலிருந்து ஒரு புது இறக்கை முளைப்பது போலிருந்தது கோவிந்த

னுக்கு. அந்த விவரிக்க முடியாத உணர்ச்சி, மகிழ்ச்சி வானத்தில் அவனை ஊசலாடச் செய்தது.

கனகசபை தங்கியிருக்கும் வீட்டின் மேல் மாடி. சுமார் பதினைந்து பேர் கூடியிருந்தார்கள்.

"கோவிந்தா! என் நண்பர்களை எல்லாம் நீ சந்தித்துப் பழக வேண்டுமென்று எனக்கு ஆசை. இன்றைய விருந்தில் என்ன சிறப்புத் தெரியுமோ? குடி என்கிற பேச்சே கிடையாது. அத்தனை பாட்டிலையும் உள்ளே வைத்துப் பூட்டிவிட்டேன். தெரிந்ததா? இன்றிரவு பாதாம்கீர்தான் விஸ்கி, பிராந்தி எல்லாம். கட்டாயம் வந்துவிடு."

இதுவே கனகசபையின் அழைப்பு.

"அன்பார்ந்த ஆத்மாக்களே!" என்று ஒரு குரல் எழுந்தது.

கோவிந்தன் பார்த்தான். ரத்தினக் கம்பளத்தின் மத்தியில் தாமோதரம் தள்ளாடியபடி நின்று கொண்டிருந்தார்.

"அன்பார்ந்த ஆத்மாக்களே! இப்போது, நமது முக்கிய விருந்தாளியான கோவிந்தன் ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவான். எல்லோரும் சப்தம் போடாமல் கவனிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்."

நாலைந்து பேர் கை தட்டினார்கள்.

கோவிந்தன் எழுந்து நின்றான். அல்லது நிற்க முயன்றான். நிமிர்ந்து நிற்கும் சக்தியை அவனது முழங்கால்கள் இழந்துவிட்ட உண்மை அவனுக்கு விசித்திரமாகப் பட்டது.

"சும்மா உட்கார்ந்தபடியே பேசப்பா!" என்றான் கனகசபை, கோவிந்தன் முதுகைத் தட்டிக் கொடுத்தபடி. கனகசபையின் குரல் மட்டும் எப்படி அவ்வளவு திடமாக, நடுக்கமில்லாமல் இருக்கிறது?

"கனகசபை என் உயிர் நண்பன்." கோவிந்தன் ஒவ்வொரு வார்த்தையாக தொண்டைக்குள்ளிருந்து தோண்டி எடுத்தான். "கனகசபையைப் போல் லட்சத்தில் ஒருவன் கிடைப்பது கஷ்டம்."

கோவிந்தனுடைய நெஞ்சில் உணர்ச்சி பொங்கிற்று. கனகசபையை நினைக்கும்போது, கண்களில் நீர் பெருகிற்று.

சொற்பொழிவை அதற்கு மேல்



தொடர வேண்டிய தேவையோ, தன்னிடம் அதற்கான திராணியோ இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை. வாழ்த்துடன் பிரசங்கத்தை முடிக்கும் நோக்கமுடையவனாய், "கனகசபைக்கு ஜே" என்று கூவ முயன்றான். ஏனோ தெரியவில்லை, அது "கனகசபைக்கு ழே!" என்று வெளிப்பட்டது. பிழையைத் திருத்த வேண்டி, மறுபடி ஒருமுறை ஜெய கோஷமிட்டான். இந்த முறை அது. 'ஜே"யாகவுமில்லாமல், 'ழே"யாகவுமில்லாமல், 'ஷே!' வடிவத்தில் வெளிப்பட்டது.

உள்ளம் பேசும்பொழுது வாய்ச் சொற்களுக்கு வேலையில்லை என்ற ஆறுதலுடன் அவன் அமர்ந்துவிட்டான்.

கோவிந்தனைத் தொடர்ந்து, கூரிய மூக்கும் நரைத்த புருவங்களுமுடைய ஒருவர் மேடை ஏறினர். அவர் ஒரு பெரிய இஞ்ஜினியர் என்று அறிமுகம் செய்து வைக்கப்பட்டார். அவர் பேசத் துவங்கியதுமே சாப்பாட்டுக்கு அழைப்பு வந்து விட்டது. தனது பேருரையை முடிக்காமல் நகர முடியாது என்று அந்த மனிதர் அடம் பிடிக்கவே, மற்றவர்கள் அவரை விட்டுவிட்டு அடுத்த அறைக்குப் போனார்கள். அவர்கள் விருந்துண்ணும்போது அந்த மனிதரின் குரல் கேட்டுக்கொண்டேயிருந்தது. திடீரென்று, "நான் வீட்டுக்குப் போகிறேன்," என்று அங்கிருந்தபடியே விடைபெற்றுக் கொண்டு போய்விட்டார்.

பந்தியில் அமர்ந்த கோவிந்தனுக்கு ஒரு நூதமான, சற்றும் விளங்காத,புதிர் போன்ற அனுபவம் காத்திருந்தது. பக்கத்திலிருப்பவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது. கனகசபை தன் ஆருயிர் நண்பனாயிருந்தும், தன் இலையில் ஒன்றும் பரிமாறாமல் இருக்கிறார்களே என்று எண்ணி எண்ணி ஏங்கி, கடைசியில் அந்த ஏக்கத்தையும் வெளிப்படுத்திவிட்டான்.

ஒரு பரிசாரகர் அவனிடம், "நல்ல வேலையாகப் போயிற்று! உங்கள் இலைக்குத்தான் சார் முதலில் பரிமாறினேன்! புளியோதரை அப்படியே இருக்கிறது பாருங்கள்," என்று





"இந்தக் குடையை ரிப்பேர் செய்யணும். என்ன ஆகும் பார்த்துச் சொல்."

சுட்டிக் காட்டிய பிற்பாடுதான் அவனுக்குக் கண் திறந்தது.

அசட்டுச் சிரிப்புடன் சாப்பிட முயன்றான். என்ன ஆச்சரியம்? புளியோதரையை அள்ளினால், முதலில் வறுவல் வந்தது. அப்புறம், துவையல் வந்தது. ஆனால் புளியோதரை வரவில்லை. கோவிந்தன் அயர்ந்து போனான். எதிரிலுள்ள இலையில் புளியோதரை கோபுரம் போல் வைத்திருப்பது தெளிவாகத் தெரிந்தது. ஆனால், எவ்வளவுதான் அதையே உற்றுப் பார்த்து மனோ சக்தியைப் பயன்படுத்திக் கையை நீட்டினாலும் அது கையில் சிக்க மறுப்பானேன்? கடைசியில், கைக்கு ஒரு பாடம் கற்பிக்கும் வகையில் அவன் குனிந்து இலையினின்று நேரடியாகப் புளியோதரையில் நாலு வாய் சாப்பிட்ட போதுதான் அவன் ஆத்திரம் அடங்கிற்று. ஆனால் ஏனோ, வயிற்றைக் குமட்ட ஆரம்பித்துவிட்டது.

தன்னை யாரோ குளியலறையில் கொண்டுபோய் விட்டதோ, தான் இரண்டு தடவை வாந்தி எடுத்ததோ, வாசலில் விழுந்து உறங்கி விட்டதோ கோவிந்தனுக்குத் தெரியாது.

சிறிது நேரத்தில் கோவிந்தனுக்குச் சுய நினைவு வந்தது. தலைவலியோ தாளவில்லை. மெள்ள எழுந்து, தொட்டியில் தேக்கி வைக்கப் பட்டிருந்த நீரால் நன்றாக முகத்தைக் கழுவிக்கொண்டான். தலையிலும் தண்ணீர் அள்ளித் தெளித்துக்கொண்டு, திறந்த வெளிக்கு வந்தபோது குளிர் காற்று சில்லென்று அடித்தது.

கனகசபையின் வீட்டிலிருக்கிறோம் என்று அவன் புரிந்துகொண்டதும், பாதாம்கீரின் ஞாபகம் வந்தது. அபின், கஞ்சா போன்ற ஏதோ சரக்கைச் சேர்த்திருக்கிறார்கள் என்றும், மதுவைத் தொட மாட்டேன் என்று பிடிவாதம் செய்யும் தன்னை மடக்கவே கனகசபை இப்படியொரு தந்திரம் பண்ணியிருக்கிறான் என்பதும் அவனுக்கு விளங்கிவிட்டது. அந்தக் காலத்தில், விடுதியில் சேரும் புதிய மாணவர்களிடம் காட்டிய வேலையை இன்று அவன் தன்னிடமே காண்பித்துவிட்டான் என்பதும் தெரிந்தது.

விருந்து முடிந்ததாகத் தெரியவில்லை. ஆடை போன போக்குத் தெரியாமல் குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்த ஒரு மனிதரின் மணிக்கட்டைப் பிடித்துக் கடியாரத்தைப் பார்த்தான் கோவிந்தன். கடியாரம் என்னவோ தன்னினைவுடன் தான் இருந்தது. மணி ஒன்றரை.

ஊரெங்கும் அமைதி. கனகசபையின் வீட்டில் மட்டும் மின்சார விளக்குகள் ஜேஜே என்று எரிந்து கொண்டிருந்தன. விருந்தினரில் பாதிப் பேர் கட்டைகளாய் விழுந்து கிடந்தாலும் மீதமுள்ளவர்கள் இரைச்சலிட்டுக் கொண்டிருப்பது கேட்டது.

சாப்பாடு முடிந்த பிறகு மறுபடியும் பாதாம்கிர் வழங்கப்பட்டதற்கான அடையாளங்கள் அங்கங்கே சிதறிக்

கிடந்தன. குட்டையாகத் தேங்கிக் கிடந்த அந்தத் திரவப் பொருளைத் தாண்டிக்கொண்டு அவன் அடுத்த அறையில் நுழைந்தபோது அந்த விநோதமான காட்சி எதிர்ப்பட்டது.

தாமோதரம் முகத்தில் ஆனந்தம் பொங்கிவழிய அமர்ந்திருந்தார். அந்தப் பெண்—அவர் ஒரு லேடி டாக்டர் என்று கோவிந்தனுக்கு ஏற்கனவே தெரியும்—தரையில் கிடந்த பழத் தோல்களைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு ஒவ்வொன்றாக அவர் தலையில் போட்டுப் பக்தி பாவத்துடன் அர்ச்சனை செய்து கொண்டிருந்தாள்.

''ஓம் பெனிசிலினாய நம ஓம். டெர்ராமைசினாய நம ஓம். போரிக் பௌடராய நம ஓம். குளோரோபார்மாய நம ஓம்''' என்று அவள் கணீரென்று உச்சரித்த மந்திரங்களைச் செவிமடுத்த கோவிந்தனுக்குக் கனகசபையின் மீது தலை காட்டிய கோபம்கூட மாயமாய் மறைந்துவிட்டது.

ஒரு கைத்தடியைத் தோள் மீது சாத்தியபடி ராணுவ நடை பயின்று கொண்டிருந்தவரின் தோளைத் தொட்டு, ''கனகசபை எங்கே, தெரியுமா?'' என்றான்.

அவர் மின்சார வேகத்துடன் சுழன்று கைத்தடியின் நுனியை அவன் மார்புக்கு நேராகப் பிடித்து, ''ஹாண்ட்ஸ் அப்''' என்று எச்சரிக்கப்போகிறார் என்பதை அவன் எதிர்பார்த்தானா என்ன? வாழ்க்கை மீது இன்னும் வெறுப்பு ஏற்படாத காரணத்தால் அவன் ஓட்டமெடுத்தான்.

கனகசபையை எங்கு தேடியும் காணவில்லை. கோவிந்தனுக்கு அலுத்துப் போய்விட்டது. நண்பனுடைய படுக்கையறைக்குள் புகுந்த பொழுது, விலையுயர்ந்த கட்டிலில் விரிக்கப்பட்டிருந்த தடித்த மெத்தை 'வா வா' என்று அழைத்தது. அடுத்தாற் போலிருந்த மேஜைமீது சில மருந்து சீசாக்களும் டப்பாக்களும் தென்படவே, தலைவலி மாத்திரை ஒன்றை எடுத்து விழுங்கிவிட்டுக் கனகசபையின் கட்டிலிடமே அவன் சரண் புகுந்து விளக்கை அணைத்தான்.

கனவுபோல் பல காட்சிகள் அவன் முன் விரிந்த போதிலும் தான் தூங்கவில்லை என்பதை மட்டும் அவன் உணர்ந்திருந்தான். இல்லாவிட்டால் கதவருகே நின்றபடி கனகசபை தாமோதரத்திடம் கிசுகிசுத்த சொற்

கள் அவன் காதில் விழுந்திருக்குமா? அல்லது அந்த இரு குரல்களும் அப்பால் விலகிய மறுவிநாடியே அவன் அசுர வேகத்தில் அந்த அறையை விட்டு வெளியேறியிருப்பானு?

இருளில் தட்டித் தடுமாறிக் கொண்டு கோவிந்தன் நடந்தான். மாடிக்குப் பின்புறத்தில் ஒரு படிக்கட்டு இருப்பதை அவன் ஏற்கனவே பார்த்து வைத்திருந்தது இப்போது பயன்பட்டது.

நான்கு படி இறங்கியிருப்பான். காலில் ஏதோ தட்டுப்பட்டது. கூர்ந்து கவனித்தான். எத்தனையோ மணி நேரத்துக்கு முன்பே, "போய் வருகிறேன்," என்று விடை பெற்றுக் கொண்டு கிளம்பிய இஞ்ஜினீயர் அல்லவா இவர்! மேற்படியில் காலையும் கீழ்ப் படியில் தலையையும் வைத்துக் கொண்டு அவர் தூங்கிக் கொண்டிருந்தார். சிறு நீர் நாற்றம் மூக்கைப் பொசுக்கிற்று. அவர் கழுத்துக்குக் கீழ் ஒரு கையும் கால்களுக்குக் கீழ் ஒரு கையும் கொடுத்துத் தூக்கி, மேல்தளத்தில் கிடத்திய கோவிந்தன் முகப்புக்கு வருவதற்கும் தாமோதரம், "டிரைவர், டிரைவர்!" என்று கூப்பிடுவதற்கும் சரியாக இருந்தது.

கோவிந்தன் ஒரு தூணுக்குப் பின்னுல் தன்னை மறைத்துக் கொண்டான்.

தாமோதரத்தின் அழைப்பை ஏற்றுக் கொள்ள அங்கு யாருமே இருந்ததாகத் தெரியவில்லை. போர்ட்டிகோவிலும் மரத்தடியிலுமாகப் பல வண்டிகள் பனியில் நனைந்தபடி நின்றிருந்த போதிலும் வண்டியோட்டி யாரையுமே காணேம்.

தாமோதரம் சுற்றுமுற்றும் பார்த்தார். பிறகு, வாசலில் நின்ற ஒரு கார் அருகே சென்று ஸ்டீயரிங்கின் நடுவில் விரலை வைத்து அழுத்தினுர்.

இந்த வாய்ப்பை நழுவவிடக் கோவிந்தனுக்கு விருப்பமில்லை. கலைந்திருந்த கேசத்தை மேலும் அலங்கோலப் படுத்திக்கொண்டு, கையிரண்டையும் மடக்கிச் சோம்பல் முறித்தபடி சற்றே குரலை மாற்றிக்கொண்டு, "பெரிய இழவாகப் போச்சு! மனுஷன் தூங்க வேண்டாமா?" என்று எரிச்சலோடு கேட்டான்.

இருளில் அவன் முகம் அவருக்குச் சரியாகத் தெரியவில்லை.

"கோபித்துக் கொள்ளாதே தம்பி. ஐந்து நிமிடத்தில் திரும்பிவிடலாம். புறப்படு," என்று காரில் ஏறிக்கொண்டார் தாமோதரம்.

நல்ல காலம், கார்ச் சாவி வண்டியிலேயே இருந்தது.

கோவிந்தன் காரைக் கிளப்பினுன், "எங்கே போகட்டும்?"

"எங்கள் வீடு தெரியுமல்லவா?"

"தெரியாதே!"

"நீ போ. நான் வழி சொல்கிறேன்."

அதற்கு மேல் உரையாடலைத் தொடர கோவிந்தன் விரும்பவில்லை. போதையினின்று தாமோதரம் வேகமாக விடுபட்டுக் கொண்டிருப்பது நன்ருகத் தெரிந்தது. அவனை அடையாளம் கண்டுகொண்டு விட்டால்?

"இங்கேதான்! அந்தக் கட்டை வண்டி நிற்கிறதே. அதற்கு அடுத்த வீடு."

தாமோதரம் கீழே இறங்கி, "மங்களம்...மங்களம்!" என்று அழைத்தபடி கதவைத் தட்டினுர்.

அந்தக் கதவைக் காட்டிலும் கோவிந்தனின் நெஞ்சு அதிகமாக அதிர்ந்தது.



கடமுட

டாக்டர்: நன்ருய் நினைவுபடுத்திச் சொல்லுங்கள். கடைசியாகக் கடம் வாசித்துவிட்டு அதை வெளியேதான் வைத்தீர்களா?



# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## பதின்மூன்று

ஆவல், கோவிந்தனை அமைதியுடன் உட்கார்ந்திருக்க விடவில்லை. என்றைக்கும் இல்லாத முறையில் அவன் உள்ளம் இப்படிப் படபடவென்று அடித்துக் கொள்வானேன்? காரின்று இறங்கி, தாமோதரத்தைக் கவனித்தான்.

மங்கலாக எரியும் தெரு விளக்கு, கதவைத் தட்டிக் கொண்டிருக்கும் அந்த உருவத்தைச் சுவரில் கோணலாகவும் பயங்கரமாகவும் வரைந்திருந்தது.

''மங்களம்! என்ன பண்ணிக்கொண்டிருக்கிருய்? திற!''

அவரைப் பார்க்கப் பார்க்க, சில நிமிடங்களுக்கு முன்னல் கனகசபை அவர் காதிற்குள் கிசுகிசுத்த சொற்கள் கோவிந்தனின் நினைவை இன்னும் பலமாக நிமிண்டின. எப்பேர்ப்பட்ட கட்டை, கனகசபையுடையது! கோவிந்தனுடைய உடல் புல்லரித்ததற்கு, மழைபோல் கொட்டிய பனி மட்டுமே காரணமாக இருந்திருக்க முடியாது. இவ்வளவுக்கும், கனகசபையின் மீதோ, தாமோதரத்தின் மீதோ அவனுக்குக் கோபம், அருவருப்பு துளி இருக்க வேண்டுமே? உலகத்தில் இந்த மாதிரி சம்பவங்கள் வெகுசாதாரணம் என்று அவன் முடிவு கட்டி, ஊருடன் ஒத்து வாழ்வதே இன்பம் என்று தீர்மானித்து விட்டிருந்தான். மகாத்மாக்கள் ஒரு பக்கம் மின்னிக் கொண்டிருக்க, மறுபுறம் சாக்கடைப் பெருச்சாளிகள் இருளில் கும்மாளமிட்டுக் கொண்டுதானிருக்கும் என்ற உண்மையை அவன் எப்போதோ ஒப்புக்கொண்டு, ஜீரணித்து, ரத்தத்தோடு ரத்தமாகக் கலக்கவிட்டிருந்தான். பூசாரியையும் கொடுவாளையும் நொந்து கொள்ள அவன் தயாராக இல்லை. ஆனல் அந்தப் பலி ஆடு? அதை எண்ணிப் பார்க்கும்போது தான் கோவிந்தனுடைய உள்ளம் நடுங்கிற்று.

ஒரு வழியாகத் தாமோதரத்தின் மனைவி கதவைத் திறந்ததும், அவர் அவசரமாக உள்ளே நுழைந்தார். தம்பதிகளின் பேச்சு கோவிந்தனின் காதில் தெளிவாக விழவில்லை. ஆனல் அதைச் செவியுருவிடில் மண்டை வெடித்துவிடும் போலிருந்தது அவனுக்கு. அங்குலம் அங்குலமாக முன்னேறி, சந்துப் பக்கமிருந்த சாளரத்தை நெருங்கினன். கணவனும் மனைவியும் அருகருகே நின்றுகொண்டு தரையைச் சுட்டிக் காட்டிப் பேசிக் கொண்டிருந்தார்கள். எங்கும் குழந்தை மயம்! அந்தக் கும்பலின் நடுவே, வைர மாலைபோல் கிடந்தாள் பாப்பா. மாசு மறுவற்ற அவள் வதனத்தைக் கண்டதும், நிலவொளியில் மலைக் காற்றைச் சுவாசிப்பதுபோல் இன்புற்றுன் கோவிந்தன். பரிவிலே நெகிழ்ந்த அவன் உள்ளம், சோகத்திலே நனைந்து, அடுத்த வினடியே ஆத்திரத்தில் திண்மை எய்திற்று.

ஆழ்ந்த உறக்கத்திலே புன்னகை செய்து கொண்டிருக்கும் பாப்பாவின் ரோஜா இதழ்களில் தன் கருத்தைப் பறிகொடுத்துவிட்ட காரணத்தாலோ என்னவோ, கோவிந்தன் கவனிக்கத் தவறிவிட்டான் மங்களத்துக்கும் அவள் கணவனுக்கும் நிகழ்ந்த உரையாடலை. அவர்களது இரு குரல்களும்

போட்டி போட்டுக்கொண்டு ஏறிக்கொண்டிருந்தன, காரத்திலும், தொனியிலும்.

"எருமை மாடு! கிட்ட வந்த சீதேவியை எட்டி உதைக்கிறேன் என்கிறாயே, உனக்கு அறிவிருக்கிறதா?" என்று இடித்துக் காட்டிய தாமோதரத்தின் மீது எரிந்து விழுந்தாள் அவர் மனைவி.

"உங்களுக்குத்தான் அறிவில்லை. குடித்துவிட்டு வந்து உளறுகிறீர்கள்," என்று அவள் மூக்கைப் பிடித்துக் கொண்டபோது, கோவிந்தனுக்குச் சற்றுத் தெம்பு பிறந்தது. அப்படியானால், மங்களம் தன் கணவனைப் போல் அவ்வளவு தரங்கெட்டவள் இல்லை போலிருக்கிறதே!

"கூச்சல் போடாதேடி, முண்டம்! காரிலே டிரைவர் உட்கார்ந்திருக்கிறான்." ஜன்னல் கம்பிகளிடையே முகத்தைப் பதித்திருந்த கோவிந்தன் சட்டென்று பின்வாங்கினான்.

"அவனைப் போகச் சொல்லிவிட்டுப் பேசாமல் வந்து படுங்கள்; உடம்பெல்லாம் நோகிறது."

"இந்த மட சாம்பிராணிப் பேச்சுத் தானே உதவாதென்கிறது? நாளைக்கு அந்தக் கனகசபை மூஞ்சியில் நான் முழிக்க வேண்டாமா?"

முந்தானையை விரித்துக் கதவு நிலையில் தலைவைக்க ஆயத்தமானாள் மங்களம். அவள் குரலும் தாழ்ந்தது. "இதோ பாருங்கள். ஐம்பது நூறுக்கு ஆசைப்பட்டு வயிற்றில் மண்ணைக் கொட்டிக் கொள்ள எனக்குச் சம்மதமில்லை. நான் உங்கள் பின்னோடு வந்து இது வரை பட்டபாடு ஏழேழு ஜன்மத்துக்குப் போதும். என்னை ராணியாட்டம் வைத்திருந்தார் அந்தக் கிழவர். இங்கேயோ? வருடம் தவறாமல் குட்டி போட்டதுதான் மிச்சம். ஏதோ, நான் செய்த புண்ணியம், பாப்பா ஒருத்தி பிறந்திருக்கிறாள். இருக்கிற அழகுக்கு, ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதித்துக் கொட்டப் போகிறாள். பார்த்துக் கொண்டே இருங்கள்!"

தாமோதரம் அவள் காலடியில் உட்கார்ந்தார். "இந்தக் கனகசபை இருக்கிறானே, அவன் நம் பாப்பாவுக்குக் கனகாபிஷேகமே செய்யத் தயாராக இருக்கிறான், மங்களம். அப்பேர்ப் பட்டவனுடைய கோபத்தை எடுத்த எடுப்பிலேயே சம்பாதித்துக் கொள்வது நல்லதா? நீயே சொல், மங்களம்! சும்மா தைரியமாகக் குழந்தையை அனுப்பு. காட்டுகிற முறையில் காட்டி நலுங்காமல் கூட்டி வந்து விடுகிறேன். ஒரு பயல் கைவைக்க முடியுமா, அவன் மேலே?"

"ஆகாகா!" என்று அலுக்கழித்தாள் மங்களம். "புலிதான் போங்கள்! உங்கள் சாமர்த்தியத்தைத்தான் பொழுது விடிந்தால் பொழுது போனால் பார்த்துக் கொண்டே இருக்கிறேனே! நான் சொல்வதைக் கேளுங்கள். எதற்கும் ஒரு முறை இருக்கிறது. பாப்பா இன்னுக் கிரையல்ல, உங்கள் மிராசு தார் நினைத்த உடனே அடைவதற்கு. கொஞ்ச நாள் போகட்டும். போட்டிக்கு அந்தக் கோவிந்தன் ஒருவன் இருப்பதை மறந்துவிட்டீர்களா? கனகசபை ஆயிரம் தருவான் என்றால் அவன் இரண்டாயிரம் கொடுக்கத் தயங்க மாட்டான். போங்கள். போய், ஏதாவது சாக்குச் சொல்லி வையுங்கள். அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்."

மங்களம் திரும்பிப் படுத்துக் கொண்டாள். கோவிந்தனுடைய வயிற்றில் என்னவோ செய்தது.

மங்களம், பதிக்கு ஏற்ற பத்தினி தானா? அவரைவிட அவள் திறமைசாலி, பொறுமைசாலி என்பதைத் தவிர, குணத்திலோ கொள்கையிலோ இருவரும் ஒரே ரகம்தானா? இருவருமே பண்பைக் காட்டிலும் பொன்னை, மனிதத் தன்மையைக் காட்டிலும் மிருகத்தனத்தை விரும்புகிறவர்கள்தானா? கோவிந்தனுக்கு நா வரண்டது.

அதே சமயம், "நீ வழிக்கு வரமாட்டாய், இல்லையா?" என்ற முழக்கம் அவன் செவிகளைத் தாக்கிற்று. ஆனால் மங்களம் தன் கணவனின் உறுமலை மதிக்கவே இல்லை. அவர் கொஞ்சநேரம் அவள் முதுகை எரித்து விடுபவர் போல் நின்று முறைத்துவிட்டுத் திரும்பினார். இதற்குள் கோவிந்தன் விரைந்து, கதவு திறக்கப்படுமுன் காரை அடைந்துவிட்டான்.

"போகலாமா சார்?" இப்போதைக்குக் கண்டம் தப்பினது பற்றி அவனுக்குத் திருப்தி. பொத்தானை அழுத்தப் போன அவன் கரத்தைப் பிடித்து நிறுத்தினார் தாமோதரம். இருட்டில் அவர் முகம் அவனுக்குச் சரியாகத் தெரியவில்லை.

"டிரைவர்!" என்றார் அவர். "சார்?" என்றான் கோவிந்தன். கொ ஒன்று ரீங்காரமிட்டு அவன் கா

நுனியில் உட்கார்ந்தது. அதைத் தட்ட வேண்டும் என்ற நினைவுகூட இல்லாத வனாய், தாமோதரத்தின் வார்த்தை களுக்காகக் காத்திருந்தான் அவன்.

''எனக்கு ஓர் உதவி பண்ணு வாயா?''

''என்ன பண்ணணும்?''

அவர் தணிந்த குரலில் ஏதோ சொன் ஞர். அவனுக்குப் பகீரென்றது. அவர் வாயிலிருந்து வந்த நெடியைத் தோற் கடிப்பதாயிருந்தது, அதனின்று வெளிப்பட்ட யோசனை.

''அந்த வம்பெல்லாம் நமக்கு வேண் டாம்,'' என்று அவன் ஆணித்தரமாக மறுத்தபோது, அவன் நடிக்க வேண் டிய தேவையே இருக்கவில்லை. நெஞ் சைப் பொத்துக் கொண்டு வந்தது வாக்கியம்.

''தம்பி,'' என்று தாமோதரம் கெஞ் சினர். ''மிராசுதாரிடம் கேட்டு நூறு ரூபாய் இனும் வாங்கித் தருகிறேன் உனக்கு. நூறு ரூபாய்!''

''கோடி ரூபாய் தந்தாலும் நடக் காது அந்தப் பேச்சை விடுங்கள். புறப்படட்டுமா?''

தாமோதரம் ஜிப்பாவைத் தூக்கி இடுப்பில் தேடினர். பிறகு ஒரு காகிதத்தை அவன் கையில் திணித்து, ''இப்போதைக்கு இதை வைத்துக் கொள். பாக்கி நாளைக்கு,'' என்ருர். பத்து ரூபாய் நோட்டை அவன் திரும்ப எறியாமல் யோசனையில் ஆழ்ந்துவிட்டதைக் கண்டதும், அவ ருக்கு நம்பிக்கை துளிர்த்தது போலும். தூண்டில் முள்ளை மீன் வலம் வருகிறது என்ற மகிழ்ச்சியில், ''தூக்கக் கலக்கம், பாவம், வீட்டிலே புரியாமல் இடக்குப் பண்ணுகிருள், வேறென்றுமில்லை. பயமே வேண் டாம். கனகசபை உன் மேல் எவ்வளவு சந்தோஷப் படப்போகிருர் தெரியுமா? ஊம், சரியென்று சொல்லு.''

கனகசபை! அந்தப் பெயர் கோவிந் தனின் இதயத்தில் ஓர் இனிய ஓசையை மீட்டிற்று. ஆருயிர் நண்பன் அல் லவா அவன்? தனக்காக அவன் எது தான் செய்யமாட்டான்? பாப்பாவிடம் கோவிந்தனுக்கு உள்ள பற்றுதல் அவ னுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. தெரிந்திருந்தால், குடிபோதையால் தூண்டப்பட்ட ஓர் அற்ப ஆசையைத் தீர்த்துக் கொள்வதற்காக அவனைக்





றிற்று. பாப்பா வின் பெற்றோரைப் பற்றியும் அவனுக்கு வருத்தமில்லை. அவர் கள் மானத்தைப் பெரிதாக மதிக்க வில்லை என்றால், வறுமை காரணம். அவர்களுக்கு வேண் டியது பணம்தானே? அள்ளிக்கொடுக் கத் தயார்-பாப்பாவின் கணவன் என்ற முறையில்; அவளை வேறு விதத்தில் அவர்கள் உபயோகிக்கநினைத்தாலோ... அவன் பல்லை நற நறவென்று கடித்த தைக் கண்டு தாமோதரம் பயந்துவிட் டார் போலும்.

கூட்டி வரச் சொல்லியிருப்பானா? அவன் பரந்த உள்ளம் படைத்தவன். உண்மை தெரிந்ததும், தீயை மிதித்த வன்போல் ஒதுங்கிவிடுவான். அத்து டன் நிற்பானா? தாமோதரத்திடம் ஓர் அதட்டல் போட்டு, "நீயோ உன் மனைவியோ கோவிந்தனுக்கும் பாப்பாவுக்கும் குறுக்கே நின்றால் தொலைத்துவிடுவேன் தொலைத்து!" என்று எச்சரிப்பான். அந்தக் காட்சி யைக் கற்பனை செய்து பார்க்கும்போது அவன் மனத்துக்குள் ஆனந்தம் குமு

"என்ன தம்பி?" என்றார், கர கரத்த குரலில்.

"உங்கள் இஷ்டம்," என்று காரின் கதவைத் திறந்தான் அவன்.



''எங்கே உன் மகனைக் காண்பதில்லை?''
''காலேஜுக்குப் போய்விடுகிறானம்மா.''
''காலேஜுக்கா...?''
''ஆமாம்மா, வக்கீல் பெண்ணுக்குச் சாப்பாடு கொண்டு போகுது!''

தாமோதரத்தின் வாயெல்லாம் பல்லாக இருந்தது. குதூகலம் பொங்க, "எங்கேயும் போய் விடாதே. நான் கூப்பிடுகிறபோது வரலாம்," என்று எச்சரித்துவிட்டு, ஓசைப்படாமல் வீட்டுக்குள் நுழைந்தார். தனது சொல்லைக் கணவர் தட்டமாட்டார் என்ற தைரியத்திலும், கனகசபை வீட்டுக்கு வெறும் கையுடன் திரும்பத் தைரியமில்லாமல் காரை அனுப்பிவிட்டுப் படுக்கையில் வந்து விழுவார் என்ற நம்பிக்கையிலும், மங்களம் கதவுக்குத் தாழ் போடவில்லை போலும்.

கோவிந்தன் காத்திருந்தான் வண்டியில். நேரம் ஓடவேயில்லை. முழங்கையை ஸ்டீயரிங்கில் ஊன்றியபடி தலைக்கு முட்டுக் கொடுத்துக்கொண்ட போது உரக்க ஒலிப்பதுபோல் தோற்றிய நாடித் துடிப்பு அவனுடைய திகிலின் முனையை இன்னும் கூர்மையாக்கிற்று. ஒவ்வொரு விநாடிப் பொழுதும் அவன் முன்னால் வந்து நகருவேனா என்று நையாண்டி செய்தது. இந்தத் தாமோதரம் எப்போது வந்து தொலைக்கப் போகிறார்?

கோவிந்தன் தெருவை ஒரு கண்ணோட்டம் விட்டான். கோடியிலிருந்து கிளம்பிய நாயின் ஊளை அவன் முதுகுத் தண்டைச் சில்லிடச் செய்தது. எங்கும் நிழல்கள், நிழல்கள்! ஒவ்வொரு நிழலுக்குப் பின்னாலிருந்தும், ஒரு ஜோடி கூரிய கண்கள் தன்னைத் துருவுவதுபோல் அவனுக்குத் தோன்றிற்று.

வெகுநேரம் கழித்து, சத்தம் செய்யாமல் வந்த தாமோதரம் அவன் கையைப் பிறாண்டியது அவனைத் தூக்கி வாரிப் போட்டது. சமாளித்துக் கொண்டு அவரைப் பின் தொடர்ந்தான். அடிமேல் அடிவைத்து இருவரும் வீட்டுக்குள் புகுந்தனர். மங்களம் வாயைப் பிளந்தபடி குறட்டை விட்டுக் கொண்டிருந்தாள். சொந்த வீடாகையால், தாமோதரம் சிறிதும் அச்சப்படக் காரணம் கிடையாது. கோவிந்தனுக்கோ, ஆளுக்கொரு திசையில் தலை வைத்துத் தூங்கும் குழந்தைகளைக் கடக்க இயலவில்லை. பிஞ்சுக் கரம் எதையும் மிதித்து விடுவோமோ என்ற பயம் வேறு.

அவன் கதவருகிலேயே தங்கி விட்டான். பாப்பாவின் அருகில் சென்ற தாமோதரம் இரண்டு மூன்று முறை சாடை காட்டி அவனை அழைத்த போதிலும், அவன் தயங்கித் தயங்கி நிற்க வேண்டியதாயிற்று. தாமோதரம் குனிந்தார். நெட்டையான பேர்வழியாகையால், எவ்விதச் சிரமமின்றிப் பாப்பாவை இரண்டு கைளிலும் அள்ளியவராய், அனுபவத்தில் பிறந்த லாகவத்தோடு, படுத்திருப்பவர்கள் யாருக்கும் எவ்விதச் சேதத்தையும் உண்டு பண்ணாமல் கதவை அடைந்தார். அது, இரண்டு மடல்களுடைய கதவு. ஒன்று சாத்தியிருந்தது. தாழ்ப்பாளை நீக்குமாறு அவர் சைகை மூலம் அவனுக்குச் சுலபமாகத் தெரிவித்து விட்டாரே தவிர, அவர் உத்தரவை நிறைவேற்றுவது கோவிந்தனுக்கு அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. அவன் எக்கி எக்கிப் பார்த்தான். அது தாமோதரத்துக்கு என்று குறிப்பாகச் செய்யப்பட்ட கதவோ என்னவோ, தாழ்ப்பாளின் குமிழுக்கும் அவன் நடுவிரலின் நுனிக்கும் இடையில் மூன்று அங்குலத்துக்கு மேலிருந்தது. நேரத்தை வீணாக்க விரும்பாத தாமோதரம், தாழை நீக்கும் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொள்ளும் பொருட்டுச் சுமையை அவனிடம் ஒப்புவித்தார்.

# சுருசுருப்புக்கு புத்துணர்ச்சிக்கு உற்சாகத்திற்கு

வயோதிக உணர்ச்சி. சோர்வு. மற்றும் பலஹீனம் மேலிட்டு உங்கள பாலியத்தில் அனுபவிதததைப்போல் இளமையை அனுபவிக்க முடியவில்லையா? அப்படியென்றால. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் சென்று, வை–டாப்ஸ் (Vi-Tabs) வாங்குங்கள இந்த நவீன மருந்து துரிதமாக வேலை செயது உங்கள் உறுப்புக்களை ஊககுவித்து. உங்களை யௌவனமாகவும், பலசாலியாகவும், ஓடியாடி வேலை செய்ய ஆர்வமுள்ளவர்களாகவும் இருககத்தூண்டுகிறது. இதை விட்டு விட்டு பாலியத்திலேயே வயோதிக உணர்ச்சியடையாதீர்கள். இன்றே உங்கள் கெமிஸ்டிடம் வை-டாப்ஸ் (Vi Tabs) வாங்குஙகள் சீக்கிரமே இளமையுடன் இருங்கள் பூர்ண திருப்தி உங்களுக்கு நிச்சியமாக அளிககும்.

உங்கள் அபிமான தமிழ் மாதப் பத்திரிகை

# குண்டூசி

பொங்கல் புத்தாண்டு தினம் வெளி வருகிறது. பிரபல எழுத்தாளர்களின் சிறு கதைகள், தொடர் நாவல், திரைக்கதை வசனம், இயற்கை வர்ணப் போட்டோக்கள் இன்னும் பல புதிய அம்சங்களுடன்.

தனிப்பிரதி 75 நயே பைசே.
வருட சந்தா ரூ. 9-00

ஆசிரியர்:
குண்டூசி ராதாகிருஷ்ணன்

புரொப்ரைட்டர்ஸ்:
நடராஜா பப்ளிகேஷன்ஸ்
6, கான்ரான் ஸ்மித் ரோட்
சென்னை—6.

சென்னை நகர ஏஜெண்ட்:
நேரு நியூஸ் மார்ட்,
லஸ், சென்னை-4.




# அறிவிப்பு

சென்னையிலும், சுற்றுப் புறத்திலும் உள்ள பொதுமக்கள், வியாபார பெருமக்களின் சௌகரியத்தை முன்னிட்டு சென்னை தேவராஜ முதலித் தெருவில் உள்ள 111 என் கட்டிடத்தில ரூம் நெ. 10-ல் எங்கள் விற்பனை நிலையம் ஒன்று 16-12-57 முதல் செயல்பட்டு வருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

சென்னையில் உள்ள அன்பர்கள் இந் நிலையத்தில் எங்கள் தயாரிப்புகளைப் பெற்றுக் கொள்ளக் கோருகிறோம்.

**ஆர். எஸ். பதி அண்டு கோ.,**
(ஸ்தாபிதம்: 1909)

214 & 215, மேலமாசி வீதி,

த. பெ. எண் 99 — மதுரை.

—மதுரை பிரசுரம்

எப்பேர்ப்பட்ட சுமை அது! அவள் மேனி முழுவதும் சிலிர்த்தது. மூச்சின் விறுவிறுப்பும், நெஞ்சின் படபடப்பும் பன் மடங்காகப் பெருக, தூக்கத்திலே தோய்ந்திருந்த பதினைந்து வயதுப் பொக்கிஷத்தைக் கனவுடனும் பெருமையுடனும் அவன் ஏந்திக் கொண்டான். அவனது வாழ்க்கையில் அதுவரையும் எப்படி எப்படியோ நேர்ந்து அவனுக்குள் எங்கெங்கோ ஒளிந்திருந்த ஏமாற்றங்களும் துயரங்களும் இமைப் பொழுதில் மறைந்து விட்ட மாயத்தை அவன் உணர்ந்தான். அவனது கை மடிப்பில் அவள் கழுத்து இருந்தது. தலை சற்றே மல்லாந்திருந்தது. அந்த உதடுகள்! அந்த நாசியின் நேர்த்தி! அந்தப் புருவங்கள்! 'ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதிக்கலாம்' என்று மதிப்பிட்ட மங்களத்துக்குக் கண்ணிரண்டும் குருடு போலும். பாப்பாவின் உறுப்பு ஒவ்வொன்றுக்கும் கோடிப் பொன் கொட்டிக் கொடுத்தாலும் ஈடாகாதே! 'இரண்டு சாண் இருக்குமோ இருக்காதோ என்ற ஐயத்தை ஊட்டும் ஒடுங்கிய இடை' கால் விரல்களைக் கவனித்தான். சின்னச் சின்ன விரல்கள்! மருதாணி பூசிய மெல்லிய விரல்கள்! மறுபடியும் தாமோதரம் அவன் கையைப் பிறாண்டினார். அவன் காரண்டை வந்தான். வீட்டுக் கதவை மேலாகச் சாத்தி விட்டு வந்தவர், அடுத்தபடியாகக் காரின் பின்பக்கத்துக் கதவைத் திறந்து விட்டார். மெல்ல, பூப்போல அந்த மேன்மையான மேனியை அவன் ஆசனத்தில் படுக்க வைத்தான்.

கோவிந்தனுக்கு வானத்தில் மிதப்பது போலிருந்த காரணத்தால், கண்ணிமைக்கும் நேரத்தில் கனகசபையின் ஜாகையை அடைந்துவிட்ட மாதிரியிருந்தது.

அவர்கள் புறப்பட்டபோது இருந்த கார்களின் எண்ணிக்கை வெகுவாகத் தேய்ந்து விட்டிருந்தது. நினைவற்றுக் கிடந்தவர்கள் அத்தனை பேரையும் வண்டியிலேற்றிக் கனகசபை அவரவர் வீடுகளுக்கு அனுப்பியிருக்க வேண்டும்.

கார் நின்றதும், "தூக்கி வா!" என்று தாமோதரம் அவனிடம் கட்டளையிடுவார் என்று எதிர்பார்த்தது வீணாயிற்று. தன் பெண்ணைத் தானே எடுத்துக் கொண்டு, கனகசபையைச் சந்திக்கப் போகும் ஆவலோடு தாமோதரம் முன்னே நடக்க, மிட்டாய்க்காரனைப் பின்தொடரும் சிறுவனைப்போல் கோவிந்தன் அவரையொட்டி நடைபோட்டான்.

அங்கொன்றும் இங்கொன்றுமாகத்தான் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. தாமோதரம் நேரே கனகசபையின் படுக்கை அறைக்குச் சென்று, கட்டில்மீது பாப்பாவைக் கிடத்திவிட்டு, அவனிடம் ஏதும் கூறாமல் வேகமாக வெளிநடந்தார்.

என்ன காரணமோ தெரியவில்லை, இதுகாறும் இல்லாத திகில் கோவிந்தனுடைய மனத்தின் அடித்தளத்தில் நெளிய ஆரம்பித்தது. வேறொருவனுடைய கட்டிலில் — எவ்வளவுதான் சொற்ப நேரத்துக்காக இருந்தாலும் —அவனுடையபாப்பா படுப்பதாவது? அவளைத் தூக்கி, அருகிலுள்ள சோபா மீது கிடத்தலாமா என்ற அவன் யோசனையைக் காலடியோசை சிதைத்தது.

அறைக்குள் நுழைந்த கனகசபை ஒரு கற்றை நோட்டுக்களை விசிறி எறிய, விமானத்திலிருந்து தூவப்பட்ட விளம்பரச் சீட்டுக்கள் மாதிரிச் சிதறிய அவற்றைத் தாமோதரம் மண்டியிட்டுத் தரையிலிருந்து லபக் லபக் கென்று பொறுக்க, கோவிந்தன் "கனகசபை!" என்று அன்புடன் அழைத்தான்.

தள்ளாடிக்கொண்டே வந்த கனகசபை, அப்படியே நின்றான். நெற்றியைச் சுருக்கி, "யாரடா நீ?" என்று குழறினான். அவன் கண்கள் செக்கச் செவேல் என்று இருந்தன. அவனைப் பார்ப்பதற்கே பயமாக இருந்தது.

## நகரா முழக்கம்



ஒன்று, இரண்டு, மூன்று, நாலு...இதோ பார்! பதினைந்து எண்ணி முடிப்பதற்குள் நீ டிரஸ் செய்து முடித்துக் கொண்டு கிளம்பியாக வேண்டும்! சொல்லி விட்டேன், இல்லையோ, பதினாறு, பதினேழு என்று ஐம்பது வரை எண்ண ஆரம்பித்து விடுவேன்...

# சின்ன விஷயம்தான்

## விடைகள்

1. நற்கருணை.

2. கல்கத்தா. மிகச் சிறந்த இரண்டாவது துறைமுகம் சென்னை.

3. இருநூறு ஆண்டுகள். தமிழ் நூல்கள் அச்சிடத் தொடங்கப்பெற்ற காலத்தேதான் இப்போது காணப்படும் நிலையான வரி வடிவங்களைப் பெற்றன.

4. அல்ல. ஐரிஷ்காரர்.

5. உகா மரம்.
6. உதியன்.

7. அம்மையார் என்ற சொல்லே ஔவையார் என்று திரிந்ததாம். ஔவையார் என்பது இயற்பெயரல்ல.

8. ரவீந்திரநாத் தாகூர்.

9. முடியாது. எந்த நகர சபையின் வருமானத் திட்டத்தையும் அரசாங்கம் அங்கீகரிக்க வேண்டும்.

10. உண்டு. ஆனால் அந்த முட்டைகளிலிருந்து குஞ்சுகள் தோன்றாது.
11. ஐந்து ஜோடிக் கால்கள்.

12. சாதாரண உப்பில்,

13. பன்னிரண்டு.

14. (இ) பனை.

15. சரி.

16. மாயா காரியங்களைச் செய்வதில் வல்லவன் அவன்.

17. கோலம் போடவேண்டும் என்பதை.

18. பதினான்கு.

19. சுவிட்ஸர்லாந்து நாட்டில்,

20. 11.



## பதின்மூன்று

கோவிந்தனின் நெற்றியில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பி வழிந்து புருவங்களை நனைத்தன. கனகசபை அவனைப் பார்த்துக் கேட்ட அந்த முதல் கேள்வி, அவன் திட்டத்தின் அஸ்திவாரத்தையே ஓர் ஆட்டு ஆட்டி விட்டது.

திகில் தொண்டையை நெறிக்க, நண்பனின் தோள்களைப் பற்றிக் கொண்டு சற்றே உலுக்கினான். "கனகசபை! கனகசபை! என்னைத் தெரியவில்லை உனக்கு?"

போதைத் தீயால் ஏற்றப்பட்ட இரண்டு பந்தங்கள் முகத்தில் தக தக வென்று எரிய, கனகசபை தன் புருவங்களைச் சுளித்தபடி கூர்ந்து கவனிக்க முயல்வது தெரிந்தது.

கோவிந்தன் மூச்சைப் பிடித்துக் கொண்டு காத்திருந்தான். ஆவலே வடிவாக நின்ற அவன் உள்ளத்துக்குச் சந்தேகமும் நம்பிக்கையும் மாறி மாறி வண்ணம் பூசின. தன்னை இன்னாரென்று அடையாளம் கண்டுகொள்ள முடியாத அளவுக்குக் கனகசபை மயக்கத்தில் மூழ்கியிருப்பானேயாகில், ஆபத்தினின்று பாப்பாவைக் கரை சேர்ப்பது தான் எப்படி? கோவிந்தன் கைகளைப் பிசைந்தான். முன்பின் யோசியாமல் அவனை அழைத்து வந்த முட்டாள்தனத்தை நினைக்க நினைக்க, சுவரில் போய் முட்டிக் கொள்ளலாம்போல் தோன்றிற்று அவனுக்கு.

ஆனால், அந்த வெண் புறா! குச்சு வீட்டில், கிழிந்த பாயில், தாயின் பாதுகாப்பில் எவ்வளவு அமைதியாகப் படுத்து உறங்கினாளோ, அந்த உறக்கத்தைக் கனகசபையின் மாளிகையில், சித்திரக் கட்டிலில், தந்தையின் துரோகத்துக்கு உள்ளானது தெரியாமல் அதே அமைதியுடன் அனுபவித்துக் கொண்டிருந்தாள்.

"கனகசபை! நான்தான் கோவிந்தனப்பா, தெரிகிறதா?"

கரடிபோல் நின்று கொண்டிருந்த கனகசபையின் கண்களில் நினைவொளி பூப்பதுபோல் தோன்றிற்று.

அதையொட்டி, கைக் கடியாரத்தின் மீது பாய்ந்த அவன் பார்வை "ஆமாம், நீ இன்னும் தூங்கவில்லை? மணி இரண்டரை ஆகப் போகிறது?" என்ற வினாவாக வெளிப்பட்டது.

"அதுவா?" என்று ஆரம்பித்தான் கோவிந்தன், ஒரு புன்னகையை வரவழைத்துக்கொண்டு. தன்னை அடையாளம் கண்டு கொண்டுவிட்ட போதிலும், கனகசபை முகத்தில் ஏன் மலர்ச்சி ஏற்படவில்லை? குரலில் தோழமை தொனிக்கவில்லை? அடிக்கடி அவன் கண்கள் தன்னைக் கடந்து, கட்டிலுக்குத் தாவுகின்றனவே! கோவிந்தனின் அடிவயிற்றை ஏதோ கலக்கிற்று. தன்னைத் தாமோதரம் டிரைவராகப் பயன் படுத்திக்கொண்ட கதையை வேடிக்கையாக விவரித்தபடி, அவன் கனகசபையின் தோள் மீது கை போட்டு மெள்ளக் கதவை நோக்கி நகர்ந்தான். ஓநாய்க்கும் ஆட்டுக்கும் இடையில் குறைந்தபட்சம் ஒரு மூடிய கதவும், ஐம்பது அடி இடைவெளியும் இருந்தாலொழிய தன் படபடப்பு அடங்காதுபோல் அவனுக்குத் தோன்றிற்று.

ஆனால், இருவரும் கதவை அடைந்த போதுதான் கனகசபையின் மூளை எதிர்த் திசையில் வேலை செய்துகொண்டிருப்பது மற்றவனுக்குப் புரிந்தது.

"சரி சரி. பாக்கியை அப்புறம் பேசிக்கொள்ளலாம். மூன்று மணி நேரமாவது தூங்காவிட்டால் உடம்பு

என்ன ஆகிவிடாகும்? படுத்துக்கொள்," என்று ஒரு கையால் கோவிந்தனின் முதுகைத் தட்டியபடி, மற்றொரு கையால் கதவைச் சாத்தப்போனான் கனகசபை.

சாத்தியுமிருப்பான், அவன் முரட்டுப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்ட கோவிந்தன் ஒரு காலை இடையே நீட்டித் தடுத்திராவிடில்.

"'கனகசபை' எனக்கு நீ ஒரு உதவி செய்யவேண்டும்," என்று கெஞ்சினான் கோவிந்தன்.

அவனை மற்றவன் ஏற இறங்கப் பார்த்தான். "இப்போது என்ன அவசரம்? எல்லாம் காலையில் பார்த்துக்கொள்ளலாம்."

"வேண்டாம், கதவைச் சாத்தி விடாதே' பொறு. இது ரொம்ப அவசரமான விஷயம்!'' கோவிந்தனின் நா வறண்டது. "கனகசபை! அந்தப் பெண்ணை ஒன்றும் செய்யாதே, கனகசபை. நண்பன் என்ற முறையில் கேட்டுக்கொள்கிறேன். அவளை விட்டு விடு. தயவுசெய்து விட்டுவிடு."

ஒரு வினாடி கனகசபையின் முகத்தில் வியப்பு விளையாடிற்று. தொதவர்களுடைய மொழியில் கோவிந்தன் பேசியிருந்தாற்கூட அவன் அப்படிப் புரியாமல் திகைத்திருக்க மாட்டான். பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அவன் நெற்றி முடிச்சுக்கள் அவிழ்ந்தன.

"பாதாம் கீரில் மருந்தைச் சிறிது குறைத்துச் சேர்த்திருக்க வேண்டும். அது இன்னும் வேலை செய்கிறாற் போலிருக்கிறதே! போய்ப் படுத்துக் கொள் கோவிந்தா, காலையில் எல்லாம் சரியாகப் போய்விடும்."

"நீ நினைப்பதுபோல் நான் போதையில் பேசவில்லை, கனகசபை. தெளிந்த புத்தியோடுதான் பேசுகிறேன். நீயும் தெளிந்த புத்தியோடு கேட்கிறாய் என்ற நம்பிக்கையில்தான் பேசுகிறேன்." கோவிந்தன் அவன் கைகளைப் பற்றினான். "பாப்பாமேல் நான் உயிரையே வைத்திருக்கிறேன். அவளைப் பாழாக்குவது என் உயிரைப் பறிப்பது மாதிரி. போதுமா?"

கனகசபையின் உதடுகளை ஒரு புன்னகை அசைத்தது.

"பாப்பா எங்கே போய்விடப் போகிறாள்? காலைவரைக்கும் இங்கேதான் இருப்பாள். சற்று நேரம் கழித்து உன்னைக் கூப்பிட்டனுப்புகிறேன், போ. பண்டம் பிடித்திருந்தால் அதை உன்னுடன் பகிர்ந்து கொள்வதில் எனக்கு என்ன ஆட்சேபம்?'' என்று அவன் கூறி முடிப்பதற்குள், சகிக்க முடியாமல், "கனகசபை'' என்று கூவிவிட்டான் கோவிந்தன்.

அவன் காதில் விழுந்த ஒவ்வொரு சொல்லும் அவனைச் சித்திரவதை செய்த விதம், அவன் முகம் போன போக்கிலிருந்து தெரிந்தது.

"அவ்வளவு கேவலமாக நினைத்து விட்டாயா என் பாப்பாவை?'' என்று அவன் புண்பட்ட மனம் சவால்விட்ட போது, அதில் ஆத்திரம் குமுறிற்று. "அவள் குப்பைத் தொட்டியிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்ட எச்சில் இலை அல்ல, கனகசபை. அவள் மாணிக்கமாக்கும்' மதிப்புத் தெரிந்த ஒருவனுடைய முடியிலே ஜொலிக்கப் போகும் விலை மதிப்பற்ற மாணிக்கமாகும்!''

கனகசபையின் கண்களில் தெறித்த செம்மை இப்போது முகமெங்கும் படர்ந்துவிட்டது.

"இமிடேஷன் கல்லுக்கும் வைரத்துக்கும் இருக்கக்கூடிய வித்தியாசம் எல்லோருக்கும் தெரிந்து விடுவதில்லை,'' என்றான் அவன், குத்தலாக.

"சந்தேகம் என்ன?'' என்று சீறினான் கோவிந்தன். அவன் உடல் முழுவதும், மிளகாய் அரைத்துப் பூசினாற்போல் எரிந்தது. "கண்ணில்லாதவனிடம் வண்ணப் படத்தைக் காட்டுவதில் என்ன பலன்? பல்பொடி மடிக்க ஆயிற்று என்று சந்தோஷப் பட்டுக்கொள்வான்!''

கனகசபை பொறுமையை இழக்கவில்லை.

"தாமோதரத்தின் வீட்டுக்கு எத்தனை தடவை போயிருக்கிறாய்?'' அவன் குரல் அமைதியாக இருந்தது.

"இரண்டு மூன்று தடவை. ஏன்?''

"தாமோதரத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

"அயோக்கிய சிகாமணி என்று நினைக்கிறேன். இந்த உலகத்தில் நீதி என்று ஒன்று இருந்து, அதை வழங்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டால், அந்த மனிதருக்கு என்ன தண்டனை கொடுப்பேன் தெரியுமா? ஏழடி ஆழத்துக்கு ஒரு



தொட்டி தயாரிக்கச் செய்து, அதைக் கந்தகத் திராவகத்தால் நிரப்பி, அவரை அதில் தோய்த்துத் தோய்த்து எடுக்கும்படி சொல்வேன்!''

''அவருடைய மனைவியைப் பார்த்தாயா?''

''பார்த்தேன். அவருக்கு அவள் ஒன்றும் மட்டமில்லை.''

''இப்பேர்ப்பட்ட இருவருக்கும் பிறந்த பெண்ணையா நீ முத்தென்றும் மாணிக்கம் என்றும் தலையில் தூக்கிக் கொண்டு குதிக்கிருய்?'' கனகசபை ஏளனமாய்ச் சிரித்தான். ''உன்னிடம் நாடகம் ஆடியிருக்கிருர்கள், நீயும் ஏமாந்து விட்டாய். பதிவிரதைகள்



அப்படி ஒன்றும் சுலபமாகக் கிடைத்து விட மாட்டார்கள், கோவிந்தா!''

''கிடைத்து விட்டால்தான் அப்புறம் அவர்கள் பதிவிரதைகள் இல்லையே!'' என்று பதில் கொடுத்தான் மற்றவன்.

''சகதியில் உழல்கிற குடும்பம் அது. நீ சொல்கிறாய் என்பதற்காக நான் இந்தப் பெண்ணை விட்டுவிடுகிறேன் என்று வைத்துக்கொள். இவள் எவனுக்காவது வாழ்க்கைப்பட்டுக் குடும்பம் நடத்துவாள் என்று நினைக்கிறாயா?''

''சந்தேகமில்லாமல். அதற்கு நான் உத்தரவாதம் !''

அவனது ஆணித்தரமான மறுப்பைக் கேட்டுக் கனகசபை ஒரு விநாடி தம்பித்து நின்றான்.

பிறகு சமாளித்துக்கொண்டு, ''இவளைப் பெரிய ரம்பை என்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது. உலகம் தெரியாதவன்! எனக்குப் பழக்கமுள்ள பலர் இருக்கிறார்கள், அவர்களுடைய சுண்டுவிரல் நகத்தின் அழகுக்கு உன் பாப்பா காண மாட்டாள், தெரியுமா?'' என்றான் கனகசபை. ''தாமோதரத்துக்காக, போனால் போகிறாரே என்றுதான் நான் சம்மதித்தேன். என்னைச் சம்மதிக்க வைப்பதற்காக எத்தனை நாள் காக்காய் பிடித்து, எத்தனை தடவை குழையடித்து, எத்தனை முறை மன்றாடியிருப்பார் என்பது உனக்குத் தெரியாது.''

இம்முறை கோவிந்தன் ஏகத்தாளமாகச் சிரித்தான்.

''நீ கருணை வள்ளல் அல்லவா? பெரியமனசு பண்ணி அவரது பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டுவிட்டாய்!''

''ஆம். நீ பார்த்துக்கொண்டுதானே இருந்தாய்? நான் வீசி எறிந்த நோட்டுக்களைத் தாமோதரம் பொறுக்கிக்கொண்டு போனதை நீ கவனிக்கவில்லை? ஆயிரம் ரூபாய்!'' கனகசபை கட்டிலைச் சுட்டிக் கட்டினான். ''இன்னும் நாலு வருடம் போனால் தெருவில் நாதியற்று அலையப்போகும் இவளுக்கு எவன் கொடுப்பான் ஆயிரம் ரூபாய்?''

உதடுகள் துடிக்க, மூச்சு வாங்க, ''கனகசபை!'' என்று படபடத்தான் கோவிந்தன். ''ஆயிரம் ரூபாய்தானே கொடுத்தாய் நீ? அந்த உரிமைதானே நாக்கில் நரம்பின்றி உன்னைப்

பேசச் செய்கிறது? விடியும்வரை பொறுத்துக் கொள். ஆயிரத்துடன் இன்னொரு ஆயிரம் சேர்த்து இரண்டாயிரமாக உன் முன்னால் வீசி எறிகிறேன். இப்போது பாப்பாவை என்னிடம் ஒப்படைத்துவிடு!''

வழி மறித்திருக்கும் கனகசபையைத் தாண்டிக்கொண்டு அவன் அறைக்குள் நுழைய முயன்றான். ஆனால் அவன் எதிரில் நின்றது மனிதனாக இல்லை. மலையாக மாறிவிட்டிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் எரிமலையாக மாறிவிடக்கூடிய சின்னங்கள் வேறு காணப்பட்டன. ஆனால் அவை கோவிந்தன் இருந்த மனநிலையில் அவன் கண்களுக்குப் புலப்பட்டால்தானே?

''நில்!'' என்று உறுமினான் கனகசபை. ''இது பாப்பாவின் தகப்பனுக்கும் எனக்கும் உள்ள விவகாரம். வேறு யாருக்கும் உரிமையில்லை இதில் தலையிட!''

''போடு சக்கை!''

அறைக்குள்ளிருந்து வந்த அந்தக் குரல், மார்புடன் மார்பு உரசக் கதவருகே நின்றிருந்த இளைஞர் இருவருடைய கவனத்தையும் சட்டெனக் ஈர்த்தது.

''பாப்பா!'' என்று கூவினான் கோவிந்தன், ஆச்சரியத்தை அடக்க முடியாமல்.

ஆம். பாப்பாவின் குரல்தான் அது. ரவிவர்மாவின் சகுந்தலா பாணியில் ஒய்யாரமாகத் தலையைக் கையால் தாங்கியபடி அவள் கட்டில்மீது படுத்திருந்தாள். பக்கத்து மேஜை மீதிருந்த ஆப்பிள் பழம் ஒன்றை எடுத்து, இடது கையால் உயரத் தூக்கிப் போட்டுப் பிடித்து அவள் விளையாடிக் கொண்டிருந்தாள். செய்கையில் பதட்டமோ, கண்களில் பீதியோ, குரலில் நடுக்கமோ இம்மியும் இல்லை.

''நீ எப்போது விழித்துக் கொண்டாய்?'' என்றான் கோவிந்தன்.

''நான் எப்போது தூங்கினேன்?'' என்றாள் பாப்பா, தலைக்கு மேலேயிருந்த மின்சார விசிறியைக் கவனிப்பவள்போல்.

கோவிந்தனுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. ''இங்கே நாங்கள் பேசியதை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாயா?''

''இங்கே என்ன? வீட்டில் அம்மாவும் அப்பாவும் பேச ஆரம்பித்ததிலிருந்து நான் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்.''

''அட சுட்டி!'' என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டான் கோவிந்தன். அவளுடைய குறும்புத்தனமும், துணிச்சலும் அவனை பிரமிக்கச் செய்துவிட்டன. ஆரம்ப முதல் இவளுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது; இருந்தாலும், என்ன நடக்கிறது பார்ப்போம் என்று வாளா இருந்திருக்கிறாள்! அப்படியானால் ... அப்படியானால் ... அவன் அவளைத் தூக்கிக்கொண்டு காரில் கொண்டு வந்து வைத்தானே, அப்பொழுதும் அவள் விழித்துக்கொண்டுதானே இருந்திருக்கிறாள்? அவள் உறங்குகிறாள் என்ற நினைப்பில் அவன் அவள் வனப்பைப் பருகிக் கொண்டிருந்தபோது, கண்ணை மூடிக்கொண்டு துவண்டு விழுந்தாளே? பாசாங்குக்காரி!

தன் இன்ப நினைவுகளில் நீந்திக்கொண்டிருந்த கோவிந்தன், கனகசபை கட்டிலை நோக்கி அடியெடுத்து வைப்பதை அபபோதுதான் கவனித்தான்.

''கனகசபை!''

அவன் ஒரே தாவாகத் தாவிக் கனகசபையின் ஜிப்பாவைப் பிடித்து இழுத்தான்.

''குண்டு மாமாவை விட்டு விடுங்கள். அவரை நான் கவனித்துக்கொள்கிறேன்,'' என்றாள் பாப்பா, மேஜை மீதிருந்த கத்தியை லாகவமாக எடுத்து ஆப்பிளை நறுக்கிக்கொண்டே.

அவளுடைய அமைதி கோவிந்தனுக்குப் பலத்தைக் கொடுத்தது. ஜிப்பாவைப் பற்றியிருந்த விரல்களைத் தளர்த்தினான். ஆயினும், அசையாமல்

தின்று பாப்பாவைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருக்கும் கனகசபையின் தோற்றம் அவனுக்கு ஒவ்வொரு சமயம் நடுக்கத்தை உண்டாக்காமல் இல்லை.

ஆனால் பாப்பாவோ, இருவரில் யாரையுமே கவனித்ததாகத் தெரியவில்லை. தன் பாட்டுக்குப் பழத்தைத் துண்டு போட்டு ஒவ்வொன்றாகத் தின்று கொண்டிருந்தாள்.

வாயில் அடக்கிய ஓர் ஆப்பிள் துண்டால் கன்னம் உப்ப, "குண்டு மாமா! இனிக்கிறதே இந்தப் பழம்! உங்கள் பண்ணையிலே விளைந்ததில்லை போலிருக்கிறது?" என்றாள்.

கனகசபை பேசாமல் நின்றான். ஆனால் அந்த மௌனம் கோவிந்தனின் நெஞ்சில் பல சந்தேகங்களைக் கிளப்பி விட்டது.

"பாப்பா! வா, போகலாம்," என்றான், அந்த இடத்தை விட்டு எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் புறப்படுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது என்ற எண்ணத்தில்.

"நீங்கள் போகலாம்," என்றான் கனகசபை. "நீங்கள் போகலாம்—தாமோதரம் நேரில் வந்து ஆயிரம் ரூபாயைக் கக்கும் பட்சத்தில்!"

"இல்லாவிட்டால்?" என்றான் கோவிந்தன்.

"இவள் இந்த இடத்தை விட்டு ஓர் அங்குலம் அடியெடுத்துவைக்கமுடியாது. நீயும் அரை நிமிடத்துக்கு மேல் இந்த அறையில் நிற்க முடியாது."

"டபிள் ரைட்!" என்று ஆமோதித்துவிட்டு, ஓர் இளம் கொட்டாவியை ஒயிலாக விட்டாள் பாப்பா. "ஐந்து நிமிட அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள் இரண்டு பேரும் வெளியே போய் விடவேண்டும். தூக்கம் கண்ணைச் சுழற்றுகிறது."

அவள் வாய் மூடுவதற்கும், பக்கத்து அறையில் டெலிபோன் மணி ஒலிக்க ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது.

கோவிந்தனும் கனகசபையும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். ஆனால் இருவரில் யாருமே நகரவில்லை.

நிலைமை டெலிபோனுக்கு எங்கே புரியப் போகிறது? அது டிர்ரிங் டிர்ரிங் என்று இரவின் அமைதியைத் தன் கணீரென்ற குரலால் சிதைத்துக் கொண்டிருந்தது.

மணியோசை கேட்டதும் துள்ளத் துவங்கிய கோவிந்தனின் உள்ளம்,

கனகசபை பதுமைபோல் நிற்பதைக் கண்டதும் அடங்கி விட்டது.

“டெலிபோன்...” என்றான் அவன், நப்பாசையோடு.

“கேட்கிறது,” என்றான் கனகசபை, ரத்தினச் சுருக்கமாக.

எஞ்சியிருந்த பழத் துண்டை வாயில் போட்டுக் கொண்ட பாப்பா, சேலைத் தலைப்பால் கத்தியில் படிந்திருந்த ரத்தைத் துடைத்த வாறு, “கூர்மையான கத்தி,” என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

“கையை அறுத்துவிடப் போகிறது. இப்படிக் கொடுத்துவிடு,” என்று எச்சரித்தான் கனகசபை.

பாப்பா, கோவிந்தனை நோக்கி, “பார்த்தீர்களா? குண்டு மாமாவுக்கு என்மேல் எவ்வளவு அக்கறையென்று?” என்றான். “கத்தி என் கையை அறுத்துவிடப் போகிறதே என்று பயப்படுகிறார். அவரிடம் கொடுத்துவிடட்டுமா?”

“வேண்டாம்' கொடுக்காதே!” என்று கோவிந்தன் அலற, “கொடு,” என்று கனகசபை ஆவலுடன் கையை நீட்ட, பாப்பா உதட்டைக் குவித்துக் கொண்டு யோசனை செய்தாள்.

பிறகு, “உங்களுக்கு வேண்டுமா?” என்றாள், கோவிந்தனை நோக்கி. இம்முறை கோவிந்தன் முன் வர, மற்றவன் குறுக்கே நின்றான். “இது ஏதடா வம்பாகப் போய்விட்டது!” என்று முணுமுணுத்தாள் பாப்பா. “அவருக்குக் கொடுக்கப் போனால் இவர் தடுக்கிறார். இவருக்குத் தரப் போனால் அவர் தடுக்கிறார். என் கையில் வைத்துக் கொள்ளலாமென்றால் அது எனக்கே பிடிக்கவில்லை. அப்படியானால் மூன்று பேருக்கும் பொதுவாக ஒரு காரியம் செய்கிறேன்...”

கண் மூடிக் கண் திறக்குமுன் அவள் கையை வீச, கத்தி மேல் நோக்கிப் பாய, அடுத்த விநாடி, அறை முழுவதும் இருளில் ஆழ்ந்து போக, கல கல வென்று கண்ணாடி நொறுங்கும் ஓசை கேட்டது.

“பாப்பா!” இது கோவிந்தனின் குரல்.

“பாப்பா!” இது கனகசபையின் குரல்.

பாப்பாவின் குரல்?

அது மட்டும் கேட்கவில்லை. மையிருட்டில், பின்னாலிருந்தபடி தன் சட்டையை யாரோ பிடித்து இழுப்பது கோவிந்தனுக்குத் தெரிந்தது.

இதற்குள் கட்டிலை நெருங்கப்போன கனகசபையின் கால், குறுக்கே நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ஒரு முக்காலி மீது இடறிவிட்டது போலும். அவன், முக்காலி, முக்காலி மீதிருந்த பீங்கான் தட்டு, பூக் குவளை அனைத்தும் பல திறப்பட்ட ஓசைகளுடன் சரிந்து விழுந்தன.

“அப்பாடி,” என்று முனகினான் கனகசபை.

கோவிந்தனுக்கு நெஞ்சு படபடத்தது. சட்டையைப் பிடித்திழுத்த மென்மையான கரத்தைப் பின் தொடர்ந்தான்.

பாப்பா அறைக் கதவை ஓசைப்படாமல் சாத்தி, பித்தளை நாதாங்கியைக் கச்சிதமாகப் பொருத்தி விட்டு, கைகளிலிருந்த தூசியை தட்டிக் கொண்டே, “எப்படி?” என்றாள்.

“பிப்-பிப்-பிரமாதம்!” என்று அவள் காதிற்குள் கிசு கிசுத்தான் கோவிந்தன். “புறப்படு! சீக்கிரம்!”

*பிரயாண வரம்*

நீங்கள்,

இடிபடாமல் ஹாயாகப்

பிரயாணம் செய்ய வேண்டுமா?

நிற்க நினைக்கும் இடத்தில்

நிற்க வேண்டுமா?

இயற்கைக் காட்சிகளை

ஆர அமர ரசிக்க வேண்டுமா?

—குஷியாக நடந்து செல்லுங்கள்!




## பதினைந்து

“இந்தக் குரங்கைப் பாருங் கண்ணா, என் ரிப்பனைப் பறிச்சிட்டுத் தர மாட்டேங்குது. டேய் கோவி! அதைக் கொடுக்கப் போறியா இல்லையாடா?”

“இல்லை அண்ணா! சச்சுதான் என் மிட்டாயைத் திருடிட்டுத் தர மாட்டேங்கிறா. என் மிட்டாயைக் கொடுடீ!”

“கோவி பொய் சொல்றான் அண்ணா. ஏண்டா, நீயாத்தானே என் வாயிலே போட்டே?”

“வெவ்வெவ்வே.”

“இந்தா உன் மிட்டாய், தூ.”

“இது எனக்கு வேண்டாம். போ, முழுசா வேணும், மிட்டாய்.”

“டேய் கோவி! கோவி! ஐயையோ! என் ரிப்பனையும் சேர்த்து ரயிலுக்கு வெளியே எறிஞ்சிட்டானே! அண்ணா! அண்ணா!”

“இங்கே வாருங்கள் இரண்டு பேரும்! போக்கிரிகளா!” என்று செல்லமாக அழைத்தான் ரத்தினம்.

ஆனால் அதற்குள், எட்டு வயதுச் அக்காக்காரி, தன பல்லைக் கடித்துக் கொண்டு தம்பியின் தலையில் ஒரு குட்டு வைத்துவிடவே, குட்டுப்பட்ட கோவி என்ற கோபாலகிருஷ்ணன் தன் அலறல்களுக்கு இடையே சில பொறுக்கியெடுத்த மணிவாசகங்களால் சச்சுவின் ரூபலாவண்யத்தைை வர்ணிக்கத் தொடங்கி விட்டான்.

கைக்கு ஓரணாக் காசு வைக்கப்படும் வரை கோவி தன் குரல் வன்மையை ஆச்சரியப்படத்தக்க முறையில் காட்டிக் கொண்டிருந்தான். ஒட்டிக்கு இரட்டியாக ரிப்பன் வாங்கித் தரப் படும் என்ற உறுதிமொழி, சச்சுவின் ஆத்திரத்தை ஓரளவு தணித்தது.

“சம்பந்தத்தை எங்கே காணோம்?” என்று கேட்டான் ரத்தினம், கோவியின் கண்களைத் துடைத்தபடி.

தடுப்புப் பலகையிலிருந்த இடுவல் வழியாகப் பார்த்த சச்சு, “சம்பந்தம்! அண்ணா கூப்பிடுது பார்!” என்று அறிவிப்புக் கொடுத்தான்.

பதில் வரவில்லை.

ரத்தினம் எழுந்து எட்டிப் பார்த்தான். பெஞ்சில் கால்மேல் கால் போட்டபடி படுத்திருந்த பையன், ஏதோ ஒரு பத்திரிகை படிப்பதில் ஈடுபட்டிருந்தான்.

“சம்பந்தம்!” என்று ரத்தினம் அழைத்தபோது, “த்லோ” என்ற அலுப்புக் குறிதான் சிறுவனிடமிருந்து வந்தது. “இரு அண்ணா, இதோ வந்து விட்டேன்.”

"ஊர் வரப் போகிறது. இன்னும் இரண்டு ஸ்டேஷன்தான் பாக்கி." என்று ரத்தினம் பத்திரிகையை உதறிக் கட்டலானான்.

"ஊர் வரப் போகுது! ஊர் வரப் போகுது!" என்று கைகளைக் கொட்டிக் தட்டாமாலை சுற்றினான் கோவி.

"அதென்னடா உனக்கு அவ்வளவு சந்தோஷம்!" என்றான் ரத்தினம். ஆனால் உண்மையில் கோவியைக் காட்டிலும்கூட அவனுக்குத்தான் குதூகலமாக இருந்தது.

அந்தப் பெட்டியில் கூட்டமே இல்லை. வெளியே, சூரியனின் குணம் சாந்தத்திலிருந்து கொடுமைக்கு மாறிக் கொண்டிருந்தது.

சாமான்களை எல்லாம் அடுக்கி வைத்துவிட்டு ரத்தினம் உட்கார்ந்த போது, "ஏன் அண்ணா? இனிமேல் நாம் பட்டணத்துக்குத் திரும்பிப் போகவே மாட்டோமா?" என்றாள் சச்சு.

"இன்னும் ரயிலைவிட்டுக் கூடக் கீழே இறங்கவில்லை. அதற்குள்ளே உனக்குப் பட்டண ஞாபகம் வந்து விட்டதா?" என்று அவள் கன்னத்தைத் தட்டினான் ரத்தினம்.

"ஆம் அண்ணா, எனக்குப் பாப்பாவையும் மாணிக்கத்தையும் பார்க்க வேண்டுமென்று இருக்கு," என்றாள் சச்சு. "இந்தக் கோவிக்குப் பதிலா மாணிக்கத்தைக் கூட்டிட்டு வந்திருக்கலாம். அவன்தான் சமர்த்து."

கோவியின் கண்களில் கோபம் மின்னிற்று. "நீ ஒண்ணும் எங்களோட வர வேண்டாம். இந்த ரயில்லே திரும்பி மெட்ராசுக்குப் போயிடு."

ரத்தினம், "ஏன் கோவி, உனக்கு யாரையும் பார்க்க வேண்டுமென்று ஆசையாக இல்லை?" என்றான்.

"ஊஹூம்."

"அம்மா, அப்பா, ராஜாபாதர், பாப்பா ஒருத்தரையும்?"

"அவங்க யாருமே எனக்கு வேண்டாம். நான் ரத்தின அண்ணாவோடேயே இருந்திடப் போறேன்."

"ஏன் அப்படி?"

"அவங்கள்ளாம் சும்மா 'பள்ளிக்கூடத்துக்குப் போ, போ'ன்னு தள்ளுவாங்க. அவங்களை எனக்குப் பிடிக்காது."

"அப்படியா சேதி? என்னோடு இருந்துவிட்டால் பள்ளிக்கூடத்துக்கே போக வேண்டியிருக்காது என்று நினைத்து விட்டாயா?"

"நான் படிக்காட்டா அவங்க அடிப்பாங்க. அதனாலேதான்."

"அடிக்காவிட்டால் நீ படிக்க மாட்டாய் போலிருக்கிறது."

"படிக்காட்டாலும் நீ அடிக்க மாட்டே."

"அது எப்படி உனக்குத் தெரியும்?"

"எனக்குத் தெரியும்."

சச்சு ஊடே நுழைந்தாள். "நினைச்சிட்டிரு. அண்ணா உன்னை எப்படியெல்லாம் உதைக்கப் போகுது தெரியுமா? அண்ணா! இவனுக்குக் கொஞ்சம் இடம் கொடுத்தீன்னா அப்புறம் தலைமேலே ஏறி மேய ஆரம்பிச்சிடுவான். இவன் தொடையைக் கிள்ளி, காதைத் திருகி, கன்னத்திலே இடிச்சு, தலையிலே குட்டி—" என்று அவள் சுவைத்துச் சுவைத்து அடுக்கிக் கொண்டிருக்கும்போது கோவி திடீரென்று அவள்மீது பாய்ந்து அவள் கைகளில் பற்களைப் பதித்துவிட்டான். கையன் பிடி உடும்புப் பிடி. ரத்தினத்தின் விண்ணப்பங்கள், அதட்டல்கள், கெஞ்சல்கள் எல்லாம் வீணாயின. சச்சுவோ துடி துடித்துப் போனாள். இறுதியில், சம்பந்தம் எழுந்து வந்து தம்பியின் இரண்டு கன்னத்திலும் விரல் வைத்து, பலம் கொண்டமட்டும் அழுத்திய பிறகுதான், சச்சுவைத் தின்பண்டமாக்கும் முயற்சியைக் கைவிட்டான் கோவி. பிறகு சச்சுவுக்கு மேலே அவன் கத்த ஆரம்பித்து விட்டான்.

சம்பந்தமோ வேறொன்றும் பேசாது திரும்பவும் தன் இடத்துக்குச் சென்று பத்திரிகையை எடுத்து வைத்துக் கொண்டு விட்ட இடத்திலிருந்து படிக்கத் தொடங்கிவிட்டான்.

இருவரையும் சமாதானப் படுத்தும் வேலையில் ரத்தினம் மறுபடியும் இறங்க வேண்டியதாயிற்று.

ரத்தினம் பெருமூச்சு விட்டான். குழந்தைகளோடு நெருங்கிப் பழகும் அனுபவம் அவனுக்கு இதுவே முதலாவது. அவர்களுடைய விளையாட்டுக்கள் ஆரம்பத்தில் அவனுக்கு அடங்கா வியப்பையும் மகிழ்ச்சியையும் கொடுத்த போதிலும், அடுத்தாற்போல் களைப்பைத் தரவும் தவறவில்லை. சண்டையும் சமாதானமும்

[illegible] அவனுக்குத் துணை கொடுத்தது.

கோகிலா, ரத்தினத்தின் மடியில் தூங்கிப் போய்விட்டாள். சச்சு, உம்மென்று முகத்தை வைத்துக்கொண்டு உலகம் முழுவதுடனும் 'டூ' விட்ட தோரணையில் ஒரு மூலையில் போய் ஒடுங்கிவிட்டான். சம்பந்தம் பத்திரிகையை இன்னும் முடிக்கப் போவதாகத் தெரியவில்லை.

ரத்தினம் தன் உள்ளத்தில் பாரம் சுரப்பதை உணர்ந்தான். இந்த மூவரும் இனி அவன் பொறுப்பு. யாரும் கட்டாயப் படுத்தாமலிருக்கும்போது அவனாக ஏற்றுக்கொண்ட பொறுப்பு. ஆகவே அது ஒரு சுமையாகத் தோன்றாததில் ஆச்சரியமென்ன? ரயில் ஒரு வளைவில் திரும்பியதும், ஜன்னல்வழியே தாவிய வெய்யில் கோகிலாவின் பசுமையான முகத்தில் சுள்ளென்று தைத்தது போலும். சிறுவன் தலையை அசைத்தான். ரத்தினம், மெள்ளச்சாய்ந்து, மர ஜன்னல்களை எச்சரிக்கையுடன் இறக்கிவிட்டான். இருந்தும், அது கடைசியில் தட்டென்று ஓர் ஓசையை எழுப்பிவிட்டுத்தான் விழுந்தது. ரத்தினத்தை அறியாமலே அவன் உதடுகள் 'ச்சு, ச்சு' என்று குழந்தையைத் தேற்றின. கைகள் அன்புடன் முதுகை லேசாகத் தட்டிக் கொடுத்தன.

அவன் உள்ளம் நிறைவு கண்டது. அவன் தன்னுடைய வாழ்க்கையில் ஒரு பெரிய திருப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு விட்டான். அது வெளியில் யாருக்கும் தெரியாது. அவனுக்கும், மற்றொரு உள்ளத்திற்கும் மட்டுமே தெரியும். தீர்மானம், திடீரென்று ஏற்பட்டதல்ல. கிட்டத்தட்ட ஆறு மாத காலமாக அவன் நெஞ்சுக்குள் கிடந்து அலைமோதிய ஐயங்களும், சிந்தனைகளும், தயரங்களும் கடைசியாக ஒரு திட்டவட்டமான முடிவுக்கு அவனை அழைத்து வந்துவிட்டன.

செந்திலிடம் விஷயத்தை அறிவிக்கப் போனபோது, அவன் வேலையில் மூழ்கியிருக்கக் கண்டான். தொந்தரவு செய்ய விருப்பமில்லை. ஆகவே ஒரு சீட்டில், "சில நாள் ஓய்வு எடுத்துக்கொள்ளலாம் என்று எண்ணம். ஊருக்குப் போய் வருகிறேன்," என்று எழுதிக் கொடுத்தனுப்பிவிட்டுக் கிளம்பிவிட்டான்.

'ஊர்' என்று அவன் குறிப்பிட்டது [illegible] அது அவர்கள் சொந்த ஊரல்ல. படிப்பு முடிந்த சமயம் அவனுடைய அப்பா அங்கே கொஞ்சம் நிலம் வாங்கிப் போட்டிருந்தார். நல்ல செழிப்பான பூமி. பண்ணைக்கு நடுவே ஓர் ஓட்டு பங்களா உண்டு. வருடத்துக்கு ஒரு முறை—எப்போதாவது நினைத்துக் கொண்டால்—எல்லோரும் அங்கு போய்ப் பத்து பதினைந்து நாள் அமைதியாகத் தங்கிவிட்டு வருவது வழக்கம்.

ஆனால் 'சில நாள்' என்று ரத்தினம் எழுதியதற்குக் காரணம், அனாவசியப் பரபரப்பை உண்டு பண்ண வேண்டாம் என்பதே. அவனுடைய 'நாள்', இருபத்துநான்கு மணிகளைக் கொண்டதல்ல 365 இருபத்து நான்கு மணிகளைக் கொண்டது!

எப்படித்தான் அந்தக் குழந்தை உள்ளத்துக்கு அந்த எண்ணம் உதித்ததோ தெரியவில்லை. சச்சு 'இனி நாம் பட்டணத்துக்குத் திரும்பிப் போகப் போவதில்லையா?' என்று கேட்டு விட்டானே! ரத்தினத்தைப் பொறுத்த



"இன்றைக்கு அப்பாவிடப் 'பிராக்ரஸ் ரிப்போர்ட்' காண்பிக்க வேண்டும். முன்னெச்சரிக்கையாக கம்பு, கழி, விசிறிக்கட்டை முதலியவைகளைக் கண்ணில் படாமல் ஒளித்துவைக்க வேண்டும்."

"அதோடு, அம்மா இன்றைக்கு முருங்கைக்காய், வாங்காமலும் பார்த்துக்கொள்ள வேண்டும்!"

வரை, அதுதான் அவன் தீர்மானம். வெறுப்பிலோ, கசப்பிலோ, ஏமாற்றத்திலோ முளைத்த பிரசவ வைராக்கியமல்ல. ஆழ்ந்த யோசனையின் பயனாக உருவான ஆணித்தரமான முடிவு.

அவன் தங்கம்மாளுக்குப் பிறந்தவனல்ல. தாமோதரத்தின் கூற்று சரியென்று தங்கம்மாளே மரணப் படுக்கையில ஒப்புக்கொண்டு விட்டாள். அவன், வளர்ப்புப் பிள்ளை. அனாதை என்ற காரணத்தால் எடுத்து வளர்க்கப்பட்டவன். தங்கம்மாள் உயிரோடிருந்த வரைக்குமாவது குடும்பத்தில் ஒருவனாக வாழ்வதில் பொருளிருந்தது. இப்போதோ? எடுத்து வளர்த்தவர் இருவரும் போய் விட்டார்கள். பாசம் மறைந்து, பாகப் பிரிவினை சம்பந்தமான பேச்சுக்கள் தலையெடுக்கும் கட்டம். வீட்டுக்கும், தொழிலுக்கும், சொத்துக்கும் உடையவர்கள் கோவிந்தனும் செந்திலும்தான். தனது பிறப்பு ரகசியம் அவர்களுக்குத் தெரியாது என்ற சாக்கில் தனக்கு இல்லாத ஓர் உரிமையைக் கொண்டாடவோ, பயனை அனுபவிக்கவோ ரத்தினத்துக்கு எள்ளளவும் சம்மதமில்லை.

தன்னால் அவர்களுக்கு ஏதாவது ஒத்தாசையுண்டு என்றாலும் பரவாயில்லை. தன் துணையில்லாமலே தொழில் நடத்தச் செந்தில் கற்றுக்கொண்டு விட்டான் உடைத்துச் சொல்வதானால், அண்ணாவைக் காட்டிலும் தம்பியின் நிர்வாகத்தில் எத்தனையோ வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தது அவர்கள் தொழில். தன்னால் ஆக வேண்டியது ஏதுமில்லை என்றும் ஆகி விட்ட பிறகு அந்த வீட்டில் தான் வாழ்வது மோசடியாகப் பட்டது ரத்தினத்துக்கு.

சென்னை மண்ணை ரத்தினம் உதறிவிட்டுப் புறப்படும் பொழுது, கோவிந்தனிடம் சொல்லிக் கொள்ளவில்லை. அவன் ஏதாவது ஆட்சேபம் சொல்லித் தடுத்துவிட்டால்? அல்லது தானும் வருவதாகப் பிடிவாதம் செய்தால்? ஆனால் அந்தத் தர்மசங்கடத்தில் ரத்தினம் சிக்கிக் கொள்ளவேண்டிய சந்தர்ப்பமே நிகழவில்லை. கோவிந்தன் கண்ணில் தட்டுப் பட்டால் தானே? ரத்தினம் சென்ட்ரல் ஸ்டேஷனில் துளசியைச் சந்தித்ததற்கு மறு நாள் காலை—அதாவது ஒரு வாரத்துக்கு முன்பு—கோவிந்தனை அழைத்து, தாமோதரத்தின் வீட்டைக் குறிப்பிட்டு, குழந்தைகளுக்கு மிட்டாய் வாங்கிக் கொடுத்துவிட்டு அவர்கள் சௌக்கியத்தை விசாரித்து வரச் சொன்னான்.

அப்புறம் அன்று முழுவதும் கோவிந்தனைக் காணோம். மறு தினம் இருவரும் சந்தித்தபோது, இளையவன் மிகுந்த உற்சாகத்துடன் தென்பட்டான். தாமோதரத்தின் வீட்டுப் பட்டாளத்தைப் பற்றி ஆசை ஆசையாகக் கதைகள் சொன்னான். அவன் சொல்லச் சொல்ல, தன் உள்ளத்திலும் ஒரு கனிவு உண்டாவதை ரத்தினம் உணர்ந்தான். தாமோதரத்தின் வீட்டுக்கு அவன் விருந்துண்ணச் சென்றபோது, எப்போது இங்கிருந்து தப்பிச் செல்லப் போகிறோம் என்ற எண்ணமே மேலோங்கி நின்றது. ஆகவே, அந்த வீட்டிலிருந்த ஒவ்வொருவரும், அங்கு நடந்த ஒவ்வொரு சம்பவமும் அவனுக்கு அதிருப்தியையே தந்தது. இப்போது கோவிந்தனுடைய கண் கொண்டு நோக்கும்போது, ரத்தினத்தின் இயல்பான குணம் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது. அதே சமயம், சென்ட்ரல் ஸ்டேஷன் சிற்றுண்டிச் சாலையில் அவன் பண்ணின தீர்மானம் தானே ஒரு சிறு மாறுதலையும் செய்து கொண்டுவிட்டது. அதன் பயனாக, எதிர்காலத்தைப் பற்றிய தன் கற்பனை இன்னும் செறிவும் பொலிவும் பெற்று ஜொலிப்பதை ரத்தினம் கண்டான்.

தாமோதரத்தின் ஆழம் காணமுடியாத பேராசைகளைத் திருப்திப்படுத்தத் தன்னிடம் பணம் இல்லாதிருக்கலாம். அப்படியே இருப்பதாக வைத்துக்கொண்டாலும், தன்னிடமிருந்து கறக்கும் நோட்டுக்களை அவர் நல்ல வழியிலா செலவழிக்கப் போகிறார்? ஆனால் வேறு விதத்தில் தன்னால் அந்தக் குடும்பத்துக்கு உருப்படியான ஒத்தாசை செய்ய முடியும். கோவிந்தன் வர்ணித்த குழந்தைகளின் உருவங்கள் அவன் கண்முன் நின்றன. ஒன்றாவது சோடையில்லை. ஆனால் இந்தச் சூழ்நிலையில் அவற்றை விட்டுவைத்தால் அவர்கள் தாமோதரங்களாகவும் மங்களங்களாகவும் முதிர வேண்டியிருக்குமே தவிர, கல்வியும் ஒழுக்கமும் நிறைந்த உபயோகமுள்ள மக்களாக மலர முடியாது. ரத்தினத்துக்கு ஒரு

யோசனை உதித்தது. அவர்களில் சிலரை அந்தக் குடும்பத்திலிருந்து பிரித்து, தன் பாதுகாப்பின் கீழ் அவர் களை வளர்த்தால் என்ன?

அதன் பின்னர் வீட்டுப் பக்கமே 'கோவிந்தன்' தலைகாட்டவில்லை. அவ னுக்கு நெருங்கிய நண்பன் ஒருவன்—யாரோ மிராசுதாராம்—சென்னை வந் திருப்பதாகவும், அவனுடன் கோவிந் தன் சுற்றிக் கொண்டிருப்பதாகவும் காதில் விழுந்தது

ரத்தினம் தாமோதரத்தைக் கண்டு பேசக் கிளம்பினான். தனது திட்டத் துக்கு அவர் சம்மதம் தருவாரோ மாட் டாரோ? இந்த அச்சம் அவனை ஆரம் பத்திலிருந்து பின் தொடர்ந்து கொண் டிருந்தது. அதற்கேற்றாற்போல், தாமோதரம் வீட்டில் இல்லை என்று தெரிந்தவுடன் ஏமாற்றமடைந்தான்.

"எப்போது வருவார்?"

"நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. நிற்கிறீர்களே? உட்காருங்கள். தாகத் துக்கு ஏதாவது கொண்டுவரட்டுமா?" மங்களம் பரபரமாய்ச் சுழன்றாள்.

இரவு ரயிலில் புறப்பட வேண்டிய வன் ரத்தினம். மற்ற ஏற்பாடுகள் எல்லாம் செய்தான பின், பிரயா ணத்தை ஒத்திப் போடுவதென்பதோ நடவாது. ஆகவே வேறு வழியில்லா மல் மங்களத்திடமே விளக்கினான், தான் அவள் கணவரைப் பார்க்க வந்த காரியத்தை

கண்ணுக்குப் புலப்படாத ஒருவிதப் பரபரப்பு அந்த வீட்டில் நடமாடு வதை ரத்தினம் ஆரம்பத்திலேயே கவனித்திருந்தான் மங்களத்தின் கண் கள் சிவந்திருந்தன. ஏதோ சண்டைக் குப் போய் வந்தவள் மாதிரிக் காட்சி யளித்தாள். ஆனால், ரத்தினம் தன் எண்ணத்தை வெளியிட்டதும் அவள் முகம் மாறிற்று.

"இங்கே குழந்தைகளுக்கா குறைவு? தாராளமாகக் கூட்டிப்போங்கள். உங் கள் தம்பி தங்கைகளை அழைத்துப் போக உங்களுக்கு இல்லாத உரி மையா?" என்று மனப் பூர்வமாகச் சம்மதம் தந்ததோடு, தாமோதரத்தின் கருத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாமென்று சாதித்து, இரண்டு பையன்களையும் ஒரு பெண்ணையும் எங்கிருந்தோ தேடிப் பிடித்து வந்து அந்தக் கணமே அவன் கையோடு அனுப்பிவிட்டாள்.

ரயிலின் வேகம் குறைந்தது.

"கூ—த்—த—னூ—ர்' கூத்தனூர்!"

"கோவி! எழுந்திரு. ஊர் வந்து விட்டது." என்று மடியில் தலைவைத் துப் படுத்திருந்த சிறுவனை எழுப்பி உட்கார வைத்துவிட்டு, ஆவலுடன் ஜன்னலுக்கு வெளியே தலை நீட்டி னான் ரத்தினம்.

பிளாட்பாரத்தில், சற்று எட்ட நின்று கொண்டு, தன்னைக் கடந்து செல்லும் பெட்டிகளைக் கூர்ந்து கவ னித்துக் கொண்டிருந்த அந்தப் பெண், ரத்தினத்தின் கவனத்தைக் கவர்ந்து அவன் உள்ளத்தில் ஒரு படபடப்பை உண்டாக்கினாள்.

"துளசி!"

உரக்க அழைத்துவிட்டோமோ? ரத் தினம் ஒரு விநாடி கூச்சத்துக்கு ஆளா னான். மனம்தான் அப்படிக் கூவியி ருக்க வேண்டும். ஓசையாக வெளிப் பட்டிருந்தால், துளசி ஓடிவந்திருக்க மாட்டாளா? இறங்குபவர் மீது ஒரு கண்ணும், ரயிலுக்குள் உட்கார்ந் திருப்பவர் மீது ஒரு கண்ணுமாகப் பிளாட்பாரத்தில் நடந்து வந்துகொண் டிருக்கிறாளே!

தூக்கம் கலந்த கோவி, "சீக்கிரம் இறங்கிடுவோம் அண்ணு. ரயில் போயிடப் போகுது!" என்று சட்டையைப் பிடித்து இழுத்தான்.

அந்தக் கேள்வி ரத்தினத்தின் நெஞ் சில் இன்பம் பாய்ச்சிற்று.

"துளசி!" என்றான் உரக்க.

தூரத்தில் இருந்தபடி அவள் திரும் பிப் பார்த்தாள். அவள் முகத்தில் ஒளி வீசிற்று.

"அத்தான்?" என்று உதடுகள் உச் சரிப்பது ரத்தினத்திற்குத் தெரிந்தது.

"அது யார் அண்ணு? அண்ணியா?" என்று கேட்டான் சச்சு.



## குழாயடி

நேத்து நீங்க முதுகிலே குழாயை வைத்துப் பார்த் தீங்க இல்லையா? அப்போ பிடிச்சு அங்கேதாங்க வலிக் குது. இன்னைக்காவது குழாயைப் பலமாய் அழுத்தாமல் மெதுவாய் வையுங்க!



# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## இதுவரை...

கட்டிடத் தொழிலில் முன்னேறிக் கொண்டு வரும் ஒரு கம்பெனியின் தலைவன் ரத்தினம்.

அவனுக்குத் தம்பிகள் இருவர்: விளையாட்டுப் புத்தியுள்ள கோவிந்தனும், கெட்டிக்காரச் செந்திலும்.

அவர்கள் மாமா காலமாகிவிடவே, மூவரும் தம் தாய் தங்கம்மாளுடன் கோவை புறப்பட்டுச் சென்று, அனாதையாகிவிட்ட (மாமா பெண்) துளசியை அழைத்து வருகிறார்கள்.

கல்லூரி வகுப்புக்கள் முடிந்தபிறகு செந்தில் தினந்தோறும் ரகசியமாக அலுவலகத்துக்குச் சென்று அன்றாட வரவு செலவுகளுக்கு நகல் எடுத்து வருகிறான் என்ற உண்மையை அறிந்ததும் ரத்தினம் வருந்தி, தன் அனுமதியின்றி யாரும் கணக்குகளைப் பார்க்க முடியாதபடி ஏற்பாடு செய்கிறான்.

ஒரு நாள், தட்டெழுத்துக் கற்றுக் கொள்ள விரும்பிய துளசியை அலுவலகத்துக்கு அழைத்துச் செல்கிறான் ரத்தினம். பொறாமை காரணமாகவும், கணக்குகள் சம்பந்தமான புது ஏற்பாட்டினால் உண்டான கோபம் காரணமாகவும், செந்தில் ரத்தினத்தைத் தாறுமாறாகப் பேசுகிறான்.

இதற்கிடையில், அடிக்கடி அவர்கள் வீட்டுக்கு வந்து பணம் வாங்கிச் செல்லும் தாமோதரம் என்ற மர்ம மனிதருக்கு ஐயாயிர ரூபாய் கொடுக்குமாறு தங்கம்மாள் சொல்லியிருந்தாள். தாயைப் பற்றி அவதூறாகப் பேசவும் செந்தில் தயங்கவில்லை. இந்தத் தகராறின் விளைவாகத் தொழில் நிர்வாகம் செந்திலின் கைக்கு மாறுகிறது.

தாமோதரத்தின் மூலம் ரத்தினம் தன் பிறப்பைப் பற்றிய ரகசியத்தைத் தெரிந்து கொள்கிறான். தீ விபத்துக்குள்ளான தங்கம்மாள் மரணப்படுக்கையில் உண்மையை ஒப்புக் கொள்கிறாள். ரத்தினம் தாமோதரத்துக்கும் லட்சுமி அம்மாளுக்கும் பிறந்தவனாம். தாமோதரம் தறிகெட்டு அலைந்ததால் லட்சுமி காலமாகும் போது குழந்தை ரத்தினத்தைத் தன் சிநேகிதி தங்கத்திடம் ஒப்படைத்துப் போய்விட்டாளாம்.

ஒரு நாள் திடீரென்று துளசி யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பிவிடுகிறாள். ஆனால் . தற்செயலாக ரத்தினம் அவளைச் சந்திக்கிறான். இருவரும் புது வாழ்வு சமைக்கத் திட்டம் போடுகிறார்கள். அதன்படி துளசி எங்கேயோ புறப்பட்டுப் போகிறாள்.

தாமோதரத்துக்கு, மங்களம் இரண்டாவது மனைவி. குழந்தைகள் பல. அவர்களில் ஒருத்தியான பாப்பாவைக் கோவிந்தன் காதலிக்கிறான். கெட்ட நடத்தையுள்ள தாமோதரம் ரூபாய்க்கு ஆசைப்பட்டுப் பாப்பாவைக் கனகசபை என்ற மிராசுதாரிடம் ஒப்படைக்கப் பார்க்கிறார். கோவிந்தனும் பாப்பாவும் சாமர்த்தியமாக ஒத்துழைத்துக் கனகசபையை ஏமாற்றி விடுகிறார்கள்.

# பதினாறு

“துளசி,” என்றான் ரத்தினம், ரயிலிலிருந்து இறங்கியதும்.

அவள் புன்னகை செய்தாள். மேட்டிலும் பள்ளத்திலும்



படபடக்கும் வெய்யிலில் அலைந்து திரிந்து அவதிப்பட்டவனுக்குக் குளிர்ந்த சுனை நீர் எவ்வளவு இன்பத்தைத் தரும் என்பதை ரத்தினம் அந்த வினாடி புரிந்துகொண்டான்.

"திங்கட்கிழமையன்றே வருவீர்கள் என்று எதிர்பார்த்தேன்," என்றாள் துளசி.

"ஆமாங்க எசமான்." என்று சாட்சியம் கூறினான் அவனுடன் வந்திருந்த வண்டிக்காரன், சாமான்களை ரயிலிலிருந்து இறக்கி வைத்தபடி.

"நாலைந்து நாளாக நிதம் ரயிலடிக்கு ஒரு நடை வந்துபோயிட்டு இருந்தோமுங்க."

"உடனே புறப்படுவதற்குச் சாத்தியப்படவில்லை துளசி. 'இன்றைக்குக் கிளம்பிவிடலாம், இன்றைக்குக் கிளம்பிவிடலாம்' என்று ஒத்திப்போட்டுக்கொண்டே வந்ததால் ஒரு கார்டு கூடப் போட முடியாமல் போய் விட்டது." என்றான் ரத்தினம், மன்னிப்புக் கேட்கும் பாவனையில்.

"இவர்களெல்லோரும்—?" என்று இழுத்த துளசி, கோலியையும், சச்சுவையும் அணைத்துக்கொண்டாள்.

"என் தம்பி தங்கைகள்," என்றான் ரத்தினம் பெருமையோடு.

"இவன் கோலி என்ற கோபால கிருஷ்ணன். இவள் சச்சு. அவன் சம்பந்தம். சென்ட்ரல் ஸ்டேஷனில் நாம் போட்ட திட்டத்தில் ஒரு சின்ன மாறுதல் இது. உன் அனுமதியின்றியே செய்து கொண்டேன்," என்று அவன் விளக்கியபோது குறிப்பைச் சட்டென்று உணர்ந்து கொண்டாள் துளசி.



"வரவேற்கப்பட வேண்டிய மாறுதல்தான். பாலோடு பழமும் சேர்ந்த மாதிரி."

ரயில் விடை பெற்றுக்கொண்டு சென்றது, சென்னைக்கும் அவர்களுக்கும் இருந்த தொடர்பைக் கத்திரிக்கும் தோரணையில் ஒருமுறை கூவிவிட்டு. கிராமப்புற அமைதி அவர்களை அணைத்துக் கொள்ள, "கதவைத் திறந்திட்டாங்க. எசமான், வாங்க" என்று அழைத்தான், படுக்கை பெட்டியைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்ட வண்டிக்காரன். புதிய அறிமுகத்தின் சுவையோடு, வெளிப்படையாகப் பெருகிய துளசியின் அன்பும் சேர்ந்து குழந்தைகளை அவளிடம் உரிமையுடன் ஒட்டிக் கொள்ளச் செய்தன.

கிராதிக் கதவைத் திறந்து விட்ட ஸ்டேஷன் மாஸ்டர், ரயிலை அனுப்பி வைத்த பச்சைக் கொடியைச் சுருட்டிக் கக்கத்தில் திணித்தபடி ரத்தினத்துக்கு வணக்கம் தெரிவித்தார். "ரொம்ப நாள் கழித்து வருகிறாற்போலிருக்கிறது. பத்து நாளைக்கு இருப்பீர்களல்லவா?"

'பத்து நாளைக்கு என்ன? என்றைக்குமே இங்கேதான்!' என்று ரத்தினம் உடைத்துச் சொல்லவில்லை. துளசியை நோக்கி ஒருமுறை சிரித்துவிட்டு, "இருக்கலாம் என்று நினைக்கிறேன்," என்று அவருக்குப் பதிலிறுத்தபடி நகர்ந்தான்.

துளசியின் கையைப் பிடித்தபடி சுற்றுமுற்றும் பார்த்த கோலியின் முகம் அதிருப்தியால் சுருங்கிற்று.

"ஏன் அண்ணா? இதுதான் நம்ப ஊரா?" என்றான். இரண்டொரு கூட்டு வண்டிகளையும், அவசரமில்லாமல் வைக்கோலை மென்று கொண்டிருக்கும் மாடுகளையும், ஒரு சிறு வெற்றிலை பாக்குக் கடையையும் தவிர அவன் கண்களுக்கு ஏதும் தட்டுப்படவில்லை.

"ஊர் இன்னும் இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது கோலி," என்றாள் துளசி. "மாட்டு வண்டியில் போகப் போகிறோம்."

"மாட்டு வண்டியிலா? நான் மாட்டேன்."

"பின்னே?"

"பஸ் எங்கே? கொண்டா, அதிலேதான் வருவேன்."

"கோலி வண்டியிலே ஏறமாட்டேங்கிறான் அண்ணா!" என்று கூவினாள் சச்சு.

வண்டிக்காரனுடன் பேசிக் கொண்டிருந்த ரத்தினம், கோலியிடம், "கோலி, நாம் இரண்டு பேரும் ஜம்மென்று முன்னால் உட்கார்ந்துகொள்வோம். வா!" என்று சமாதானம் செய்தான்.

ஜல் ஜல் என்ற ஓசையுடன் வண்டி புறப்பட்டது. எஜமானர் எப்போதும் காரிலேயே வருவது வழக்கம். இப்போது அபூர்வமாக ரயிலில் வந்திருக்கிறார். அதன் விளைவாக மாட்டு வண்டியிலும் ஏறியிருக்கிறார். அவருக்குத் தன் சாமர்த்தியத்தைக் காட்ட வேண்டாம்? குழந்தைகள் உற்சாகத்துடன் கோஷமிட, வண்டிக்காரன் மாடுகளின் வாலை முறுக்கி அவற்றின் முதுகில் தார்க்கோலால் குத்தினான். அவை பிய்த்துக் கொண்டு கிளம்பின. கோலியின் பொருட்டு ரத்தினம் சிரிப்பதுபோல் நடித்தானாயினும், தார்க்கோல் பிரயோகம் அவனைச் சங்கடத்துக்குள்ளாக்கிற்று. கொஞ்ச தூரம் சென்றதும், தடை உத்தரவு பிறப்பித்து விட்டான்.

"குச்சி போடாட்டா ரொம்ப சண்டித்தனம் பண்ணுமுங்க" என்ற ஆட்சேபத்தை அவன் பொருட்படுத்தவில்லை. ஆனால் வண்டிக்காரன் சொன்னது போலவே மாடுகள் இப்போது ஓராயாக அடிமேல் அடிவைத்து நடக்கலாயின. ரத்தினம் தலைக் கயிற்றைத் தன் கையில் வாங்கிக்கொண்டு, "ஹை! ஹை!" என்று ஓட்டிய போது, கோலி வாய்விட்டுச் சிரித்தான். பின் பக்கம் திரும்பிப் பார்த்து, "அண்ணா எவ்வளவு நல்லா வண்டி ஓட்டுது பார். உன்னாலே முடியுமா?" என்று துளசிக்குச் சவால் விட்டான்.

"கேட்டானே ஒரு கேள்வி!" என்று ரத்தனம் ஆமோதிக்க, "பூ! உங்கள் அண்ணாவைக் காட்டிலும் எங்கள் சச்சுகூட வேகமாக ஓட்டுவாளே!" என்று துளசி பதில்கூற, "ஐயோ! எனக்கு பயமாயிருக்கிறது!" என்று சச்சு பின்வாங்க, அண்ணா தன் காதிற்குள் கிசு கிசுத்ததைக் கோலி உரக்க, "பெண்கள் எல்லாமே பயந்தாங்கொள்ளிகள்!" என்று பிரகடனம் செய்ய, அது பொய்யென்று நிரூபிப்பதற்காகத் துளசி கயிற்றை ஏற்றுக்கொண்டு ரத்தினசாரதியாக மாறினாள். வண்டிக்காரன் இறங்கிக்கொண்டு சாலையோடு நடந்து வர, இருபது நிமிடத்தில் முடிய வேண்டிய பிரயாணம் ஒரு மணி நேரத்தில் முற்றுப்பெற்றது.

வெண்மதியின் தண்ணொளியால் உயிர் பெற்ற நீர் அலைகள் ஏரிக் கரையை நோக்கிப் பந்தயம் போட்டுக் கொண்டு ஓடிவந்து, அங்கே உட்கார்ந்திருந்த இரு உருவங்களின் காலடியை அடைந்ததும் 'களுக்' 'களுக்'கென்று சிரித்துவிட்டுத் திரும்பின.

ஆனால் ரத்தினமும் துளசியும் மௌனமாகத்தான் அமர்ந்திருந்தார்கள். ஓசையின் உதவியின்றியே எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ளும் கலை அவர்களுக்குக் கை வந்துவிட்டது போலும்.

அவர்கள் முன்னால் ஏரி பிரம்மாண்டமாக விரிந்து கிடந்தது. புறத்தே பயிர் சுமந்த கழனிகள். இடது பக்கமாக, கால் மைல் தூரத்தில், வெற்றிலைக் கொடிக்காலுக்கு அப்பால், அமைதியாக உறங்கிக்கொண்டிருந்தது ஒட்டு பங்களா.

"துளசி," என்றான் ரத்தினம். அவன் குரல் மௌனத்தைக் கலைப்பதற்குப் பதிலாக அதை அன்புடன் தடவிக் கொடுத்தது.

"ஊம்?"

"எனக்கு ஒரு சந்தேகம்."

காற்றுடன் கூடிக்கொண்டு சுட்டித்தனம் பண்ணும் ஒரு மயிர்ச் சுருளைக் கட்டுப்படுத்த முயன்று கொண்டே, "என்ன அது?" என்றாள் அவள்.

"நீ ரொம்ப அழகாயிருப்பதாகச் சச்சு சொன்னாள். உண்மைதானா, துளசி?"

"உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது?"

அவன் ஒரு கூழாங் கல்லை எடுத்து நீரில் போட்டதும் அது 'பொளக்' கென்று பார்வையிலிருந்து மறைந்தது. ஆனால் அது விழுந்த இடத்தை மையமாகக் கொண்டு அடுத்தடுத்துப் பல வட்டங்கள் பிறந்து விரிந்த வண்ணமிருந்தன.

"ஆறு மாதத்துக்கு முந்தி, டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட்டில் சேர்ப்பதாகச் சொல்லி உன்னை ஆபீசுக்கு அழைத்துக்கொண்டு போனேன் அல்லவா? நினைவிருக்கிறதா, துளசி?"

அவள் கால்களைக் கட்டிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தாள்.

''காரில் போய்க்கொண்டிருக்கும்போது, 'எதுவரைக்கும் படித்திருக்கிறாய்?'' என்று உன்னைக் கேட்டேன். பின் ஸீட்டில் உட்கார்ந்திருந்த நீ, ஏதோ பதில் சொன்னாய். அது என் காதிலே சரியாக விழவில்லை. 'மூன்றாம் பாரமா?' என்று கேட்ட போது, 'எஸ். எஸ். எல். ஸி.' என்றாய். 'அடடே! முன்பே தெரிந்திருந்தால் கல்லூரியில் சேர்த்து விட்டிருப்பேனே!' என்றேன். அது ஆகஸ்டு மாதம் என்று நினைக்கிறேன். 'இனிமேல் முடியாதா?' என்று கெஞ்சினாய். துளசி! நீ கேட்ட முறை என்னை என்னவோ செய்தது, காரை ஓட்டிக்கொண்டே, ஒரு விநாடி கண்களை உயர்த்தி, கண்ணாடியில் உன் உருவத்தைப் பார்த்தேன். அசந்து போனேன். ரத்தினம் குரலைத் தாழ்த்திக்கொண்டான். ''துளசி? அன்றைக்குத்தான் உன்னை முதன் முதலாகச் சரியாகப் பார்த்தேன். கடைசித் தடவையும் அதுதான்!''

''அத்தான்!'' என்றாள் துளசி, திகைப்போடு அச்சம் சேர.

''ஆம் துளசி,'' என்று அவன் தொடர்ந்தான், அவள் கலக்கத்தைப் பொருட் படுத்தாமல். ''அந்த விநாடி, என் உள்ளத்தில் ஊறிய பூரிப்பு உடலெங்கும் பரவி விட்டது. அன்று முதல், மிட்டாய் என்ற உடனே குழந்தையின் நாக்கில் நீர் சொட்டுவது போல, துளசி என்ற பெயரை நினைத்தாலே போதும், என்னுள் இன்ப வெள்ளம் பெருக்கெடுக்க ஆரம்பித்து விடுகிறது. நீயே சொல்லு துளசி, உள்ளத்திலே ஆனந்தம் சுரக்கும் போது, கண்ணை நம்ப முடியுமா? துளசியை நினைத்துக் கொண்டு விட்டால், அப்புறம் காய்ந்த சருகும் ரோஜாப் பூவும் ஒரே மாதிரி காட்சி அளிக்கின்றன. வானவில்லுக்கும் குப்பைத் தொட்டிக்கும் வித்தியாசம் தெரிவதில்லை.''



## குடைக்கூலி

''இந்தக் குடை ரொம்ப மட்டமாச்சே? யாரும், வாங்க மாட்டார்கள். நீங்கள் ஏன் வாங்கினீர்கள்?

''நிஜமாகவா? ஐயையோ, ஐயையோ!''

''போகிறது, எட்டோ பத்தோ தானே? ஏன் இப்படிப் பதறுகிறீர்கள்?''

''ஏனா? இந்தக் குடை எனக்கு ஒருவர் பரிசு கொடுத்ததய்யா.''

நாணம் மேலிட, செய்தாள். ''என்னைக் காய்ந்த சருகு என்கிறீர்களா, குப்பைத் தொட்டி என்கிறீர்களா?''

''நான் என்னத்தைக் கண்டேன்?'' என்றான் ரத்தினம். ''துளசி என்பது என் இதயத்துக்குப் புலப்படும் உணர்ச்சியாக இருக்கிறதே தவிர, விழிகளால் பார்க்கக்கூடிய வடிவமாக இல்லை. ஏன் துளசி, அன்றைக்கு, செந்திலையும் கோவிந்தனையும் பற்றிய கருத்தைச் சொன்னாய் அல்லவா? 'என்னைப் பார்க்கையில் என்ன தோன்றுகிறது?' என்று நான் விசாரித்தேன். அந்தச் சமயம், இளநகை ஒன்று உன் வாயைச் சுற்றிச் சுற்றி ஓடிவந்து அதரங்களை மூடவும் விடாமல் திறக்கவும் விடாமல் கஷ்டப் படுத்தியதைக் கவனித்தேன். இப்போதும் அதே மாதிரிதான் சிரித்துக் கொண்டிருக்கிறாயா? சொல்லு, துளசி''

துளசியின் நெஞ்சு தட் தட் என்று அடித்துக்கொண்டது.

ரத்தினம் பேசினான். ''டைப் அடிக்கப் பழகிக் கொண்டபோது, தீவிர முயற்சி காரணமாகச் சின்னம் சிறு வியர்வைத் துளிகள் உன் மேலுதட்டில் விளிம்பு கட்டுவதை அன்று பார்த்தேன். ஏதாவது வேலை செய்யும் போது. இன்றைக்கும் அப்படித்தான் வியர்க்கிறதா, துளசி?''

''அத்தான்!'' என்றாள் அவள், தொண்டையை அடைக்கும் உணர்ச்சியினூடே.

அதே சமயம், ''எசமான்!'' என்று குரல் கொடுத்தான், ஏரிக்கரை மீது நடந்து வந்து கொண்டிருந்த வண்டிக்காரன். ''மணி ஒன்பது ஆகப்போகுது.

பூச்சிபோட்டு நிற்கிற நேரம். வாங்க!''

''பட்டணத்திலே தான் அவசரம். இங்கேகூடவா?'' என்றான் ரத்தினம்.

''வாங்க. தாசில் ஐயா. என்னை வையிறார்,'' என்றான் வண்டிக்காரன்.

'தாசில் ஐயா' என்பவர் ஒரு மாஜி தாசில்தார். அவர்கள் நிலங்களை மேற்பார்ப்பவர். எழுந்திருக்க மனமின்றி இருவரும் எழுந்தனர்.

தாமோதரம் திறந்த கதவின் பளபளப்பான கைப்பிடியைப் பற்றியபடி தயங்கி நின்றார். அவர் மனமும், மனத்தைக் காட்டிலும் மூளையும் ஒரேயடியாகக் குழம்பிப் போயிருந்தன. கருட்டை மயிரின் அலங்கோலத்தைத் தோற்கடித்தது, ஆடைகளின் கசங்கிய தோற்றம்.

அறைக்குள்ளிருந்த சாய்வு நாற்காலியின் பின்புறத்தையும், அதற்கு மேலே மெள்ள எழும்பிக் கொண்டிருக்கும் சிகரெட் புகையையும் கவனித்தபடி நின்றிருந்தவர், ஒரு முறை கனைத்தார்.

''யார், தாமோதரமா?''

கனகசபையின் குரல். அதில் தொனித்த அமைதி அவர் படபடப்பை ஏனோ அதிகப்படுத்திற்று.

''ஆமா சார். நான்தான்.'' சாய்வு நாற்காலியை அணுகினார்,

''இப்படி எதிரில் வா. எங்கே அவன்?''

தாமோதரம் கைகளைப் பிசைந்தார். ''வீட்டுக்கும் வரவில்லையாமே? மங்களம் சொல்கிறாள்.''

கனகசபை பதிலொன்றும் பேசவில்லை. ஆணி அடித்தாற்போல் கண்களைத் தாமோதரத்தின் முகத்தில் பதித்தவண்ணம், சிகரெட்டில் ஒரு மூச்சு இழுத்து மூக்கின் வழியே புகையை ஊதினான்.

தாமோதரம் தொடர்ந்தார். ''கோவிந்தனுடைய பங்களாவுக்கும் போயிருந்தேன். ஜாடைமாடையாக விசாரித்தேன். நாலு நாள் ஆகிறதாம் அவன் அந்தப் பக்கம் தலைகாட்டி. இப்போது என்ன செய்யலாம்?''

அவனுடைய மௌனம் தொடர்ந்

தது. தாமோதரம் மன்றுடினர். "சார்! நீங்கள்தான் எப்படியாவது பெண்ணை மீட்டுக் கொடுக்க வேண்டும். அது உங்கள் பொறுப்பு."

எழுந்து உட்கார்ந்த கனகசபை, சிகரெட் துண்டைச் சாம்பல் கிண்ணத்திற்குள் போட்டான். நீரைத் தொட்டதும் அது சுர்ரென்று நிலைசாக ஓசையிட்டு அணைந்தது.

"எங்கே, இன்னொருதரம் சொல்லு!"

"ஆமாம் சார். வேறே வழியே இல்லே. மங்களம் அசந்திருந்தபோது பாப்பாவைக் கிளப்பிக் கொண்டுவந்து விட்டேனு? அவள் பத்ரகாளி பாட்டம் ஆடுகிருள். உங்கள் சொல்லைத் தட்டக்கூடாதே என்று பெண்ணைக் கூட்டிவந்தேன். இப்படி ஆகிவிடடது பாருங்கள்."

"த்ஸொ, த்ஸொ."

"மங்களம் உங்களை நேரே வந்து கேட்கிறேன் என்று ஒற்றைக் காலில் நின்ருள். 'ஏன் மனசை அலட்டிக் கொள்கிருய்! அவர் எந்த விதத்திலும் நமது பெண்ணை நம்மிடம் திரும்ப ஒப்படைத்துவிடுவார்' என்று உறுதி சொல்லிவிட்டு வந்தேன்."

"அப்புறம்?" அவன் எகத்தாளமாகக் கேட்டான்.

"போலீஸிலே எழுதிவைக்கலாம் என்று ஒரு யோசனை. பேப்பர்க்காரனுக்குத் தெரிந்தால் சும்மா இருப்பானு? ஊர் உலகமெல்லாம் தம்பட்டம் அடித்து விடமாட்டானு? அதுதான் பயமாக இருக்கிறது அப்புறம் பேர் கெட்டுப்போய்விடும்."

"யார் பேர்?"

"எல்லோர் பேரையும் தான் சொல்கிறேன்"

"சாமர்த்தியமாகப் பேசுவதாக நினைப்போ?"

தாமோதரம் திடுக்கிட்டார் "அப்படி எல்லாம் ஒன்றும் இல்லையே!"

தங்க சிகரெட் பெட்டியைத் திறந்தான் கனகசபை. ஒரு சிகரெட்டை 'லைட்ட'ரால் பற்றவைத்துக் கொண்டு, சாய்ந்து கொண்டான்

"நான் யாரென்று உனக்குத் தெரியும் அல்லவா!' வாயில் சிகரெட் இருந்ததால், சொற்கள் தெளிவில்லாமல் வெளிவந்தன.

"தப்பாக நான் ஒன்றும் சொல்லவில்லையே"

"கேட்டதுக்குப் பதில்! நான் யாரென்று உனக்குத் தெரியும் அல்லவா?"

"தெரியும்."

"நன்ருக?"

"நன்ருகத் தெரியும்."

"நீ யாரென்று எனக்குத் தெரியுமல்லவா!"

"ஆமா."

"இன்றைக்கு என்ன, வியாழக்கிழமையா? கேட்டுக்கொள். வருகிற வியாழக்கிழமை ராத்திரி எட்டு

*மணிக்குள்ளாக நீ பாப்பாவைக் கொண்டு வந்து என்னிடத்தில் சேர்ப்பிக்கவில்லை...''*

*‘‘பொறுங்கள், பொறுங்கள்!'' என்று இடைமறித்தார் தாமோதரம். அவர் குரல் நடுங்கிற்று. ‘‘நான் எங்கே என்று போய்த் தேடுவேன்?''*

*கனகசபை உறுமினான். ‘‘நாடகமா ஆடுகிறாய்?''*

*‘‘நாடகமா!''*

*‘‘பின்னே? அவளைக் கூட்டிக் கொண்டு வருவது போல் வந்து, ரூபாயைப் பொறுக்கி மடியில் கட்டிக் கொண்டு, என் கண்ணிலே மண்ணைத் தூவிவிட்டுப் போனது நாடகமில்லாமல் வேறு என்னவாம்? சினிமாவா?''*

*‘‘ஐயையோ! உங்கள் கிட்டே நான் அப்படி எல்லாம் செய்வேனா? எல்லாம் அந்தக் கோவிந்தனாலே வந்த வினை!''*

*‘‘அது உனக்கே வினையாக முடிந்து விடப் போகிறது. ஜாக்கிரதை!''*

*‘‘நீங்கள் ரொம்பக் கோபமாக இருக்கிறீர்கள். அந்தப் பணத்தை வேண்டுமானாலும் திருப்பித் தந்துவிடுகிறேன்.''*

*‘‘திருப்பித் தருகிற பேச்சே இங்கு உதவாது. நான் விலையைக் கொடுத்தேன். நீ பொருளைக் கொண்டு வா. அந்தப் பணம் யாருக்கு வேண்டும்? பிச்சைக் காசு! எனக்கு வேண்டியது எல்லாம் பாப்பாதான். தாமோதரம்! யார் என் முகத்திலே கரியைப் பூசி விட்டதாக நினைத்துக் கொக்கரித்துக் கொண்டிருக்கிறாளோ, அவள் வேண்டும். அவளைக் கொண்டு, எனக்கு ஏற்பட்ட அவமானத்தைத் துடைத்துக் கொள்ளவேண்டும். அவள் எங்கே இருந்தாலும் தேடிப் பிடித்துக் கொண்டு வா! ஓடு!''*

*‘‘அவள் அகப்பட்டு விட்டால் நாயைக் கட்டி இழுத்து வருகிறாற் போல் கொண்டு வந்து உங்கள் காலில் விழச்செய்கிறேன். அகப்படாவிட்டால்?''*

*‘‘அகப்படாவிட்டால்?'' கனகசபை பயங்கரமாகச் சிரித்தான். ‘‘அகப்படாவிட்டால், எனக்கு ஏற்பட்ட அவமானத்தை வேறு வழியில் துடைத்துக்கொள்ள வேண்டியதுதான்.''*

*தாமோதரத்துக்கு உடம்பு சிலிர்த்தது.*



# சொல்லாதே!

எஸ். ஏ. பி.

## பதினேழு

பசி, தாமோதரத்தின் வயிற்றில் ஆனந்த நடனம் ஆடிக்கொண்டிருந்தது.

நுழையும்போதே, "மங்களம், தட்டை எடுத்து வை!" என்ற கட்டளை பிறப்பித்தபடி கால் முகம் கழுவச் சென்றவர், திரும்பி வந்ததும் துணுக்குற்றார்.

தூக்கக் கலக்கத்தில் கதவைத் திறந்த அவர் மனைவி மறுபடியும் பாயில் விழுந்து கிடந்தாள். தட்டையும் காணோம், ஒன்றையும் காணோம்.

"மங்களம்," என்று அவள் தோள்களைப் பிடித்து அவர் உலுக்கிய போது, அவள் புரண்டுகூடக் கொடுக்கவில்லை.

அவர் கண்கள் சமையலறையை நாடின. அது பூட்டப்பட்டிருந்தது.

"அடுப்படியைத் திறந்துவிட்டுப் படுத்துக் கொள்ளேன்? சாப்பாட்டை நானாகப் போட்டுக் கொள்கிறேன்."

மங்களம் தன் முகத்தை மூடியிருந்த சேலைத் தலைப்பை நகர்த்தாமலே பேசினாள்.

"இவராகப் போட்டுக் கொள்கிறாராமே! போட்டுக்கொள்ள அங்கே என்ன வைத்திருக்கிறது? சாம்பல் வேண்டுமானால் இருக்கிறது, சாப்பிடுகிறீர்களா?"

தாமோதரத்துக்கு அப்போது வந்த கோபத்தில், அவளை ஓங்கி அறைந்து விடுவார்போல் தோன்றிற்று. ஆனால் அடக்கிக்கொண்டு, "புருஷனுக்குக் காட்டுகிற மரியாதை ரொம்ப அழகாயிருக்கிறது!" என்று அவர் விமரிசனம் செய்யவும், "இவ்வளவு யோக்கியமான புருஷனுக்கு இதற்கு மேலே மரியாதை கொடுத்தால் பூமி தாங்காது!" என்று அவள் விளாசவும், தன்மானத்தை விட்டுக் கொடுக்காமல் பின்வாங்கினார் அவர்.

"ராத்திரி பூராத் திறந்து வைத்துக்கொண்டு காத்திருக்கிறார்கள் ஓட்டல்காரப் புண்ணியவான்கள். உன் தயவில்லாவிட்டால் உலகம் ஒன்றும் அஸ்தமித்துப் போய்விடாது!" என்று முணுமுணுத்தபடி, பரண் மேலிருந்த தகரப் பெட்டியை எடுத்த தாமோதரம், அடுத்த நிமிடம் தேள் கொட்டி விட்டாற்போல் துடிக்கலானார்.

"ஐயையோ! ஒன்றையும் காணோமே! மங்களம்! மங்களம்!" என்று அவர் அலறினார். "எங்கே இதிலிருந்த ரூபாய்? இரண்டாயிர ரூபாயையும் காணோமே?"

"போனால் போகிறது," என்றாள் அவள், படுத்திருந்தவாறே. "அதற்காக ஏன் இப்படி ஊரைக் கூட்டுகிறீர்கள்? குழந்தைகள் எல்லாம் விழித்துக் கொள்ளப் போகிறார்கள்."

பெட்டியைக் கொண்டு வந்து அவள் முகத்துக்கு நேரே பிடித்த தாமோதரத்தின் குரல், சினத்தின் எல்லையைத் தொட்ட காரணத்தால் கிசலாயிற்று. "கனகசபை கிட்டே வாங்கின அத்தனை ரூபாயையும் இதிலே வைத்திருந்தேனே. மங்களம், அது எப்படிப் போகும்?"

"என்னைக் கேட்டால்?"

"உன்னைக் கேட்காமல் வேறே யாரைக் கேட்கிறது?" என்று குற்றம் சாட்டினார் தாமோதரம். "நீதான் எடுத்திருக்கிறாய். எனக்குத் தெரியாதென்று நினைத்தாயா? முழிக்கிற முழியைப் பார்! திருட்டு நாயே! மூதேவி!"

"என்ன சொன்னீர்கள்?" என்று எழுந்து உட்கார்ந்தாள் மங்களம். "போனால் போகிறதென்று கொஞ்சம் இரக்கப்பட்டால் என்னிடத்திலேயே கைவரிசையைக் காட்டுகிறீர்களா? என் மேலேதான் தப்பு. விடிகாலையிலேயே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் பாப்பாவைக் காணோமென்று புகார் பண்ணாமலிருந்தேன் பாருங்கள்? என் புத்தியைச் செருப்பால் அடிக்க வேண்டும். இல்லாவிட்டால் அப்போதே

வெளியாகியிருக்குமே உங்கள் ீரட வாளமெல்லாம் இப்போது ் ்டும் என்ன? விடுங்கள் சொல்கிறேன் ''

கெஞ்ச ஆரம்பித்துவிட்டார் தாமோ தரம், அவள் கையைப் பிடித்துக் கொண்டு. அடுத்த வினாடி அவளது காலைப் பிடித்திருந்தாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை

''மங்களம்...மங்களம்..''

''அதெல்லாம் முடியாது. ஒரு தரம் சூடுபட்டால்தான் புத்தி வரும் விலகிக் கொள்ளுங்கள் சொல்கிறேன்.'

''கோபத்திலே பேசிவிட்டேன் மங் களம். பணத்தை நீயே வைத்துக் கொள், எனக்கு வேண்டாம். மங்க ளம்! மங்களம்!''

''நான் எடுக்கவில்லை என்கிறேனே?'' என்று இழுத்தாள் அவள். அவளது எதிர்ப்பின் கனத்தைக் கண்டு சற் றுக் கலங்கியிருந்த தாமோதரத்துக்கு, மனைவி குற்றவாளிதான் என்பது இப் போது சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாகிவிட்டது.

''எடுத்தாய் என்று யார் சொன் னது? எடுத்திருந்தாலும் பரவாயில்லை என்கிறேன்.''

''கொஞ்சம் இருங்கள். சாப்பாடு இருக்கிறதா பார்த்து வருகிறேன். என்று மங்களம் சமையலறையை நோக் கிச் சென்றாள். பெரிய எலி ஒன்றை அப்போதுதான் விழுங்கிவிட்டு நாக் கால் வாயைத் துடைத்துக் கொள்ளும் பூனையின் ஞாபகம் வந்தது தாமோ தரத்துக்கு.

அவர் ஒரு பெருமூச்சு விட்டார். களைகசபை தந்த தொகையைத் திருப் பிக் கொடுத்து விட்டால் அவன் ஆத் திரம் ஒருகால் தணியக்கூடும் என்ற நம்பிக்கை ஆவியாக மாறி அந்தப் பெருமூச்சோடு கலந்து மறைந்தது. ஆனால் குறைந்தபட்சம் மங்களத்தின் எதிர்ப்பைச் சமாளிக்கவாவது அந்தப் பணம் பயன் பட்டதே' அது அவருக்கு ஓர் ஆறுதல்தான். காலையில், 'பாப்பா வந்ததா?' என்று கேட்க அவர் ஓடி வந்தபோது, அ மங்களமே உரு வெடுத்து வந்தாற்போலல்லவா ஆட்டம் போட்டு விட்டாள் அவர் மனைவி? தகரப் பெட்டியைப் பழையபடி பரண் மீது போட்டுவிட்டு அவர் வரு வதற்குள் மங்களம் உணவு பரிமாறத் தயாராகிவிட் டாள். ரசம் சாதத்தை



'இஸ், இஸ்' என்று அள்ளி உண்டவருக்கு, மோருக்கென அன்னம் வாங்கிக் கொள்ளும்போதுதான் சூழ்நிலையைக் கவனிக்க அவகாசம் கிடைத்தது. இதென்ன விநோதம்? இடறி விழுந்தால் குழந்தை என்று சொல்லும்படியாக இடநெருக்கடியுள்ள வீட்டில் இவ்வளவு புழக்கம் எங்கிருந்து வந்தது?

பிசைந்து கொண்டே சுற்றிலும் கண்ணோட்டம் விட்டவர், மேலெழுந்தவாரியாகக் கணக்கெடுத்தார். திடுக்கிட்டவராய், மறுபடியும் எண்ணிப் பார்த்தார்.

"மங்களம்!" என்றார்.

"ரத்தினம் சாயந்தரம் வந்திருந்தான்," என்றாள் அவள், கரண்டியில் மோரை முகந்தபடி.

"கோலி, சம்பந்தம் இவர்கள் எல்லாம் எங்கே?" அவர் குரலில் திகைப்பு.

"சக்குவை விட்டுவிட்டீர்களே!"

'அவளும்தான், எங்கே எல்லோரும்?"

"அதைத்தான் சொல்ல ஆரம்பித்தேன், ரத்தினம் சாயந்தரம் வந்திருந்தான் என்று. அதற்குள்ளே அவசரப்பட்டால்?"

"என்ன சொன்னான்?" ஒரு கை மோர் வாங்கிக் குடித்தபடி கேட்டார் தாமோதரம்.

"உங்களை எதிர்பார்த்துக்கொண்டு வெகு நேரம் காத்திருந்தான்."

"ஏன் மங்களம், பாப்பா விஷயம் அவனுக்குத் தெரிந்து போயிருக்குமோ?"

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை."

"அதுதானே கேட்டேன். அவனுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. அந்தக் கோவிந்தன் பயல்தான் வீட்டுப் பக்கம் தலை காட்டி நாலு நாள் ஆகிறதாமே! ஆமாம், நீ ஏதும் உளறி வைத்தாயோ?"

மங்களம் மோவாயால் தோள் பட்டையை இடித்துக் கொண்டாள். "நான் ஒன்றும் உளறவில்லை."



''போகிறது விடு. எதற்கு வந்தானாம்?''

''குழந்தைகளில் இரண்டொருவரை என்னுடன் அனுப்புங்களேன். நான் படிக்க வைக்கிறேன், என்றான்.''

தாமோதரத்துக்கு ஒரே ஆச்சரியம். ''அப்புறம்?''

''அப்புறம் என்ன, அப்புறம்? சம்பளம், வேலை, சக்கு மூன்று பேரை [illegible] வைப்பேனா.''

[illegible] ஒரு வார்த்தை கேட்கிற [illegible] கேட்டிருர் அவர்.

''[illegible] நடுத்தவர்கள்,'' என்றாள் மங்களம், அலட்சியமாக. ''உங்களை [illegible] தெரிகிறது? [illegible] காரர்கள் [illegible] சுற்றிக் கொண்டு, அவர்கள் உதவுறே சில்லறையைப் பொறுக்கி வைத்துக் கொண்டு, உங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்ள வந்ததே உங்களுக்கு நேரம் சரியாக இருக்கிறது. நீங்கள் குடும்பத்தைக் கண்டீர்களா, பிள்ளை குட்டியைப் பார்த்தீர்களா? நம்மோடு இருந்து குப்பை மேட்டைக் கிளறுவதைக் காட்டிலும், அவனிடம் இருந்து விட்டுப் போகட்டுமே? ஒன்று இல்லாவிட்டால் இன்னொன்றுவது மூலனுக்கு வரும். நாலு காசு சம்பாதித்துப் போடும்.''

அவமானத்தால் தாமோதரத்தின் உதடுகள் துடித்தன.

''மானம் கெட்டவளே! நான் ஒருவன் இருக்கிறேன் என்ற நினைவே இல்லாமல், காசுக்குக் கத்திரிக்காய் விற்கிறமாதிரி பிள்ளைகளைத் தூக்கிக் கொடுத்துவிட்டாயே!'' என்று கர்ஜித்தார்.

''காசுக்குப் பிள்ளை விற்கிறவர் ஒருவர் நமது வீட்டில் இருப்பது உண்மைதான். ஆனல் அது நானல்ல'' என்று கரண்டிக் காபபால் கணவன் முகத்தில் இடிக்க வந்தாள் மங்களம்.

தாமோதரத்துக்கு அதற்கு மேல் வாதாடத் தெரியவில்லை. தலை குனிந்தபடி சாப்பிடலானார். மங்களம் தொடர்ந்தாள்.

''எங்கேயோ வெளியூரில் போய் இருக்கப் போவதாகச் சொன்னன். வரக் கொஞ்ச நாள் ஆகுமாம்.''

''வெளியூரா? எந்த ஊர்?''

''ஏதோ கிராமமாம். எதுவாக இருந்தால் என்ன? அவர்களைப் பிரியமாக வைத்துக் கொள்வான். நல்லவன். முதல் முறை வந்திருந்தபோது ஒரு மாதிரியாகத்தான் இருந்தான். ஆனல் நேற்று, குழந்தைகள் கிட்டே ரொம்ப ஒட்டுதலாக நடந்துகொண்டான். உங்களுக்கு இந்த ரத்தினத்தைப் போலொருவன் எப்படித்தான் பிள்ளையாக வந்து பிறந்தானே?''

தாமோதரம் மௌனமாக எழுந்து கையைக் கழுவினர். மனைவி சொல்வது உண்மையே என்று மனச்சாட்சி உறுத்திற்று போலும். பிறகு, ''மங்களம், நான் ஒரு இக்கட்டிலே மாட்டிக் கொண்டிருக்கிறேன்,'' என்ருர்

தட்டைக் கழுவிச் சமையலறையில் வைத்துவிட்டு வந்தாள் அவள். ''பாப்பா விஷயமாக இருந்தால் என்னிடம் மூச்சு விடக்கூடாது!''

''உதவி செய்ய உன்னைத் தவிர யார் இருக்கிருர்கள்?''

''என்னை ஒன்றும் காக்காய் பிடிக்க வேண்டாம்.''

'''பாப்பாவைக் கொண்டு வருகிருயா இல்லையா?' என்று கனகசபை மிரட்டுகிறன். என்ன செய்யட்டும்?''

மங்களத்தின் நெற்றி சுருங்கிற்று. '''இல்லாவிட்டால் பணத்தைக் கீழே வை' என்கிருனே?''

''இல்லையில்லை,'' என்று கூறி, அவள் பதுக்கிய இரண்டாயிரத்துக்கு ஓர் ஆபத்தும் இல்லை என்று சாந்தப் படுத்தினர் தாமோதரம். ''அவனுக்குப் பாப்பாதான் வேண்டுமாம். அந்த நாசயாய்ப் போகிற கோவிந்தன் அவளை எங்கேதான் கொண்டுபோய் வைத்திருக்கிருனே.''

அவள் படுக்க ஆயத்தமானள். ''நான் போட்ட திட்டம் தகர்ந்து போய்விட்டது. அப்புறம் அவள் கனகசபையிடம் இருந்தால் என்ன, கோவிந்தனிடம் இருந்தால் என்ன? எனக்கு இரண்டும் ஒன்றுதான். சொல்லப் போனல், அந்த மிராசுதாரைக் காட்டிலும் இவன் எத்தனையோ மடங்கு தேவலே. பாப்பாவின் மேல் உள்ளபடிக்கே ஆசை வைத்திருக்கிருன். பேசாமல் தூங்குங்கள்.''

சற்று நேரத்தில் அவள் குறட்டை ஒலி கேட்டது.

ஆனல் தாமோதரத்துக்கோ இருப்புக் கொள்ளவில்லை. உறக்கத்தைக் கண்டு மனம் மருண்டது. பாப்பாவைப் பற்றி அவரொன்றும் கவலைப்படவில்லை. கனகசபையின் பயமுறுத்தல்தான் நீங்காச் சிந்தனையாக அவரை வறுத்தெடுத்தது.

முறை இருக்கிறது பார், அதைப் பரிட்சை பண்ணிப் பார்த்துவிட்டு...''

''போதுமே!'', என்று காதுகளைப் பொத்திக் கொண்டாள் அவள். ''என்கிட்டேயே ஆரம்பித்து விட்டீர்களா?''

''இல்லே துளசி. நமக்கு எப்படியும் மாதம் நூறோ இருநூறோ தேவைப் படும். உழைக்காமல் செலவழிக்க நமக்கு உரிமை ஏது? இதெல்லாம் நமக்குச் சொந்தமான நிலமல்ல. செந்தில், கோவிந்தன் இருவருடைய சொத்து. ஆகவே, நாம் இருநூறு ரூபாய் எடுத்துக் கொள்வதாக இருந்தால், நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தைப் பன்மடங்காகப் பெருக்கி, உடமைக்காரருக்கு மாதம் ஐந்நூறு ரூபாயாவது அதிகப்படியாகச் சம்பாதித்துத் தரவேண்டாமா? நான் பார்த்த அளவிலே, இங்கே என்னென்ன விதத்தில் அபிவிருத்தி பண்ணலாமென்றால்...''

துளசி பெருமூச்சு விட்டாள். ''என்கிட்டே சொல்லித்தான் ஆகவேண்டுமென்றால், வாருங்கள், காற்றோட உலவிக் கொண்டே பேசலாம்.''

''அதுவும் சரிதான்,'' என்று ரத்தினம் எழுந்திருப்பதற்குள், வாசலில் மாட்டு வண்டி வந்து நின்றது.

குழந்தைகள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி விட்டார்கள். வண்டியைவிட்டுக் குதித்து, ''அண்ணி! அண்ணா!'' என்று கூவியபடி கோவியும் சச்சுவும் பந்தயம் போட்டுக் கொண்டு ஓடி வந்தார்கள்.

துளசியின் முகத்தில் படர்ந்த ஏமாற்றம் மறு விநாடி மறைந்தது. அவர்களை வாரி அணைத்துக் கொண்டாள்.

இரவு பதினொன்று இருக்கலாம். சென்னையில் பெரும் பகுதி உறங்கிவிட்ட நேரம்.

ஒரு காரொன்று மெள்ள வந்து, இருளடர்ந்த ஒரு பகுதியில் நின்றது. கோவிந்தன் இறங்கினான். வண்டியின் கதவை ஓங்கிச் சாத்தாமல், ஒருகணித் தாற்போல் நிற்கச் செய்துவிட்டு, வராந்தாவை அடைந்தான்.

வாசற் கதவைத் தள்ளிப் பார்த்தான். உட்பக்கம் தாழிடப்பட்டிருந்தது.

''யாரது!''

திடுக்கிட்ட குரல்.

வராந்தாவில் படுத்திருந்த பணியாட்களில் ஒருவன் சற்று உரக்கக் கேட்டான்.

''யாரது?''

''உஸ்!'' என்றான் கோவிந்தன். ''ஏன் சத்தம் போடுகிறாய்? நான் தான்.''

அடையாளம் தெரிந்து கொண்ட வேலைக்காரன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து, ஜன்னல் வழியாகக் குரல் கொடுத்து உள்ளே படுத்திருந்த ஆளை எழுப்பப் போனான்.

''அண்ணா இருக்கிறாரா?'' என்றான் கோவிந்தன்.

''அவர் முந்தா நாளே போய்ட்டாருங்களே?''

கோவிந்தன் திகைப்புற்றான். ''போய் விட்டாரா? எங்கே?''

''சின்ன எசமானுக்குத் தெரியுமோ என்னவோ. எங்ககிட்டே ஒண்ணும் சொல்லலே.''

எதிர்பாராத செய்தி. கோவிந்தன் சிலையாய் நின்றான்.

இதற்குள் உட்பக்கமிருந்து கதவு திறக்கப் பட்டுவிட்டது.

கோவிந்தன் சொன்னான். ''நீங்கள் எல்லோரும் விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொள்ளுங்கள். கதவை உட்பக்கம் தாழிட வேண்டாம். வெளிப் பக்கமாகப் பூட்டிச் சாவியை இப்படிக் கொடு. நான் வரக் கொஞ்ச நேரமாகும்.''

விளக்குகள் அணைந்தன.

கோவிந்தன் வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

''அண்ணா ஊரில் இல்லையாம்.''

''அடேடே!'' பெண் குரல்.

மௌனம்.

''இரண்டு நாள் ஹோட்டலில் இருந்து பார்த்தாயிற்று. மறுபடியும் போனால் ஆபத்து. அண்ணா அறை காலியாக இருக்கும். அதிலே டேரா போடுகிறாயா?''

''ரெடி,'' என்றது பெண் குரல்.



# சொல்லாதே!

எஸ். ஏ. பி.

## பதினெட்டு

இரவின் கருமையும் குளுமையும் மென்மையும் தாமோதரத்துக்கு இதத்தையோ அமைதியையோ தரவில்லை. மாறாக, ஆத்திரத்தைத்தான் கிளறிவிட்டன.

பாப்பாவையோ காணோம். கனகசபையோ மிரட்டுகிறான். மங்களமோ, தனக்கு இரண்டாயிர ரூபாய் கிடைத்ததே போதும்; பிறர் எக்கேடு வேண்டுமானாலும் கெட்டுப் போகட்டும் என்று கவலையற்றுக் குறட்டை விடுகிறாள். பொருமியவாறே வீட்டை விட்டுக் கிளம்பிய தன்னைத் தனியாகத் தவிக்கவிட்டு எல்லோரும் ஒளிந்திருந்து வேடிக்கை பார்ப்பது போலிருந்தது தாமோதரத்துக்கு.

மனம் ஒரு பக்கம் சுழல, கால்கள் திசை தெரியாமல் தெருக்களைத் தேய்க்க, அவர் களைத்துப் போய் ஒரு 'கேட்' அருகே உட்கார்ந்த போது, நகரின் எந்தப் பக்கத்துக்கு வந்திருக்கிறோம் என்பதே அவருக்குத் தெரியாமல் இருந்தது. மார்பின் குறுக்கே கிடந்த மேல்துண்டை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டார். உடலைக் கசக்கிய அசதி படுக்கையின் சுகத்தை நினைவுக்கு இழுத்துத் துன்புறுத்திற்று. பேசாமல் வீட்டிலேயே விழுந்து கிடக்காமல் குறிக்கோளின்றி அலையப் புறப்பட்டதன் அலுப்பை உணர்ந்தவராய்ப் பெருமூச்சு விடுவதற்கும் கார் ஒன்று 'கேட்' எதிரில் ஓசைப்படாமல் வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது.

காரோட்டி கீழே இறங்கியபோது தாமோதரம் கவனிக்கவில்லை. 'கேட்'டைத் திறந்த போதும் பார்க்கவில்லை. ஆனால் அவன் மறுபடியும் வண்டியில் வந்து உட்காருவதற்காகக் கதவைத் திறந்தபோது தாமோதரம் திகைத்து விட்டார். ஆனால் இம்முறை திகைப்பைத் தொடர்ந்து அவர் உள்ளம் மகிழ்ச்சியில் திளைக்கலாயிற்று.

கதவைத் திறக்கும் பொழுது எரியத் தொடங்கி, சாத்தியவுடன் அணைந்துவிடும் விளக்குப் பொருத்தப்பட்ட வண்டி அது. காரோட்டி தன் இடத்தில் உட்கார்ந்த பொழுது மினுக்கிட்டுப் பளிச்சென்று மறைந்த அந்த விளக்கின் ஒளி தாமோதரத்தின் நெஞ்சில் அடர்ந்திருந்த இருளை அறுத்தெறிந்து விட்டது.

“பாப்பா!” என்று அவர் வாய் முணுமுணுத்தது. ஆனால் வண்டியிலிருந்தவர்கள் அவரைக் கவனித்ததாகத் தெரியவில்லை. திகைப்புக்குத்

[illegible] பெயரை உரக்க ஒரு முறை கூவப் போனார். ஆனால் அடக்கிக்கொண்டார்.

காரை ஓட்டிச் சென்றவன் கோவிந்தன் என்பதையும், அவன் நுழைந்த இடம் அவனுக்குச் சொந்தமான வீடு என்பதையும் அவர் தனக்குத் தானே நினைவூட்டிக் கொண்டார். பறிபோனது தனது உடைமையே ஆயினும், முன்பின் யோசியாமல் மாற்றான் வீட்டில் நுழைந்து தன் உரிமைக்குப் போராடும் அளவுக்கு அவர் ரத்தத்தில் இளமையோ துணிச்ச[illegible] கலந்திருக்கவில்லை.

'கேட்'டில் நின்றபடியே தாமோதரம் கவனித்தார். வண்டி நேரே போர்ட்டிகோவுக்குச் செல்லாமல் தோட்டத்தின் ஓர் இருண்ட மூலையில் நிறுத்தப்படுவதையும், வராந்தாவில் மின் விளக்கு ஏற்றப்பட்ட போது பணியாட்களைக் கோவிந்தன் மட்டும் தனியே நின்று விசாரித்துக் கொண்டிருப்பதையும், விளக்கு அணைந்த பின் அவன் காரை நோக்கி வருவதையும் பார்த்தார். ஒரு கால் பாப்பாவை அழைத்துக்கொண்டு கோவிந்தன் வேறெங்கும் போய்விடப் போகிறானோ? ஐயம் அவரைத் தீண்டிற்று. கையில் சிக்கி விட்டது என்று அவர் நினைத்த பறவை மறுபடியும் தப்பியோடிவிடுமோ என்ற அச்சத்தினால் கலக்கமுற்றவராய், கார் கேட்டண்டை வரும்போது அவர்கள் கண்ணில் படடுவிடக் கூடாது என்பதற்காக ஒரு செடிக்குப் பின்னால் மறைந்து கொண்டார். ஆனால் கார் என்னவோ புறப்பட்டபாடாகக் காணோம். காத்திருந்தவர் குழப்பமுற்றார்.



சற்று நேரம் கழித்துமாடியறை ஒன்றில் விளக்குப் போடப்பட்டது. பலமுறை அந்த வீட்டுக்குச் சென்று பழகிய தாமோதரம் அது ரத்தினத்தின் அறை என்பதை அறிவார். ரத்தினம்தான் ஊரில் இல்லையே? அவன் அறையில் யார் நடமாடுகிறார்கள் என்ற கேள்வி எழுந்த மறுகணமே அடங்கிற்று. அந்த அறையின் சாளரம் வழியே தாமோதரத்துக்குத் தென்பட்ட உருவம் தன் மகளுடையதுதான் என்பதை அவர் புரிந்து

கொண்டார். அடுத்த வினாடி மாடி யின் மறுபக்கமிருந்த கோவிந்தனின் அறையில் வெளிச்சம் தெரிந்தது. பிறகு இரண்டு விளக்குகளும் அணைந்து இருளோடு ஐக்கியமாகி விட்டன.

வேலைக்காரர்களுக்குத் தெரியாமல் பாப்பாவை அழைத்துப் போய், காலி யாக இருந்த ரகசியத்தின் அறையில் அவளை ரகசியமாக இருக்கச் செய்து விட்டுக் கோவிந்தன் தன் அறையில் படுத்துக்கொண்டிருக்கிறான் என்பதை விளங்கிக்கொண்ட தாமோதரத்துக்கு அதற்கு மேல் அங்கு நிற்கப் பரபரப்பு இடந்தரவில்லை. [illegible] [illegible] வைச் சந்திக்க

'நீங்கள் சொல்வதன் பொருள் எனக்கு விளங்கவில்லையே!'' என்றான் செந்தில். குரல் அமைதி யாக இருந்தபோதிலும் அதன் விளிம் பிலே சிலுப்பிக்கொண்டு நின்ற சினத்தைக் கவனிக்கத் தவறவில்லை பாங்க் காரியதரிசி.

''தவறாக நினைத்துக் கொண்டு விடாதீர்கள்,'' என்று அவன் முது கில் மெள்ளத் தட்டினார் அவர். வய தானவர் எடுத்துக் கொள்ளக்கூடிய உரிமையோடு, ஒரு தொழில் அதிபரி டம் காட்ட வேண்டிய மரியாதை யும் அந்தத் தட்டில் கலந்திருந்தன. ''என்னைப் பொறுத்தவரை இந்த ஏற் பாட்டுக்கு ஒரு ஆட்சேபமும் கிடை யாது. ஆனால் எங்கள் டைரக்டர்கள் அப்படி நினைக்கவில்லையே?''

செந்திலின் விரல்கள் அவன் மோவாயைத் தேய்த்தன. ''காரணம்?''

காரியதரிசி குரலைத் தாழ்த்திக் கொண்டார். ''உத்தியோக முறை யில் நான் இதையெல்லாம் உங்கள் காதில் போடக்கூடாது. இருந்தா லும் சொல்கிறேன். நீங்கள் அகலக் கால் வைக்கிறீர்கள் என்பது பொது வான கருத்து.''

''ஓகோ!''

''நீங்கள் மட மடவென்று முன் னேறி விட்டது உண்மைதான். ஆனால் அஸ்திவாரம் பலமில்லை என்று சிலர் சந்தேகப்படுகிறார்கள். இதே கடனை உங்கள் அண்ணா கேட்டிருந் தார் என்று வைத்துக் கொள்வோம். அப்போது இவ்வளவு யோசனைக்கே இடமிருக்காது ''

அண்ணா என்ற சொல்லைக் கேட்ட வுடன் செந்திலின் முகம் சிவந்தது.. காரியதரிசி தொடர்ந்தார்: ''அவர் ஆமை வேகத்தில் போய்க்கொண்டிருந் தார். உங்களுடைய துணிச்சலிலும் நடடம் வகுக்கும் சாமர்த்தியத்திலும் மூன்றில் ஒரு பங்குகூட அவருக்குக் கிடையாது. அதெல்லாம் எங்கள் டைரக்டர்களுக்குப் புரிந்தால்தானே? பணம் போய்விடக்கூடாதே என்ற பயம்தான் அவர்களைப் பிடித்து ஆட்டு கிறது அந்தப் பணத்தைக் கொண்டு எவ்வளவு பெரிய காரியத்தை நீங்கள் சாதிக்கப் போகிறீர்கள் என்பதைக் கற்பனை செய்து பார்க்க அவர்களுக் குச் சக்தி ஏது!''

'சும்மாவா தூக்கிக் கொடுக்கப் போகிறார்கள் இரண்டு லட்சத்தை?'' என்று கேட்டான் செந்தில். ''கைமேல் காண்ட்ராக்டு இருக்கிறது. வேலை ஆக ஆகப் பணம் தானாக வரப்போகி றது. உங்கள் டைரக்டர்கள் பயப்படு வதற்குக் காரணம்தான் என்ன?'' செந்திலின் குரலில் சூடு ஏறிற்று. ''காண்ட்ராக்டை நிறைவேற்ற எனக் குச் சாமர்த்தியமில்லை என்று நினைக்கி றார்களா? அல்லது எனக்குக் கொடுக்க சர்க்கார் கஜானாவில் பணமிருக்காது என்று சந்தேகப்படுகிறார்களா?''

மேசையில் இணைத்திருந்த பொத் தானை அழுக்கி, மணியோசை கேட்டு வந்த பையனிடம், ஐஸ் போட்ட பானம் இரண்டுக்கு உத்தரவிட்டார் காரியதரிசி.

அடுத்தடுத்துக் கேள்விகளைத் தொடுத்தான் செந்தில். ''எங்கள் கம் பெனி ஆரம்பிக்கப்பட்டது முதல், உங்கள் பாங்க்கில்தான் கணக்கு வைத்துக்கொண்டிருக்கிறோம். சேர்ந் தாற்போல் பல வருடங்களுக்குப் பதி னாயிரக் கணக்கில் பிக்ஸட் டிபாஸிட் டாகப் போட்டு வைத்ததும் உண்டு. ஒருமுறை ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு ஓவர் டிராப்டுக்கு அனுமதி பெற்று அதைப் பயன்படுத்தாமலே இருந்தி ருக்கிறோம். இல்லையா?''

''இல்லை என்று எப்படிச் சொல்ல முடியும்? உங்கள் அப்பா இந்தப் பாங்க்கில் கணக்குத் திறந்த அன்றைக் குத்தான் நானும் காரியதரிசியாக நியமிக்கப்பட்டேன். உங்கள் தொழில் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கி றது என்பது எனக்குத் தெரியாதா? கிரஷ் வந்துவிட்டது, சாப்பிடுங்கள்.''

ஆனால் செந்தில் கிரஷ்ஷைத் தொட

யில்லை. "எங்களுக்குத் தேவையில்லாத சமயத்தில் உதவி செய்ய முன் வந்தவர்கள், தேவை ஏற்படும்போது பின் வாங்குவது எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் முறையென்று எனக்குப் படவில்லை," என்றான் அழுத்தமாய்

"முறையில்லை என்பதுதான் வெளிப்படையாகவே தெரிகிறதே," என்றார் காரியதரிசி. "ஆனால் எங்கள் டைரக்டர்களின் மனப்போக்கு எப்படியிருக்கிறது'என்பதை நாம் புரிந்துகொள்வது நல்லது."

"அது புரியாத புதிராக இருக்கும் போலிருக்கிறதே!"

"உங்கள் கம்பெனிக்கும் பாங்குக்கும் இருந்து வந்திருக்கும் பழைய தொடர்பைப் பற்றி நீங்கள் ஞாபகப் படுத்தினீர்கள். வாஸ்தவம்தான். ஆனால் எங்கள் டைரக்டர்கள் இப்போது நடப்பதை ஒரு புதுக் கம்பெனி என்றே நினைக்கிறார்கள் போல் தெரிகிறது."

"முன்னே தூங்கி வழிந்து கொண்டிருந்தது. இப்போது துள்ளிக் குதித்து முன்னேறுகிறது. அந்த விதத்தில் புதுக் கம்பெனிதான்."

"அந்த விதத்தில் மட்டுமல்ல," என்று திருத்தினார் காரியதரிசி. "பிக்ஸட் டிபாசிட் கணக்கில் பதினாயிரக் கணக்கில் போட்டு வைத்ததுண்டு என்று சொன்னீர்கள். ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு ஓ. டி. வசதியைப் பெற்றும் அதை உபயோகப்படுத்தாமலிருந்த காலத்தைக் குறிப்பிட்டீர்கள். ஆனால் இந்த நிகழ்ச்சிகள் எல்லாம்..." பக்கத்திலிருந்த பைலை எடுத்துப் புரட்டியபடி அவர் தொடர்ந்தார்-"கம்பெனி உங்கள் நிர்வாகத்துக்கு வருமுன்பு நடைபெற்றன. இதோ பாருங்கள், தேதி வாரியாகப் புள்ளி விவரம் தரப்பட்டிருப்பதை. நீங்கள் பொறுப்பேற்றுக் கொண்ட பிறகு ஒன்று பாக்கியில்லாமல் அத்தனை பிக்ஸட் டெபாசிட்டுகளையும் ரொக்கமாக்கி விட்டீர்கள். முதலில் பத்தாயாயிரத்துக்கு ஓ. டி. கேட்டு, படிப்படியாகக் கூடி, இப்பொழுது லட்ச ரூபாயில் நிற்கிறது. மேற்கொண்டும் இரண்டு லட்சம் கொடுப்பதென்றால் எங்கள் டைரக்டர்கள் தயங்கத்தானே செய்வார்கள்?"

கண்களைக் கீழே தாழ்த்தியபடி கீழுதட்டைக் கடித்த வண்ணம் செந்தில் ஒரு நிமிஷத்துக்கு மௌனமாக இருந்தான். பிறகு எழுந்து நின்று முகத்தில் கடுமை பொங்க விறைப்பாக வணக்கம் செலுத்திவிட்டுக் கதவை நோக்கி நடந்தான்,



"முகத்தைக்கொஞ்சம் நன்றாக வைத்துக் கொண்டு சாப்பிடக் கூடாதோ? இப்படிக் கோணிக் கொண்டு சாப்பிட்டால் காப்பி எப்படி நன்றாயிருக்கும்?"

திகைப்புற்ற காரியதரிசி, "மிஸ்டர் செந்தில்நாதன், ஒரு நிமிஷம்..." என்று அழைத்தார்.

செந்தில் கைக் கடிகாரத்தை நோக்கிவிட்டு அரை மனத்தோடு மேசைக்குத் திரும்புவதற்குள் காரியதரிசியே எழுந்துவிட்டார். "மிஸ்டர் செந்தில் நாதன், இந்த நெருக்கடியில் உங்களுக்குப் பணம் கிடைக்காவிட்டால் என்ன நடக்கும் என்பதை நானறிவேன். நெருங்கிய நண்பர் ஒருவர் நிறுவிச் சென்ற தொழில் நொடித்துப் போவதையோ, உங்களைப் போன்ற ஒரு முன்னேற்றத் துடிப்புள்ள வாலிபர் குன்றிப் போவதையோ நான் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. எனக்கு அறிமுகமான ஓரிரு லேவாதேவிக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் என் பேச்சைத் தட்டமாட்டார்கள். கனகசபை என்று ஒரு மிராசுதார் தற்சமயம் சென்னைக்கு வந்திருக்கிறார். எதற்கும் அவரிடம்

சொல்லி வைக்கிறேன். எப்போது வேண்டுமானாலும் நீங்கள் அவரைச் சந்தித்து உரிய முறையில் ஏற்பாடு பண்ணிக் கொள்ளலாம்,'' என்று அவர் சொல்லி முடிப்பதற்குள், ''உங்கள் யோசனைக்கு மிக்க நன்றி. நான் வருகிறேன்,'' என்று புறப்பட்டு விட்டான் செந்தில்.



**கிள்ளி !**

''எங்கே ... 'அக்கா' சொல்லு !''

''அக்கா வா? கிகிகி... பாட்டி...பாட்டி!''

குன்றுடி டம்ளரில் மின்னிய பொன்னிற திரவத்தைக் கண்ணெதிரே பிடித்து அன்பொழுகும் பார்வையுடன் நோக்கிய கனகசபை அப்படியே அசையாமல் சில விநாடிகள் உட்கார்ந்திருந்தான். மனிதனுடைய உறவில் காண முடியாத ஓர் ஆழ்ந்த நட்புணர்ச்சி அந்தத் திரவத்திடம் தனக்கு இருப்பதை அவன் உணர்ந்து ரசித்துக் கொண்டிருந்தான். சோடா கலக்க வேண்டியது கூட அவசியமில்லை என்று தோன்றவே டம்ளரில் இருந்ததை அவன் அப்படியே அருந்தியவுடன் இன்பக் கனல் உடலெங்கும் பரவிற்று. அதன் வெப்பத்திலே அவன் குளிர் காய்ந்தான். சாய்வு நாற்காலியிலே சாய்ந்து, மசாலையுடன் வறுக்கப்பட்ட பச்சைப் பட்டாணியில் நான்கை அள்ளி வாயில் போட்ட பொழுதுதான் வேலைக்காரன் அந்த அறிமுகச் சீட்டைக் கொண்டு வந்து நீட்டினான்.

''வரச் சொல்,'' என்றான் கனகசபை.

வேலைக்காரன் நீங்கியதும் சீட்டைக் கையில் பிடித்தவாறே சிந்தனையில் மூழ்கினான். செந்தில்நாதன் என்ற பெயர் அவன் நினைவை மீட்டிற்று. பாங்க் காரியதரிசி காலையில் குறிப்பிட்ட நபர் இவன்தான் போலும். கனகசபை தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். காரியதரிசிக்கு என்ன, லேசாகச் சொல்லிவிட்டார், 'நல்ல பார்ட்டி, கேட்ட தொகையைத் தயக்கமின்றிக் கொடுக்கலாம்' என்று. தகுதி புள்ளி புள்ளியாயிருந்தால் அவருடைய பாங்கின் மூலமாகவே கடன் கொடுத்திருக்க மாட்டாரா? ரூபாய் ஐந்திலிருந்து ஐந்து லட்சம்வரை விண்ணப்பம் தாக்கல் செய்த எத்தனையோ பேரை உதறியது போல் இந்தச் செந்தில்நாதனையும் தட்டிவிட வேண்டியதுதான்.

காலடி ஓசை கேட்டுக் கனகசபை நிமிர்ந்தான். வந்தவனை வரவேற்றான். உள்ளத்தில் ஒரு சந்தேகம். எங்கேயோ பார்த்த முகமாய் இருக்கிறதே! மூளை வரிந்து கட்டிக்கொண்டு முயன்றது. செந்தில்நாதனை எங்கே எப்பொழுது சந்தித்தோம் என்பது என்னவோ நினைவில் சிக்க மறுத்தது.

வந்த காரியம் என்ன என்று வாய் வினவ, கண்கள் வந்தவனின் தோற்றத்தைத் துளைபோட்டு, உள்ளே இருக்கும் உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் அலச முற்பட்டன. ஓரளவு வரை கனகசபையின் மதியைக் கூர்மையாக்கும் திறன் மதுவுக்கு உண்டு.

தனது தேவையைச் செந்தில் விளக்கினான். தன்னம்பிக்கையும் தைரியமும் வெற்றி மனப்பான்மையும் அவன் சொற்களிலே பிரதிபலித்தன. ஆயினும் மேற் பரப்புக்குக் கீழேயுள்ள மன நிலையைக் கனகசபை ஊகித்து விட்டான்.

பாங்க் காரியதரிசியின் பேட்டியால் அகத்தே எழுந்த சீற்றத்தைச் செந்தில் வார்த்தைகளில் வடித்துக் கனகசபைக்குக் காட்டவில்லை என்பது உண்மைதான். இந்த பாங்க் இல்லாவிட்டால் இன்னொன்று என்ற சவாலோடு எத்தனையோ நிலையங்கள் மீது படையெடுத்துத் தோல்வியுற்ற சோகக் கதையைச் செந்தில் அறிவிக்கவில்லை என்பது உண்மைதான். தனிப்பட்ட வட்டிக்கடைகாரரின் தயவை நாடப் போய், ஆளை விழுங்கும் வட்டி விகிதத்தினாலோ அல்லது லாபத்தில் பங்கு கேட்கும் தந்திரத்தாலோ

அதிர்ச்சியுற்ற விவரத்தை அவன் வர்ணிக்கவில்லை என்பதும் உண்மை தான். ஆயினும் அனைத்தையும் ஒரு கணத்தில் கனகசபை ஊகித்துவிட்டான். பாங்க் காரியதரிசியின் சிபாரிசைச் செந்தில் நாடவில்லை என்பதையும், வேறு வழியில்லாமல்தான் தன்னிடத்தில் வந்திருக்கிறான் என்பதையும் புரிந்து கொண்டான். இல்லை என்ற முடிவுக்கு ஏற்கனவே வந்துவிட்டபோதிலும், சற்றுநேரம் பேச்சுக் கொடுத்து, பின்னர் கையை விரிக்கலாம் என்று வார்த்தையாடத் தொடங்கியவனுக்கு, தற்செயலாக அறைக்குள் நுழைந்த தாமோதரத்தின் முகம் தனக்கெதிரில் உட்கார்ந்திருப்பவனைக் கண்டதும் ஏன் அப்படி மாறவேண்டும் என்பது புரியவில்லை.

"செந்தில்!" என்றார் தாமோதரம்.

செந்தில் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அந்தரங்கமாக நடக்க வேண்டிய ஒரு காரியத்தில் விரும்பத்தகாத ஒருவரின் வரவை அவன் ரசிக்கவில்லை போலும்.

"என்னய்யா சம்மன்ஸ் இல்லாமல் ஆஜராகிறாய்?" என்றான் கனகசபை.

"ஒன்றுமில்லை," என்றார் தாமோதரம். அவருடைய படபடப்பு கனகசபைக்கு ஒரு புதிராகத் தோன்றிற்று.

"ஒன்றுமில்லை என்று சொல்வதற்கா வந்தாய்!" என்று அதட்டினான். "போய்யா கீழே."

"சரி," என்று தலையாட்டிவிட்டு வெளியேறியவர் கதவுக்கு அப்பால் நின்றபடி கனகசபைக்கு ஏதோ சைகை காட்டினார்.

அவரது விசித்திரமான நடத்தையைக் கண்டு அமைதி இழந்த கனகசபை கதவருகே எழுந்து வந்து, "என்னய்யா, குரங்கு சேட்டையில் இறங்கிவிட்டாய்? விஷயத்தைச் சொல்லித் தொலை," என்றான் எரிச்சலுடன்.

"இவன் யார் தெரியுமா? செந்தில்."

"ஆமாம். அதற்கென்ன இப்போது?"

"கோவிந்தனுடைய தம்பி இவன்!"

"அப்படியா?"

தாமோதரம் உற்சாகத்தோடு பேசினார். "இவனும் அந்த வீட்டில் தான் இருக்கிறான். ஆனால் பாப்பா அங்கிருப்பது இவனுக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். இவனை நம் கைக்குள் போட்டுக் கொண்டுவிட்டால் அவளை எப்படியாவது கிளப்பி வந்துவிடலாம். ஏனென்றால் இவனுக்கும் கோவிந்தனுக்கும் என்றைக்குமே ஆகாது."

அவர் சொல்லிக்கொண்டு வரும் போதே கனகசபையின் முகத்தில் புன்னகை படரலாயிற்று. "உனக்கும் கொஞ்சம் புத்தி இருக்கத்தான் செய்கிறது." என்றான்.

பாராட்டு பரிகாசமாவதை அறிந்து தாமோதரம் பூரித்துப்போனார்

காரை விட்டு இறங்கியதும் இறங்காததுமாகச் செந்தில் தன் வீட்டு வேலைக்காரனிடம் கேட்ட கேள்வி, "கோவிந்தன் இருக்கிறானா?" என்பது.

"சாயந்தரம் காப்பி சாப்பிட்டு விட்டுப் போனவர்தான்," என்று பதிலிறுத்தான் அவன், என்றைக்குமில்லாத அதிசயமாய் இளைய தமையனைப் பற்றிச் செந்தில் விசாரிப்பதைக் கண்டு வியப்புற்றவனாய்.

செந்தில் தன் அறைக்குக் கூடச் செல்லவில்லை. மாடிப்படி ஏறினான்.

ரத்தினத்தின் அறையை அடைந்ததும் கதவிலே காதை வைத்துக் கவனித்தான்.

அவன் முகம் மலர்ந்தது. தாமோதரம் கூறியது மெய்தான். அறைக்குள்ளிருந்து வரும் மெல்லிய ரேடியோ இசை அதற்குச் சாட்சியம் பாடிற்று.

செந்தில் விலகி நின்று கதவில் தொங்கிய பூட்டைக் கையில் எடுத்துப் பார்த்தான்- வெகு காலமாக இருந்து வரும் பூட்டுக்களில் அது ஒன்று என்பது தெளிவானதும் அவன் கீழே இறங்கிச் சென்றான். அம்மாவின் அறையில் உள்ள பெரிய சாவிக் கொத்தில் அதற்கான மாறு சாவி நிச்சயமாக இருக்கும் என்பதை அவன் அறிவான்.

சில நிமிடங்கள் கழித்து அவன் மறுபடியும் மாடிக்கு வந்தபோது அவன் கையில் அந்தச் சாவிக் கொத்து இருந்தது. இரண்டாவது முயற்சியிலேயே பூட்டு திறந்து கொண்டது.

கதவைத் திறந்தான்.

கனகசபையிடமிருந்து இரண்டு லட்ச ரூபாய் கடனையும், கோவிந்தன் முகத்தில் கரியைப் பூசும் வாய்ப்பையும் செந்திலுக்குச் சம்பாதித்துத் தரக்கூடிய அதிர்ஷ்டம், ரேடியோ பெட்டியின் முன்னால் உட்கார்ந்திருந்தது— பாப்பாவின் உருவில்.




## பத்தொன்பது

"ஆதெல்லாம் எனக்குத் தெரியாது," என்றான் கோவிந்தன். "எனக்கு அவசரமாக ஐந்நூறு ரூபாய் வேண்டும். தரப் போகிறீரா இல்லையா?"

மாலை மணி ஆறு இருக்கும். அலுவலகத்தில் தனியாக உட்கார்ந்திருந்த அக்கௌண்டண்ட் ஜம்பு, கையைப் பிசைந்தார். "ஐந்நூறென்ன, ஐயாயிரம்கூடத் தரத் தயார் தம்பி. ஆனால் பல்லைப் பிடுங்கி வைத்திருக்கிறாரே சின்னவர். என்ன செய்யலாம்?"

"போமய்யா, உபயோகமற்றவரே!" என்று அவன் அலுத்துக் கொண்ட போது, "ஹி... ஹி..." என்று அசட்டுத்தனமாகச் சிரித்தபடி கோட்டுக்குள் கை விட்டு, பொடி டப்பிக்காகத் துழாவினார் ஜம்பு. தேடிய பொருள் அகப்படாமல் போகவே, செந்தில் இட்டிருந்த கட்டளை நினைவுக்கு வந்து அவர் முகத்திலிருந்த சிரிப்பை நசுக்கி விட்டது. 'அனுபவம் இருக்கிற அளவுக்கு அசுத்தத்தையும் சேர்த்து வைத்திருக்கிறீரே! பொடி டப்பியோடு ஒரு கைக் குட்டையையும் எடுத்துக் கொண்டு வந்தால் என்னய்யா? இதோ, ஒரு மாத நோட்டீஸ். அதற்குள் பொடி போடும் வழக்கத்தை விட்டுவிடும். இல்லாவிட்டால்—உமக்கும்தான் வயதாகி விட்டதே—வேலையினின்று ஓய்வு எடுத்துக்கொள்ளும்,' என்ற செந்திலின் கண்டிப்பான உத்தரவு அவரது வாழ்க்கையைக் காரம் மணம் குணம் அற்றதாகச் செய்துவிட்டிருந்தது.

"தம்பி, வீட்டு வாடகைக்கு முப்பது ரூபாய் வைத்திருக்கிறேன்.. என் சொந்தப் பணம், அதை வேண்டுமானால் எடுத்துக் கொள். இரண்டு நாளில் திருப்பித் தந்துவிடு," என்று அவர் முன் வந்தபோது, "அட சட்! முப்பது ரூபாய் எந்த மூலைக்கய்யா போதும்!" என்று அலட்சியமாகக் கூறினான் கோவிந்தன். பிறகு புருவங்களை உயர்த்தி, "ஆமாம், உமக்கு எவ்வளவு ஐயா சம்பளம்?" என்றான்.

ஜம்பு ஒரு பெருமூச்சு விட்டார், "என் வயதைப் போல இரண்டு மடங்கு. நூற்றுப் பத்து ரூபாய்."

"என்னது?" என்றான் கோவிந்தன் நம்ப முடியாமல். "நீர் வேலைக்கு வந்து இருபது முப்பது வருடமிருக்குமே! என்னை ஒன்றாம் கிளாஸில் கொண்டு போய்ச் சேர்த்ததே நீர்தானே ஐயா? இத்தனை வருடத்துக்குக் குறைந்தது இருநூறு ரூபாயாவது வாங்கிக் கொண்டிருக்க வேண்டாம்?"

ஜம்புவின் கண்கள் கலங்கின. "முன்னூறு ரூபாய் வந்து கொண்டிருந்தது, ஆறு மாதத்துக்கு முன்பு."

"அப்புறம்?"

ஜம்பு சுற்று முற்றும் பார்த்தார். "சின்னவர் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டார். 'இளம் ரத்தத்துக்குத்தான் எங்கள் கம்பெனியில் இடம் உண்டு' என்றார். நாற்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டவர்கள் எல்லாம் நாற்காலியைக் காலி செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டார். இந்த வய

தில் நான் யாரிடம் கேட்டுப் புதிதாக வேலை சம்பாதிக்க முடியும்? குடும்பமோ பெரிது. காலில் விழு[illegible] கெஞ்சினேன். 'போனால் போகிறது. நூற்றுப் பத்து ரூபாய் தருகிறேன். சம்மதமா?'' என்றார். ''என க்கு வருவதென்னவோ நூற்றுப்பத்து தான்.'' ஜம்புவின் குரல் தாழ்ந்தது. ''ஆனால் கையெழுத்துப் போடுவது முன்னூறு ரூபாய்க்கு. நான் மட்டுமல்ல, என்னைப் போல இன்[illegible]ம் நான்கைந்து பேர் இப்படிச் செய்ய வேண்டியிருக்கிறது.''

கோவிந்தன் பல்லைக் கடித்தான். "இந்த அநியாயத்தைக் கேட்க ஆளில்லையா? அண்ணா கண்ணை மூடிக் கொண்டா உட்கார்ந்திருக்கிறார்!"

ஐம்பு மூக்குக் கண்ணாடியை வேட்டியில் துடைத்தபடி, "அவர் இந்தக் கண்ணராவியைச் சகிக்கமாட்டாமல் தானே கிராமத்தில் போய் உட்கார்ந்துவிட்டார்!" என்றதும் கோவிந்தன் பரபரப்படைந்தான்.

"கிராமத்திற்கா? எந்தக் கிராமம்?"

"உனக்குத் தெரியாதா தம்பி? இப்போது கூத்தனூரில் தான் இருக்கிறார். நமது நிலங்களை மேற்பார்க்கும் தாசில் ஐயாவிடமிருந்து நேற்றுத்தான் தகவல் வந்தது. தாசில் ஐயா ஓய்வெடுத்துக் கொள்ளப் போகிறாராம். மேற்பார்க்கும் பொறுப்பை உங்கள் அண்ணாவே ஏற்றுக்கொள்ளப் போகிறாராம்."

"அப்படியா?"

"உங்கள் அண்ணா செய்வது ஒரே புதிராக இருக்கிறது. ஒழுங்காக நடந்துவந்த கம்பெனியை எதற்காகச் சின்னவரிடம் ஒப்படைக்க வேண்டும்? தனக்கு எந்தவித உரிமையும் இல்லாததுபோல் ஏன் திடீரென்று விலகிக் கொண்டு யாரிடமும் சொல்லாமல் கிராமத்தில் போய்க் குடியேற வேண்டும்? எல்லாம் எங்கள் கஷ்டகாலம் தான்," என்று ஐம்பு சொல்லிக் கொண்டே வந்த பொழுது கோவிந்தனுடைய முகத்தில் ஆர்வம் பூத்தது. சுவர்க் கடியாரத்தை நோக்கிவிட்டு, "ஐம்பு, அந்த முப்பது ரூபாயை எடும் சொல்லுகிறேன்," என்று அவசரப்படுத்தி பணத்தை வாங்கிக்கொண்டு புறப்பட்டான்.

கோவிந்தன் டாக்ஸியில் வந்து இறங்கியபோது செந்திலுடைய வண்டி போர்ட்டிகோவில் நிற்கும் என்று எதிர்பார்க்கவில்லை. டாக்ஸிக்காரனுக்குப்



பணத்தை எண்ணிக் கொடுக்கும்படியே, அவன் மூளை வேகமாக வேலை செய்துகொண்டிருந்தது. செந்தில் என்றைக்கும் இவ்வளவு சீக்கிரம் வரமாட்டான். இன்றைக்கென எப்படி உத்தேசத்துக்கு விரோதமாக வந்து தொலைத்தான்!

கோவிந்தன் பத்திரிகையைப் பார்க்கும் சாக்கில் ஹாலில் போடப்பட்டிருந்த சோபாவில் உட்கார்ந்து குழந்தையைக் கொஞ்சிக்கொண்டான். ஒரு வேலைக்காரி நெருங்கி, "சாப்பாடு தயாராக இருக்கிறது. மேலே மாடிக்கே கொண்டு வந்து விடட்டுமா!" என்று விசாரித்த போது, கோவிந்தன், "செந்தில் எங்கே?" என்று பதிலுக்கு வினவினான்.

"டெலிபோனில் பேசிக்கொண்டிருக்கிறார்," என்ற விவரம் கிடைத்தது.

"இப்போதுதான் ஓட்டலில் பலகாரம் சாப்பிட்டு வருகிறேன். பசிக்கவில்லை, சாப்பாடு வேண்டாம்," என்று தெரிவித்துவிட்டு, அவன் எழுந்தான். செந்தில் என்ன செய்துகொண்டிருக்கிறான் என்று தெரிந்துகொள்வது தனது திட்டம் தடையின்றி நடைபெறுவதற்கு அவசியமெனத் தோன்றிற்று. தம்பியின் அறையைக் கடக்கும்போது, கோவிந்தன் சற்றே நிதானித்தான். செந்திலுடைய டெலிபோன் பேச்சிலிருந்து ஓரிரு துணுக்குகள் காதில் விழுந்து அவனை அசையாமல் நிற்கச் செய்தன. அவன் பெயரல்லவோ அடிபடுகிறது!

யாரைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறானோ அவனே வாசற் கதவருகே ஒளிந்து நின்று காதைத் தீட்டிக் கொண்டு தன் வார்த்தைகளை விழுங்கிக்கொண்டிருக்கிறான் என்பதை உணராத செந்தில், அளவற்ற தன்னம்பிக்கையோடும் திருப்தியோடும் கனகசபையிடம் உரையாடிக்கொண்டிருந்தான்.

"கோவிந்தனைப்பற்றி உங்களுக்கு என்ன? பெண் இப்பொழுது என் வசமிருக்கிறாள். அவ்வளவுதானே வேண்டியது?"

கனகசபையின் உருவம் செந்தில்முன் காட்சியளிக்காவிடினும், கனகசபையின் களிப்பைக் கம்பியில் வந்த குரல் தெளிவாகக் காட்டியது போலும்.

"இவ்வளவு சீக்கிரம் காரியம் கைகூடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. பாப்பா எங்கிருக்கிறாள்?"

"எங்கள் வீட்டில்தான் இருக்கிறாள். பூட்டப்பட்ட அறைக்குள் பத்திரமாக இருக்கிறாள்."

கனகசபையின் ஆவல் கட்டுமீறிற்று. "இப்போதே புறப்பட்டுவருகிறேன்," என்று ரிசீவரைக் கீழே வைக்கப்போனான்.

"ஒரு நிமிஷம்," என்று தடுத்தான் செந்தில். "வரும்போது செக் புத்தகத்தையும் மறந்துவிடாமல் எடுத்துக் கொண்டு வாருங்கள்."

"அதற்கென்ன அவசரம்? நாளைக்கு என் வீட்டுக்கு வந்தால் சாவகாசமாக முடித்துக்கொள்ளலாம்."

"அப்படிச் சொல்லிவிடக் கூடாது. இந்த ஏற்பாட்டை முடித்துக்கொண்டு பாப்பா விஷயத்துக்கு வருவது நல்லது."

கனகசபையின் குரலில் கடுமை தோன்றிற்று. "என்மீது சந்தேகப்படுகிறீர்களா?"

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை," என்று சமாதானம் செய்தான் செந்தில், "ஒவ்வொரு நிமிஷமும் விலை மதிப்பற்றது, பாருங்கள்."

கோவிந்தன் துணுக்குற்றான். நேரம் பறக்கிறது என்ற நினைவைச் செந்திலின் சொற்கள் தூண்ட, டெலிபோன் பேச்சைத்தொடர்ந்து ஒட்டுக் கேட்க இனிமேலும் அவசியமில்லை என்று



## இந்த வரம் தருவாய்!

"உன்னோடு பதினைந்து வருஷம் வாழ்க்கை நடத்தியாயிற்று. என்ன சுகத்தைக் கண்டேன்? ஒரு நாளில் உன்னை எதிர்த்துப் பேச அனுமதித்திருக்கிறாயா? மரியாதையாக உன்னைத் திட்டுவதற்கு இன்று மட்டுமாவது அனுமதி கொடு."

முடிவு கட்டினன். அவன் கால்நடை மாடியை நோக்கி விரைந்தான்.

காலையில் எழுந்திருப்பதற்கு அலாரம் கடியாரம் தேவைப் படவில்லை ரத்தினத்துக்கு. பையப் பைய இரவு மங்கிப் பகலாக மலர்ந்தது போலவே அவனுடைய உறக்கமும் மெள்ள மெள்ள ஒடுங்கி விழிப்பாக மாறிற்று. சோம்பல் முறிக்க வேண் டிய தேவையின்றிச் சுறுசுறுப்போடு எழுந்தான். துளசியும் குழந்தைகளும் இன்னும் தூக்கத்தில் ஆழ்ந்திருக்கிறார் கள் என்பதைத் தாழிடப்பட்டிருந்த பக்கத்து அறைக் கதவு அவனுக்கு அறிவித்தது. பண்ணையைச் சேர்ந்த ஆள் ஒருவன் தோட்டத்துச் செடி களுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந் தான்.

கருமைக்கும் செம்மைக்கும் இடையில் உயிர் பெற்று எழுந்த விரிந்த வானத்தில் பறவைகள் கிரீச் சிட்டு விளையாடிக் கொண்டிருந்தன. பல் தேய்ப்பதற்கு வேப்பங்குச்சி யொன்றை ஒடித்துக் கொண்டு குளு மையான காற்றை உள்ளிழுத்தபடி ரத் தினம் வரப்புக்கள்மீது நடக்கலானன். கிராமத்தின் முன்னேற்றத்துக்கான பற்பல யோசனைகள் முளைத்தவண்ணம் இருந்த அவனது தெளிந்த மனம் கொழுத்த மீன்கள் துள்ளித் திரியும் குளத்தை ஒத்திருந்தது. வான்முகடு வரை பரந்து கிடந்த வயல்கள் அவன் உள்ளத்துக்கு விரிவையும், மெல்லென மிதந்து வந்த இளம் காற்று கனிவை யும்,வெறும் கால்கள் மிதித்து மகிழ்ந்த திண்மையான பூமி அசைக்க முடியாத திடத்தையும் ஊட்டின.

வேப்பங்குச்சியின் நுனியை மென்று பதப்படுத்திப் பற்களை ஒவ்வொன் ருகத் துலக்கிக் கொண்டே நடந்த ரத் தினம், தன் வாழ்க்கையின் மிக இனி மையான பகுதியை அடைந்து விட்ட தாக எண்ணினன். பெரிய கம்பெனி ஒன்றின் முதலாளி என்ற முறையில் அவனுக்குச் சென்னையில் இருந்த செல் வாக்கை அவன் இழந்துவிட்டிருக்க லாம். பதினயிரக் கணக்கில் பணத் தைப் புரட்டி நகரத்தின் பெரிய புள்ளி களில் ஒருவன் என்ற பெருமையை அவன் பறிகொடுத்திருக்கலாம். பங் களாக்களையும் பாலங்களையும் மாபெ ரும் கட்டிடங்களையும் புதுப் புது முறையில் கட்டி, முன்னேறும் உலகத் தின் முதல் வரிசையில் நடக்கும் மகிழ்ச்சியை விட்டுக் கொடுத்திருக்க லாம். ஆயினும் அவன் சோர்வடைய வில்லை. சென்னை வாசத்தில் கிடைக் காத எத்தனையோ தூய்மையான இன் பங்களை அவனுல் கூத்தனூரில் நுகர முடிந்ததே!

செந்திலின் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கிறோம் என்ற உறுத்தல் இங்கே கிடையாது. இல்லாத ஓர் உரிமை யைக் கொண்டாடித் தேவையில்லாத ஒரு பதவியை வகிக்கிறோம் என்ற நெஞ்சுக் குத்தல் இங்கே இல்லை. மாருக, நிறைவு அவனுக்குப் பரிசாகக் கிடைத்தது. ஆயிரம் ஆயிரம் ஆண்டு களாக அமுதளிக்கும் தாயாக இருந்து வந்திருக்கும் இந்தப் பழமை நிலத்தை, காலநிலைக்கும் அறிவு முதிர்ச் சிக்கும் ஏற்ற புதுமையான முறை களைக் கொண்டு பண்படுத்திப் பயன டைவதற்கான திட்டங்கள் தீட்டுவது அளவு கடந்த ஆனந்தத்தை அளித் தது.

பல் தேய்த்து முடிந்ததும் அவன் ஏரியில் இறங்கி வாய் கொப்புளித்து விட்டுக் கரை ஏறினன். சட்டைப் பையிலிருந்து ஒரு சிறிய குறிப்புப் புத் தகத்தை எடுத்து அதன் பக்கங்களைப் பெருமையோடு புரட்டினன். அவ்வப் போது தோன்றும் யோசனைகள் அதில் பதிவு செய்யப்பட்டிருந்தன. விவசாயம் சம்பந்தப்பட்ட குறிப்புக்களையெல்லாம் மேலோட்டமாக ஒருபார்வை பார்த்து விட்டு, வெறுமையாக இருந்த ஒரு தாளில் தன் சொந்த வாழ்க்கை பற்றிய ஒரு திட்டத்தைச் சொற்களில் வடிக் கலானன். அதை முதலில் நிறைவேற் றிய பிறகுதான் மற்ற யோசனைகளைச் செயல்படுத்த முடியும் என்று அவனுக் குத் தோன்றிற்று. அதை அவன் எழுதி முடித்து, ஒரு தடவைக்கு இரண்டுதட வையாகப் படித்துச் சரி பார்ப்பதற் கும், "அண்ணு, அண்ணு!" என்று உற்சாகத்துடன் அழைத்தபடி கோலி யும் சச்சுவும் ஓடிவருவதற்கும் சரியாக இருந்தது.

மூச்சு வாங்க, "நான் தான் முதல்," என்ருள் சச்சு.

"அதெல்லாமில்லை. அண்ணு கை யைப் பிடிச்சது நான்தான். அதனுலே நான்தான் முதல்," என்று உரிமை கொண்டாடினன் கோலி.

"நீயே சொல் அண்ணு, நான்தானே உன்னை முன்னுடி தொட்டேன்!"

என்று சச்சு வாதாட, "நீங்கள் இரண்டு பேர் மட்டுமா வந்தீர்கள்!" என்று ரத்தினம் வினவினான்.

"இல்லை இல்லை. சம்பந்தமும் அண்ணியும்கூட வர்றாங்களே' அதோ," என்று கோலி சுட்டிக் காட்டினான்.

சம்பந்தமும் துளசியும் ஆளுக்கொரு மூட்டையைத் தூக்கிக்கொண்டு தூரத்தில் நடந்து வந்துகொண்டிருந்தார்கள். டிபன்காரியருடன் ஓர் ஆள் அவர்களைப் பின்தொடருவது தெரிந்ததும், "மூட்டை முடிச்செல்லாம் தடபுடலாக இருக்கிறதே," என்றான் ரத்தினம்.

"ஏரியிலே குளிக்கலாம்னு அண்ணி சொல்லிச்சு அண்ணா. துணிமணிகளோட பலகாரமும் கொண்டுவந்திருக்கோம்!" என்று விளக்கினாள் சச்சு.

"அதுவா விஷயம்!" என்றான் ரத்தினம். "அப்படியானால் உங்களில் ஒருவரும் முதல் இல்லை. அதோ, பலகாரம் கொண்டுவருகிறானே அவன்தான் முதல். சீக்கிரம் இலையைப் போடப்பா. ரொம்பப் பசிக்கிறது," என்று ரத்தினம் சொல்லி முடிப்பதற்குள் சிரித்துக்கொண்டே வந்த துளசி, "குளித்துவிட்டே சாப்பிடலாமே. அதுவரைக்கும் பலகாரம் சூடாக இருக்கும்," என்றாள்.

கோலி சட்டென்று, "'கூழானாலும் குளித்துக் குடி'ன்னு நீ படிச்சதில்லையா அண்ணா?" என்று இடைவெட்டு வெட்டவும், துளசி அவனை அணைத்துக்கொண்டு, "பள்ளிக்கூடமென்றால் நமது கோலிக்குக் கசக்கும் என்று நினைத்தோமே. பார்த்தீர்களா? படிப்பிலே அவன் புலியாக்கும்," என்று பாராட்டினாள்.

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை. நான் காத்தாலே படிச்சிட்டிருந்ததை கேட்டிட்டு வந்து சொல்றான்," என்று சச்சு புரளி பண்ணினாள்.

"ஆனாலும் இவளுக்கு ரொம்பப் பொறாமை அண்ணா!" என்றான் சம்பந்தம்.

ரத்தினம் இரண்டு கைகளால் சச்சுவைச் செந்தூக்காகத் தூக்கி, "பொறாமைப்படுவதற்கு என்ன தண்டனை தெரியுமா? அப்படியே தூக்கி ஏரியில் வீசி எறிந்துவிடுவதுதான். எறியட்டுமா?" என்று கேட்க, அவள் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு, "வேண்டாம், வேண்டாம்," என்று கூச்சலிட, கைகொட்டிக் கும்மாளமிட்டுக்கொண்



சட் புட் மட்

"திருடன் இந்தப் பக்கம் ஓடினதைப் பார்த்தேன்னு சொல்றியே? என்னய்யா ஆதாரம்? கேட்கிறேன், முழிக்கறியே...ஓடினான்னு சொல்றியே எங்கேய்யா திருடன்? ஆளைப் பார், கம்ப்ளேண்ட் செய்ய வந்துவிட்டாரு!"

டிருந்த கோலியையும் இழுத்துக்கொண்டு ரத்தினம் தண்ணீரில் இறங்கினான். முதலில் பயந்துவிட்ட துளசி, அந்த இடத்தில் ஆழமில்லை என்பது தெரியும்வரை கரையில் நின்றபடி திகைப்பால் நடுங்கிப் போனாள். ஒருவர் மேல் ஒருவர் நீரை வாரி இறைத்து விளையாடி, கரையேறுவதற்குள் வெகு நேரமாகிவிட்டது. துளசி சொன்னது போல் பலகாரம் சூடாகத்தான் இருந்தது. குழந்தைகளுக்கு ஆடை உடுத்தி உண்பித்து, கிராமத்தாரோடு அனுப்பி வைத்தாள் துளசி.

"பள்ளிக்கூடத்துக்குப் போவதற்கு முன் நேற்றைய பாடத்தை இன்னொரு தரம் படிக்கவேண்டும். சம்பந்தம், இரண்டு பேரையும் நீ கவனித்துக் கொள்," என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள்.

"நான் அதிர்ஷ்டக்காரன்தான்," என்றான் ரத்தினம், அருகிலிருந்த ஆல மரத்தின்கீழ் உட்கார்ந்தபடி.

"ஏன்!" என்றாள் துளசி.

"அது ஏனோ!"

"விளையாடாதீர்கள், சொல்லுங்கள்,"

"கல்யாணம் ஆவதற்கு முன்பே குடும்பத்தை நிர்வகிக்கக் கற்றுக் கொண்டுவிட்ட ஒரு பெண் எனக்கு

மனைவியாகப் போகிருள். உனக்குத் தெரியுமா?"

துளசி ஒரு போலிப் பெருமூச்சு விட்டாள். "ஹூம். எனக்கு அழைப்பு அனுப்ப மறக்கமாட்டீர்களே?"

குறிப்புப் புத்தகத்திலிருந்து ஒரு காகிதத்தை எடுத்த ரத்தினம், "அன்றைக்கு ஞாபகம் இருக்குமோ என்னவோ? இப்போதே வாங்கிக் கொண்டுவிடு!" என்ருன்.

முகம் மலர, "எங்கே?" என்று கையை நீட்டினுள் துளசி.

"இங்கே!" என்று அவளது மென்மையான அகங் கையில் சத்தியம் செய்துகொடுத்தான் ரத்தினம்.

துளசியின் முகம் சிவந்தது.

போனில் செந்தில் எச்சரித்திருந்தபடியே ஓசைப்படாமல் காரைக் கொண்டுவந்து நிறுத்தினுன் கனகசபை.

வண்டி நின்றதும் நிற்காததுமாகக் கதவைத் திறந்துகொண்டு வெளியே தாவிய தாமோதரத்தால் பதட்டத்தை அடக்க முடியவில்லை. வராந்தாவில் கனகசபையை வரவேற்பதற்காகக் கால்சட்டைப் பையில் கைவிட்டபடி நின்றுகொண்டிருந்த செந்திலைக் கடக்கும்போது, "ரத்தினத்தின் அறையில் தானே இருக்கிருள்?" என்று ஒரு வினவை வீசிவிட்டுப் பதிலுக்குக் காத்திராமல் உள்ளே விரைந்தார்.

மாடிப்படியில் கால் வைத்துமிருப்பார், பளிச்சென்று அவர் ஜிப்பாவைப் பற்றிச் செந்தில் பின்னுக்கிழுத்திராவிடில். துணி கிழியும் ஒலியாலும், நடை தடையுற்ற அதிர்ச்சியாலும் திகைத்து நின்றவரிடம், செந்தில் சீறினுன். "திறந்த வீட்டில் நாய் நுழைவது போல் நுழைகிருயே? நில் அங்கேயே!"

இதற்குள் கனகசபை வந்துவிட்டான். "என்னய்யா அவசரம் உனக்கு? கொஞ்சம் பொறுமையாகத்தான் இரேன்," என்ற அவன் கண்டனம் தாமோதரத்தின் ஆவலைக் கிளறிவிடத்தான் உதவியது.

"என்னுல் எப்படிப் பொறுமையாக இருக்க முடியும், பெற்ற அப்பனைப் பேயாய்த் தவிக்க விட்டாளே பாதகி! அவள் தலை மயிரைப் பிடித்திழுத்துக் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டாலொழிய என் ஆத்திரம் தீராது. என்னை அவள் என்னவென்று நினைத்து விட்டாள்?"

"வேறு எப்படி நினைப்பாள்? நீ ஒரு கையாலாகாத சோம்பேறி என்று அவளுக்குத் தெரியாதாக்கும்?" என்று இடித்துக் காட்டினுன் கனகசபை, "ஆத்திரம் தீராதாமே, ஆத்திரம்! தானுக மகளைக் கண்டுபிடிக்கத் துப்பில்லை; இன்னெருவர் பிடித்துத் தரு இருக்கும்போது ஐயாவுக்கு வீரம் பொத்துக் கொண்டு வருகிறது."

"உட்காருங்கள்," என்று சோபாவைக் காட்டினுன் செந்தில்.

கால் மேல் கால் போட்டபடி அமர்ந்த கனகசபை சிகரெட் பெட்டியிலிருந்து ஒரு சிகரெட்டை உருவிப் பற்ற வைத்துக் கொண்டான். வெளிப் பார்வைக்கு அமைதியாகத் தோற்றமளித்த போதிலும் அவனும் உள்ளுக்குள் பர பரப்பாக இருந்தான் என்பதைத் தனது கால்விரல்களை அவன் மடித்துத் திறந்த விதம் காட்டிக் கொடுத்தது. தாமோதரமோ இருப்புக் கொள்ளாமல் மாடிப் பக்கம் அண்ணுந்து நோக்குவதும் செந்திலின் முகத்தைக் கெஞ்சும் பாவனையில் கவனிப்பதுமாக கனகசபைக்குப் பின்னுல் நின்று கொண்டிருந்தார்.

கனகசபையிடம் செக்கை வாங்கிக் கொண்ட பிறகுதான், செந்தில் அவர்களை மாடிக்கு அழைத்துச் சென்ருன்.

தாமோதரத்தின் இதயம் படபடக்க கனகசபை வெற்றிப் புன்னகையோடு சிகரெட்டைப் பிடிக்க, ஒரு மந்திரவாதியின் கர்வத்தோடு செந்தில் கதவைத் திறந்தான்.

"பாப்பா!" என்று கூவியபடி தாமோதரம் உள்ளே பாய்ந்தார்.

பதில் இல்லை.

பாப்பா அங்கே இருந்தால்தானே!



# சொல்லாதே!



எஸ்.ஏ.பி.

## இருபது

"என்ன ஆச்சு, ஒரு சட்டை குறைகிறதே?" என்று கேட்டாள் துளசி, வேலையாள் அடுக்கி வைத்துத் தந்த உருப்படிகளைச் சரிபார்த்தபடி.

அவன் அசட்டுச் சிரிப்புடன் தலையைச் சொறிந்துகொண்டு நிற்பதை அவள் கவனிக்கவில்லை. "இன்னும் உலரவில்லையா?" என்றாள் தொடர்ந்து.

அவன் இழுத்தான். "வந்து... போட்டுக்கிறதுக்கு ஒண்ணுமில்லேன்னு ஐயாகிட்டே கேட்டேன்..."

நிமிர்ந்து பார்த்த துளசி திடுக்கிட்டாள். ரத்தினத்தின் சட்டை இவன் மேனியை அல்லவோ அலங்கரித்துக் கொண்டிருக்கிறது!

அவளுக்குக் கோபம் வரத்தான் செய்தது. அன்றைக்கு என்னவென்றால் வண்டிக்காரனுக்கு ஒரு வேட்டியையும் தபால்காரனுக்கு ஒரு நல்ல புஷ் ஷர்ட்டையும் தானம் செய்துவிட்டார். இன்றைக்குக் கடைசியாகச் சென்னையில் தைத்த சட்டைகளில் ஒன்று உடல் மாறிவிட்டது. உரக்க, "எல்லோருமாகச் சேர்ந்து ஆளுக்கொரு துணியாகப் பறித்துக்கொண்டு விடுங்கள். ஒரு நாளைக்கு அவர் வெறும் இடுப்புத் துணியோடு திரியவேண்டியதுதான்," என்று அவள் அலுத்துக் கொண்டாள்.

"என்னம்மா அப்படிச் சொல்லிட்டீங்க! எசமானுக்கென்ன, அம்பாரம் அம்பாரமாப் பணம் கொட்டிக்கிடக்குது. உலகத்துக்கெல்லாம் துணி வாங்கிக் கொடுத்தாலும் தாங்கும். மகராசன்! நல்லா இருக்கணும்," என்ற அவன் சொற்கள் அவள் முகத்திலிருந்த சுளிப்பை விரட்டின.

"சரி, போய் வேலையைப் பார்," என்று சொல்லிவிட்டு மூலையில் நின்ற பழைய பீரோவைத் திறந்தாள். அவனுக்குப் புண்ணியம் செய்ய விருப்பமில்லாவிடினும், அது அவள் விருப்பத்துக்குக் காத்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ரத்தினத்தைப் பற்றி யார் புகழ்ந்து கூறினாலும் சரி, உடனே தன் மனமும் முகமும் மலர்ந்துவிடுவதை அவள் உணர்ந்திருந்தாள். ரத்தினத்துக்கு லட்சாதிபதிப் பட்டம் பொருந்தும் என்பது உண்மைதான். 'முன்னாள்' என்ற ஒரு சொல்லைச் சேர்த்துக்கொள்ளும் பட்சத்தில். ஏனெனில் இப்போது காலம் மாறிவிட்டது, பட்டணக்காரர் பட்டிக்காட்டில் குடியேறி ஆயிற்று. மனத்தின் விரிவுக்கும் பணப் பையின் அளவுக்கும் உள்ள வேறுபாடு பன்மடங்காகப் பெருத்து விட்டதால் வள்ளல் தன்மையை மூட்டையாகக் கட்டிப் பரண்மேல் ஏற்றி வைப்பதே முறை என்று துளசியின் பகுத்தறிவு சுட்டிக்காட்டிற்று. அதை அவள் ரத்தினத்திடம் தெரிவித்தும் விட்டாள். ஆனால் அவள் எச்சரிக்கையை அவன் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. கடைக்கண்ணால் பார்த்தபடி, "என் ஆட்டமெல்லாம் இன்னும் எத்தனை நாளைக்கு? கல்யாணம் வரைக்கும் பொறுத்துக்கொள்ளேன்," என்று பரிகாசம் செய்தான். அதை நினைத்து நினைத்து மகிழ்ந்து கொண்டிருந்த துளசியின் மனநிறைவை, வாசல் பக்கமிருந்து வந்த [illegible] ஒலி [illegible]. சமையல் அறைக்குள் நுழையப் போனவள் திரும்பினாள். [illegible] களுடே அவள் கண்ட காட்சி அவளை வியப்பில் ஆழ்த்திற்று.

கோவிந்தனு! அவன் கூட்டிவந்திருக்கும் பெண் யார்? துளசி வாசலுக்கு விரைந்தாள்.

கோவிந்தனும் திகைத்து நின்றான். "துளசி''' தன் கண்களையே அவனால் நம்ப முடியவில்லை போலும். காணாமல்போன துளசி கூத்தனூரில் எப்படி வந்து முளைத்தாள்? "நீ...'' என்று ஆரம்பித்தான்.

சமாளித்துக்கொண்ட துளசி, "வாருங்கள். அவர் வயல்காட்டுப் பக்கம் போயிருக்கிறார். சொல்லி அனுப்புகிறேன்,'' என்று கூறிய விதம் அவனுடைய தொண்டையிலிருந்து ஒரே சமயத்தில் துள்ளியெழுந்த கேள்விகள் அத்தனையையும் அமுக்கிவிட்டதோ?

"சொல்லி அனுப்புவானேன்? நானே போய்ப் பார்க்கிறேன்.''மேற்கொண்டு எந்தவித விளக்கமும் தேவையில்லை என்பது அவன் கருத்துப்போலும்! அப்படியே திரும்பி, தனக்குத் தோன்றிய திசையில் நடக்கலானான்.

வேலையாளிடம், "நீயும் கூடப் போ. மேற்கே போய்க்கொண்டிருக்கிறாரே! ஐயாகிட்டே கூட்டிக்கொண்டு போ,'' என்று கட்டளை இட்டாள் துளசி. வண்டிக்குரிய சத்தத்தைக் கொடுத்துவிட்டுச் சுற்று முற்றும் பார்த்தாள். அதற்குள் அந்தப் பெண் எங்கே போய்விட்டது!

"என்னையா அக்கா தேடுகிறீர்கள்?''

சுற்றுத் திண்ணையில் விரிக்கப்பட்டிருந்த ஜமுக்காளத்தில் கால்மேல் கால் போட்டபடி படுத்துக் களைப்பாறிக் கொண்டிருந்த பாப்பா, தொடர்ந்து, "பசிக்கிறது அக்கா. கொஞ்சம் காப்பி போட்டுத் தாருங்களேன்,'' என்று ஒரு கோரிக்கையும் கொடுத்தாள்.

'கோவிந்தனுக்கு ஏற்றவள்தான்' என்ற முதல் எண்ணமே துளசியின் மனத்தைக் குளிர வைத்தது.

"இதோ கொண்டு வருகிறேன்,'' என்று வாக்களித்தவள், "குளிப்பதற்கு வெந்நீர் போடச் சொல்லட்டுமா?'' என்றாள்.

"ஹூக்கும்...குளிப்பதற்கு என்ன அவசரம், வயிறு கிடந்து கர்ய்கிற போது?''

துளசியால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. "கொஞ்சம் பலகாரம் இருக்கிறது. முதலில் அதைச் சாப்பிடு. குளிப்பதற்குள் சாப்பாடு தயாராகிவிடும்,'' என்று சமாதானம் செய்தாள்.

சுறுசுறுப்போடு எழுந்து உட்கார்ந்த பாப்பாவின் கண்களில் சுவர் ஓரமாகக் கிடந்த புத்தகம் ஒன்று தற்செயலாக விழுந்தது. "சச்சுவின் கையெழுத்து மாதிரி இருக்கிறதே!'' என்று ஆச்சரியப்பட்டாள்.

பலகாரத் தட்டை அவள் முன்வைத்தாள் துளசி. "சச்சுவுடைய கையெழுத்து மாதிரி என்ன? சச்சுவுடைய கையெழுத்தேதான். ஆமாம், அவனை உனக்கு எப்படித் தெரியும்?''

"ஆமாம், அவனை உங்களுக்கு எப்படித் தெரியும்?''

"அவன் எங்களோடுதான் இருக்கி



ரன். [illegible], சம்பந்தம் எல்லோருமா ப்பள்ளிக்கூடம் போயிருக்கிறார்கள்."

பாப்பாவின் முகத்தில் மகிழ்ச்சியா முகிழ்த்த உணர்ச்சி, எச்சரிக்கையாக மாறிற்று. அவள் எழுந்து நின்றாள். "அப்பாவும் வந்திருக்கிறார்!"

"அப்பாவா?"

"ஆமாம். தாமோதரம்."

துளசியின் முகம் சுடர்விட்டது. "அப்படியானால் உன் பெயர்..."

"பாப்பா."

துளசி அவளை அணைத்துக் கொண்டாள். "குழந்தைகள் உன்னைப் பற்றி நினைக்காத நாள் இல்லை. வண்டி வண்டியாகச் சொல்லியிருக்கிறார்கள். முதலில் சாப்பிடு. அப்புறம் பேசிக் கொள்ளலாம்."

"ஆமாம் அண்ணா. இந்தத் தாமோதரத்துக்கு ஈடாக இன்னொரு சண்டாளனை இந்த உலகத்தில் பார்க்க முடியாது. பணத்துக்காக என்ன வேண்டுமானாலும் செய்வான். மானங்கெட்ட ராஸ்கல்!" உணர்ச்சியை அடக்கமாட்டாமல் பொரிந்தான் கோவிந்தன், கனகசபையிடம் பாப்பா சிக்கிக்கொண்ட கதையைச் சொல்லி முடித்ததும்.

அண்ணாவும் தம்பியும் வரப்பின்மீது நடந்தபடி வெற்றிலைக் கொடிக்காலைக் கடந்து கொண்டிருந்தார்கள். ரத்தினத்தின் நெற்றியில் சுருக்கங்கள் விழ, விழிகளில் ஒளி குன்ற, கெஞ்சும் குரலில், "போகிறார் விடு. என்ன இருந்தாலும் வயதில் பெரியவர். அப்பாவுக்கு நண்பர். இல்லையா?" என்றான்.

"அவனை 'அவர் இவர்' என்று எதற்காக அண்ணா குறிப்பிடுகிறீர்கள்? எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது."

"இவ்வளவு கேவலமாகப் போகும் என்று நான்கூட எதிர்பார்க்கவில்லை. அந்த அம்மாள் எப்படி?"

"யார் அண்ணா!"

"அவர் மனைவியைத்தான் சொல்கிறேன்."

"அவளா? பதிக்கு ஏற்ற பத்தினி தான். அஞ்சு தாமோதரத்தை அப்படியே சட்டை வேட்டியோடு விழுங்கி விடுவாள்."

ரத்தினம் பெருமூச்சு விட்டான்.

"இப்போது பாப்பா எங்கே இருக்கிறாள்?"

"வேறெங்கே? கூத்தனூரில்தான்."

முன்னால் நடந்துகொண்டிருந்த மூத்தவன் நின்றுவிட்டான். "என்னது?"

வெய்யில் ஏறிக் கொண்டிருந்தது. கோட்டுப் பையிலிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்துத் தலையில் கட்டிக் கொண்டான் கோவிந்தன்.

"கூடவே கூட்டி வந்துவிட்டேன் அண்ணா ஏன், ஆச்சரியமாக இருக்கிறதா!"

ரத்தினம் ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

கோவிந்தன் முந்திக்கொண்டு, "துளசியைப் பார்த்தவுடன் எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. அவள் எப்போது அண்ணா இங்கே வந்தாள்?" என்றான்.

சில விநாடிகளுக்கு ரத்தினத்திடமிருந்து பதில் எதுவும் வரவில்லை. மெள்ள மெள்ள அவன் முகத்திலிருந்த இருள் விலகிற்று. பக்கவாட்டில் கோவிந்தனை நோக்கிய அவன் கண்கள், "போக்கிரி!" என்று பட்டம் வழங்கின.

"இன்னொரு விஷயம்," என்றான் கோவிந்தன். "பாப்பாவைப் பாழ் பண்ணும் சூழ்ச்சியில் வேறொரு அயோக்கிய சிகாமணியும் வரிந்து கட்டிக்கொண்டு நிற்கிறார். அவர் பெயரைச் சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்."

"சும்மா சொல்லு."

"நமது தம்பியப்பன்தான்."

ரத்தினத்தின் புருவங்கள் சந்தித்தன. "யார், செந்திலா?"

"இரண்டு லட்சம் ரூபாய் என்றால் சும்மாவா!"

கிணற்றங்கரையில் பம்ப் செட்டுக்காகக் கட்டப்பட்ட அறையின் படியில் ரத்தினம் உட்கார்ந்து விட்டான். "எதற்கு இரண்டு லட்சம்?"

"எனக்கு விவரம் ஒன்றும் சரியாகத் தெரியாது அண்ணா. ஆனால் காதில் விழுந்ததைச் சொல்கிறேன். நமது தலைவிங்கி துரை, டாடா பிர்லாவை எல்லாம் தோற்கடிக்கும் தொழிலதிபர் ஆகிவிடுவார் என்று நினைத்துக் கம்பெனியை அவனிடம் ஒப்படைத்து வந்து விட்டார்கள். அங்கே சாயம் வெளுத்துப் போய்விட்டது."

ரத்தினம் கவலையோடு, "ஏன், என்ன நடந்து விட்டது?" என்றான்.

"அந்த இழவை எல்லாம் யார் கண்டார்கள்? ஆசாமி மலேசியாவில் இருக்கிறான். அவ்வளவுதான் எனக்குத்

தெரியும். எல்லாம் மிதப்பாக இருக்கும்போதே புத்தி கோணலாக வேலை செய்யும். இப்போது கேட்க வேண்டுமா? உங்கள் அறையில் நான் பாப்பாவை ஒளித்து வைக்க, அவனைக் கனகசபையிடம் அடைமானம் வைத்துக் கடன் வாங்கப் பார்த்து விட்டான், படுபாவி. அவன் டெலிபோனில் பேசுவதைத் தற்செயலாகக் கேட்டேனோ, பாப்பா பிழைத்தாளோ!''

யோசனையில் ஆழ்ந்தவனாய், ''செந்தில் என்ன நெருக்கடியில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறானோ தெரியவில்லையே'' என்றான் ரத்தினம். ''ஒருகால் அந்த அணைக்கட்டு சம்பந்தமாகப் பணம் தேவைப்பட்டிருக்குமோ?''

''அண்ணா'' என்று அவனை உலுப்பினான் கோவிந்தன் ''செந்திலுக்கு அனுதாபப்படுவதை அப்புறம் வைத்துக் கொள்ளலாம். முதலில் பாப்பா விஷயத்திற்கு ஒரு வழி பண்ணுங்கள்.''

இந்த மாதிரி ஓர் அதிர்ச்சியைத் தாமோதரம் இதுவரை அனுபவித்தது கிடையாது.

ஏதோ சாதாரணக் கடிதம் என்று நினைத்துத்தான் அதை பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்பொழுது அலட்சியமாகப் பிரித்துப் பார்த்தார். முதல் வரியே அவரைப் பிரமிக்கச் செய்துவிட்டது. சிறிது இடமில்லாமல் பிரயாணிகள் அடைந்து கிடந்த அந்த வண்டிக்குள் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுக் கடிதத்தைச் சட்டென்று மடித்துப் பைக்குள்ளே திணித்துக் கொண்டார். உள்ளம் இளகி ஒரு சொட்டுக் கண்ணீராகக் கன்னத்தில் வழிந்தது. மேல் துண்டால் அதைத் துடைத்துக் கொண்ட பொழுது, துன்பச் செய்தி அடங்கிய காகிதம் போலும் என்றும், அதை மேற்கொண்டு படிப்பதற்கே அவர் மனம் இடம் கொடுக்கவில்லை என்றும் உடனிருந்தவர்கள் முடிவு கட்டியிருக்கக்கூடும்.

மூக்கை உறிஞ்சியபடி கடிதம் இருந்த பையை அவர் கையால் தடவினார். ரத்தினத்தைப்பற்றி நினைக்கும் பொழுது என்றைக்குமில்லாத ஒரு நெகிழ்ச்சி அவர் உள்ளத்தில் ஏற்படுவதற்கு அந்தக் கடிதத்தின் துவக்க மன்றே காரணம்!

''மதிப்பிற்குரிய தந்தை அவர்களுக்கு ரத்தினம் தாழ்மையுடன் எழுதிக் கொண்டது...''

யந்திரம்போல் கட்டணத்துக்குரிய சில்லறையைக் கண்டக்டரிடம் நீட்டியவர், மேற்சொன்ன வாக்கியத்தை மந்திரம்போல் மனத்துக்குள் உருவேற்றிக் கொண்டிருந்தார். உரு ஏற ஏற, கசங்கி உலர்ந்து கருகிப் போயிருந்த அவர் உள்ளம், துளிர்த்து, பசுமை பெற்று, பளபளப்புடன் மின்னத் தொடங்கிவிட்டது. செந்திலைப் போன்ற அற்பர்கள் அவரை நாய் என்று அழைக்கலாம். பணக் கொழுப்புப் பிடித்த கனகசபை அவரைப் புழுவினும் கேவலமாக மதிக்கலாம். குணம் கெட்ட மங்களம் அவரைச் சீ என்று ஒதுக்கலாம். ஆனால் அத்தகையவர்களிடமிருந்து அவருக்குக் கிடைத்த வசவுகளும் அடைந்த அவமானங்களும், தந்தை என்று குறிப்பிட்டு ரத்தினம் எழுதிய



''கார் மேலேயும், பின்னாலும் நிறையச் சாமான்கள் வைத்தாகி விட்டது. இன்னும் இவ்வளவு இருக்கிறதே?''

''காருக்குள் நாம் உட்காரும் இடத்தில் வைக்கலாமே!''

''அப்புறம் நாம் எங்கே உட்காருவது?''

''நமக்கு ஒரு டாக்ஸி வைத்துக் கொண்டால் போச்சு!''

இந்த ஒரு வரியிலேயே அடி பட்டுப் போய் விட்டதே!

'ரத்தினம் எங்கே, மற்றவர்கள் எங்கே? அவன் கால் தூசுக்குக் காண்பார்களா அவர்கள்' நற்குணங்களுக்கெல்லாம் பிறப்பிடம் என்று சொல்லக் கூடிய அந்தக் குபேரனே நம்மை இவ்வளவு உயர்ந்த இடத்தில் வைத்துப் பணிவுடன் எழுதும் போது எந்த உதவாக்கரை எப்படி ஏசினால்தான் என்ன? அக்கறையில்லை!" என்று தோன்றிற்று தாமோதரத்துக்கு.

கடிதம் முழுவதையும் படிப்பதற்கு ஒதுப்புறமான, அமைதி நிறைந்த இடம் தேவைப்பட்டது. கனகசபைக்கு வாக்களித்தபடி சாயங்காலம் ஐந்தரை மணிக்கு அவனைச் சந்திக்க அடையாறுக்குப் புறப்பட்டவர் நேரே காந்தி மண்டபத்தை அடைந்தார். மேடையை நோக்கிய அடுக்குத் திண்ணையில் குந்தியபடி கடிதத்தைஎடுத்து வாசித்தார்.

"இன்று ஒரு செய்தி கிடைத்தது. கடிதம் எழுத அதுவே காரணம். ஏதேதோ எழுதுகிறேன். படித்துப் பாருங்கள். ஒவ்வோர் இடத்தில் பிதற்றலாகத் தங்களுக்குத் தோன்றக் கூடும். ஒவ்வோர் இடத்தில் அதிகப் பிரசங்கித்தனமாகப் படக்கூடும் ஆனால் அப்பா! கரம் கூப்பித் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். இதை உடனே கிழித்தெறிந்துவிட வேண்டாம். அமைதியும் அவகாசமும் கிடைக்கும்பொழுது மறுபடியும் ஒரு முறை படித்துப் பார்க்க வேண்டுகிறேன். இதனால் ஏதேனும் பயன் விளையுமேயானால் நான் பெரிய அதிர்ஷ்டசாலி என்று கருதுவேன். எனது கலக்கத்தை நீக்கித் துயரத்தைத் துடைத்து இன்ப வாழ்வை ஏற்படுத்திக் தந்த பெருந்தகை என்று தங்களைப் போற்றுவேன்."

தாமோதரம் ஆவலோடு வாசித்தார். ரத்தினத்தின் துன்பத்தைச் சுரண்டி எறிவதற்காகவும் அவனது உள்ளத்தின் மீது ஆறுதலைப் பூசுவதற்காகவும் அவர் எது வேண்டுமானாலும் செய்ய ஆயத்தமாக இருந்தார்.

நேரம் போவதே தெரியாமல் அந்த நீண்ட கடிதத்தை அவர் படித்து முடிப்பதற்குள் வானம் கறுத்து விட்டது. ஆனால் அவர் உள்ளமோ அப்பொழுதுதான் துலக்கப்பட்ட பாத்திரம்போல் ஒளி வீசிற்று.

கடிதத்தைக் கையில் வைத்தபடி

## அதட்டெழுத்தாளர்



பின் குறிப்பு: கடிதத்தில் என்ன கண்டிருக்கிறதோ அதற்கு மட்டுமே பதில் எழுதவும். போன தடவை எழுதியது போல், டைப் அடித்ததில் பல தப்புகள் இருப்பதாகக் கண்டபடி குறிப்பிட வேண்டாம்.

டைப் அடித்தவர்

தாமோதரம் தேம்பித் தேம்பி அழுதார். அதுவரை அவர் வாழ்க்கையில் செய்திருந்த அத்தனை தவறுகளையும் மோசடிகளையும் துரோகங்களையும் நினைத்து நினைத்துக் கண்ணீர் உகுத்தார். இடித்துக் காட்டுவதன் மூலமாகவோ, பழிச்சொல் சுமத்துவதன் மூலமாகவோ, தண்டனைக்கு உட்படுத்துவதன் மூலமாகவோ பிறர் அவரது வாழ்வில் சாதிக்கத் தவறி விட்ட ஒரு மாபெரும் புரட்சியை ரத்தினம் பணிவு மூலமாகவும் கனிவு மூலமாகவும் செய்து காட்டி விட்டானே! புறத்தேயுள்ள அழுக்கை மட்டுமே கண்டு மற்றவர்கள் அருவருத்து வந்திருக்கிறார்கள் இதுவரை. ரத்தினமோ அந்த அழுக்குக்குள்ளே வீற்றிருக்கும் தூய்மையைப் புரிந்து கொண்டிருக்கிறானே. அது அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனந்தமாக விரிந்தது.

பாப்பா எங்கே, எங்கே, என்று அவரும் கனகசபையும் செந்திலும் வலை போட்டு அரித்துக்கொண்டிருந்தார்களே, இப்போது அந்தப் பாப்பா இருக்குமிடம் தெரிந்துபோய்விட்டது. கோவிந்தனும் அவளும் ரத்தினத்தின் பாதுகாப்பில் இருக்கிறார்கள் என்பது விளங்கிவிட்டது.

விளைவு? விளைவை எண்ணிப் பார்க்கும்பொழுதே தாமோதரத்தின் நெஞ்சத்தில் அமுதம் ஊறிற்று. கனகசபையும் செந்திலும் எக்கேடு வேண்டுமானாலும் கெட்டுப் போகட்டும். தன் உயிருக்கே ஆபத்து வந்தாலும் வரட்டும். பாப்பா விஷயத்தில் அவர் இனித் தலையிடப்போவதில்லை. பழைய தாமோதரம் செத்துவிட்டதாக அவர் கருதினார். ரத்தினம் அவர் பிள்ளை மட்டுமல்ல; குருவும்கூட. அவன் கிழித்தகோட்டை இனி ஒருபோதும் தாண்டப்போவ

தில்லை. அவருக்கு அவன் பணம் கொடுத்து உதவி, பெருமைப்படுத்தினாலும் சரி, வறுமையிடம் அவரை ஒப்படைத்துவிட நேரிட்டாலும் சரி, அவனே அவருக்கு வழிகாட்டி, துணை, தலைவன் எல்லாம்.

புதிய தாமோதரம் எழுந்தார். காந்தி மண்டபத்தை விட்டு வெளியேறினார். 'இந்தக் கடிதம் விலை மதிப்பற்ற பொக்கிஷம்' என்ற மனச்சாட்சியின் குரல் அவருக்கு மகிழ்ச்சியூட்டிற்று.

அதே சமயம் வெகு பழக்கமான மற்றொரு குரல், 'உண்மைதான். இந்தக் கடிதம் எத்தனையோ லட்சங்கள் பெறுமே!' என்று அவருக்குள்ளிருந்தபடி சிரித்தது.

'எப்படி?' தன்னை அறியாமலே தாமோதரம் கேட்டார்.

'சொல்கிறேன்' என்றது அது, உற்சாகத்துடன். 'ரத்தினம் உன் மகன் என்பதற்குச் சட்டபூர்வமான ஆதாரம் இதுவரை இல்லாமல் இருந்தது. அந்தக் குறையைத் தீர்த்து விட்டது இந்தக் கடிதம்.'

தாமோதரம் விழித்தார்.

'அட அசட்டு மனிதா! இந்தக் கடிதத்தில் அவனே உன்னை அப்பா என்று அழைத்திருக்கிறான். தங்கம்



மனைவி (எரிச்சலுடன்): எதற்கு இப்படித் துள்ளிக் குதிக்கிறீர்கள்?
கணவன்: சாதாரண கட்டமா? எவ்வளவு பிரமாதமான இடம்! ஆகா! எப்படிப்பட்ட வீரச் செயல்!

மாள் இறக்கும் தறுவாயில் அவன் உன் பிள்ளை என்று ஒப்புக் கொண்டதாகவும் குறிப்பிட்டிருக்கிறான். இதைச் செந்திலிடம் காட்டினால்...'

வாக்கியம் முற்றுப் பெறவில்லை. தாமோதரத்துக்கு வியர்த்துக் கொட்டிற்று. செந்திலிடம் காட்டினால்?

'கனகசபையிடம் வாங்கிய செக் திரும்பி வந்துவிட்டதே என்று செந்தில் ஏங்கிக் கொண்டிருக்கிறான். இந்தக் கடிதத்தை அவனிடம் காட்டினால், அவன் துள்ளிக் குதிப்பான். பாப்பாவைக் கனகசபையிடம் பிடித்துக் கொடுத்து, இரண்டு லட்சம் கடனைப் பெற்று, உனக்குப் பெரும் தொகை கமிஷனாகவும் தருவான்.'

தாமோதரம் தயங்கினார். அவருக்குச் சபலம் தட்டிற்று. 'வேண்டாம், வேண்டாம்,' என்று மனச்சாட்சி கதறிய போதிலும் இப்போது அதன் குரல் வலுவிழந்து கொண்டே வரலாயிற்று.

எதிர்க் குரல் தொடர்ந்தது: 'இன்னும் கேள். நீ உலகம் தெரிந்தவன். மனம் தளர்ச்சியுற்று, நீ திடீரென்று திருந்திவிட்டாலும், உன்னைப் பெரிய மகான் என்று யாரும் கொண்டாடப் போகிறார்களா?'

மாட்டார்கள் என்று தாமோதரத்துக்குத் தெரியும். பைத்தியம் என்று கேலி தான் செய்வார்கள்.

'ரத்தினம் தனது உடன் பிறந்தவன் அல்ல என்று செந்தில் அறியமாட்டான். அவனிடம் உண்மையைச் சொல். உனக்குக் கனகாபிஷேகம் செய்வான். மூன்றில் ஒன்றாக இருக்கும் அவன் பங்கு, பாதியாக உயர்வதற்கு இந்தக் கடிதம் உதவும். எத்தனையோ லட்சம் லாபம் ஏற்படும் போது, உனக்கு ஒரு ஐம்பதினாயிரமாவது தராமலா இருக்கப் போகிறான்? போ, ரத்தினத்தைக் கட்டிக் கொண்டு அழுவதில் என்ன மிச்சம்? செந்திலிடம் போ!'

வாழ்க்கை முழுவதும் தாமோதரத்துக்கு வழிகாட்டிய சுயநலம் கட்டளையிட்டது. தற்காலிகமாகத் தலையெடுத்து மனச்சாட்சி மண்ணைக் கவ்விற்று.

வானம் இருண்டிருந்தது. காற்றையே காணோம். மரங்கள் எல்லாம் சிற்பங்களாய் அசையாமல் நின்றன. தாமோதரம் செந்திலைக் காணப் புறப்பட்டார்.




எஸ்.ஏ.பி.

## இருபத்தொன்று

பகல் தூக்கத்துக்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டான் கனகசபை.

சாளரத் திரைகள் அறைக்குள் மென்மையான இருளைத் தேக்கிக் கண்களுக்கு ஓய்வையும் கருத்திற்கு அமைதியையும் தர முயன்றன. மின் விசிறியின் ரீங்காரம் தாலாட்டுப் பாடிற்று. சில்க் ஜிப்பாவைக் கழற்றிக் கோட் ஸ்டாண்டில் மாட்டிவிட்டுக் கைக் கடியாரத்தைக் கட்டிலை அடுத்த முக்காலியில் வைத்தான். முண்டா பனியனுக்கு உள்ளே பருத்தும் வெளியில் பிதுங்கியும் நின்ற திரண்ட தசைகளைக் கண்ணாடியில் ஒரு முறை பெருமையோடு பார்த்தவன், கட்டிலில் உட்கார்ந்தான். ரப்பர் பஞ்சு மெத்தை ஓசைப்படுத்தாமல் அவனது நூற்று அறுபது ராத்தலையும்—நண்பர் ஒருவர் வீட்டில் அவன் உண்ட விருந்துச் சாப்பாடு உட்பட—தாழ்மையுடன் ஏற்றுக் கொள்ள, நான்கு பட்டுத் தலையணைகளைத் தேவையான இடங்களில் அணைப்புக் கொடுத்துக்கொண்டு, கைகளை மடித்து மார்பின் மீது வைத்தபடி,

"பாப்பா .." என்று லேசாகப் பெருமூச்சுவிட்டான்.

அப்போதுதான் டெலிபோன் மணி அடித்தது.

அவன் அசையவில்லை. மணி தானாக ஓய்ந்து போய்விடாதா என்று அவன் எதிர்பார்த்தது வீணாயிற்று. தலையைத் திருப்பினான். போனைக் கெஞ்சுதலோடு பார்த்தான். பன்னிரண்டு அங்குலத் துக்கும் அண்மையில் அந்தக் கருவி இருந்தபோதிலும் உடல்சுகத்தைக் கலையாகப் பயின்றிருந்த அவனுக்கு, சுண்டு விரலை அசைப்பதுகூட அப்போது பெரிய சாதனைபோல் தோன்றிற்று.

யந்திரத்தோடு மனிதன் போட்டி போட முடியுமா? வேறு வழியின்றி, படுத்தவாறே ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்துக்கொண்டான்.

"ஹலோ!" என்றது டெலிபோன்.

"மிராசுதார் கனகசபை வீடுதானே அது?"

"உம்..." என்றான் கனகசபை வேண்டா வெறுப்பாக.

"அவர் வீட்டிலே இருக்கிறாரா?"

"உம்..."



"இங்கே செந்தில் பேசுகிறேன். அவரிடம் சொல்கிறீர்களா?"

செந்தில்! கனகசபையின் உதடுகள் அருவருப்பால் சோணின. ஏ, யாரோ சாதுவன்' வலையில் சிக்கிய பாப்பாவைக் கோட்டைவிட்டவன். ஆனால் கரூர் கண்டிப்புக்கு மாத்திரம் குறைவில்லை.

"ஹலோ" செந்தில் கூப்பிட்டான்.

ரிஸீவரைப் பட்டென்று திரும்ப வைப்பதற்குக் கனகசபையின் விரல்கள் நமைச்சலெடுத்தன. தன்னை யாரென்று நினைத்துக்கொண்டான் இந்தக் கண்ணாடிக்காரன்' எடுப்பது பிச்சை. இதில் அதிகாரம் வேறு! போனால் போகிறதென்று கடன் கொடுக்க முன் வந்தால் எப்படி அவமானப் படுத்திவிட்டான்' கையில் செக் ஏறினால் ஒழிய ஓர் அங்குலம் நகரமாட்டேன் என்று அழும்பல்லவோ பிடித்தான்!

செந்திலின் குரல் மறுபடி கேட்டது.

"நான்தான் பேசுவது. என்ன சேதி?" என்றான் கனகசபை

செந்திலின் தொனி கீழே இறங்கி, வினயம் நிறைந்த

''வணக்கம்,'' ஆக வெளிப்பட்டது.

''விஷயத்துக்கு வாருங்கள்,'' என்றான் மற்றவன், பல் இடுக்கில் சிக்கிக் கொண்டிருந்த பழச் சக்கையை நாக்கால் துழாவியபடி.

''செக்கை பாங்க்கில் கட்டினேன் ..''

இடைவெளி. ''ஏன் நிறுத்திவிட்டீர்கள்?'' என்று கிண்டினான் கனகசபை.

''அது திரும்பி வந்துவிட்டது''

''அதை நீங்கள் எதிர்பார்க்கவில்லையாக்கும்?''

''ஸ்டாப் பேமண்ட் உத்தரவு வந்திருப்பதாகப் பாங்க் காரியதரிசி தெரிவித்தபோது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.''

''ஓஹோ?'' கனகசபையின் நாக்கு பழச் சக்கையை வெளியேற்றும் முயற்சியில் மூர்க்கமாக முனைந்தது.

''உங்களை நம்பி நான் பல செக்குகள் விட்டிருக்கிறேன் எத்தனை பேருக்குச் சமாதானம் சொல்ல முடியும்?''

''செந்தில், நான் உங்களை ஒரு கேள்வி கேட்கலாமா?''

''தாராளமாக''

''எந்தத் தைரியத்தைக் கொண்டு அந்தச் செக்கை பாங்கில் கட்டினீர்கள்?''

செந்திலினுடைய பதிலில் போலி வியப்பு இழையோடிற்று. ''நீங்கள் . சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே' உங்கள் கையாலேயே என் பெயரை எழுதிக் கையெழுத்திட்டுத் தந்தீர்கள். இவ்வளவுக்கும் கிராஸ் செக். அதை பாங்கில் கட்டுவதற்குத் தனித் தைரியம்தேவை என்று எனக்குத் தோன்றவில்லையே''

''எனக்கும் வேடிக்கையாகத் தான் இருக்கிறது.'' கனகசபை எழுந்து உட்கார்ந்து பழச்



சக்கையை நகத்தால் எடுத்துச் சுண்டி எறிந்தான். "ஊர் பேர் தெரியாத உங்களுக்கு, இரண்டு லட்சம் ரூபாயைக் காரணமில்லாமல் தூக்கிக் கொடுக்கக் கூடிய அடிமுட்டாள் இந்தக் கூத்தனூர் மிராசுதார் என்றால் அது வேடிக்கையாகத்தான் இருக்கிறது."

ஒரு வினாடிக்கு செந்தில் பேசவில்லை. பிறகு, "என்ன சொன்னீர்கள்?" என்றான் ஆவலோடு.

கனகசபையின் உதடுகள் படபடவென்று துடித்தன. "உங்களுக்கோ உங்களைப் போன்றவர்களுக்கோ சல்லிக் காசு கடன் கொடுக்க முடியாது என்றேன். வையுங்கள் போனைக் கீழே."

"கோபித்துக் கொள்ளக்கூடாது," என்று கெஞ்சினான் செந்தில். "கூத்தனூர் என்றா சொன்னீர்கள்?"

"அது எந்த ஊராக இருந்தால் என்ன! தயவு செய்து என் ஆத்திரத்தைக் கிளப்பாதீர்கள்."

"பாப்பா என் வசம் இருந்தால் கூடவா?"

ஏகத்தாளச் சிரிப்பொன்று கனகசபையின் அடிவயிற்றிலிருந்து எழுந்தது. "செந்தில்! இன்னொரு தடவை ஏமாற மாட்டேன். அதற்கு வேறே ஆள் பாருங்கள்."

செந்தில் வற்புறுத்தினான். "என்னை நம்புங்கள். இந்த முறை கட்டாயம் அவளைப் பிடித்து உங்களிடம் ஒப்படைக்கிறேன். ஓர் உபகாரம் செய்வீர்களா?"

"முடியாது."

"வேறொன்றுமில்லை. கூத்தனூரில் எனக்குக் கொஞ்சம் முக்கிய வேலை இருக்கிறது. இரண்டு நாள் தங்க வேண்டியிருக்கும். அங்கே எனக்கு ஒரு ஜாகை ஏற்பாடு பண்ணிக் கொடுத்து, ஒத்தாசைக்கு இரண்டு ஆளையும் வந்திருக்கச் செய்தீர்களானால் ரொம்ப உதவியாக இருக்கும்."

கனகசபையின் நெற்றியில் கோடிட்ட எண்ணம் ஒரு கேள்வியாக உருவெடுத்தது. "நீங்கள் புதுடில்லிக்கும் பம்பாய்க்குமாகப் பிளேனில் பறக்கிறவர். அந்தப் பட்டிக்காட்டில் உங்களுக்கு என்ன வேலையோ?"

செந்தில் சிரித்தான். "அதைப் பிறகு சொல்கிறேன். முதலில் நான் கேட்டபடி தயவு செய்து செய்யுங்கள்."

"ஓர் ஆள் அனுப்புங்கள் கடிதம் தருகிறேன்," என்றான் கனகசபை, அசுவாரஸ்யமாக.

"இன்னொன்று. பூராத் தொகையும் கொடுக்க முடியாவிட்டால் ஒரு ஐம்பதினாயிரமாவது முதலில் தரவேண்டும். நெருக்கடியைச் சமாளிக்க..."

கனகசபை பொறுமையை இழந்தான். 'ணங்'கென்று ரிஸீவரைக் கீழே வைத்துப் பேச்சைக் கத்திரித்து விட்டான்.

மங்களத்துக்குத் தெரியக்கூடாது என்பதற்காகத் தாமோதரம் அரும்பாடு பட்டார்.

இன்னும் பொழுது விடிய வெகு நேரமிருந்தது. செம்பிலிருந்து நீர் ஊற்றும் ஒலி அவள் காதுக்கு எட்டிவிடக் கூடும் என்ற அச்சத்தில் முகத்தைக் கூடக் கழுவாமல் விரல் நுனியில் தண்ணீரைத் தொட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டார். அவர் இருந்த மனநிலையில், மங்களத்தோடு சண்டை போடுவதற்கோ சர்ச்சை செய்வதற்கோ, ஏன், இரண்டு வார்த்தை பேசுவதற்கோ கூடத் திராணி இல்லாமல் இருந்தது. அவர் குழப்பத்தில் மூழ்கி இருந்தார். ஆகவே, எவருடைய துருவலுக்கும் குடைச்சலுக்கும் கேள்விகளுக்கும் அவர் பதில் சொல்லத் தயாராய் இல்லை.

பரண் மீதிருந்த பெட்டியை எடுத்துக் கீழே வைத்தார். கொடியில் உலர்ந்து கொண்டிருந்த இரண்டொரு துணிமணிகளையும் எடுத்துக் கொண்டார். பெட்டியைத் திறக்க அவருக்குப் பயம். நெருக்கடியான சமயத்தில் அது கிறீச்சிட்டுத் தன்னைக் காட்டிக் கொடுத்துவிடக்கூடும் என்று அவருக்குத் தெரியாதா என்ன!

திருடன் போல் அவர் அடிமேல் அடி வைத்து வாசலை நெருங்கினார். அவரது அத்தனை முன்னேற்பாடும் ஒரு நொடியில் பாழாகும் வகையில், "பெட்டியெல்லாம் எடுத்திட்டு எங்கேப்பா போறே!" என்று கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்த கடைக்குட்டி மாணிக்கம் கேட்டுத் தொலைக்க வேண்டுமா?

அவன் முதுகில் விழுந்த அறையும் அதைத் தொடர்ந்து அவன் வெளியிட்ட அலறலும் மங்களத்தை மட்டுமென்ன, அந்தப் பேட்டையையே கலகலக்கச் செய்துவிட்டது. அச்சமாகவும் எச்சரிக்கையாகவும் அவருக்

குள் பதுங்கியிருந்த உணர்ச்சி இப்போது சினமாகவும் அலட்சியமாகவும் மாற, கீழே விழுந்து விட்ட பெட்டியைத் தாமோதரம் தூக்கிக் கொண்டு புறப்பட்டார்.

"விடிந்ததும் விடியாததுமாக, பச்சைக் குழந்தையை அடித்துக்கொன்று விட்டு அப்படி எந்த ஊருக்குக் கிளம்பி விட்டீர்கள்?" என்று வரிந்து கட்டிக் கொண்டு எழுந்த மங்களத்தை அவர் சட்டை செய்ததாகத் தெரியவில்லை.

"எங்கே வேண்டுமானாலும் போவேன். நீ யார் கேட்பதற்கு? எருமை மாடு!" என்று உறுதியுடன் உறுமி விட்டு அவர் நகர்ந்தார்.

"இப்போது வரப் போகிறீர்களா இல்லையா?" என்று அதிகாரத்தோடு வினவிய மனைவி, தாமோதரம் இனி எதற்கும் கட்டுப்பட மாட்டார் என்பதைக் கண்டதும் தனது கடைசி அஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தவறவில்லை.

எட்டு வீட்டுக்குக் கேட்கும்படியாக, "ஐயையோ! இந்த அநியாயத்தைக் கேட்பாரில்லையா? பெண்டாட்டி பிள்ளையை நடுத் தெருவில் விட்டு விட்டு ஓடுகிறாரே!" என்று அவள் போட்ட சப்தம் தாமோதரத்தைக் கிடுகிடுக்கச் செய்தது.

தன் காதுகளையே நம்ப முடியாதவராய்ச் சிலையாய் நின்றார். தலைவிரி கோலமாக மங்களம் தெருவுக்குப் பாய, மாடுகளை ஓட்டிக்கொண்டு சென்ற இரு பால்காரர்கள் அவசரமாகத் அவர்களை நோக்கி விரைய, சற்றுத் தள்ளி வாசல் எதிரே கயிற்றுக் கட்டிலைப் போட்டுப் படுத்திருந்தவர், "என்ன, என்ன நடந்துவிட்டது?" என்று பதற, பக்கத்து வீட்டுத் திண்ணையில் படுத்திருந்த கிழவி, "ஐயோ மகளே, உன் கதி இப்படியா ஆக வேண்டும்!" என்று இருந்த இடத்திலிருந்தபடியே ஒப்பாரி வைக்க, மங்களத்தின் குழந்தைகள் அவளைச் சூழ்ந்துகொண்டு அலற, தாமோதரத்தின் விழிகள் பிதுங்கின.

இதற்குள் பெரிய கூட்டமே கூடி விட்டது. தாமோதரத்தின் விளக்கத்தையோ சமாதானத்தையோ யாரும் எதிர்பார்த்ததாகத் தெரியவில்லை. மங்களம், நாடகத்தின் கதாநாயகி என்ற முறையில் தன் பாகத்தை அனுபவித்து நடித்ததோடு, ரசிகர்களின் ஏகமனதான பாராட்டையும் பெற்றுவிட்டாள்.

கடைசியாக, இடிந்துபோய், கூனிக் குறுகி, வீட்டின் ஒரு மூலையில் தாமோதரம் தள்ளப்பட்டபோது நன்றாக விடிந்துவிட்டது.

## இல்லை என்பான் யாரடா?



இதோ பார்! இப்படித் தினசரி நாள் தவறாமல் வந்து பிச்சை கேட்டு உயிரை எடுக்காதே. இனிமேல் வெள்ளிக் கிழமை வா. பிச்சை கேள். இல்லை யென்று சொல்கிறேன். போய்ச் சேர்! என்ன?

உதவிக்கு வந்தவர்களுக்கு நன்றி கூறி வழியனுப்பிய மங்களம், பத்து நிமிடத்தில் அடுப்பு மூட்டிக் காப்பி போட்டு ஒன்றுமே நடவாதது போல் கணவனிடம் கிளாஸை நீட்டி, "சாப்பிடுங்கள்," என்றாள்.

தாமோதரத்துக்கோ மூச்சு விடுவதைத் தவிர வேறு எதற்கும் சக்தியில்லை. "என்னிடத்தில் ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் புறப்படுவதற்கு என்ன? இத்தனை கலாட்டாவும் நடந்திருக்காதல்லவா?" என்றாள் இல்லத்தரசி.

தாமோதரம் பெருமூச்சு விட்டார். "என் மானத்தை வாங்கிவிட்டாயே!"

"உங்கள் மானத்தைப் பற்றி எனக்கே சொல்ல வந்துவிட்டீர்களா? சரிதான், சாப்பிடுங்கள்."

அன்னியர்கள் விடை பெற்றுச் சென்றுவிட்ட போதிலும் குழந்தைகளின் கூச்சல் இன்னும் ஓயவில்லை. முகத்தைச் சுளித்தபடி, "இந்தச் சனியன்களைவெளியே விரட்டேன்," என்று வேண்டிக்கொண்டார் தாமோதரம்.

மங்களம் ஓர் அதட்டல் போட்டாள். அத்தனையும் சிட்டாய்ப் பறந்தன.

காப்பியை உறிஞ்சிக் கொண்டே, குறைப்பட்டுக் கொள்ளும் தொனியில்,

"ரத்தினம் கடிதம் போட்டிருந்தான். நேரில் போய்ப் பார்த்துவிட்டு வரலாமென்று புறப்பட்டால் வேட்டை நாய் மாதிரி மேலே விழுந்து குதறி விட்டாயே!"

கிளாஸை எடுத்துக்கொண்டு சமையல் அறையை நோக்கி நகர்ந்த மங்களம் அப்படியே நின்றாள். "ரத்தினம் கடிதம் போட்டிருக்கிறானா? என்கிட்டே காட்டவே இல்லையே நீங்கள்!"

"ஆமாம் காட்டியிருந்தால் எழுத்து விடாமல் படித்து அப்போதே பதில் போட்டிருப்பாய், இல்லையா? எருமை மாடு! கை நாட்டு!"

அவள் அவர் எதிரில் உட்கார்ந்தாள். "என்ன எழுதியிருக்கிறான்? குழந்தைகள் எல்லாம் சுகமாக இருக்கிறார்களாமா? சும்மா உட்கார்ந்திருக்கிறீர்களே! கொஞ்சம் படித்துக் காட்டினால் என்னவாம்?"

"படித்துக் காட்டினால் என்னவாம்?" என்று அவள் சொன்னதையே திரும்பச் சொல்லி அழகு காட்டினார் தாமோதரம். "ஒரு பெரிய மனிதர் நாளைக்குக் காலையில் அந்த ஊருக்குப் புறப்பட்டுப் போவதாக இருந்தார். தற்செயலாக அதுவும் என் காதில் விழுந்தது. விசாரித்தேன். என்னையும் அழைத்துக்கொண்டு போவதாகச் சொன்னார். ராத்திரி உன்னிடம் சொல்லலாமென்றால் நீ வாயில் பெருச்சாளி நுழைவது தெரியாமல் குறட்டை விட்டுக் கொண்டிருந்தாய். இரண்டு நாளில் திரும்பி விடப் போகிறோமே, உன்னை எழுப்பித் தொந்தரவு கொடுப்பானேன் என்று தான் [illegible]சப்படாமல் கிளம்பினேன்."

"நானும் உங்களோடு வருகிறேனே? காரில் இடமிருக்குமா, கேட்டுச் சொல்லுங்களேன்," என்றாள் மங்களம்.

"உன்னோடு நிறுத்திக் கொண்டுவிட்டாயே? உன் பிள்ளை குட்டி, பக்கத்து வீட்டுப் பாட்டி எல்லோருக்கும் இடமிருக்குமா என்று கேட்டுச் சொல்லேன்," என்று இடித்துக் காட்டினார் தாமோதரம். "அடசை!"

"அப்படியானால் நீங்களாவது போய்ப் பார்த்துவிட்டு வருகிறது? எழுந்திருங்கள்"

"அதை இப்போது சொல்லி என்ன பிரயோஜனம்? நாலு மணிக்கே வந்துவிடவேண்டும் என்று அவர் கண்டிப்பாகச் சொல்லியிருந்தார். இந்நேரம் அவர் விழுப்புரம் தாண்டி..."

வாசலில் கேட்ட ஹாரன் சப்தம் வாக்கியத்தைப் பாதியில் நிறுத்தியது.

தாமோதரம் சடடென்று எழுந்து ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தார். செந்தில்!

தாமோதரம் துள்ளினார். "அவரே வந்துவிட்டார். நான் போய் விட்டு வருகிறேன்," என்று அரையும் குறையுமாகச் சொற்களை உதிர்த்தபடி பரபரப்புடன் பெட்டியையும் துணிமணிகளையும் பொறுக்கலானார்.

"செலவுக்குப் பணம்..." என்று இழுத்தாள் மங்களம்.

பைக்குள் கையை விட்டவர், அகப்பட்டதை எடுத்து மனைவியிடம் நீட்டினார்.

விழிகள் விரிய, "நூறு ரூபாய் நோட்டா!" என்று மங்களம் அதிசயித்தாள்.

செந்தில் மறுபடியும் ஹாரனை அழுத்தினான்.

போகிற போக்கில் வெற்றிப் பெருமிதம் முகத்தில் தாண்டவமாட, "கடலாட்டம் புதையல் கிளம்பப் போகிறது மங்களம்! இது அதிலொரு சொட்டு!" என்று அறிவித்தபடி காரை நோக்கித் தாவி ஓடினார்.

செந்திலின் வரவேற்பில் கடுகடுப்பு இருந்தது. "உன்னை நம்பினால் இப்படித்தான் நட்டாற்றில் விட்டுவிடுவாய் போலிருக்கிறது. கனகசபைக்குப் போன் பண்ணி நீ இருக்குமிடத்தைத் தேடிக்கொண்டு வந்தேன்."

"வந்து..." என்று வாயெடுத்த தாமோதரம். "சரி சரி. ஏறு. நேரமாகிறது," என்ற செந்திலின் கட்டளையைக் கேட்டதும் மறு வார்த்தை பேசாமல் கீழ்ப்படிந்தார்.

கார் புறப்பட்டது.

## எண்ணித் துணிக!



ஒன்று, இரண்டு மூன்று...என்ன, எழுந்திருக்க முடியவில்லையா? பரவாயில்லை. நிதானமாக ஆயிரம் வரை எண்ணுகிறேன். சௌகரியப் பட்டபோது எழுந்திருங்கள். ஆட்டம் முடிந்து எல்லோரும் போயாகி விட்டது. கவலை வேண்டாம்.

# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## இருபத்திரண்டு

"தாமோதரம்! எழுந்திரய்யா. எவ்வளவு நேரத்துக்குத்தான் தூங்குவாய்!"

செந்திலின் கடுமையான குரல் காருக்குள் உறங்கிக் கொண்டிருந்த அவரைக் கண் திறக்கச் செய்தது. ஒருவிஞடி ஏதும் தெரியாமல் வெறித்து நோக்கிஞர் அவர். கார் ஏன் சாலையோரத்தில் நின்றுகொண்டிருக்கிறது? வண்டியைப் பழுது பார்ப்பதற்கான கருவிகளைக் கையில் பிடித்தவாறு செந்தில் என்ன செய்து கொண்டிருக்கிருன்?

"என்ன அது? என்ன ஆயிற்று?" என்று அவர் விசாரித்த விதம் செந்திலின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கச் செய்தது. "அடைத்துக் கொண்டுவிட்ட பெட்ரோலைச் சரி பண்ண நான் அரை மணி நேரமாக உயிரை விட்டுக் கொண்டிருக்கிறேன். இவர் இப்போதுதான் சாவதானமாகத் தூங்கி எழுந்து குசலம் விசாரிக்கிருர். இறங்கய்யா கீழே!"

தாமோதரம் வாரிச் சுருட்டிக் கொண்டு இறங்கிஞர். சூரியன் சம்மட்டி அடியாக அடித்துக் கொண்டிருந்தான். கார் நிற்கத்தான் செய்ததே, மரநிழலாகப் பார்த்து நின்றிருக்கக் கூடாதா?

இஞ்சினுக்கு மேலிருந்த மூடி உயர்த்தூக்கி நிறுத்தப்பட்டிருந்தது. தாமோதரம் எட்டிப் பார்த்தபோது, "அந்தக் கம்பியில் கை வைத்து விடாதே. அப்புறம் பானட் விழுந்து உன் மணடையைப் பதம் பார்த்து விடப் போகிறது!" என்று செந்தில் எச்சரித்தான்.

"பெட்ரோல் ஆகிவிட்டதோ என்னவோ. பார்த்தீர்களா?"

"அரை டாங்க் இருக்கிறது. இன்னும் நூறு மைல் தாராளமாகப் போகலாம்."

"கார்புரேட்டரைச் சுத்தம் செய்து பார்த்தால் என்ன?"

செந்திலுக்கு வியப்பாக இருந்தது. மனிதன் ஏதோ கொஞ்சம் விஷயம் தெரிந்தவன்தான் என்பதை உணர்ந்ததும் அவரிடம் ஏற்பட்டிருந்த அலட்சியம் சற்றுக் குறைய, அவரது உதவியால் நெருக்கடியைச் சமாளித்து விடக் கூடும் என்ற நம்பிக்கையும் பிறந்தது.

"கார்புரேட்டருக்கே பெட்ரோல் வரவில்லையே? வேறு எங்கேயோ கோளாறு இருக்க வேண்டும்," என்ருன் அவன், அவர் முகத்தை ஆவலோடு பார்த்தபடி.

தலையைச் சொறிந்து கொள்வதைத் தவிர தாமோதரத்துக்கு வேருென்றும் செய்யத் தோன்றவில்லை. தரை சுடவே கால்களை இடம் மாற்றி வைத்துக்கொண்டார். மெல்லிய சிறு புழுதிப் படலம் ஒன்று மேலே எழுந்தது. "பேசாமல் உங்கள் காரையே எடுத்துக் கொண்டு வந்திருந்தால் இந்நேரம் கூத்தனூரே போய்ச் சேர்ந்திருக்கலாம்."

தாமோதரம் திடீரென்று ஏதோ செய்து காரைப் பழுது பார்த்துவிடப் போகிருர் என்று எதிர்பார்த்த செந்திலின் முகம் ஏமாற்றத்தால் கடுகடுத்தது. "'பேசாமல் சென்னையிலேயே இருந்திருக்கலாம், புறப்பட்டிருக்கவே வேண்டாம்' என்று சொல்லாமல் போனுயே?" என்று சீறினுன். "இந்தத் தோல்வி மனப்பான்மைதான் நமக்கு உதவாது. ஒரு சிறு தடை

ஏற்பட்டுவிட்டால் அதைத் தாண்டுவதற்கு வழி தேடுவதா? 'இந்த வேலையில் ஏன் இறங்கினோம்!' என்று இடிந்துபோய் உட்கார்ந்துவிடுவதா?''

தாமோதரம், முகத்தில் அசடு வழிய, ''நான் அதற்குச் சொல்லவில்லை...'' என்று இழுத்தார்.

''பின்னே எதற்குச் சொன்னாய்?'' என்று எரிந்து விழுந்தான் செந்தில். ''கூத்தனாரோ நாட்டுப்புறம். மூன்றாம் பேர் அறியாமல் காரியம் செய்வது என்பது முடியாத காரியம். இல்லையா? அதனாலேதான் நாம் கனகசபையின் வீட்டில் இறங்கி, வேலை முடியும்வரை எல்லாவற்றையும் ரகசியமாக நடத்த வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறேன். நான் என் காரை எடுத்துக் கொண்டு வந்து, அது தற்செயலாக நம்மைச் சேர்ந்தவர்கள் யார் கண்ணிலாவது பட்டுவிட்டால் அப்புறம் அவர்கள் உஷாராகி விடமாட்டார்களா?''

''வாஸ்தவம்தான்,'' என்று ஒப்புக்கொண்டார் தாமோதரம், புறங்கழுத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்தபடி. ''நீங்கள் இரவல்



கார் வாங்கிக்கொண்டு வந்ததன் காரணம் இப்போது புரிகிறது.''

''அதோ!'' என்றான் செந்தில், வேகமாக நெருங்கி வரும் ஒரு காரின் ரீங்காரத்துக்குச் செவி கொடுத்தவனாய். ''அந்த வண்டியை நிறுத்தய்யா. உதவி கேட்டுப் பார்ப்போம்.''

தாமோதரம் அவசரம் அவசரமாகத் தனது மேல் துண்டை அவிழ்த்து இப்படியும் அப்படியுமாக ஆட்டிப் பார்த்தார். ஆனால் அந்தக் கார் அவரைச் சட்டை செய்ததாகத் தெரியவில்லை. கண் மூடிக் கண் திறக்கு முன் பறந்துவிட்டது. ''எங்கேயோ பார்த்த கார் மாதிரி இருக்கிறதே? நம்பரைத் தான் கவனிக்க முடியவில்லை,'' என்று குறைப் பட்டுக்கொண்டார் தாமோதரம், அந்த வண்டி சென்று மறைந்த திக்கை நோக்கிப் பெருமூச்சு விட்டபடி. ''ஈவிரக்கமில்லாத பாவி. ஒரு நிமிடம் நின்று நிறுத்தி என்னவென்று கேட்டுவிட்டுப் போகக் கூடாதா!''

அரை மணியும் மூன்று கார்களும் கழித்து, ஒரு லாரி டிரைவர் அவர்கள் உதவிக்கு வந்தான். சூடு ஏறிவிட்டால் அந்த மாடல் கார்கள் இப்படித்தான் தொல்லை தரும் என்றும் ஒரு டின்னில் தனியே பெட்ரோல் பிடித்து வைத்துக்கொண்டு, கார் நின்றுவிடும்போது பெட்ரோலில் கொஞ்சத்தைக் கார்பரேட்டரில் ஊற்றினால் சரியாகப்போய் விடும் என்றும் அவன் கூறிய யோசனையைப் பின்பற்றித் தாமோதரமும் செந்திலும் கூத்தனூர் வந்து சேருவதற்குள் பொழுது சாய்ந்துவிட்டது.

''பொட்டை ஆட்டம், பொட்டை ஆட்டம்!'' என்று கிண்டல் செய்த கோகிலையை முறைத்துப் பார்த்தான் கோவிந்தன்.

''எதடா பொட்டை ஆட்டம்?''

''நீ ஆடறதுதான் பொட்டை ஆட்டம் கையை ஓங்கி, குத்தி ஆடத் தெரியலையே உனக்கு!''

''ஐயய்யே!'' என்று சச்சுவும் இடித்துக் காட்டினாள், முதல் தடவையாகத் தம்பியுடன் ஒற்றுமை பாராட்டியவளாய்!

''இப்போது பாருங்கள்,'' என்று சொல்லிவிட்டுக் கீழேகிடந்த பம்பரத்தை எடுத்து அதன் மீது கயிற்றைச் சுற்றினான் கோவிந்தன். ''என்னை யார் என்று நினைத்துக் கொண்டீர்கள்! பள்ளிக்கூடத்தில் படிக்கும் பொழுது நான்தான் பம்பர சாம்பியனாக்கும்!''

அவனது ஓங்கிய கை கீழ் நோக்கிப் பாய, விடுபட்ட பம்பரம் பக்கவாட்டில் தரை மீது மோதி இரண்டு தாவுத் தாவி அப்பால்உருண்டோட, கொல்லென்ற கேலிச் சிரிப்பும் கைத் தட்டலும் அவன் காதைத் துளைத்தன.

எல்லாவற்றுக்கும் மேலாக, பாப்பா



வும் அந்தச் சிரிப்பில் சேர்ந்துகொண் -டதுதான் கோவிந்தனுடைய எரிச்சலை அதிகமாக்கிற்று, "நீ ஒன்றும் சிரிக்க வேண்டியதில்லை. இது எனக்கும் கோலிக்கும் நடக்கிற போட்டி," என்ருன் கோவிந்தன்.

அதற்குள் கோலி, "எல்லாரும் இங்கே பாருங்க," என்று சொல்லிய படி, கோவிந்தனின் பம்பரத்தை எடுத்து வந்து ஒரு வட்டத்துக்குள் வைத்தான். பிறகு அவன் தன் கையை ஓங்கி விடுவித்த பம்பரம் குறி தவருமல் கோவிந்தனுடைய பம்பரத்தைத் தாக்கி வடு ஏற்படுத்திவிட்டுச் செல்லவே கோலியும் சச்சுவும், "ஒண்ணுங் குத்து, ஒண்ணுங் குத்து," என்று குதித்துக் கும்மாளமிட டார்கள்.

இம்முறை பாப்பா கல கலவென்று நகைக்கலானுள்.

ஓட்டுப்பங்களாவின் சுற்றுத் திண்ணை மீது அமர்ந்திருந்த அவள் கையைப் பற்றித் தர தரவென்று இழுத்து வந்தான் கோவிந்தன். அவள் கையில் பம்பரத்தைக் கொடுத்து, "நாம் இரண்டு பேரும் ஆடலாம், வா. சிரிக்கவா சிரிக்கிருய்? உனக்கு ஆட வரா விட்டால் இந்தப் பம்பரத்தாலேயே உன் தலையில் குட்டுகிறேனு இல்லையா பார்," என்று உதட்டைக் கடித்தான்.

"உங்களுக்கு ஆட வராவிட்டால் அதற்கு என்மேல் கோபிப்பானேன்?"

"மூச்!" என்று எச்சரித்தான் கோவிந்தன். "ஆடு!"

"இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?"

"வேறொன்றும் வேண்டாம். பம்பரத்தை ஒரு தரம் ஒழுங்காகச் சுழல வைத்துவிட்டாயானுல் போதும்."

"அவ்வளவுதானு?"

"அதற்கு மேலேகூடத் தெரியுமா உனக்கு?"

பாப்பா சவால் விட்டாள். தலையை ஒரு புறமாகச் சாய்த்துக்கொண்டு, கண்களை மூடியவாறு அலட்சியமாகப் புன்னகை செய்தபடி, "குத்தி அடித்து அப்பீட் எடுத்துக் கையிலேற்றிக் காண்பிக்கிறேன், பார்க்கிறீர்களா?" என்ருள்.

"பார்ப்போம்," என்ருன் கோவிந்தன்.

"பந்தயம்?"

"நீ சொல்வதை வைத்துக்கொள்வோம்."

"நான் சொல்கிறேன்," என்ருள் சச்சு. "தோற்றவங்க ஜயிக்கறவங்களை முதுகிலே தூக்கி வச்சிட்டு மூணு தரம் பங்களாவைச் சுற்றி வரணும்."

"ரெடி," என்ருள் பாப்பா.

அவளை அனுதாபத்துடன் பார்த்த கோவிந்தன், "வீண் ஜம்பம் அடித்ததற்காக உனக்கு இவ்வளவு பெரிய தண்டனை கூடாது பாப்பா," என்ருன்.

"எது வீண் ஜம்பம்?" என்று அவள் ஹுங்காரம் செய்தாள்.

"பாவம், பாப்பாவை நினைக்கப் பரிதாபமாக இருக்கிறது," என்று கோவிந்தன் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே பாப்பா ஆடினுள்.

லாகவமாகச் சொடுக்கப்பட்ட கயிறு பம்பரத்தைப் படுவேகமாகச் சுழல வைத்தது. குனிந்தாள். பம்பரத்தைச் சுற்றிக் கயிற்றைப் போட்டு மேலே சுண்டி இழுத்தாள். அடுத்த வினுடி அவள் அசங் கையில் அசையாமல் சுழன்றபடி பம்பரம் உறங்கிக்கொண்டிருந்தது. "எப்படி?" என்ருள் பெருமிதத்துடன்.

கோவிந்தன் பரபரப்புடன் தன் கைவரிசையைக் காட்டினுன். அவன் கையை ஓங்கியது உண்மைதான். அதனின்று பம்பரம் விடுபட்டதும் உண்மைதான். ஆனுல் அது போய் விழுந்த இடம்தான் தெரியவில்லை.

"ஐயோ, என் பம்பரம்," என்று ராகம் இழுத்தபடி கோலி ஒரு பக்கம் ஓட, "பாப்பாதான் ஜெலிச்சது, பாப்பாதான் ஜெலிச்சது," என்று சச்சு கோஷமிட்டாள்.

கோவிந்தன் பாப்பாவின் பக்கம் திரும்பினுன். அகந்தையுடன் நிற்கும் அவள் தோற்றத்தையும் துடுக்குடன் காட்சியளிக்கும் குதிரைவால் கொண்டையையும் பார்த்துக் கொண்டிருந்தவன் பார்த்துக்கொண் டிருந்தவனே. அவன் உதடுகளில் புன்னகை அரும்பிற்று.

வெற்றியின் பலனை அவ்வளவ சீக்கிரம் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்று அவள் எதிர்பார்த்திருக்க முடியாது. குபீரென்று பாய்ந்தான். அவளை அப்படியே தரையினின்று பெயர்த்தெடுத்துக் கைகளில் ஏந்தியபடி தோட்டத்தின் அடர்ந்த பகுதியை நோக்கி ஓடினுன். கையையும் காலையும் உதைத்துக்கொண்டு பாப்பா போட்ட கூச்சல் தேய்ந்து மங்கி மறைந்தது.

ஒருவழியாகப் பம்பரத்தைத் தேடி எடுத்துக் கொண்டு வந்த கோவி "பாப்பா எங்கே?" என்று கேட்டான்.

கையைப் பிசைந்து கொண்டு நின்ற சச்சு, "கோவி, எனக்குப் பயமாயிருக்குடா. கோவிந்தண்ணு ரொம்பக் கோவமா பாப்பாவைத் தூக்கிட்டுப் போயிட்டார். பாப்பா ஒண்ணு அழுதது. ஏண்டா கோவி, பாப்பாவை அடிச்சுப் போட்டுடுவாரோ?"

கோவி களுக்கென்று சிரித்தான். "கோவிந்தண்ணுவா பாப்பாவை அடிச்சுப் போட்டுடுவார்னு பயப்படறே? பைத்தியம்! பாப்பான்னுதான் அவருக்கு ரொம்பப் பிடிக்குமே!"

திறந்த ஜன்னல் அருகே கை கட்டி நின்றபடி நிலவுக் கீற்றை நோக்கியவண்ணம் இருந்தான் செந்தில். அடங்கொணு வியப்பு அவனுள் அலை அலையாக எழும்பிக் கொண்டிருந்தது.

கனகசபை இவ்வளவு பெரிய பணக்காரனு? இந்தப் பட்டிக்காட்டில் இத்தனை பிரம்மாண்டமான மாளிகையைக் கட்டி வைத்திருக்கிறுனே! பால் நிலவில் உறங்கிக்கொண்டிருந்த அந்தக் கட்டிடத்தின் ஒரு பகுதியே செந்திலின் கண்களுக்குப் புலப்பட்டது. இது வீடா, கோட்டையா! காலத்துக்கேற்ற வசதிகள் அத்தனையும் வேறு இங்கு கொண்டுவந்து குவித்திருக்கிறுனே! இவற்றையெல்லாம் நினைக்க நினைக்கக் கனகசபையிடம் செந்தில் வைத்திருந்த மதிப்பு உயர்ந்துகொண்டேபோயிற்று.

அவன் மெள்ள நடந்து வந்து கட்டில்மீது உட்கார்ந்து கொண்டான். அவனது விஜயத்தைப் பற்றிக் கனகசபை தன் ஆட்களுக்கு நேரடியாகவும் ஒரு கடிதம் எழுதியிருப்பான்போலும், செந்திலின் வரவை அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். வெந்நீரில் நீராடி விருந்தை நிகர்த்த சாப்பாட்டை உண்டபின் ஒட்டைக் காரில் வந்த அலுப்பெல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிட்டதில் ஆச்சரியமென்ன?

தமக்கென ஒதுக்கப்பட்ட அறைக்கு வந்ததும் கதவைச் சாத்தித் தாழிட்டுவிட்டு அடுத்தாற்போல் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றித் திட்டம் வகுத்தார்கள் இருவரும்.

தலையணையில் மேலாகச் சாய்ந்தபடி தாமோதரம் படுத்திருந்த கட்டிலை நோக்கிப் பார்வையைத் திருப்பினுன் செந்தில். அவன் உதடுகளில் ஒரு புன்னகை விளையாடிற்று. பாவம்! மனிதன் ஆகாயக் கோட்டை கட்டிக்கொண்டிருக்கிறுர். தன்னுடைய அடி மனத்தில் இருக்கக்கூடிய எண்ணங்களை அவர் எங்கே கண்டார்? தன்னிடமிருந்து



## நீங்கள் நீதிபதியாயிருந்தால்

### இவ்வழக்கில் எவ்வாறு தீர்ப்பளிப்பீர்கள்?

ராஜகோபாலன் உயர்நீதிமன்றத்தில் வழக்குகளை நடத்தும் ஒரு வக்கீல். ஒரு பெரிய வழக்கைத் தம் சார்பில் நடத்துமாறு அவரைக் கேட்டுக் கொண்டார் கந்தசாமி. அதுபற்றி அவர்கள் எழுத்து மூலமாக ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். "இந்த வழக்கு வெற்றி பெற்றதும் எனக்குக் கிடைக்கும் சொத்தில் பாதியை நீங்கள் எடுத்துக் கொள்ள வேண்டியது," என்று கந்தசாமி வக்கிலுக்கு எழுதித் தந்தார்.

வழக்கு முடிந்தது—கந்தசாமிக்குச் சாதகமாகத்தான். ஆனுல் கந்தசாமி ஒப்பந்தப்படி கிடைத்த தொகையில் பாதியை வக்கிலுக்குத் தரவில்லை. உடனே வக்கில் தனக்குச் சேரவேண்டிய ஒப்பந்தத் தொகையைப் பெறக் கந்தசாமி மீது வழக்குத் தொடுத்தார். இது சரியா?

விடை : 54-ஆம் பக்கம்

—வை. ச. சு.

பெருந்தொகை தட்டிவிடலாம் என்பது அவர் நம்பிக்கை. நம்பிக்கொண்டேயிருக்கட்டும் —காரியம் ஆகும் வரை. செந்தில் சிரித்துக்கொண்டான். நம்ப நம்ப ஆயுள் நீளும்.

அவன் தன் மார்பைத் தொட்டுப் பார்த்துக்கொண்டான். சட்டையின் உட்புறமுள்ள பையில் அவனது வக்கீல் தயாரித்துத் தந்த விடுதலைப் பத்திரம் பத்திரமாக இருந்தது. அதில் ரத்தினத்தின் கையெழுத்தை வாங்கிவிட்டால் போதும், அவன் பங்கில் பல லட்சங்கள் கூடிவிடும். பத்திரத்தில் ரத்தினம் கையெழுத்திடும் காட்சியைக் கற்பனை செய்து பார்க்கும் பொழுதே செந்திலின் உள்ளம் பூரித்தது. தற்சமயம் அவர்கள் கம்பெனிக்குப் பண நெருக்கடி ஏற்பட்டிருப்பது உண்மையே. ஆயினும், அது நஷ்டத்தினால் வந்ததல்ல; தொழில் திடீரென்று விரிவடைந்ததன் விளைவு. தேய்வின் சின்னமல்ல; வளர்ச்சியின் அறிகுறி. கம்பெனியின் செல்வாக்கு, கைவசமுள்ள பொருள்கள், மேற்கொள்ளப் பட்டிருக்கும் கட்டிட ஒப்பந்தங்களின் மதிப்பு, வீடு வாசல், நிலபுலன் எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் குத்து மதிப்பாகப் பதினைந்து லட்சம் பெறக் கூடும். மூத்தவனை விரட்டி விட்டால் செந்திலின் பங்குக்கு மேற்கொண்டு ஓர் இரண்டரை லட்சம் கிடைக்கும்.

அது மட்டுமல்ல. கோவிந்தன் ஓர் உதவாக்கரை. அவனுக்குச் சுயமாகக் காலணா சம்பாதிக்கத் திறமையில்லை. அவன் சார்பில் அவனது பங்கையும் சேர்த்து நிர்வகிப்பதற்கு ஓர் ஊதியத்தையும் நிர்ணயித்துக் கொண்டு விட்டால் ...

திடீரென்று மற்றோர் எண்ணம் குறுக்கிட்டது செந்திலின் மனத்தில். ரத்தினம் ஏதாவது முரண்டு செய்தால்...? செந்தில் பற்களை நற நற வென்று கடித்துக் கொண்டான். அந்தச் சங்கடம் நேரும் பொழுதுதான் தாமோதரத்தின் உதவி தேவையாக இருக்கும். வழக்கு,விசாரணை என்று வந்தால், அவருடைய சாட்சியம்தானே தீர்ப்பை நிர்ணயிக்கும்? ஆகவே அவரை எப்படியாவது தட்டிக் கொடுத்துக் காரியம் கைகூடும்வரை அணைத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

செந்தில் கைக்கடியாரத்தைப் பார்த்தான். ரேடியம் தீட்டிய முட்கள் பத்தை நெருங்கிக் கொண்டிருந்தன. இனியும் விழித்திருந்தால் மறுநாளைய சுறுசுறுப்புப் பாதிக்கப் படலாம்.

செந்தில் கண்களை மூடினான்.

சுற்றுத் திண்ணையில் காற்றாடப் படுத்து உறங்கிக் கொண்டிருந்த கோவிந்தனைத் தோட்டக்காரன் தட்டியபோது அவன் முனகிக் கொண்டே புரண்டு கொடுத்தான். ஆனால் எழுந்திருக்கவில்லை. அத்தனை அலுப்பு.

தோட்டக்காரன் மெள்ள வாசலுக்குச் சென்று முண்டாசு கட்டிக் கொண்டு நின்ற ஆளிடம், "அசந்து



"என் பையன் ஒரு வேலைக்கு இங்கே மனுப் போட்டானும்."

"ஆமாம். அவனை உடனே வரச் சொல்லி எழுதியிருக்கிறோமே?"

"வேலை கொடுக்கத்தானே?"

"இல்லை, இல்லை. அவன் எழுத்தை அவனேதான் வந்து படித்துக் காட்ட வேண்டியிருக்கிறது!"

உறங்கறாரு," என்றான் தாழ்ந்த குரலில்.

"ரொம்ப முக்கியமான விசயம். நாளைக்கு உன்னைத்தான் வைவார்," என்று எச்சரித்த முண்டாசுக்காரன் இரண்டணா சில்லறையை மற்றவன் கையில் வைத்தழுத்தினான்.

இம்முறை அச்சம் ஒரு பக்கம் பின்னுக்கிழுத்தாலும் தோட்டக்காரன் தொடர்ந்து நாலு தரம் சின்ன எஜமான் காதிற்குள் குரல் கொடுக்கத் தவறவில்லை.

கோவிந்தன் எழுந்து உட்கார்ந்தான். "யாரது?"

முண்டாசுக்காரன் அவனிடம் மெள்ள ஏதோ சொன்னான்.

கோவிந்தனுக்கு அதிர்ச்சியாக இருந்தது போலும். "அவன் இங்கேயும் வந்துவிட்டானா?" என்ற போது அவனுடைய பதட்டம் வெளிப்பட்டது! "அவன் முகத்தில் விழிக்கக் கூட எனக்கு இஷ்டமில்லை. வரமுடியாது என்று போய்ச் சொல்."

"வீட்டுக்குக் கூட வர வேண்டாங்க. ஏரிக் கரையிலே உங்களுக்காகக் காத்திட்டிருக்காரு. பத்து நிமிஷத்திலே திரும்பிடலாமாம். உங்க நன்மைக்காகத்தான் கண்டு பேசணுமாம்,"

கோவிந்தன் தயங்கினான். யோசனை கேட்பதற்காக அறைக்குள் தூங்கிக் கொண்டிருக்கும் அண்ணா ரத்தினத்தின் ஓய்வைக் கெடுக்க அவனுக்கு மனமில்லை.

போர்வையை எடுத்துத் தோள்மீது போட்டுக் கொண்டு துணிச்சலுடன் புறப்பட்டான்.

ஏரிக் கரையிலிருந்து அவன் திரும்பிய போது மணி பதினொன்றுக்கு மேலிருக்கும். சில்வண்டுகளே இரவை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. நிலா வெளிறிப் போயிருந்தது.

ஆனால் கோவிந்தனின் கண்களோ சிவந்திருந்தன. கடைசியாக அவன் காதில் விழுந்த செய்தி அவன் ரத்தத்தைக் கொதிக்கச் செய்திருக்குமோ?

ஓட்டுப் பங்களாவுக்குள் நுழைந்தவன் போர்வையை வீசி எறிந்துவிட்டு உட்கார்ந்தான். ஆனால் இருப்புக் கொள்ளவில்லை.

திடீரென்று ஏதோ ஒரு முடிவுக்கு வந்தான் போலும். விடுவிடென்று வெளியேறினான்.

இம்முறை அவன் கால்கள் ஏரிக் கரையை நோக்கிச் செல்லவில்லை. கனகசபையின் வீட்டை நோக்கி விரைந்தன.




## இருபத்துமூன்று

எட்டி உதைத்தான் கோவிந்தன், மங்கிய நிலவொளியில் மண்ணிடையே மின்னிக் கொண்டிருந்த அந்த நெளிந்துபோன தகர டப்பாவை.

அது அம்பாரச் சுவரில் மோதிக் கீழே விழுந்து உருண்டபோது உண்டான ஓசை இரவின் அமைதியில் வெகு தூரம்வரை பரவிற்றுப் போலும். தொலைவில் குழுமியிருந்த குடியானவர்களின் குடிசைப்புறமிருந்து நாலைந்து நாய்களின் ஊளை எழுந்தது.

கோவிந்தனுக்கு மூச்சு வாங்கிற்று. அவன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்ட விதமும் பற்களை நறநற வென்று கடித்த முறையும், அவனுள் குமுறிக் கொண்டிருந்த கோபத்தின் வெப்மைக்கு ஓர் அளவுகோலாக விளங்கின.

அவன் திரும்பிப் பார்க்காமல் நடந்தான். எட்டத்தில் நிமிர்ந்து நின்ற ஏரிக்கரையையோ, சாலையை அடுத்துத் தேங்கியிருந்த குட்டையில் பிரதிபலித்த சந்திரனின் அரை வட்டத்தையோ, காற்றில் மிதந்து வந்த புது வைக்கோலின் மணத்தையோ ரசிக்க அவனுக்கு நேரமிருந்ததாகத் தெரியவில்லை.

ஆயினும், சாலை இரண்டாகப் பிரிந்த இடத்திற்கு வந்ததும் அவனது வேகம் தடைப்பட்டது. கால்கள் தாமாகவே நின்றன. முகத்தை உயர்த்தி எட்டியவரை கண்களால் துழாவினான். கனகசபையின் வீடு எந்தப் பக்கத்தில் இருக்கிறது? ஒரு பாதை ஐந்து மைல் தொலைவிலிருந்த ரயில் நிலையத்துக்கு அழைத்துச் செல்லும் என்பதை அவன் அறிவான். அந்தத் திசையில் கனகசபையின் வீடு இருக்குமேயானால், இரண்டு நாட்களுக்கு முன்பு கோவிந்தனையும் பாப்பாவையும் ரயிலடியிலிருந்து அழைத்து வந்த வாயாடி வண்டிக்காரன் அதைச் சுட்டிக் காட்டாமல் இருந்திருக்க மாட்டானே? மேலும், கனகசபையின் இருப்பிடம் சற்று ஒதுப்புறமாகவே கட்டப்பட்டிருக்கும் என்று கோவிந்தனின் உள்ளுணர்வு கூறிற்று. ஆனால் இரண்டில் எது எங்கே செல்கிறது என்பதைத்தான் அவனால் நிர்ணயிக்க முடியவில்லை.

சுற்று முற்றும் பார்த்தான்.

"இம்ளா!" பட்டியில் அடைபட்டிருந்த ஆடுகள் அளவளாவிக் கொண்டிருந்தன.

கிழக்கு நோக்கிய பாதையில் கொஞ்ச தூரம் நடந்தவன் சாலையைவிட்டுக் கீழே இறங்கினான். நாலடி எடுத்து வைப்பதற்குள், உடையவனின் பிரதிநிதியாக அவனது கால்நடையைப் பாதுகாக்கும் பட்டி நாய் எச்சரிக்கை கொடுப்பது போல் ஒருமுறை

குரைத்தது. மனித நடமாட்டம் இருப்பதாகத் தெரியவில்லை.

ஏமாற்றத்துடன் திரும்பிச் சரிவின் மீது ஏறிய கோவிந்தனின் வலதுகால், மேலெழுந்தவாரியாகப் பதிந்திருந்த மண்கட்டி ஒன்றைப் பெயர்த்துவிட, அவன் நிதானம் இழந்துவிட்டான். தடுமாறி விழப்போனவன் அங்கே நடப்பட்டிருந்த கல் ஒன்றைத் தற்செயலாகப் பற்றிச் சமாளித்துக் கொண்டான். நன்றியுடன் கல்லைக் குனிந்து பார்த்தவனுடைய உதடுகள் புன்னகை செய்தன. அது ஒரு மைல் கல்: ரயில் நிலையத்தின் பெயரும், 4, என்ற எண்ணும் அதில் பொறிக்கப்பட்டிருப்பதைக் கோவிந்தன் கண்டான்.

அப்படியானால் வடக்கே செல்லும் பாதைதான் அவன் பின்பற்றவேண்டியது. இழந்த நேரத்துக்கு ஈடு செய்யும் நோக்கத்துடன் அவன் கால்களை முடுக்கினான். கால்மணி நேரத்தில் அவன் முன் வந்து நின்ற பெரிய மாளிகைக்குப் பெயர்ப் பலகை எதுவும் தேவை இருக்கவில்லை அது கனகசபையினுடையது என்பதைக்கோவிந்தனுக்கு எடுத்துச் சொல்ல. கனகசபை தவிர அந்தப் பட்டிக்காட்டில் இத்தனை பெரிய கட்டிடம் எழுப்பக் கூடிய பணக்காரர் வேறு யார் இருக்க முடியும்?

பருத்த கருங்கல் தூண்களும், கலச வடிவிலுள்ள கோபுரங்களும், விரிந்த தோட்டமும் பிரமிப்பை உண்டு பண்ணும் வகையில் அமைந்திருந்தன. தோட்டத்தைக் காத்த உயரமான இரும்புக் கதவு கோவிந்தனுக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. கதவின் குறுக்கே ஓடிய தடித்த கம்பிகளைப் படிகளாகப் பயன்படுத்திக் கொண்டு அவன் தோட்டத்தில் இறங்கினான். எதையோ தேடுபவன்போல் அண்ணாந்தபடி இப்படியும் அப்படியுமாக ஓடினான். அரண்மனை போன்ற அந்தக் கட்டிடத்தில் எங்கேனும் ஒரு மூலையில் ஒரு விளக்கேனும் எரிய வேண்டுமே!

கோவிந்தன் நடந்துகொண்ட விதத்திலிருந்து,குறிப்பிட்ட திட்டமெதுவும் அவன் மனத்தில் உருவாகியிருப்பதாகத் தெரியவில்லை, கோபம் அவனைக் குருடாக்கி விட்டிருந்தது போலும். காரியம் எதையும் சாதிக்க வேண்டும் என்ற நோக்கம் அவனிடம் இல்லாவிடினும், கொழுந்து விட்டெரியும் கோபக்கனலை வெளிப்படுத்தாவிட்டால் அவன் தலை வெடித்துவிடும் போல் தோன்றிற்றோ, என்னவோ.

குனிந்தான். அழகுக்காகப் பாதை விளிம்பில் குறுக்குவசமாகப் பதிக்கப்பட்டிருந்த செங்கல் வரிசையிலிருந்து ஒன்றை வெடுக்கென்று பறித்தான். பலங்கொண்டமட்டும் கையை ஓங்கி மாடியை நோக்கி வீசப் போனான், மலையாகப் படுத்திருந்த அந்த மாளிகையை வலுச் சண்டைக்கு இழுப்பவன்போல.

மாடியிலிருந்த கணக்கிலடங்காத சாளரங்களில் ஒன்றையோ,கதவுகளில் ஒன்றையோ வேகத்துடன் தாக்கி, மௌனத்தைச் சிதறடித்து, உறங்கும் பணியாட்களை அந்தச் செங்கல் கூட்டம் கூட்டியிருக்கும், திடீரென்று அவனுடைய முழங்கை நரம்பை எவரோ சுண்டியிராவிட்டால். மின்சாரத்தால் அதிர்ச்சியுற்றவை போல விறைத்த அவன் விரல்களினின்று அந்தக் கல் தானாகவே நழுவித் தரையில் விழுந்தது.

திரும்பினான்; திடுக்கிட்டான்.

"உஸ்!" என்று உதட்டில் விரல் வைத்து எச்சரித்தாள் பாப்பா.

ஒரு விநாடி வரை கோவிந்தனின் கண்கள் இமைக்க மறந்து நிலைகுத்தி நின்றன.

"பாப்பா!" என்றான் அவன், நாவுக்கு உணர்வு திரும்பியதும். "நீ எப்படி இங்கே வந்து குதித்தாய்?"

அவள் நாற்புறமும் விழிகளை ஓட்டினாள். ஒரு பெரிய மரத்தின்கீழ் படர்ந்திருந்த இருண்ட பகுதிக்கு அவனை இழுத்துச் சென்று பரிவுடன் அவன் முழங்கையைத் தடவிக்கொடுத்தாள். "நோகிறதா?"

"இல்லை," என்று தலையாட்டியவன், "இருட்டில் இப்படியெல்லாம் வரலாமா?" என்று ஆட்சேபித்தான்.

"நீங்கள் மட்டும் வரலாமாக்கும்?"

"எனக்கு அர்ஜண்டா ஒரு ஜோலி இருந்தது."

அவள் குரல் சிரித்தது. "தூங்கும் வீட்டின்மீது கல் வீசும் ஜோலியா?"

தனிமையில் அவ்வளவு துணிச்சலோடு இருந்த கோவிந்தன், ஆபத்தைப் பகிர்ந்துகொள்ளப் பாப்பா முன் வந்தவுடன் ஆளே மாறிவிட்டான். "நாம் இங்கிருப்பது நல்லதல்ல.வா."

கேட்டண்டை வந்ததும் அவன் தயங்கினான்.

அவன மனத்தைக் குழப்பிய பிரசினையை அவள் ஊகித்துவிட்டாள் போலும்.

"என்னைப் பற்றி யோசனை வேண்டாம் நீங்கள் பாட்டுக்கு வெளியேறுங்கள்."

"அதெப்படி?" என்று கோவிந்தன் மறுத்தான். "நீ?"

"என்னை நீங்களா தூக்கிக்கொண்டு வந்தீர்கள்? வந்தபடியே எனக்குப் போகவும் தெரியும்."

தன் வாக்கை அவள் மெய்ப்பித்துக் காட்டியபோது அவன் அயர்ந்து போனான். அவளைப் பின்தொடர்ந்து அந்தண்டைக் குதித்ததும், "குரங்கு கூட இவ்வளவு வேகமாக மரத்தில் ஏறாதே?" என்று அவன் புகழ்ச்சியாகக் கூறியது அவள் முகத்தைக் குவிய வைத்ததில் என்ன ஆச்சரியம்?

"நான் இங்கே வந்திருப்பது உனக்கு எப்படித் தெரியும்?" என்றான் நடந்தபடி.

அவள் மௌனம் சாதித்தாள்.

மறுமுறையும் அவன் கேள்வி வீண் போன பின்னரே அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று.

"மூஞ்சியை ஏன் இப்படி வைத்துக் கொண்டிருக்கிறாய்?"

"பின்னே குரங்கு மூஞ்சி எப்படி இருக்குமாம்?"

அவனுக்கு விளங்கி விட்டது. "அடடே! தப்பாக எடுத்துக் கொண்டுவிட்டாயா நீ? மன்னித்து விடு." இரண்டு கைகளையும் மோவாய்க்குக் கீழே கொடுத்து அவளது வெண்மையான கன்னங்களை அணைத்தபடி அசைத்தான். "என் கண்ணல்ல!"

இருவர் கண்களும் சந்தித்தன. இள நகை அவள் முகத்தில் விளக்கேற்றி வைத்தது.

அருகிலிருந்த தாழ்வான சுமைதாங்கி மீது அவளைத் தூக்கி உட்காரவைத்து விட்டு, முழங்கையை அதில் ஊன்றிய படி, "சொல்லு," என்றான்.

"பேச்சுக் குரல் கேட்டதும் எழுந்து விட்டேன். யாரோ உங்களை அழைத்துக்கொண்டு போனார்கள். திரும்பி வருவதற்கு ஏன் அவ்வளவு நேரம்? மொட்டு மொட்டென்று உட்கார்ந்து கொண்டிருந்தேன். வந்தவர் மறுபடியும் தனியே கிளம்பியதும் எனக்குக் கிலி ஏற்பட்டுவிட்டது. பின்னாலேயே புறப்பட்டு விட்டேன். ஆமாம், இது யார் வீடு? முதுகிலே டின் கட்டிக் கொள்வதற்கு நீங்கள் எதற்காக முயற்சி பண்ண வேண்டும்?"

"நீ கிளம்பியது அண்ணாவுக்குத் தெரியுமோ?" என்றான் கோவிந்தன் கவலையோடு.

"ஈ கொசுவுக்குக்கூடத் தெரியாது. பகல் பூராவும் அந்த டிராக்டரோடு மல்லாடினார் அல்லவா? நன்றாகத் தூங்குகிறார் போலிருக்கிறது."

"உண்மைதான். திண்ணையில் இருந்தபடி அந்த ஆளோடு நான் பேசினதுகூட அறைக்குள்ளிருந்த அவர் காதுக்கு எட்டவில்லையே?"

"அக்காவுக்கும் நல்ல தூக்கம். நான் எழுந்து வந்ததை அவர்கள் பார்க்கவில்லை."

கோவிந்தன் தலை குனிந்தவண்ணம் கொஞ்ச நேரம் பேசாதிருந்தான்.

"அயோக்கிய ராஸ்கல்!" என்று சீறினான், திடீரென்று.

கைகளைக் கோத்து மார்பில் வைத்தபடி தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து, பயந்துவிட்டவள்போல், "நானா?" என்றாள் சுமைதாங்கியால் சுமக்கப் பட்டவள்.

கோவிந்தன் விளக்கினான், "எங்களுக்குத் தம்பியாய்ப்பிறந்து தொலைத்த அந்தத் தறுதலையைச் சொல்கிறேன்."

நாலைப் போல சேலை என்ற பழமொழியை நிரூபித்து மங்களத்தை நினைவூட்டியது, பாப்பாவின் வாயிலிருந்து வெளிப்பட்ட சாபம். "அவனை வாரிபேதி வாரிக் கொண்டு போக! ஆமாம், இப்போது என்ன பண்ணியிருக்கிறான் பாவி?"

"ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்து இப்போது ஆளையே கடிக்க வந்து விட்டான். அதுவும் சொந்த ஊருக்கே வந்து விட்டான்."

பாப்பா தரைக்குத் தாவினாள். "என்ன?"

"அவனுக்குக் கையாளாக இருக்கிறாரே பெரிய மனிதர், அவரும் வந்திருக்கிறாராம்—உன் அப்பா."

பாப்பா உதட்டைக் கடித்தாள். "பெரிய பேஜாராக இருக்கும் போலிருக்கிறதே. நாம் எங்கே போனாலும் துரத்திக் கொண்டு வர வேண்டுமா?"

"நீ நினைப்பதுபோல உன் விஷயம் மட்டும் அவர்கள் குறிக்கோள் இல்லை பாப்பா," என்று திருத்தினான் கோவிந்தன். "புதுப் பிளான் ஒன்றையும்

சேர்த்துக் கொண்டிருக்கிறார்களாம்!''

''எப்படி?'' கோவிந்தனின் கடுகடுத்த முகத்தைக் கலக்கத்தோடு நோக்கினாள் பாப்பா.

அவளை உறுமினான். ''ஆனால் ஒன்று நிச்சயம். கோவிந்தன் இருக்கும்வரை அவர்கள் திட்டம் ஒருநாளும் பலிக்காது.''

''புரியும்படியாகத்தான் சொல்லுங்களேன்''

தூரத்தில் கோட்டான் அலறிற்று. சீறிக்கொண்டு வந்த காற்றில் பாப்பாவின் சேலைத் தலைப்பு படபடத்தது. கோவிந்தனுடைய தலை மயிர் நெற்றியில் புரண்டது.

அவன் விளக்கினான். இதயம் குமுற, தொண்டை அடைக்க, பொறி பறக்கும் சொற்களைப் பயன்படுத்தி, குடும்பச் சொத்தில் அண்ணா ரத்தினத்துக்கு இருக்கும் பங்கைப் பறிப்பதற்காகச் செந்தில் செய்திருக்கும் சூழ்ச்சியை வெளியிட்டான். தாமோதரத்துக்கு அண்ணா எழுதிய கடிதத்தை விலை மதிப்பற்ற சாட்சியமாகச் செந்தில் கருதுவதையும், ரத்தினத்திடம் கையெழுத்து வாங்கும் பொருட்டு அவன் விடுதலைப் பத்திரம் தயாரித்து வைத்திருப்பதையும் தெரிவித்தான்.

''அப்படியானால் உண்மையில் ரத்தினம் உங்கள் அண்ணா இல்லையா?''

அவள் அவன் கன்னத்தில் பளீரென்று அறைந்திருந்தால் கூட அவன் முகம் அத்தனை மாறுதலுக்கு உள்ளாகியிருக்குமா என்பது சந்தேகம். திடீரென்று எழும்பிய உணர்ச்சிகளை மென்று விழுங்கியவனாய், ''பாப்பா!'' என்று கூப்பிட்டான். ''இன்னொரு தடவை அப்படிக் கேட்டுவிடாதே. அப்புறம் நான் மனிதனாக இருக்க மாட்டேன்.''

அவன் இவ்வளவு முரட்டுத்தனமாக அவளிடம் என்றைக்குமே பேசியதில்லை என்பதை, அவள் திகைத்துப் போய்த் திறந்த வாயுடன் நின்ற காட்சியே எடுத்துக் காட்டிற்று.

கோவிந்தன் பேசிக் கொண்டே போனான்.

''அவரை என் அண்ணாவென்று அம்மாவே அறிமுகம் செய்து வைத்தார்கள். அப்பாவோ, மூத்த பிள்ளை என்ற முறையில் அவரிடத்தில்தான் குடும்பப் பொறுப்பையெல்லாம் ஒப்படைத்துவிட்டுப் போனார். பெற்ற தந்தையும் தாயும் தந்த அண்ணாவை என்னிடமிருந்து பிரிக்க இந்தச் செந்திலுக்கும் தாமோதரத்துக்கும் என்ன உரிமை இருக்கிறது? நான் சிறு குழந்தையாக இருந்தபோது, அவர் என் அண்ணாவாக இருந்தார். இன்றைக்கும் அவர் என் அண்ணாவாக இருக்கிறார். என்றைக்கும் அண்ணாவாகத்தான் இருப்பார்.''

பாப்பாவின் மனத்தில் ஒரு சந்தேகம் முளைத்தது. ''எதையும் அலசிப் பார்ப்பது நல்லது என்பதற்காகச் சொல்கிறேன். கோபித்துக் கொள்ளாதீர்கள்,'' என்று பீடிகை போட்டாள். ''சட்டப்படி அவர் உங்கள் அண்ணா இல்லை என்று நிரூபிக்கப்பட்டுவிட்டால்!''

கோவிந்தனுடைய சினமெல்லாம் திரண்டு சட்டத்தின் மீது பாய்ந்தது. ''அப்படிக் கூடச் சொல்லிவிடுமா உங்கள் சட்டம்? சொல்லாது. அப்படிச் சொல்லுகிற அளவுக்கு அது அறிவு கெட்டு நேர்மை இழந்து



**நண்பர்:** குமாஸ்தாக்கள் வேண்டுமென்று விளம்பரம் போட்டிருக்கிறீர்களே. அதில் கல்யாணம் ஆனவர்கள் மட்டும் மனுச் செய்யுங்கள் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஏன்?

**மானேஜர்:** ஆமாம், சார். நான் கொஞ்சம் கோபக்காரன். எவ்வளவு திட்டினாலும் பொறுத்துக் கொண்டு போகிறவர்களாக இருக்க வேண்டும் என்றுதான்.



## நீங்கள் நீதிபதியாயிருந்தால்

**விடை**

லட்சுமியின் பக்கம் நியாயமில்லை. லட்சுமியின் தந்தை உயிலில் அவளுக்குப் பூரண உரிமையை வழங்கவில்லை. அவள் ஆயுட்காலம் வரையில் அவற்றை அனுபவிக்கும் உரிமை மட்டுமே வழங்கினார். அந்தச் சொத்துக்களை சர்வ சதந்திரமாக அனுபவிக்கும் உரிமை லட்சுமியின் புதல்வனுக்குத்தான் உண்டு. அவன் மூலமாக அவன் மனைவி அந்த உரிமையைப் பெறுகிறாள். எனவே லட்சுமியின் ஆயுட் காலத்திற்குப் பின் லட்சுமியின் மருமகளுக்கே சொத்தின் பூரண உரிமை போய்ச் சேரும்.

(32 M. L. J. 137)

---

விடுமானால் அதற்கு முடிவு கட்டும் பணியை நான் ஏற்றுக்கொண்டு விடுவேன். ரத்தினம் என் அண்ணாவல்ல என்று மட்டும் ஒரு நீதிபதி தீர்ப்பளிக்கட்டும். கோர்ட்டுக் கட்டிடத்துக்கே தீ வைத்து விடுகிறேன், பார். நியாயம் வழங்கத் தெரியாத சட்டமும். அந்தச் சட்டத்துக்கு முட்டுக் கொடுக்கும் நீதிபதியும் கூண்டோடு கைலாசம் போகட்டும்.''

"ஆமாம், செந்திலுடைய திட்டத்தையெல்லாம் நீங்கள் எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?''

கோவிந்தன் உற்சாகத்தோடு கேட்டான், "அடடே, அதை நான் உன்னிடம் சொல்லவே இல்லையா? நேற்று ராத்திரி என்னை யார் கூப்பிட்டனுப்பினார்கள் என்று நினைக்கிறாய்?''

"யார்?''

"வேறு யார்? கனகசபைதான்!''

பாப்பா உள்ளிழுத்த மூச்சு வெளியே வரவில்லை. "கனகசபை! அந்த மோசக்காரன் வரவேண்டியதுதான் பாக்கியாக இருந்தது. அவனும் வந்துவிட்டானா!''

"அப்படிச் சொல்லாதே பாப்பா! தன் தவறை நினைத்து எவ்வளவு வருத்தப்படுகிறான் தெரியுமா? பாவம், குடிவெறியில் கன்னா பின்னாவென்று நடந்து கொண்டுவிட்டான். பாப்பா, நேற்றுக் காலில் விழாத குறையாக அவன் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதை நீ பார்த்திருந்தால் கண்கலங்கியிருப்பாய்.''

சற்று நேரத்துக்கு முன் எலுமிச்சம் பழமாகக் காட்சியளித்த பாப்பாவின் வதனம் புகையிலைச் சருகாக வதங்கிற்று. "ஒருதரம் குட்டுப்பட்டது போதாதா? மறுபடியுமா அவன் வலையில் விழுவது!''

அவன் 'அவள் மோவாயைத் தொட்டுத் திருப்பினான். "என்னை நம்பு பாப்பா. செந்தில் மீது அவன் எவ்வளவு கோபமாக இருக்கிறான் என்று நினைக்கிறாய்? 'உன் தம்பி முகத்தில் கரியைப் பூசினால் போதும். அதற்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராய் இருக்கிறேன். வேறு எதுவுமே வேண்டாம்,' என்று அவன் கேட்டுக்கொண்டான்.''

"வேறு என்ன சொன்னான்?'' என்று பாப்பா வினவினாள்.

கோவிந்தன் வலதுபுறம் திரும்பினான். வானத்தில் வரையப்பட்ட நிழற்படம் போல் காட்சியளிக்கும் மாளிகையைச் சுட்டிக் காட்டி, "இது யார் வீடு தெரியுமா?'' என்றான்.

"யாரோ உங்கள் எதிரி வீடு.''

"வீடு எதிரியுடையது அல்ல அதில் வந்து தங்கியிருப்பவன்தான் என் எதிரி. கனகசபையின் வீட்டில் செந்திலும் உன் அப்பாவும் ஜாகை வைத்திருக்கிறார்கள்.''

பாப்பா தன் வலது கையால் இடது உள்ளங் கையைக் குத்தினாள். "பார்த்தீர்களா, பார்த்தீர்களா! செந்தில் என்றால் கனகசபைக்கு ஆகாது என்றீர்களே, பின்னே அவனுக்கு எப்படிக் கனகசபை இடம் கொடுத்திருக்கிறான்!''

கோவிந்தன் கலகலவென்று நகைத்தான். "எல்லாம் கனகசபையின் தந்திரம்தான். இவ்வளவுக்கும் அவன், வந்திருக்கிறான் என்பது செந்திலுக்குத் தெரியாதாம்.''

"அதெப்படித் தெரியாமல் போகும்!

இருவரும் ஒரே வீட்டில் இருக்கும் போது...''

''த்ஸோ த்ஸோ!'' என்று இடை மறித்தான் கோவிந்தன். 'நிகழ்ந்தது என்ன என்பதைத் தெரிந்துகொள்ளாமல் நீ பேசக்கூடாது. நமது விஷயத்தில் உன் அப்பா நடத்தை சரியில்லை என்று கண்டித்து அண்ணா லெட்டர் போட்டார் அல்லவா? நீ இங்கு இருக்கிறாய் என்பதை மனிதர் அதிலிருந்து புரிந்து கொண்டுவிட்டார். செந்திலிடம் ஓடியிருக்கிறார். இரண்டு பேருமாக இங்கே புறப்பட்டு வருவது என்றும், உன்னைப் பிடிப்பதோடு அண்ணாவையும் கவிழ்ப்பதென்று தீர்மானித்திருக்கிறார்கள். கனகசபையோடு தற்செயலாகப் பேசும்போது அவனும் இந்த ஊர்க்காரன்தான் என்பது செந்திலுக்குத் தெரிந்திருக்கிறது. பார், பாப்பா. நானும் இத்தனை வருடமாய்க் கனகசபையோடு பழகுகிறேனே, அவன் கூத்தனூர் மிராசுதார் என்பது என் நினைவுக்கே வரவில்லை. பாரேன்.''

பாப்பா சந்தேகத்தோடு கேட்டாள்.

''கனகசபையும் செந்திலும் எதற்காகச் சந்தித்தார்களாம்?''

''எதற்காகவோ சந்தித்தார்கள். இதென்ன கேள்வி?'' என்று அடக்கினான் கோவிந்தன். ''அப்புறம் என்ன நடந்ததாம் தெரியுமா? கூத்தனூரில் இரண்டுநாள் தங்கவேண்டியிருக்கும் என்றும், ஜாகை வசதிக்கு ஏற்பாடு செய்து தரவேண்டும் என்றும் செந்தில் கேட்டானாம். ஆனால், என்ன காரணத்துக்காக இந்தப் பிரயாணம் என்று சொல்லவில்லையாம். கனகசபை எம்டன் இல்லையா? செந்திலுக்கும் உன் அப்பாவுக்கும் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்குமாறு தன் ஆட்களுக்குக் கடிதம் எழுதிவிட்டு, அவர்கள் சம்பாஷணை போக்குவரத்தில் ஒரு கண்ணாயிருக்கும்படி கட்டளையிட்டிருக்கிறான்.''

''கரடி புலியைக்கூட நம்பலாம். உங்கள் கனகசபையை நம்பக் கூடாது.''

கோவிந்தன் நண்பனைக் காப்பாற்ற முன் வந்தான். ''கெட்டிக்காரனாய் இருப்பது ஒரு குற்றமா? கேள் பாப்பா! கனகசபைக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லையாம். அவனும் புறப்பட்டுவிட்டான். வழியில் பழுதாகி விட்ட காரை வைத்துக் கொண்டு நம்மவர்கள் திண்டாடுவதைப் பார்த்திருக்கிறான். அவர்கள் அடையாளம் கண்டுகொள்ளு முன் விர்ரென்று அடித்துக்கொண்டு வந்துவிட்டான். வெகுநேரம் கழித்து, செந்திலும் உன் அப்பாவும் வந்து சேர்ந்திருக்கிறார்கள். கனகசபையின் வருகை வேறு ஒரு பிள்ளைக்கும் தெரியாது. ஆள்வைத்து ஒட்டுக் கேட்டு செந்திலின் ரகசியத் திட்டத்தைத் தெரிந்துகொண்டானோ இல்லையோ, அவசரம் அவசரமாக என்னைக் கூப்பிட்டனுப்பி ஏரிக்கரையில் உட்காரவைத்து எல்லாவற்றையும் சொன்னான். அவன் பழையபடி நல்லவனாகிவிட்டான் பாப்பா.''

பாப்பா யோசனையில் ஆழ்ந்தாள்.

''அப்படியானால், ரத்தினம் உங்கள் அண்ணாவா, என் அண்ணாவா என்பது தான் தகராறு. இல்லையா?''

''இல்லை,'' என்று மறுத்தான் கோவிந்தன், முட்டியைக் காட்டியபடி, ''அவர் ஒரு லட்சாதிபதியா பிட்சாதிபதியா என்பதுதான் பிரசினை.''

பாப்பா அவனை ஏறிட்டு நோக்கினாள். ''அப்பாவுக்கு உங்கள் அண்ணா எழுதிய லெட்டர்தானே இப்போது முக்கிய சாட்சியமாக இருக்கிறது? அது கை மாறிவிட்டால்?''

''என்ன சொல்கிறாய் பாப்பா?''

அவள் சேலைத் தலைப்பை இடுப்பில் செருகிக்கொண்டாள். கையை நீட்டி, ''கடிதத்தை என் கை அவர்கள் கையிலிருந்து பறித்து உங்கள் கைக்கு மாற்றிவிட்டால்?'' என்றாள்.

ஆவலால் கண்கள் மின்ன, ''அது முடியுமா பாப்பா?'' என்றான் கோவிந்தன்.

தலையை ஒய்யாரமாகச் சாய்த்து, இடது கண்ணைச் சிமிட்டியவள், ''நீங்கள் கேட்டுக்கு வெளியே காத்துக்கொண்டிருங்கள். பத்து நிமிடத்தில் வந்துவிடுகிறேன்,'' என்று உறுதியளித்தபடி துள்ளி ஓடினாள்.

சென்னை கெயிட்டி, பிரபாத், உமா

மற்றும் தென்னாடெங்கும்




# பதி பக்தி

சங்கீதம்: விஸ்வநாதன் - ராமமூர்த்தி • நிர்வாகம்: G.N. வேலுமணி

கதை - வசனம்: M.S. சோலைமலை • காமிரா: ஏ. விட்டல்ராவ்

டைரக்ஷன்......
**A. பீம்சிங்**

*

பூரண உரிமையாளர்
**S.K. பிக்சர்ஸ்**

BAKTHA.

# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## இருபத்து நான்கு

தாமோதரம் விழித்துக் கொண்டார்.

பகல் முழுவதும் பிரயாணம் செய்த அலுப்பு; பாதியில் வண்டி நின்று போய் அதைப் பழுது பார்க்க முடியாமல் திண்டாடியதால் விளைந்த சோர்வு; கண்டிப்புக்காரனான செந்திலுடன் பழகுவதிலிருந்த சிரமம்; இவை மட்டும் காரணமல்ல, தூக்கம் பிடிக்காமல் அவர் புரண்டு புரண்டு படுத்ததற்கு. இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்குள் பதினாயிரக் கணக்கான ரூபாய்கள் தன் பையில் குலுங்கப் போகின்றன என்ற கனவு ஒரு பக்கம்; சலவை செய்யப்பட்ட உறையும் சித்திர வேலைபாடமைந்த விரிப்பும் கொண்ட ஆறங்குல உயரமுள்ள பட்டு மெத்தையின் வேண்டாத சுகம் மற்றொரு பக்கம். இவையும் அவர் அமைதி கெடக் காரணமாயிருந்தன.

ஆம். தாமாகக் கழன்று விடுவன போல் வலித்த அவரது நீண்ட எலும்புகளின் நோவை, மென்மையான அந்த மெத்தை குறைக்கவில்லை; அதிகப்படுத்திற்று. தாமோதரம் எழுந்து உட்கார்ந்தார், "உஸ்..." என்று பெருமூச்சு விட்டபடி. பிறகு, ஒரு முடிவுக்கு வந்தவராய், தரையை அலங்கரித்த ஜமுக்காளத்தின் மீது தனது கைகளையே தலையணையாக வைத்துப் படுத்துக் கொண்டார். கடினமான அந்தத் தரை அவர் உடலெங்கும் பரவியிருந்த அலுப்பைக் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சிக்கொள்ள, அவர் நிம்மதியுடன் கண் மூடினார். உடனே தூங்கிப் போயிருப்பார் — அவரது கைமீது பதிந்திருந்த காதில் மென்மையான அந்த ஓசை விழுந்திருக்காவிட்டால். நெற்றியைச் சுளித்தபடி அவர் தலையைச் சற்றே தூக்கிக் கண்களைத் திறந்து கவனித்தார்.

தலைக்கு மேலே விசிறி சுழன்று கொண்டிருந்தது. செந்திலுடைய கட்டில்மீது தெரிந்த மேடு, அவன் தூங்கிக் கொண்டிருக்கிறான் என்பதை அறிவித்தது. கதவுக்கு இரு புறத்திலுமிருந்த சாளரங்களை நோக்கினார். ஒன்று சாத்தப் பட்டிருந்தது. மற்றொன்றின் வழியாக, வெளியே விரிந்து கிடந்த திறந்த முற்றத்தின் ஒரு பகுதியும் தோட்டத்து மரங்களும் வானமும் காட்சியளித்தன.

அரை நிமிடத்துக்குக் காதுகளைத் தீட்டிக் கொண்டு தாமோதரம் உன்னிப்பாகக் கேட்டார். ஐயத்தைக் கிளறக்கூடிய எவ்வித ஒலியும் பிடிபடவில்லை, கழுத்து வலித்தது. பழையபடி படுத்துக் கொண்டார். ஐந்து நிமிடம் கூட ஆகியிருக்காது. மறுபடியும் அந்தச் சப்தம்!

இம்முறை அது முன்னைக் காட்டிலும் தெளிவாக அவர் காதில் விழுந்தது. ஆம், அறைக்கு வெளியே ஆள் நடமாட்டம் இருக்கிறது என்பதை அவர் ஊகித்துக் கொண்டார். விழித்துப் பார்த்தார். தூக்கி வாரிப்போட்டது.

பாம்பா அது! இருட்டில் சரியாகத் தெரியவில்லை. ஜன்னல் கம்பிகளிடையே நுழைந்து, ஒரு முழ நீளத்துக்குச் சுவரை ஒட்டினாற் போல் நகர்ந்து, கதவின்மீது படர முயன்று அந்தப் பாம்பு கொழுத்துப் பருத்த ஒரு கைபோல்...

என்ன! தாமோதரத்துக்கு இப்போது புரிந்து விட்டது. கை போன்ற பாம்பு அல்ல அது; பாம்பு போல் தோற்றமளித்த கை! பட்டணத்து ஆசாமிகள் குறட்டை விட்டுக் கொண்டிருப்பார்கள் என்ற நம்பிக்கையில் சாளரத்தின் வழியே நுழைந்துக் கதவின் தாழ்ப்பாளை நீக்கிவிட முயலும் திருடனின் கை.

குபீலென்று எழுந்து அந்தக் கையைப் பற்றித் திருகி முட்டி பெயரும் வரை கதவில் மோதவேண்டும் என்ற திட்டத்துடன் குப்புறப் படுத்தபடி அங்குல அங்குலமாக ஊர்ந்த தாமோதரம், கதவை அடைந்ததும் திகைத்துப் போனார். விரல்களை இப்படியும் அப்படியுமாக நெளித்தபடி மேலும் கீழுமாக ஆடிக் கொண்டிருந்த கையில் இரண்டு வளையல்கள் தென்பட்டன. அவற்றையும், கையின் அமைப்பையும் கண்ட தாமோதரம் உடனடியாக உண்மையை ஊகித்துவிட்டார். அது பாப்பாவினுடைய கை.

மகிழ்ச்சி, வியர்வையாய்ப் பீரிட்டுத் தாமோதரத்தைக் குளிப்பாட்டிற்று. அதிர்ஷ்டம் என்பார்களே அது இது தானோ? அல்ல. இது அதிர்ஷ்டத்தின் மேல் அதிர்ஷ்டம்! பல இரவுகளுக்கு முன்னால் சென்னையிலுள்ள கனகசபையின் வீட்டில் அத்தனை பேருக்கும் கடுக்காய் கொடுத்துவிட்டுக் கோவிந்தனோடு ஓடியவள் அல்லவா! இப்போது வலிய வந்து சிக்கிக் கொண்டு விட்டாள். அவர் தனது வலது கையை உயர்த்தி வளையல்கள் நொறுங்கும் படியாக அவளது மணிக்கட்டை ஒரு பிடி பிடித்துச் செந்திலுக்குக் குரல் கொடுத்தால் போதும். முள்ளங்கிப் பத்தைகள் போல் கணக்கற்ற ரூபாய்கள் அவர் மடியில் வந்து விழாதா?

ஆனால் சட்டெனக் காரியத்தை முடித்துக் கொள்ளத் தாமோதரம் விரும்பவில்லை. தன்னைப் பாப்பா எவ்வளவு கஷ்டத்துக்கு உள்ளாக்கி இருக்கிறாள்! பதிலுக்கு அவளையும் கொஞ்சம் வதைக்க வேண்டியது தான். இனி எந்த விதத்திலும் அவள் தப்ப முடியாது. அவள் என்ன நோக்கத்தோடு வந்திருந்தாலும் சரி. அதில் வெற்றியடைந்து விட்டதாக அவள் நினைப்பதற்கு இடம் கொடுத்து, கடைசியில் திடீரென்று அவளைக் கைப்பற்றவேண்டும்.

எச்சரிக்கையுடன் கதவண்டை சென்றவர், இப்



போது குதூகலத்துடன் கட்டியமும் எழுப்பினர்.

அப்போதுதான் விழித்துக் கொண்டவர் போல், ''யாரது!'' என்று ஓர் அதட்டல் போட்டார்.

அவர் எதிர்பார்த்தபடியே அந்தக் கை விருட்டென்று வெளியே இழுத்துக் கொள்ளப்பட்டது. தாமோதரத்தின் முகத்தில் புன்னகை படர்ந்தது.

மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டார். கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து சுற்று முற்றும் பார்த்துவிட்டு, ''யாரையும் காணோமே!'' என்று தனக்குள்—ஆனால் உரக்க— முணுமுணுத்து விட்டுத் தூக்கம் பிடிக்காதவர்போல் முற்றத்தைச் சாவகாசமாகக் கடந்து, கைப்பிடிச் சுவரைப் பிடித்தபடி தோட்டத்தைப் பார்ப்பவர் போல்



நின்ருரா ஆயினும் ஒரு கண்மட்டும் அறைக் கதவின்மீது பதிந்திருந்தது.

அவர் எதிர்பார்த்தது வீண் போக வில்லை. தாமோதரம் நின்றிருந்த தோரணை, அவர் திரும்ப அறைக்குள் செல்வதற்குக் குறைந்தது கால்மணியாவது ஆகும் என்ற எண்ணத்தை ஊட்டக்கூடியதாக இருந்தது

மனிதருடைய கை பட்டதும் கால்களை மடித்துக்கொண்டு இறந்துவிட்டதைப்போல் கிடக்கும் வண்டு, பிறகு மெள்ள மெள்ள அவற்றை நீட்டித் தன் வழியே செல்வதுபோல், தாமோதரத்தின் குரலைக் கேட்டதும் ஒரு மூலையில் பதுங்கிவிட்ட பாப்பா, இப்போது அறைக் கதவை நோக்கி நகர ஆரம்பித்தாள்.

சிலந்திப் பூச்சியின் அமைதியோடு தாமோதரம் காத்திருந்தார்.

சுவரோடு சுவராக ஒட்டிக்கொண்ட பாப்பா, மூச்சைப் பிடித்துக்கொண்டு, தாமோதரத்தைவிட்டுப் பார்வையைப் பெயர்க்காமல் ஊர்ந்துமுன்னேறினாள்.

அவள் அறைக்குள் நுழைந்தாளோ இல்லையோ, தாமோதரம் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து கதவை இழுத்துப் படாரென்று சாத்தி, "செந்தில்! செந்தில்!" என்று கூவினார்.

கேட்டின்மீது பரபரப்புடன் ஏறிய பாப்பா உள்பக்கம் குதித்த மாத்திரத்திலேயே கோவிந்தனுடைய வயிற்றை அச்சம் பிசையத் தொடங்கிவிட்டது. தனது முட்டாள்தனத்தை எண்ணிப் பார்க்கப் பார்க்கத் தன் தலையில் தானே நாலு குட்டுக் குட்டிக்கொள்ளலாம்போல் தோன்றிற்று. தாமோதரத்துக்கு ரத்தினம் எழுதிய கடிதம் கிடைக்கப்போகிறது என்ற மகிழ்ச்சியில், பாப்பாவுக்கு நேரக் கூடிய அபாயத்தைப் பற்றி சிந்திக்கத் தவறிவிட்டான்.

வெளியே வாளா நின்று கொண்டிருக்க மனமில்லாமல் அவன் மறுபடியும் தோட்டத்தில் இறங்கினான். வீடோ பிரம்மாண்டமாக இருந்தது. பாப்பா எப்படி நுழைந்தாள், இப்போது எங்கே இருக்கிறாள் என்பதையெல்லாம் அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. பாப்பாவுக்கு ஒரு கெடுதலும் நேரக்கூடாது என்று தனக்குள் பன்முறை வேண்டிக் கொண்டான். தோட்டத்தைச் சுற்றிப் பார்க்கலாம் என்றால் தற்செயலாக யாரேனும் எதிர்ப்பட்டுக் கலவரம் விளைந்து, அதனால் பாப்பாவின் நிலை மேலும் சங்கடத்திற்குள்ளாகிவிடலாம். ஒரே இடத்தில் நின்று கொண்டிருக்கவும் முடியவில்லை.

கோவிந்தன் கைகளைப் பிசைந்தான். நேரமோ ஓடிக் கொண்டிருந்தது. "பாப்பா!" என்று உரக்கக் கூவத் துடித்தது அவன் நாக்கு. கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டான்.

அப்போதுதான் அவன் தற்செயலாக அண்ணாந்து பார்க்க நேர்ந்தது. அவனுடைய தலைக்கு நேர் மேலே, கைப்பிடிச் சுவரைப் பற்றியபடி யாரோ நின்று கொண்டிருந்தார்கள். கோவிந்தனுக்குத் தொண்டை வரண்டது. திறந்த வாயுடன் உற்றுப் பார்த்தான். ஆம், அது தாமோதரம்தான், சந்தேகமில்லை.

அவனுக்குத் துணுக்கென்றது. அவருடைய அறையைத் தேடித் தானே பாப்பா போயிருக்கிறாள்! அந்த மனிதரோ இன்னும் தூங்காமல் நின்று கொண்டிருக்கிறாரே!

வியப்பில் உதித்த இந்தக் கேள்விகளுக்கு அவன் பதில் சொல்லிக் கொள்ளு முன், கைப்பிடிச் சுவரைவிட்டுத் தாமோதரம் திடீரென அகல்வது தெரிந்தது. அடுத்த சில விநாடிகளுக்குள் [illegible]ரென்று

பல தோல் போர்த்த.



"இதற்கு முன்னாலே ஐந்து பஸ் நிற்காமல் போய்விட்டதப்பா! நல்ல வேளை! நீயாவது நிறுத்தினாயே? மகராஜனாய் இருப்பாய்!"

"அடடே! நான் என்னாங்க பிரமாத உதவி பண்ணிட்டேன்? ஏதோ உங்க அதிர்ஷ்டம், எஞ்சினிலே கோளாறு ஏற்பட்டுப் போச்சு. வண்டியும் தன்னாலே இங்கே நின்னிட்டுது! இறங்குங்க சார் எல்லாரும்!"

கதவு சாத்தப்படும் ஓசை கோவிந்தனுக்கு எட்டிற்று. "செந்தில்! செந்தில்!" என்ற தாமோதரத்தின் குரலும் காற்றிலே மிதந்து வந்தது.

ரத்தமெல்லாம் உறைந்துவிட்டாற் போலிருந்தது கோவிந்தனுக்கு. பாப்பாவுக்கு ஆபத்து! அவன் புரிந்துகொண்டு விட்டான்.

அடுத்த வினாடி அச்சம் ஆவேசமாக மாறி அவன் நரம்புகளுக்குத் தீ வைத்தது. இன்னது செய்கிறோம் என்பது தெரியாமல் ஓடினான். போர்டிகோ ஒன்று எதிர்ப்பட்டது. படிகளில் விடுவிடென்று ஏறி, பத்தடி உயரத்துக்கு நிமிர்ந்து நின்ற அந்தத் தடித்த கதவுகளை இரண்டு கைகளாலும் மாற்றி மாற்றித் தடதடவென்று தட்டினான்.

எங்கிருந்தோ ஒரு காவல்காரன், "ஏய்,...ஏய்!" என்று சப்தமிட்டபடி தூரத்தில் ஓடி வருவது தெரிந்தது. படிகள்மீது அழகுக்காக வைக்கப்பட்டிருந்த பித்தளைப் பூந்தொட்டி ஒன்றைக் கதவுமீது வீசி எறியும் பொருட்டுக் கோவிந்தன் திரும்பியபொழுது, தோட்டத்துக் கேட்டைத் தாண்டிக்கொண்டிருக்கும் அந்த உருவத்தைக் கவனித்தான். பிரமித்து நின்றவன், வெப்பமெல்லாம் பனியாக மாற, கையிலெடுத்த தொட்டியை தடாலென்று அப்படியே போட்டுவிட்டுக் கேட்டை நோக்கி விரைந்தான்.

மூச்சு வாங்க மண் சாலையில் இருவரும் தப்பி ஓடும்பொழுது, "என்ன நடந்தது!" என்றான் கோவிந்தன்.

"அப்பா என்னை அறைக்குள் அடைக்கப் பார்த்தார். நல்ல காலம், குளியல் அறையில் தோட்டி வந்து சுத்தம் செய்வதற்காக வேறொரு கதவு இருந்தது. இந்தாருங்கள்," என்று சொல்லி ஒரு கைப் பெட்டியை அவனிடம் நீட்டினாள் பாப்பா.

"செந்தில்!" என்று வினவினான் அவன், பெட்டியை வாங்கிக் கொண்டு.

"அவர் எழுந்திருப்பதற்குள்ளேதான் நான் குளியல் அறைக்குள் நுழைந்து கதவைத் தாழ் போட்டுக் கொண்டு விட்டேனே!" என்று விளக்கினாள் அவள்.

தனது கையோடு கோத்திருந்த அவள் விரல்களை ஆசையுடனும் பெருமையுடனும் அழுத்தினான் அவன்.

அவர்கள் ஓட்டுப் பங்களாவை அடைந்த பொழுது விடி வெள்ளி முளைத்தது; முதல் கோழி கூவிற்று

சுற்றுத் திண்ணைமீது குப்புறப் படுத்துக்கொண்டு கோவிந்தன் கட்டைபோல் கிடந்தான். கோபி அவன் முதுகில் உட்கார்ந்து, "ஹை ஹை..." என்று குதிரைச் சவாரி செய்தது அவனுக்குத் தெரியாது.

"இங்கே பாருங்க! அண்ணா நல்லா தூங்கிட்டிருக்கார், கோபி அவரைத் தொந்தரவு பண்றான்!" என்று சசு பொதுவாக எல்லோருக்கும் ஓர் அறிவிப்பு விட்டது அவனுக்குத் தெரியாது.

மூன்றாவது தரமாகப் பலகாரம் கொடுத்தனுப்பிய துளசி, "அவர் இன்னுமா எழுந்திருக்கவில்லை?" என்று பாப்பாவிடம் வினவியது அவனுக்குத் தெரியாது.

"பாவம், அயர்ந்து தூங்குகிறான். எழுந்திருக்கிறபோது எழுந்திருக்கட்டும்," என்று எச்சரித்துவிட்டுத் தன் வேலையைக் கவனிக்க ரத்தினம் புறப்பட்டுப் போனது அவனுக்குத் தெரியாது.

ஆனால் பாப்பா அவன் காதருகே குனிந்து, "செந்திலுடைய ஆள் உங்கள் அண்ணாவைத் தேடிக்கொண்டு போகிறான். கனகசபை வீட்டுக்கு அவரை இட்டுக்கொண்டு போகப் போகிறான்," என்று அறிவித்தாளோ இல்லையோ, கோவிந்தன் விசுக்கென்று எழுந்து உட்கார்ந்து, "எங்கே, எங்கே அந்த ஆள்?" என்று பதறினான். 'அண்ணாவைப் பார்க்கச் செந்திலை அனுமதிக்காதே' என்று அவன் உள்ளுணர்வு அலறிற்று.

அவள் புன்னகை செய்தாள். "முதலில் இதைச் சாப்பிடுங்கள்."

அவன் டம்ளரை வாங்கிக்கொண்டான். "விளையாட்டிற்குச்சொன்னாயா பாப்பா!"

"இல்லை. மெய்யாகத்தான் சொன்னேன். இப்போதுதான் போகிறான். எப்படி இருந்தாலும் உடுப்பு மாற்றிக்கொள்ள உங்கள் அண்ணா இங்கே வருவார் அல்லவா?"

கோவிந்தன் எழுந்தான்.

"பலகாரத்தைச் சாப்பிட்டுவிட்டுப் போங்கள்." என்ற பாப்பாவின் வேண்டுகோளை மறுத்து அவன் தலையாட்டியபோது, அவன் கால்கள் களத்து மேட்டைக் கடந்துகொண்டிருந்தன. ஆனால் அவன் எவ்வளவு வேகமாக நடந்தும் தூரத்தில் சென்று



## ஜலதரங்கர்

குளத்தில் தவறி விழுந்தவர் அலறினார் : "ஐயா உதவி! உதவி! உதவிக்கு ஓடிவாருங்களேன்!"

கரையிலிருந்தவர் கேட்டார் : "கழுத்தளவுமட்டுமதானே தண்ணீர் இருக்கிறது? நீங்களாகவே வரக்கூடாதா?"

"மாட்டேன்! அப்புறம் 'நீங்களாகவே வர முடிந்தபோது எதற்காக உதவி உதவி என்று கத்தினீர்கள்?' என்று கேட்பீர்களே!"

கொண்டிருந்த நாட்டுப்புறத்தானை—அவன் தான் செந்திலுடைய ஆளாக இருக்க வேண்டும்—முந்திமுடியவில்லை.

எண்ணெய்க் கறை படிந்த பனியனும், மடித்துக் கட்டிய வேட்டியுமாக டிராக்டர்மீது உட்கார்ந்திருந்த ரத்தினம், பட் பட்டென்ற எஞ்சின் ஓசையை மூழ்கடிக்கும் உரத்த குரலில், "யாரப்பா நீ? என்ன வேண்டும்?" என்று வினவிவிட்டுத் தலையைச் சாய்த்துக் காதை மடித்துப் பதிலை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் போது, கோவிந்தன் அவனை அடைந்துவிட்டான்.

ஆனால், அந்த ஆள் கூறியது அவன் காதில் விழவில்லை.

ரத்தினத்தின் விழிகள் வியப்பாலும் மகிழ்ச்சியாலும் விரிந்தன.

கோவிந்தனைப் பார்த்து, "செய்தி தெரியுமா?" என்று கேட்டவாறே டிராக்டர் இஞ்ஜினை அமர்த்திவிட்டுக் கீழே குதித்தான்.

"தெரியும்," என்றான் கோவிந்தன், செந்திலின் ஆளை ஏற இறங்கப் பார்த்தவாறு. மணி பத்துக்கு மேல் இருக்குமோ என்னவோ, சூரியன் இருக்குமிடம் தெரியாதபடி எங்கும் பனிச் சென்றிருந்தது. காலைத் தூக்கத்தால் செவ்வரியோடியிருந்த கோவிந்தனின் கண்கள் கூசின.

கையிலிருந்த எண்ணெய்ப் பிசுக்கை ஒரு கந்தையால் துடைத்த ரத்தினம், "செந்தில் இங்கே வந்திருக்கிறானாம். மிராசுதார் வீட்டில் தங்கியிருக்கிறானாம். உனக்கு முன்பே தெரியுமா? இந்த ஆள் சொன்னான்!" என்றான் ஆர்வத்தோடு.

கோவிந்தன் நேரடியாக அவனுக்கு விடை பகரவில்லை. "நீங்கள் எங்கே புறப்பட்டு விட்டீர்கள்?" என்று கேட்டான்.

"ஏன்! செந்திலைப் பார்க்கத்தான். அவனை அழைத்து வரப் போகிறேன். நீயும் வா. நமக்கென இங்கே பங்களா இருக்கும்பொழுது, அவன் அங்கே ஏன் தங்க வேண்டும்?"

கோவிந்தன் குறுக்கே நின்றான். "நான் போய் அழைத்து வருகிறேன் அண்ணா. உங்களுக்குச் சிரமம் எதற்கு?"

வேட்டியை இறக்கிவிட்டுப் பண்ணையாளிடம் வேலையைக் கவனித்துக் கொள்ளும்படி கட்டளையிட்ட ரத்தினம் சிரித்தான். "இதில் சிரமம் என்ன! வா, போகலாம்."

"வயதிலே சின்னவன் அவன். அவன் ஆளனுப்புவது; நீங்கள் ஓடிப் போய்ப் பேட்டி காண்பதா! நல்ல மரியாதை! நான் போய் அவனை இழுத்து வருகிறேன், அண்ணா! நீங்கள் இருங்கள்."

அவனுடைய பார்வையின் தன்மையும், கோரிக்கையில் தொனித்த அழுத்தமும் ரத்தினத்தின் கவனத்தில் படியத் தவறவில்லை. அதற்குமேல் பிடிவாதம் செய்து தம்பியின் வேண்டுகோளைத் தட்ட மனமில்லாதவனாய், "உன் இஷ்டப்படியே ஆகட்டும். போகிறபோது துளசியிடம் சொல்லி விருந்து தயார் பண்ணச் சொல்லி விட்டுப் போ," என்றான்.

இரட்டை மாட்டு வண்டி ஜல்ஜல் என்று கனகசபையின் தோட்டத்துக்குள் நுழைந்தபோது ...ரின் கண்கள் மாளிகையை வட்டமிட்டன. அவனும் பாப்பாவும் இரவில் இரண்டு முறை ஏறிக் கடந்து கேட்டா இது! அதைப் பார்க்கப் பார்க்க, இவ்வளவு உயரமுள்ள கேட்டில் எப்படி ஏறினோம் என்று அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

அதோ, அந்த விசிறி வாழைக்கு அருகில் நின்றபடிதான் அவன் செய கல்லை எடுத்து மாடிமீது விட்டெறியப்போனான். வட்டமாகப் பூந்தொட்டிகள் வைக்கப்பட்டிருக்கின்றனவே, அது தான் அவன் கையைப் பிசைந்து கொண்டு பாப்பாவின் வரவுக்காகக் காத்திருந்த இடம். இரவில் மர்மங்கள் நிறைந்து, பயங்கரமானதாகத் தோற்றமளித்த மாளிகையும் சூழலும் இப்போது மூலைமுடுக்கு இல்லாமல் வெளிப்படையாகக் காட்சி தந்தன.

ஆனால் போர்ட்டிகோவை நெருங்க நெருங்கக் கோவிந்தனின் உள்ளம், ஒரு புறம் கெக்கலிப்பு மறுபுறம் கொதிப்பு என்ற இருவித உணர்ச்சிகளுக்கிடையே மாறி மாறிப் பந்து போல் ஆடிற்று. அண்ணாவை எதிர்பார்த்து ஏமாறப் போகிறார்கள் என்ற எண்ணம் பெருமிதமூட்ட, தானிருக்கும் வரை யாரும் அண்ணாவைக் கவிழ்க்க முடியாது என்ற உணர்வு ஆவேசத்தைக் கிளறிற்று.

வண்டியின் சக்கரங்கள் கரகர வென்ற ஓசையுடன் வாசலுக்கெதிரிலிருந்த சிமிட்டித் தரையில் நின்றன. ஓர் ஆள் வினயத்துடன் முன்வந்து, குறுக்குக் கம்பியைக் கழற்றி விட்டான். இரவு தன்னை விரட்டிக் கொண்டு வந்த காவற்காரனே அவன் என்பதைப் புரிந்துகொண்ட கோவிந்தன் தனக்குள் சிரித்தபடி கீழே இறங்கினான்.

வரவேற்பதற்காக வராந்தாவில் வந்து நின்ற செந்தில், தாமோதரம் ஆகியவர்களின் முகங்கள் கோவிந்தனைக் கண்டதும் அவன் எதிர்பார்த்ததற்கும் அதிகமாகவே கடுகடுத்தன. ஒருகால் ரத்தினம் வண்டிக்குள் இருக்கிறானோ என்ற அவர்களது நப்பாசைக்கு, குறுக்குக் கம்பியை மறுபடியும் மாட்டி விட்ட காவற்காரனின் செய்கை முற்றுப்புள்ளி வைத்தது. வண்டி போர்ட்டிகோவைவிட்டு நகர்ந்தவுடன், செந்தில் பேசாமல் உள்ளே சென்றான்.

கோவிந்தனின் முகத்திலடித்த மாதிரி இருந்தது அது. அவனது நெற்றி நரம்புகள் புடைத்தன. எவ்வளவு திமிர் இருந்தால் வந்தவனை 'வா' என்று ஒரு வார்த்தை கேளாமல் செந்தில் உள்ளே செல்வான்! இந்தக் கேடுகெட்ட தாமோதரம் கூட அல்லவா அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டுச் செந்திலைப் பின்தொடர்கிறார்!

ஹூம். இவர்கள் இரண்டு பேருக்கும் மானம் என்பது இருந்தால்தானே அவர்கள் செய்யும் அவமானத்தைக் கோவிந்தன் பொருட்படுத்த வேண்டும்? அவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். தான் சொல்ல வந்த விஷயத்தைத் தெரிவிக்காமல் திரும்புவதில்லை என்ற உறுதியுடன், "டேய் செந்தில்!" என்று அழைத்தபடி அவனும் நுழைந்தான்.

பளிங்குத் தரையுடன் கூடிய அந்த விரிந்த ஹாலின் இரண்டு பக்கத்திலும், சுவரை அடுத்தாற்போல் வெள்ளிப் பூண் போட்ட நீண்ட யானைத் தந்தங்கள் அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. சுவர்களில் பூசப்பட்டிருந்த புது வர்ணத்தின் மணம் இன்னும் அடங்கியதாகத் தெரியவில்லை.

பெரிய ரேடியோப் பெட்டி ஒன்றின் மீது கை வைத்தபடி நின்ற செந்தில் முதுகைத் திருப்பாமலே கோவிந்தனைப் பக்கவாட்டில் நோக்கினான்.

"என்ன வேண்டும்?"

செந்திலுடைய அலட்சியப் பார்வையும் அவன் அந்தக் கேள்வியைக் கேட்ட முறையும் கோவிந்தனின் கண்களை மேலும் சிவக்க வைத்தன.

"என்ன வேண்டும் என்றா கேட்கிறாய்! உனக்குக் கொஞ்சம் பண்பாடு வேண்டும். தேடி வந்தவனைப் பார்த்தும் பார்க்காததுபோல் போகும் உன்னுடைய அகங்காரத்துக்கு ஒரு முடிவு வேண்டும்."

செந்தில் தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றிச் சலவை செய்த கைக்குட்டையால் துடைத்துக்கொண்டான். "திருடன் கூடத்தான் தேடி வருகிறான். அவனையும் வரவேற்று உபசரிக்க வேண்டுமோ?"

சுருக்கென்று தைத்தது அந்த வார்த்தை கோவிந்தனின் உள்ளத்தில். கைப் பெட்டி களவு போனதைத்தான் செந்தில் குறிப்பிடுகிறான் என்பது அவனுக்குப் புரியாமல் இல்லை. பாப்பாவுடன் தப்பியோடியவன் அவன்தான் என்று அவர்கள் அடையாளம் கண்டுகொண்டிருப்பார்களோ? கோவிந்தன் பற்களைக் கடித்தான். காசுக்காக எதையும் செய்யத் தயாராய் இருக்கும் இந்தச் செந்திலுக்குத் தன்னைத் திருடனென்று அழைக்கத் தகுதி ஏது?

"திருடனின் சொத்தைக் களவாடுபவன்

திருடனாகமாட்டான்,'' என்றான காட்டமாக. ''விஷப் பாம்பை அடிப்பவன் பாவியாகமாட்டான். மனித வேட்டையாடும் புலியைக் கொல்பவன் கொலைகாரனாகமாட்டான்.''

செந்தில் தாமோதரத்தின் பக்கம் திரும்பினான். ''ஏனய்யா, கூத்தனூர் மண்ணுக்கு ஏதும் சிறப்பு உண்டோ!'' என்றான் பரிகாசம் தொனிக்க. ''அரைகுறைப் படிப்பாளிகள்கூட இங்கே வந்ததும் கவிஞர்களாக மாறிவிடுகிறார்களே!''

தாமோதரம் தலையசைத்தார். ''என்னைப் பொறுத்தவரையில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை சார்.''

''அதெப்படி ஏற்படும்!'' என்று சீறினான் கோவிந்தன். ''கொலைகாரன் நெஞ்சிலாவது ஒரு மூலையில் கொஞ்சம் நல்ல எண்ணம் ஒட்டிக்கொண்டிருக்கும். உனக்கு அதுவும் கிடையாதே! உன்னை உயிரோடு மண்ணில் புதைத்துப் பெரிதாக சமாதி கட்டி, உலகத்திலேயே ஒன்றாம் நம்பர் அயோக்கியன் என்று கொட்டை எழுத்தில் எழுதி வைக்கும்வரை நீ மாறமாட்டாய்.''

கோவிந்தனிடமிருந்து தெறித்த கோபக் கனலின் வெப்பம் தாமோதரத்தைச் சற்று நடுங்க வைத்து விட்டது. ''பார்த்தீர்களா சார், பார்த்தீர்களா! இவன் என்ன பேச்சுப் பேசுகிறான், பார்த்தீர்களா!'' என்று செந்திலிடம் விண்ணப்பித்துக்கொண்டார்.

கோவிந்தன் விடவில்லை. ''ஏனய்யா, தம்படிதட்டி தாமோதரம்! அவன் என்ன மகா யோக்கியன் என்று அவனிடத்தில் அப்பீல் போடுகிறாய்? அவனையும் சேர்த்து, உங்கள் இரண்டு பேருக்குமே எச்சரிக்கைகொடுத்துவிட்டுப்போகலாம் என்றுதான் வந்தேன். தெரியுமா!''

செந்தில் தன் போக்கைத் திடீரென்று மாற்றிக்கொண்டான். ''நினைத்துப்பார்.'' என்றான் தாழ்ந்த குரலில். ''நீயும் நானும் அண்ணன் தம்பிகள். நம் இருவர் உடலிலும் ஒரே ரத்தம் ஓடுகிறது. ரத்தினம் யாரோ மூன்றாவது மனிதர். அவருக்கு எதற்காக நம் சொத்தில் பங்கு கொடுக்க வேண்டும்! சொல்வதைக் கேள்.'' குரலில் குழைவை வரவழைத்துக் கொண்டான். ''இதுவரைக்கும் அண்ணாவால் நீ அடைந்த லாபம் என்ன? கைச் செலவுக்கு மாதம் ஐம்பது ரூபாய் கூடத் தரமாட்டார், கஞ்சப் பிரபு! இனி நமக்குப் புது வாழ்க்கை தொடங்குகிறது. மாதம் ஐந்நூறு ரூபாய் உன் செலவுக்கென்று எடுத்துக்கொள். சின்னக் காராக ஒன்று வாங்கி வைத்துக்கொண்டு உன் இஷ்டம் போல் சந்தோஷமாக இரு. பாப்பாவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமா! எங்களுக்கு ஆட்சேபமில்லை. தாமோதரம், உனக்கு ஏதாவது தடை உண்டா?''

செந்திலுடைய பார்வையின் பொருளைப் புரிந்துகொண்ட தாமோதரம், ''எனக்கா! ஆட்சேபமா? நன்றாகச் சொன்னீர்கள்!'' என்றார்.

''அதுதானே கேட்டேன்,'' என்று ஆமோதித்த செந்தில், கோவிந்தனிடம் தொடர்ந்தான். ''நமது குடும்பத்திற்கு இனிமேல் நீதான் தலைவன். சின்னவன் என்ற முறையில் நான் உன் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு நடக்கத் தயாராக இருக்கிறேன். போ, அந்தக் கைப் பெட்டியை எடுத்துக்கொண்டு ரத்தினத்தையும் அழைத்துக்கொண்டு வா. வேலையை முடித்துக் கொண்டு இன்று சாயந்தரமே சென்னைக்குப் புறப்பட்டு விடலாம். என்ன!''

''எல்லாவற்றையும் சொல்லி ஆகி விட்டதா!'' நமுட்டுச் சிரிப்புச் சிரித்தபடி கோவிந்தன் போட்ட கேள்வி செந்திலைக் கேலி பண்ணுவதுபோல் இருந்தது.

''ஏன்!''

''இல்லை, ஏதாவது பாக்கி இருக்கிறதா என்று கேட்டேன்.''

செந்தில் புருவங்களை நெறித்தான். ''நீ கேட்பதொன்றும் எனக்கு விளங்கவில்லையே!''

''தம்பியப்பா செந்தில்நாதா!'' என்றான் கோவிந்தன், மற்றவனது தோளைத் தட்டிக் கொடுத்துக்கொண்டு. ''நான் முட்டாளாக இருக்கலாம். ஆனால் நீ நினைப்பதுபோல் அவ்வளவு பெரிய முட்டாள் இல்லை.''

செந்திலின் முகத்தில் ஈயாடவில்லை.

வாசலை அடைந்த கோவிந்தன் நின்றான். ''நீங்கள் இரண்டு காரியத்தை உத்தேசித்து வந்திருக்கிறீர்கள். அதில் எதுவும் நடைபெறப் போவதில்லை. அதற்கு நான் உத்தரவாதம்!''

மாட்டு வண்டி ஜல் ஜல் என்று கிளம்பிற்று.

செந்திலும் தாமோதரமும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.




## சுருங்கச் சொன்னால்...

கதையின் இப்போதைய கட்டத்தில், நமது பாத்திரங்களில் கிட்டத் தட்ட அத்தனை பேரும்—பெரும்பாலோர் சென்னைவாசிகள்—கூத்தனூர் என்ற கிராமத்திற்கு வந்து குடியிருக்கிறார்கள். எல்லாம் காரியமாகத்தான்!

முதலில் வந்தவன் இருபத்தைந்து வயதுள்ள ரத்தினம். உடன் பிறந்தவர் மூவருள் இவன் முதலாமவன். தாய் தங்கம்மாள் விபத்துக்குள்ளாகிக் காலமானதும், ரத்தினம் தொழிலில் அக்கறை இழந்து, நிர்வாகத்தைக் கடைக்குட்டியிடம் ஒப்படைத்துவிட்டு கிராமத்துக்குக் கிளம்பிவிடுகிறான். அவனை மணக்கவிருக்கும் துளசி—மாமா பெண்—அவனுடன் இருக்கிறாள்.

அடுத்தாற்போல் முகாம் போடுபவன் கோவிந்தன். ரத்தினத்துக்கு நேர் இளையவன் இவன். விளையாட்டு புத்திக்காரன். காதலி பாப்பாவை அவள் தந்தை தாமோதரத்திடமிருந்தும், அவள் உடலை வாங்க முயலும் கனகசபை என்ற பணக்காரரிடமிருந்தும் காப்பாற்றி உடன் அழைத்து வருகிறான் கோவிந்தன்.

கடைசித் தம்பி செந்தில் கடைசியாக வருகிறான். இவன் கெட்டிக்காரன். ஆனால் சுயநலம் பிடித்தவன். தாமோதரத்தின் துணையுடன் விஜயம் செய்யும் செந்திலுக்கு இரண்டு நோக்கம் உண்டு. பாப்பாவைக் கைப்பற்றி, அவளைக் கனகசபையிடம் ஒப்படைத்து, அவசரமாகத் தேவைப்படும் இரண்டு லட்ச ரூபாயை அவனிடமிருந்து கடனாகப் பெறுவது முதல் நோக்கம்.

இரண்டாவது நோக்கம் தாமோதரம் வெளியிட்ட ரகசியத்தைக் கொண்டு, குடும்பச் சொத்தில் தனக்குப் பங்கில்லை என்று ரத்தினத்திடமிருந்து அவன் கைப்பட எழுதி வாங்கிக்கொள்வது. ரத்தினம் தாமோதரத்துக்கு எழுதிய கடிதம் ஒன்று சட்டபூர்வமான சாட்சியமாக அமைகிறது.

அந்தக் கடிதம், தாமோதரத்தைப்பற்றிக் கோவிந்தன் சொன்ன புகார்களைக் கேட்டதும் மனம் நொந்த ரத்தினத்தால் எழுதப்பட்டது. அதில் தன் வரலாற்றை அவன் தற்செயலாக விவரித்திருந்தான். தங்கம்மாள் அவனது வளர்ப்புத் தாய்தான் என்பதையும், லட்சுமி என்ற அவள் சிநேகிதி—தாமோதரத்தின் மனைவி—மரணப் படுக்கையில் தன் குழந்தையான ரத்தினத்தைத் தங்கம்மாளிடம் ஒப்படைத்தாள் என்பதையும் அவன் குறிப்பிட்டிருந்தான்.

(பாப்பாவும், அவளது பல தம்பி தங்கைகளும், தாமோதரத்தின் இரண்டாவது மனைவியான மங்களத்துக்குப் பிறந்தவர்கள்.)

செந்திலும் தாமோதரமும், கூத்தனூர் மிராசுதார் கனகசபையின் மாளிகையில் தங்கியிருக்கிறார்கள். ரத்தினம் முதலியோருக்கு, ஒன்றரை மைலுக்கப்பாலுள்ள ஓட்டுப் பங்களாவில் ஜாகை.

இரண்டாம் பேர் அறியாமல் கூத்தனூர் வந்த கனகசபை, கோவிந்தனிடம் சமரசம் செய்துகொண்டு, செந்திலின் திட்டத்தை வெளியிடுகிறான்.

அண்ணனிடம் அளவற்ற பாசமுடைய கோவிந்தன், செந்தில்மீது ஆத்திரமுற்று, பாப்பாவின் உதவியுடன் செந்திலின் கைப்பெட்டியைக் கைப்பற்றிவிடுகிறான். அதில் ரத்தினத்தின் கடிதமும், ரத்தினத்தின் கையெழுத்துக்காகக் காத்திருக்கும் விடுதலைப் பத்திரமும் இருக்கின்றன.

மறுநாள், செந்திலின் வருகை அறிந்து அவனைச் சந்திக்க ரத்தினம் ஆவல் கொள்கிறான். தம்பியைக் கூட்டிவருவதாகச் சொல்லிப் போகும் கோவிந்தன், செந்திலுடன் மோதி, அவன் திட்டம் எதுவும் பலிக்காது என்று எச்சரித்துவிட்டுத் திரும்புகிறான்.

## இருபத்தைந்து

தனது நீண்ட நாவில் புறங்கையைத் தேய்த்து அதில் ஒட்டிக்கொண்டிருந்த ஓரிரு பருக்கைகளையும், விரல்களிடையே வழிந்த தயிர்த் துளிகளையும் சுவைத்து விழுங்கிய தாமோதரத்தின் அடி வயிற்றிலிருந்து நிறைவின் அறிகுறியாக உறுமல் போன்ற ஓர் ஓசை வெளிப்பட்டது.

மேஜையின் மறுபுறம் உட்கார்ந்திருந்த செந்தில் அவரை எரித்து விடுபவன் போல் நோக்கினான். அவனது இலையில் பரிமாறப்பட்டிருந்த கறி வகைகள் வைத்தது வைத்தபடியே இருந்தன. கோழி கிளறினாற்போல் சாதத்தை இப்படியும் அப்படியுமாக ஒதுக்கியவன், பொறுமை இழந்தவனாய்க் கைக் கடியாரத்தை மற்றுமொரு முறை பார்த்துக்கொண்டான்.

"என்னய்யா அது, அதற்குள்ளே தூர்ந்து விட்டாய்? கால் படிகூடத் தின்றிருக்க மாட்டாய் போலிருக்கிறதே! இன்னும்கொஞ்சம் கொட்டச் சொல்லட்டுமா?" என்று அவன் இடித்துக் காட்டியது தாமோதரத்துக்குப் புரியாமல் இல்லை. ஆனால் உணவு தந்த மகிழ்ச்சியில், அவரது உள்ளத்தைத் தைக்கவில்லை, அவன் எய்த கடு சொற்கள்.

"மணியான அரிசி!", என்றார் அசட்டுச் சிரிப்புடன். "இந்த மாதிரி நம் பக்கத்தில் எங்கே கிடைக்கிறது? அப்படியே கன்னால் போட்டுக் குலுக்கிக் கொள்ளலாம் போலில்லையா?"

கை கழுவிவிட்டுச் சோபாவில் வந்து உட்கார்ந்த செந்திலின் கண்கள் மறுபடியும் ஒரு தடவை கைக்கடியாரத்தோடு உறவாடின.

வெற்றிலையைக் குதப்பிக்கொண்டு, வாயின் இரு விளிம்புகளிலும் ஈரம் சிவப்பாகக் கசிய, முகத்தைத் தூக்கியபடி, "கொழுந்தாக இருக்கிறது சார் போட்டுக் கொள்ளுங்கள்," என்று வெள்ளி வெற்றிலைத் தட்டை அவன் பக்கம் தள்ளினார் தாமோதரம்.

"போனவனை இன்னும் காணோமே!" என்று செந்தில் கவலைப்பட்டான்.

அருகிலிருந்த பெரிய படிக்கத்தில் உமிழ்ந்த தாமோதரம், "இப்போது தானே போனான்? வந்துவிடுவான்," என்றார் சமாதானமாக. உண்ட மயக்கத்தில் அவர் கண்கள் செருகின. சற்று நேரம் ஓய்வுபெற உடலை எங்கே கிடத்தலாம் என்று அவர் கண்கள் நோட்டமிட்டன.





மங்கலான ஒளி பரவிய அந்தக் குளுமையான ஹாலில், இருபுறமும் இருந்த யானைத் தந்தங்களுக்கு இடையில் குறுக்கும் நெடுக்குமாக உலவிக் கொண்டிருந்த செந்திலின் கால்கள் சட்டென்று நின்றன. வாசற்புறம் நோக்கியபடி, "அதோ!" என்றான்.

"வந்துவிட்டானு!" தாமோதரமும் எழுந்தார், வந்தவனிடம் கேட்டார் "ஏண்டா, பார்த்தாயா அவரை? என்ன சொல்றார்?"

இடுப்பில் இழுத்துக் கட்டிய வேட்டியும் தலையில்

முண்டாசுமாகக் காட்சியளித்த அந்த ஆளின் கரிய உடல் வியர்வையால் மின்னிற்று.

காதுக்குப் பின்னால் சொறிந்தபடி வாய் பேசாது தலை குனிந்து நின்ற அவன் தோற்றம் தாமோதரத்தை அதட்டத் தூண்டிற்று.

''ஏண்டா மரமாட்டம் நிற்கிறாய்! சொல்லித் தொலையேன்.''

''அதை ஏன் கேட்கறீங்க, எசமான்?'' என்றான் பட்டிக்காட்டான். ''நான் தப்பிச்சதே தம்பிரான் புண்ணியமுங்க.''

செந்தில் குறுக்கிட்டான் ''ஏன், ஏன்? என்ன நடந்தது?''

''அவர் என்னங்க, கெட்ட கோவக்காரரா இருப்பார் போலிருக்குது. இன்னொரு தரம் உன்னை இங்கு பார்த்தால் டாப் எகிறிப் போயிடும்னு பயமுறுத்தி, மாதிரிக்கு கன்னத்தில அறை ஒண்ணு வச்சார் பாருங்க. பல்லெல்லாம் கலகலத்துப் போச்சு.'' அவன் ஒரு கூழைக் கும்பிடு போட்டான். ''சாமி, என்னை விட்டுடுங்க. நான் பிள்ளை குட்டிக்காரன்.''

தாமோதரத்துக்குச் சந்தேகம். ''யார், ரத்தினமா அடித்தான்?''

''அவரை யாருங்க பார்த்தது! பாதி வழியிலேயே—இங்கே வந்தாரே பொம்மை சொக்காக்காரர்—அவர் மடக்கிட்டாருங்களே என்னை!''

''அட சட்!'' செந்தில் உதட்டை மென்றான்.

''போடா சோப்ளாங்கி!'' என்று தீர்ப்பளித்தார் தாமோதரம்.

''சல்லிசாச் சொல்லிப்பிட்டீங்க எசமான்,'' என்று ஆட்சேபித்தான் முண்டாசுக்காரன். ''மனுசன் புலிக் கணக்காப் பாயறாருங்க. ஒட்டுப் பங்களா கூப்பிடு தொலைவிலே இருக்கறப்பவே இப்படீன்னா, அந்த ரத்தினம் ஐயாவைக் கண்டு பேசிட்டா என்னதான் பண்ணுவாரோ? நீங்க வேணுமின்னா ஒருதரம் அப்படி வந்து பாருங்களேன் சாமி.''

''அதற்குச் சொல்லவில்லையடா,'' என்று பின்வாங்கினார் தாமோதரம்.

''ஆமாம் தாமோதரம், அவன் சொல்வதுதான் சரி,'' என்றான் செந்தில். அவன் குரலில் உறுதி தொனித்தது. ''நீ போனால்தான் காரியம் நடக்கும்.''

''நானா?'' அவர் மிடறு விழுங்கும் ஓசை தெளிவாகக் கேட்டது.

முண்டாசை அவிழ்த்து, வியர்வையைத் துடைத்துக்கொண்ட ஆளுக்குக் கட்டளையிட்டான் செந்தில். ''நீ போகலாம்.''

வேலைக்காரன் மறையும்வரை அவன் முதுகையே பார்த்துக்கொண்டு நின்ற செந்தில், ''தாமோதரம், இப்படி வா, சொல்லுகிறேன்,'' என்று உத்தரவிட்டபடி மாடியை நோக்கி நடந்தான்.

''இதோ,'' என்றார் தாமோதரம், தட்டிலிருந்த வெற்றிலையில் ஒரு கற்றையையும், ஒரு கை பாக்கையும் அள்ளி ஜிப்பா பையில் திணித்தவாறு.

அறைக்குள் நுழைந்ததும் கதவைச் சாத்தினான் செந்தில்.

''அப்படி உட்கார்.''

எதிர் எதிராகப் போடப்பட்டிருந்த கட்டில்களில் இருவரும் அமர்ந்தனர். ''ஒன்று கேட்கிறேன்,'' என்று ஆரம்பித்தான் செந்தில். ''கோவிந்தனைக் கண்டு நீ எதற்காகப் பயப்படவேண்டும்?''

''அதுதானே? நான் எதற்காகப் பயப்படவேண்டும்?'' என்றார் தாமோதரம், தன்னைத் தானே கேள்வி கேட்டுக்கொள்வதன் மூலம் தன்னம்பிக்கையை வலுப்படுத்திக்கொண்டவராய்.

செந்தில் தொடர்ந்தான்: ''கை காலை ஒடித்துவிடுவான் என்று நினைக்கிறாயா!''

''ஊஹூம்.''

''அல்லது தலையை வாங்கிவிடுவான் என்று அச்சமா?''

''நீங்கள் ஒன்று!'' என்று எகத்தாளமாகச் சிரித்தார் தாமோதரம்.

''அப்படியானால் அவனைக் காண நீ எதற்காக நடுங்குகிறாய்?''

''நன்றாகச் சொன்னீர்கள்! அந்தச் சண்டைக்காரப் பயலைக் கண்டு நான் நடுங்குவதாவது?'' அவரது கண்களில் ஒளி வீசின. ''எங்கள் பேட்டையிலிருக்கும் ஆணைப்பட்ட கேடிகள் எல்லாம் இந்தத் தாமோதரத்தைக் கண்டால் சலாம் வைப்பார்கள். இவன் எம்மாத்திரம்? நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.''

செந்தில் ஊக்கினான். ''அப்படியானால் உடனே புறப்படு.''

தாமோதரம் பதில் பேசாமல் எழுந்து குளியல் அறைக்குச் சென்று வாய் கொப்புளித்துவிட்டு வந்தார். ''ஒரு விஷயம்...''

''என்ன அது?'' என்றான் செந்தில், கால்மேல் கால் போட்டுக்கொண்டு.

தாமோதரம் இழுத்தார். ''நீங்கள் தப்பாக எடுத்துக்கொள்ளவில்லை என்றால்...''

''சரிதான் சொல்லு.''

தாமோதரம் கனைத்துக்கொண்டார். ''எனக்கென்னவோ கோவிந்தனைப் பற்றி நீங்கள் தான் கொஞ்சம்...கொஞ்சம்...யோசிப்பதுபோல் படுகிறது.''

அவன் முகம் சுளிப்பான் என்று அவர் எதிர்பார்த்தார். மாறாகச் செந்தில் புன்னகை செய்தான். ''வெளிப்படையாகத்தான் சொல்லேன். தட்டை என் மேல் திருப்பிவிட்டாய், இல்லையா!''

எப்போதும் கடுகடுப்புடனேயே காட்சியளிக்கும் செந்திலின் முகத்தில் பூத்த அபூர்வ புன்னகையைப் பார்க்கும்போது தாமோதரத்துக்கு என்னவோ போலிருந்தது.

''தப்பாக நினைத்துக் கொள்ளக் கூடாது,'' என்றார் மறுபடியும்.

முழங்காலைக் கைகளால் கட்டிக் கொண்ட செந்தில், ''நீ என்ன நினைக்கிறாய் சொல்லட்டுமா!'' என்றான்.

''சொல்லுங்கள்.''

''நாம் கனகசபையின் வீட்டில் உட்கார்ந்து கொண்டு ஏன் காலத்தை ஓட்டிக் கொண்டிருக்கிறோம் என்று உனக்குத் தோன்றுகிறது. நேரே நமது பங்களாவில் இறங்கி, ரத்தினத்தைக் கண்டு பேசி, உடனடியாக வேலையை முடித்துக் கொண்டால் என்ன என்று நினைக்கிறாய், இல்லையா!''

''உண்மை'' உண்மை!'' என்று உற்சாகத்துடன் ஆமோதித்தார் தாமோதரம். ''நாம் எதற்காகக் காலையில் அவனுக்கு ஆள் அனுப்பிவிட்டு வாசலைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்? அப்புறம் கோவிந்தன் வந்து இறங்கியதும், அவனுக்குப் பதில் இவன் வந்து தொலைந்தானே என்று கையைப் பிசையவேண்டும்? பிறகு அவன் பின்னோடே மற்றொரு ஆளைப் பிடித்து ரத்தினத்துக்குத் தூதாக அனுப்பிவிட்டுக் காத்துக் கொண்டிருக்கவேண்டும்! இரண்டு பேருமாக ஜாம் ஜாமென்று போவோம். காயோ, பழமோ, இரண்டில் ஒன்றைப் பார்த்து விட்டு மேளதாளத்துடன் திரும்பி விடுவோம்.''

''எனக்கும் உனக்கும் அதுதான் வித்தியாசம்.'' உறுதியால் மற்றவனது குரல் உயர்ந்தது ''செந்தில் ஒரு காரியத்தில் இறங்கினால் அது பழமாகப் பழுத்துத்தான் ஆகவேண்டும், காயா பழமா என்ற கேள்விக்கே இடமில்லை. அது தானாகப் பழுக்கவில்லை என்றால் அதற்குப் புகை மூட்டியாவது பழுக்க வைத்துவிடுவேன்.''

''சரியான கொள்கை,'' என்று தலையாட்டினார் தாமோதரம். ''என்ன வந்தாலும் சரி, எடுத்த காரியத்தை எப்படியும் முடித்துவிட வேண்டும். முன் வைத்த காலைப் பின் வைக்காமல் முன்னேற வேண்டும். அதுதான் வெற்றி ரகசியம்.''

''வெற்றி ரகசியம் அல்ல அது! வடிகட்டின அசட்டுத்தனம்.''

தாமோதரம் விழித்தார். செந்திலின் சொற்கள் அவரைக் குழப்பின. முன்னுக்கும் போக விடமாட்டான், பின்னுக்கும் போகவிடமாட்டான் போலிருக்கிறதே.

அவரது நிலையைச் செந்தில் ஊகித்து விட்டான். திகைத்துப் போய் உட்கார்ந்திருக்கும் அவர் தோற்றத்தைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு வேடிக்கையாக இருந்தது போலும்.

''துணிச்சல் வெற்றிக்கு அவசியம் தான். ஆனால் கண்ணை மூடிக்கொண்டு ஆபத்திலிறங்குவது துணிச்சலாகாது.



## மூடமதே!

''ஆணிப் படுக்கையில் உட்கார்ந்து கொண்டு சுவாமிகள் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறதே அரை மணியாய்? ''

''ஒன்றுமில்லை. எங்கோ ஒரு மூட்டைப்பூச்சி இருந்து கொண்டு பெரிய அவஸ்தை கொடுக்கிறது.''

பாய்வது ஒருவகைத் துணிச்சல் என்றால் பதுங்குவதும் ஒருவகைத் துணிச்சல்தான். அவசியம் ஏற்படும் போது புறமுதுகு காட்டி ஓடுவதும் துணிச்சல்தான். வண்டி வண்டியாகப் புகழ் சம்பாதித்துக்கொண்டு காரியத்தைக் கோட்டை விடுவதைக் காட்டிலும் கெட்ட பெயர் எடுத்தாலும் காரியத்தில் வெற்றி காண்பது மேல்.''

தாமோதரம் ஒப்புக்கொண்டார். ''வாஸ்தவம்தான்.''

''கோவிந்தன் அந்தக் கடிதத்தைக் கிழித்துப் போடட்டும். பத்திரத்தைத் தீ வைத்துக் கொளுத்தட்டும். பரவாயில்லை. அரை மணி நேரம் அந்த ரத்தினத்திடம் பேசமட்டும் எனக்கு வாய்ப்புக் கிடைக்கச் செய்; நான் சொல்கிறபடியெல்லாம் அவரை ஆட வைக்கிறேனா இல்லையா பார். ஆனால் ஒரு நிபந்தனை.''

அது என்னவாக இருக்கும் என்று ஊகிக்கத் தாமோதரம் முயன்ற போதிலும் முயற்சி பலிக்கும் அளவுக்கு அவர் மூளை கூர்மையாக இல்லை.

செந்தில் விளக்கினான். ''எனக்கு வேண்டியதெல்லாம் என்ன! வேறொன்றும் இல்லை. அமைதியான சூழ்நிலை, தனிமையான இடம். அவ்வளவே. நான் அவருடன் வார்த்தையாடும் பொழுது, கோவிந்தன் குறுக்கிட்டுக்கொண்டே இருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். என்றால் தொடர்ந்து பேசவும் முடியாது. அதை முழுமனத்துடன் கவனிக்க ரத்தினத்துக்குச் சந்தர்ப்பமும் இருக்காது.''

தாமோதரம் செந்திலின் வாயையே பார்த்துக்கொண்டிருந்தார்.

அவன் தொடர்ந்தான் : ''ரத்தினத்தின் குணம் எனக்குக் குருட்டுப் பாடம். அவரது உள்ளத்தை எப்படித் தொடுவது என்பது எனக்குத் தெரியும். அவர் முக பாவத்தில் ஒரு கண் வைத்தபடியே நான் பேசுவேன். நான் சொல்லிக்கொண்டே வரும்போது ஏதோ ஓர் இடத்தில் அவருக்குச் சந்தேகம் தட்டுகிறது என்று வைத்துக் கொள்வோம். அவர் சந்தேகத்தை வெளிப்படையாகக் கேட்குமுன் நான் முன்கூட்டியே அதற்குப் பதில் கொடுத்து முளை விடுமுன்னரே அதைக் கிள்ளி எறிந்துவிடுவேன்.''

தன் சாமர்த்தியத்தைப் பற்றிய விளக்கத்தில் செந்தில் ஆழ்ந்துவிட்டான். ''இடையே கோவிந்தன் புகுந்து குட்டையைக் குழப்புகிறான் என்று வைத்துக் கொள்ளலாம். அவனுடைய கேள்விகளுக்கு ஈடுகட்டுவதில் நான் முனைந்தால் நானும் அவனும் கட்சிக்காரர்களாகச் சச்சரவிட, ரத்தினம் மூன்றும் மனிதராக மாறி, என் பிடியிலிருந்து தப்பிவிடுவார். கோவிந்தன் எனக்கு எரிச்சல் மூட்டிவிட்டானோ அத்தனையும் குட்டிச் சுவர் தான். எரிச்சல் உண்டாகும்போது நமக்கு விரோதமான வாதங்களைக்கூட நாம் ஆர்வத்துடனும் அலட்சியத்துடனும் கையாள ஆரம்பித்து விடுவோம். அல்லது எங்கள் மோதலைக் கண்டு ரத்தினம் மனம் நொந்து பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று ஒத்திப் போட்டாலும் போட்டுவிடுவார்.''

''இப்போது விளங்குகிறது!'' என்றார் தாமோதரம். ''ஒரு மனிதனைச் சாய்க்க வேண்டுமென்றால், சுயமாகச் சிந்திக்கும் சக்தியை அவனிடமிருந்து பறித்துவிட வேண்டும். இல்லையா?''

செந்தில் துணுக்குற்றான். அவன் முகம் திடீரென்று மாறிற்று. இது வரை தாமோதரத்தைச் சற்றுத் தொலைவிலேயே நிற்கவைத்து, தன் பெயரை எடுத்தாலே கிலி ஏற்படும் வகையில் நடந்து வந்தவன், வழக்கத்திற்கு விரோதமாக அவரை அருகில் அழைத்து, அந்தரங்கத்தையெல்லாம் திறந்து காட்டிவிட்டானே!

அவசியமானது என்ற கருத்துடன் ஆரம்பிக்கப்பட்ட ஒரு விளக்கம், தற்பெருமையாக மாறி, தாமோதரத்துக்கே ஓர் எச்சரிக்கையாக முடிந்துவிட்டதை நினைத்துச் செந்தில் புழுங்கினான். அந்தப் புழுக்கம் தாமோதரத்தின் மேல் ஆத்திரமாக உருவெடுத்தது.

ஒ நகணித்தாற்போல் தலையைக் கையில் தாங்கியபடி கட்டிலில் படுத்திருந்தவரை முறைத்துப் பார்த்து உறுமினான்.

''என்ன தாமோதரம், ஜம்பமாகக் காலை நீட்டிப் பள்ளி கொண்டுவிட்டாய்? எழுந்திரய்யா! ஓடிப் போய் அந்த ரத்தினத்தைக் கையோடு கூட்டி வா, சொல்கிறேன்.''

ஒரு விநாடி கல்லாய்ச் சமைந்து போய்க் கிடந்த தாமோதரம் துள்ளி எழுந்தார். மேல் துண்டைத் தேடி

எடுத்து, கலைந்து போயிருந்த தலையை அவர் வாரிக் கொள்வதற்குள், ''தாமோதரம், இன்னும் போகவில்லை நீ!'' என்று ஓர் அதட்டல் போட்டான் செந்தில்.

தாமோதரம் பறந்தார்.

ஏரிக் கரை மீது நடந்து கொண்டிருந்தான் கோவிந்தன்.

அவனது வலது கை அடிக்கொரு தரம் காற்சட்டைப் பைக்குள் புகுந்து அங்கு சேமித்து வைக்கப்பட்டிருந்த வேர்க்கடலைகளை அள்ளிக்கொண்டு வெளியேறி, பற்கள் அரைக்க அரைக்க ஒவ்வொரு கடலையாக வாய்க்குள் எறிந்து கொண்டிருந்தது. நெய்யிலே வறுத்து மிளகாய்ப் பொடியில் புரட்டி எடுக்கப்பட்டிருந்த கடலைகளை மென்று கொண்டே சென்றவன் யோசனையில் ஆழ்ந்தான். அவனது கால்களின் வேகம் தானாகவே குறைந்தது. தன்னை அறியாமலே ஒரு மரத்தடியில் நின்றவன் ஏரியையும் சுற்றுப் புறத்திலிருந்த வயல்களையும் நோக்கியபடி தரையில் உட்கார்ந்தான்.

அவனுக்குச் சென்னையின் ஞாபகம் வந்துவிட்டது. இந்நேரம் அவன் சென்னையில் இருந்தால்...? கற்பனை ஓடிற்று. பாப்பாவைப் பின்னால் வைத்துக் கொண்டு ஜாலியாக ஸ்கூட்டரில் சக்கர் அடிக்கலாம். அல்லது எங்காவது சோடா பவுண்டனில் பீச் மெல்பா சாப்பிடலாம். கடற்கரையில் உப்பங் காற்றுக்காகவும் குளுமையான மெர்க்குரி விளக்குக்காகவும் பூக்கடையின் இரைச்சலுக்காகவும் நெரிசலுக்காகவும் அவன் ஏங்கினான். கிராமத்தின் அமைதியும் ஏரிக்கரையின் தனிமையும் அவனது ரசிகத் தன்மையைக் கவரவில்லை.

கடைசிக் கடலையைக் கொறிக்கப் போன கோவிந்தனுடைய கவனத்தை ஈர்த்தது அவன் எதிரில் வந்து உட்கார்ந்து பங்கு கேட்ட காக்கை. அடித் தொண்டையில் அது உரக்கக் கரையும்போதெல்லாம் அதன் வால் மடிந்து நிமிர்வதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவன் அலுப்புற்று, ''சீ போ!'' என்று விரட்டியபடி கடலையை அதன் மீது வீசினான்.

ஆட்சேபம் தெரிவித்த காக்கை மேலெழும்பி மரக்கிளையில் உட்கார்ந்தது. காற்சட்டையிலிருந்த மண்ணைத் தட்டி விட்டபடி நிமிர்ந்த கோவிந்தன் கொத்துக் கொத்தாகத் தொங்கும் மாங்காய்களைக் கண்டான்.

ஆட்சேபக் குரல் எழுப்பியபடியே அந்தக் காக்கை மேலெழுந்து மரக் கிளையில் உட்கார்ந்தது. அவன் அண்ணாந்து நோக்கினான். நாவில் நீர் ஊறச் செய்தன, கொத்துக் கொத்தாகத் தொங்கிய கிளி மூக்கு மாங்காய்கள்.

கீழே குனிந்து, கல் ஒன்றைப் பொறுக்கிக் கொண்டு அண்ணாந்து பார்த்தபடி பாதி மரத்தைச் சுற்றியவன், குறி வைத்து எய்தான். அடர்ந்த மரத்துக்குள் சரக்கென்று ஓசையிட்டுப் பாய்ந்ததைத் தவிர, கல்லால் ஒரு மாங்காயைக்கூட வீழ்த்த முடியவில்லை. காக்கை பறந்து சென்றதே மிச்சம்.

அதே சமயம், ''ஸ் ஸ் ஸ்...ஆ!'' என்ற வலி தாளாத குரலும். உச்சந் தலையில் கை வைத்தவாறு முகத்தைச் சுளிக்கும் பாப்பாவின் தோற்றமும் அவனைத் திடுக்கிடச் செய்தன.



**தொகையரு**

கலையுலகில் இருபதாண்டுகள் பற்பல வேடம் தாங்கிப் பல்லோரைப் பிரமிக்க வைத்தவன் சார். இப்போது கலையுலகிலிருந்து விலகத் தீர்மானித்து விட்டேன். ஆனால் பாருங்கள், இந்தக் கிராப்பைக் குறைத்துச் சாதாரண கிராப்பாகச் செய்ய இரண்டு ரூபாய் கேட்கிறார்கள். தாங்கள் அந்தத் தொகையைக் கொடுத்து உதவினால்...ஹி ஹி......

"பாப்பா! கல் உன் தலையிலா விழுந்தது! ஐயையோ!" என்று பதறினன் கோவிந்தன்.

பாப்பா கலகலவென்று நகைத்து விட்டுக் கையை எடுத்தாள். மண்டை புடைக்கவில்லை, கையில் ரத்தமுமில்லை.

"விழுந்திருந்தால் எப்படிக் கூச்சல் போட்டிருப்பேன் என்று உங்களுக்கு நடித்துக் காட்டினேன். அவ்வளவு தான்!" என்ருள் அவள். "ஆமாம். கல் எடுத்து எறிவது உங்கள் விஷயத் தில் ஒரு வியாதியாகவே போய்விட் டாற் போலிருக்கிறதே? உம்!"

"ஆமாம், நான் கையில் கல்லை எடுக் கும்போதெல்லாம் உனக்கு மூக்கில் வியர்க்குமா, என்ன?" அவன் அவளை அணைத்தபடி மரத்தடிக்கு நடந்தான்.

"'ஆசாமி ஏரிக்கரையில் மாங்காய்க் காகக் கிடந்து ஏங்குகிருர். போ' என்று எனக்குள்ளிருந்து உத்தரவு கிடைத்தது. இதோ!"

இதுகாறும் மறைத்து வைத்திருந்த வலது கையை நீட்டினாள் அவள்.

"அடே! மாங்காய் ஊறுகாய்!" வாழையிலைப் பொட்டலத்தைப் பிரித்து, சிவப்புத் திரவத்தில் மிதந்து கொண்டிருந்த இரண்டு துண்டுகளை ருசி பார்த்தான். "பிரமாதம்! பிர மாதம்! இது ஏது?"

பாப்பா உட்கார்ந்தாள். மாலை வெய் யில் அவள் முகத்தைப் பளபளக்கச் செய்தது. "மத்தியானம் தயார் பண் ணினது. வைக்க மறந்து போய் விட் டோம்."

"எங்கே, நீ ஆ காட்டு."

அவள் தன் அழகிய உதடுகளைத் திறந்தாள். அவன் ஒரு துண்டை அவள் வாய்க்குள் போட்டான்.

"இன்றைக்குச் சாப்பாடு ரொம்ப ஜோர். ஒரு பிடி பிடித்துவிட்டுப் படுத்தேன் பார், நான்கு மணிக்கு எழுந்ததுதான் தெரியும்."

"சாப்பாடு ஜோர்தான். ஆனால் அண்ணாதான் சரியாகவே சாப்பிட வில்லை. அவருக்கு உள்ளுக்குள் வருத் தம்."

அவன் மெல்லுவதை நிறுத்திவிட்டுக் கேட்டான். "ஏன்?"

"தெரியாதவர் போல் கேட்கிறீர் களே! நீங்கள் செந்திலைக் கூட்டிக் கொண்டு வரவில்லை என்றுதான்." திடீரென்று நினைவு வந்தது போல் அவள் சொன்னாள். "இன்னொரு விஷ யம். அதற்காகத்தான் முக்கியமாக வந்தேன்."

கோவிந்தன் கையைத் துடைத்துக் கொண்டான். அதே கைக்குட்டையால் அவள் வாயையும் ஒற்றி எடுத்தான். அவன் எறிந்த வாழை இலை ஏரி மீது குப்புற விழுந்து மிதந்து கொண்டிருந் தது.

"துளசி அக்காவோடு பேசிக் கொண்டிருந்தேன்."

"என்ன விஷயம்?"

"அக்கா சொன்னது. உங்கள் அம்மா செத்துப் போனார்கள் இல் லையா, அப்போதே அண்ணா ஒரு முடி வுக்கு வந்துவிட்டாராம்."

அவன் அவள் கைகளைப் பிடித்துக் கொண்டான். "சொல்லு."

"சொத்தில் தனக்குள்ள பங்கை உங்கள் இரண்டு பேருக்கும் விட்டுக் கொடுத்துவிட்டு, அவர் விலகிக்கொள் வதென்று அன்றைக்கே தீர்மானம் பண்ணிவிட்டாராம்."

காற்றிழந்த பலூன்போல் ஆயிற்று கோவிந்தனின் முகம்.

பாப்பா விளக்கினாள். "அதனால்தான் இங்கே புறப்பட்டு வந்துவிட்டாராம். இனி மெட்ராசுக்குத் திரும்புவதாக எண்ணமே இல்லையாம்."

மௌனம். பிறகு, பரிவுடனும் கவ லையுடனும் அவனைக் கவனித்துக் கொண்டே தாழ்ந்த குரலில் கேட் டாள்:

"நாம் கைப்பெட்டியை அபேஸ் பண்ணி என்ன லாபம், அவராகவே எல்லாவற்றையும் தாரை வார்க்கத் தயாராக இருக்கும்போது?"

திடீரென்று கோவிந்தன் எழுந்தான் கல்லில் செதுக்கினாற் போலிருந்தது அவன் முகம்.

"வா," என்ருன், தூரத்தில் தோப் புக்கிடையே தெரியும் ஓட்டுப் பங்களா வில் கண் வைத்தபடி, "இரு முனைப் போராட்டம் நம்முடையது. அண்ணா கொடுக்கவும் முடியாது, செந்தில் வாங் கிக் கொள்ளவும் முடியாது. அண் ணாவை அவர் நல்ல குணத்திடமிருந்து காப்பாற்ற வேண்டியது என் கடமை. பார்க்கலாம் ஒரு கை, வா."

ஓட்டுப் பங்களாவை அடைந்ததும் தான், ரத்தினம் கனகசபை வீட்டுக் குப் புறப்பட்டுப் போன செய்தி இரு வருக்கும் எட்டிற்று.

# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## இருபத்தாறு

"எனக்கும் புதுச் சொக்கா பாவாடை எடுத்துக் கொடுக்கிறாயா அண்ணி!" என்று கெஞ்சினாள் சச்சு, கிணற்றடியில் முகம் கழுவிக் கொண்டிருந்த துளசியிடம்.

சோப்பு நுரை இறங்கிவிடாத வண்ணம் கண்களை இறுக மூடிக்கொண்டு, கட்டியை வைப்பதற்குப் பிளாஸ்டிக் டப்பாவுக்காகத் துழாவிக் கொண்டிருந்த துளசியால், "ஊஹூம்," என்று மட்டுமே பதிலிறுக்க முடிந்தது.

சச்சு, வெள்ளை உடுப்பு அணிந்து கொண்டு கன்றுக்குட்டிபோல் தோட்டத்தில் துள்ளி விளையாடிக் கொண்டிருந்த தன் தம்பியைக் கசப்போடு பார்த்தாள்.

"கோலி போல நானும் மண்ணில் புரண்டுவிட்டு வந்திருந்தால் எனக்கும் புதுசு கொடுத்திருப்பாய். இல்லையா அண்ணி!"

'நல்லவர்களுக்குக் காலமில்லை' என்ற தொனியில் சச்சு பேசி முடிப்பதற்கும் அவள் முதுகில் ஓர் அறை விழுவதற்கும் சரியாக இருந்தது. "சீ பன்னாடை!" என்றாள் பாப்பா. "சோப்பு டப்பாவைக் கல்மேலே வைக்கிறாயா இல்லையா? ஐந்து நிமிஷமாக அக்கா அதைக் காணாமல் தடுமாறிக் கொண்டிருக்கிறார்களே, தெரியவில்லை? சோப்பை இப்படிக் கொடுங்கள் அக்கா."

சச்சுவின் ஓலம் துளசியைத் துரிதப் படுத்திற்று. அவசரம் அவசரமாக முகம் கழுவிக்கொண்டு, காதில் ஒட்டிக்கொண்டிருக்கும் நுரையையோ விழிகளின் விளிம்பில் உண்டாகியிருந்த ஜிவ்வென்ற எரிச்சலையோ பொருட்படுத்தாமல், "அழாதே சச்சு. சமர்த்தல்ல," என்று தேற்றியபடி உள்ளே அழைத்துச் சென்றாள்.

ஒரு கையில் மிட்டாயும் மற்றொரு கையில் ரொட்டியும் வைத்துக் கொண்டு சச்சு மறுபடியும் வெளியே வந்தபோது அவள் செய்த முதல் வேலை பாப்பாவை நோக்கி 'வவ்வவ்வே' என்று அழகு காட்டி விட்டு ஓடியதுதான்.

அடுத்த விநாடி கன்னத்தில் கண்ணீர் வழிய சங்கு ஊதியபடி கோலி நுழைந்தான்.

"சச்சுவுக்கு மட்டும் மிட்டாய் கொடுத்திருக்கிறாயே, எனக்கில்லையா!" என்ற அவனது மனுவைக் கேட்ட பாப்பா, "சச்சு, இவனுக்கு இரண்டு கொடேண்டி!" என்று உத்தரவிடுவதற்குள், தன் கையிலிருந்த மிட்டாய் ரொட்டி அத்தனையையும் டபக்கென்று வாய்க்குள் திணித்துக் கொண்ட சச்சு பேச முடியாமல் திணறியபடி கையை விரித்தாள்.

இதற்குள், "கோலி, இங்கே வாடா, நான் தருகிறேன்," என்று துளசியின் குரல் கேட்டது.

கோலி உள்ளே சென்றதும் அவன் கண்களைத் துடைத்துவிட்டாள் துளசி. அவனது சிறிய கை மிட்டாய்களால் நிறைந்தது. மலர்ந்த முகத்துடன் அவன் வெளியே வந்தபோது பாப்பா கையை நீட்டி, "டேய் கோலி, எனக்கொண்ணுடா. டேய். டேய்," என்று யாசகம் கேட்டாள்.

முதலில் ஒரு முழு மிட்டாயை வழங்கப் போனவன், தனது தீர்மானத்தை

மாற்றிக் கொண்டவனாய் வாய்க்குள்ளி லிருந்ததைக் கடித்து நொறுக்கி ஒரு சின்னஞ் சிறிய துண்டை எடுத்து, "இந்தா," என்று பெருந்தன்மை யோடு தந்துவிட்டுப் போனான்.

"என்ன தாராளமான மனசுடா உனக்கு!" என்று பாப்பா குறைப்பட்டுக் கொண்டபோது, கண்ணாடியும் எண்ணெய்ச் சீசாவுமாகச் சுற்றுத்திண்ணையில் வந்து உட்கார்ந்தாள் துளசி.

மாலை நேரத்தின் மஞ்சள் வெய்யிலில் தோட்டம் துரவெல்லாம் சிரித்துக் கொண்டிருந்தன. விட்டுவிட்டு வீசிய காற்றில் தென்னை மரங்கள் தலையைச் சுழற்ற, ஓட்டின் மீது உரசும் கீற்றுக்களின் ஓசை சல சலவென்று இனிமையாக ஒலித்தது.

"இப்படி வந்து உட்கார் பாப்பா."

"ஏன் அண்ணி?"

"உனக்குத் தலை வாரிப் பின்னிவிடுகிறேன். தினம் இந்தக் கொண்டையைத்தானே போட்டுக் கொள்கிறாய்?"

"பின்னவா?" என்று ஆட்சேபித்தாள் பாப்பா. "அது எனக்கு நல்லாவே இருக்காது அண்ணி."

"யார் சொன்னது?" என்று துளசி சவால் விட்டாள்.

"வேண்டாம் அண்ணி. உங்களுக்கு மயிர் நீளம். பின்னல் போட்டால் ஜாட்டியாட்டம் அழகாக இருக்கிறது."

"அதைவிட அழகாக உனக்குப் போட்டுவிடுகிறேன். வா இப்படி. விளக்கு வைத்த பிறகு தலை வாரிக் கொள்ளக் கூடாது என்பார்கள்."

பாப்பா எழுந்தாள். குறும்புத்தனமாகச் சிரித்தபடி, "என் மாதிரி நீங்கள் கொண்டை போட்டுக்கொள்வதானால் உங்கள் இஷ்டப்படி எனக்குப் பின்னிவிடுங்கள்."

திடுக்கிட்ட துளசி முதல் தடவையாகப் பார்ப்பவள்போல் பாப்பாவின் கொண்டையை வெறித்து நோக்கினாள். "சேச்சே!"



"என்ன சேச்சே! ஜம்மென்று இருக்கும்," என்று வாக்களித்தவள் துளசியின் எதிர்ப்பை அனாயாசமாக வென்று தன் கைவரிசையைக் காட்டுவதில் முனைந்தாள்.

அடிக்கொரு தரம் கண்ணாடியைப் பார்த்த துளசி, அலுத்துக் கொண்டாள். "த்சொ, என்ன பாப்பா. உன் அண்ணா பார்த்துச் சிரிக்கப்போகிறார்."

"ஒன்றும் சிரிக்க மாட்டார். சும்மா தலையை அசைக்காமல் இருங்கள். அவர் உங்களைப் பார்த்ததும் அப்படியே சொக்கி விழா விட்டால் என்னைக் கேளுங்கள்."

கனகசபையின் வீட்டுக்கு ரத்தினம் கிளம்பியதும் அப்புறம் கோவிந்தன் பின்தொடர்ந்ததும் துளசியின் நினைவுக்கு வரவே, "இந்நேரம் கோவிந்தனும் போய்ச் சேர்ந்திருப்பார்; அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறதோ!" என்று சொல்லிக் கொண்டாள் பாதி தனக்குள்ளேயே.

சன்னமான பெருமூச்சொன்று அவளது அடி மனத்திலிருந்து வெளிப்பட்டது.

கோவிந்தனுடைய தலையைக் கண்ட மாத்திரத்திலேயே, கனகசபை வீட்டு முகப்பில் உலவிக் கொண்டிருந்த தாமோதரத்துக்குக் கால்கள் பின்னின.



பயல் இன்னும் கொஞ்ச நேரம் கழித்து வந்திருக்கக் கூடாதா? ரத்தினம் இங்கிருக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டு, உடையெல்லாம் புழுதி படிய, ஓட்டமும் நடையுமாக ஒரு குட்டிப் புயற்காற்றுப்போல் கிழித்துக் கொண்டு நுழைகிறானே!

தைரியத்தை வரவழைத்துக் கொள்ளும் பொருட்டு ஒரு முறை கனைத்தபடி மார்பின் குறுக்கே தொங்கிய மேல் துண்டை இழுத்து விட்டுக் கொண்டவர், அவனைப் பாராதவர் போல் உலவத் தொடங்கினார். கண்கள் மட்டும் அண்மையில் துணை இருக்கிறதா என்று தேடியபடி ரகசியமாகச் சுழன்றன.

## முன் கதைச் சுருக்



பல வருடங்களுக்குப் பின் சந்தித்த சிநேகிதரை ஒருவர் கேட்டார்: "சௌக்கிய மெல்லாம் எப்படி? குழந்தைகள் எத்தனை? அப்பா—அம்மா உன்னுடன்தான் இருக்கிறார்களா? காரியாலயததில் வேலை உயர்வு ஏதாவது ஏற்பட்டதா? வீட்டிலே முன் பக்கத்து ஹாலில் ஒரு பெஞ்சி போட்டிருந்தாயே, அதிலே வலது கோடியிலே ஓர் ஆணி நீட்டிக்கொண்டிருந்ததே, அதை அடித்து விட்டாயா?"

கோவிந்தன் எவ்வளவு சீக்கிரம் போர்ட்டிகோவை அடைந்து விட்டான்!

தாமோதரம் வழி மறித்தார்.

அவனைக் காட்டிலும் அவர் உயரம் தான். ஆயினும், அவன் அவரைக் கால் முதல் தலைவரை ஏறிட்டு நோக்கியபோது அவர் நெஞ்சு படபடத்தது.

"எத்தனை நாளாக இந்த உத்தியோகம்!" என்றான் கோவிந்தன். "பழைய காவற்காரன் ராஜினமா பண்ணிவிட்டானா, என்ன?"

தாமோதரத்துக்கு உள்ளபடி கோபம் வந்துவிட்டது. சினத்தின் வெப்பம், அச்சத்தைத் துணிச்சலாக இறுகச் செய்ததில் வியப்பில்லை.

"தம்பி, நீ ரொம்ப விளையாடுகிறாய். உஷாராக இருந்துகொள். தெரியாத ஊராச்சே என்று நான் கம்மென்று இருக்கிறேன், ஆமா," என்று எச்சரித்தவர், "இங்கே உன்னை யார் கூப்பிட்டது? மரியாதையாகப் போய் விடு!" என்றார்.

"அண்ணா எங்கே!"

"ரத்தினத்தையா கேட்கிறாய்? அவனை யார் கண்டார்கள்!"

தாமோதரம் கதவைச் சாத்த முயன்றார். அதற்குள் கோவிந்தன் முந்திக் கொண்டான்.

"ஏய்! யாரங்கே! வாருங்கள், வாருங்கள்!" என்று அவர் போட்ட சப்தம், அவரை மோதித் தள்ளிவிட்டுக் கோவிந்தன் உள்ளே நுழைந்துவிட்டான் என்பதை அறிவித்தது.

"கோவிந்தா!" தடவைக்கு நான்கு படிகளாக மாடிக்கு ஏறிக்கொண்டிருந்த கோவிந்தன் நின்று நிமிர்ந்து பார்த்தான்.

ரத்தினமும், செந்திலும்.

செந்திலின் முகத்தில் படர்ந்திருந்த அந்த மலர்ச்சி! அந்த வஞ்சகப் புன்னகை!

"கோவிந்தன் ஒரு நிமிடம் பிந்தி வந்துவிட்டான். இல்லாவிட்டால் அவனுடைய அரிய யோசனைகளைக் கேட்கும் வாய்ப்புக் கிடைத்திருக்கும்," என்றான் செந்தில், குத்தலாக.

ரத்தினம், கோவிந்தனின் தோள் மீது கை போட்டவனாய், "சரியான சமயத்தில் வந்தாய்," என்று மகிழ்ந்தான். "ஒரு காரியம் பண்ணுகிறாயா? நமது வண்டியில் பங்களாவுக்குப் போய், உன்னிடத்தில் இருக்கிறதாமே பத்திரம், அதை எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறாயா?"

கோவிந்தன் ஸ்தம்பித்து நின்றான். ரத்தினம் தொடர்ந்தான். "இரவு ஒரு ரயில் இருக்கிறது. அதைப் பிடித்து விட்டால் நல்லது என்கிறான் செந்தில். நாளைக்குக் கட்டாயம் அவன் சென்னையில் இருந்தாக வேண்டுமாம். பத்திரத்தை எடுத்து வந்தாயானால், இப்போதே கையெழுத்துப் போட்டுக்

"அண்ணா!" என்றான் கோவிந்தன். அதற்குமேல் நா எழவில்லை. அவன் பயமின்றிச் சற்று நேரம் கண்ணயர்ந்ததன் விளைவா இது? கோவிந்தனுக்கு மூச்சு வாங்கிற்று. ஏரிக் கரையில் உட்கார்ந்திருக்கும்பொழுதும், சுற்றுத் திண்ணையில் படுத்திருக்கும்பொழுதும், புழுதிப் பாதையில் நடக்கும்பொழுதும் அவன் வகுத்த தற்காப்புத் திட்டங்களுக்கெல்லாம் இதுதான் முடிவா? தனிமையிலும், பாப்பாவுடன் பேசுகையிலும் அவன் மூளையை ஓய்வின்றிக் கசக்கிக் கொண்டிருந்த பிரசினைக்கு இதுதான் தீர்வா? செந்தில் எவ்வளவு சுலபமாகக் காரியத்தைச் சாதித்துக் கொண்டிருக்கிறான்!

ஆயினும் கோவிந்தனுக்கு ஒரு சிறு ஆறுதல். வெள்ளம் மடமடவென்று பெருக்கெடுத்தபோதிலும், தலைக்கு மேல் போய்விடவில்லை.

"பத்திரமா!" என்றான், ஏதும் அறியாதவன்போல. "என்ன அண்ணா சொல்கிறீர்கள், நீங்கள்? என்னிடத்தில் ஏது பத்திரம்?"

பாதி சொல்லிக்கொண்டிருக்கும் போதே அவனுக்குத் துணுக்கென்றது. அண்ணாவிடமே பொய்யா! ஆனால் உறுதிமட்டும் வலுத்தது. எப்படியோ வேறு வழியில்லாமல் பொய்யைச் சொல்லிவிட்டோம். இனிமேல் பின் வாங்கக்கூடாது.

"கோவிந்தா!" என்றான் ரத்தினம். கோபத்தையோ கண்டனத்தையோ காட்டிலும் வருத்தமும் பரிவுமே அந்தச் சொல்லில் தொனித்தன.

தலை குனிந்தவாறு கீழ்ப் படியில் கோவிந்தன் நின்றுகொண்டிருக்க, ரத்தினம் இடது பக்கம் திரும்பிச் செந்திலைப் பார்த்தான்.

'நான் அப்போதே சொன்னேனே' என்ற பாவத்துடன் இளநகை செய்துகொண்டிருந்த செந்தில், ரத்தினத்தின் பார்வைக்குத் தான் இலக்காகியிருப்பதை அறிந்தும், வேண்டுமென்றே உத்தரத்தையும் மின்சார விசிறிகளையும் ஆராய்வதில் ஈடுபட்டான்.

"கோவிந்தா, இப்படி வா," என்றான் மூத்தவன். திரும்பவும் மாடிக்கு ஏறிய அவனைப் பின்தொடர்ந்த கோவிந்தன் 'கனல் உமிழும்' பார்வையொன்றைத் தம்பிமீது வீசிவிட்டுச் சென்றான். குறி தவறாதபோதிலும் அது பயன் தராமற் போய்விட்டது என்பது, செந்தில் ஒரு கனைப்புக் கனைத்துவிட்டு அலட்சியமாகக் கீழே இறங்கிச் சென்றதிலிருந்து தெரிந்தது.

மாடியில், தோட்டத்தைப் பார்த்த ஓர் ஒதுப்புறமான இடத்தில், ஒரு சாய்வு நாற்காலியும் அதைச் சுற்றிப் பிரம்பாலான நாலைந்து ஆசனங்களும் போடப்பட்டிருந்தன.

இருவரும் அமர்ந்ததும், கவலை செறிந்த குரலில் ரத்தினம் வினவினான். "இவ்வளவு தூரம் நடந்திருக்கிறது. என்னிடத்தில் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே கோவிந்தா?"

"என்ன நடந்திருக்கிறது? எனக்கொன்றும் தெரியாது," என்றான் மற்றவன், நகத்தைக் கடித்தபடி.

ரத்தினம் தன் தம்பியின் தோள் மேல் தட்டினான். "உன் மனத்திலே என்ன இருக்கிறது என்பதை நான் அறிவேன்," என்றான் அன்போடு. "ஆனால் எண்ணம் மட்டும் தூய்மையாக இருந்துவிட்டால் போதாது. செயலும் தூய்மையாக இருக்க வேண்டும்."

கோவிந்தனால் வாளாவிருக்க முடியவில்லை. "செந்திலுடையதைப் போலவா?" என்றான் காரமாக.

"ஏன் செந்தில்மீது என்ன தப்பு?" —ரத்தினம் அமைதியாகக் கேட்டான்.

குமுறிக்கொண்டு வந்தது ஆத்திரம் கோவிந்தனுக்கு "ஆமாம், அவன்மீது என்ன தப்பு? ஒரு தப்புமில்லை. பணப் பித்துத் தலைக்கேறி, கூடப் பிறந்த அண்ணன் தம்பி தலையிலேயே மிளகாய் அரைக்கப் பார்க்கிறானே, அது தப்பில்லை. திட்டம் போட்டு, சூழ்ச்சி செய்து, தன்னைத் தவிர யாரும் சுகமாக இருக்கக்கூடாது என்று இரவு பகலாகச் சதிசெய்து வருகிறானே, அது தப்பில்லை. ஏன் அண்ணா, அப்படித்தானே?"

"பதறாதே," என்று தேற்றினான் ரத்தினம். "வார்த்தைகளைக் கொட்டிக்கொண்டே இருந்தால் வன்மம் வளர்ந்துகொண்டே போகும். என்னுடைய பிறப்பைப் பற்றிய உண்மை தெரிந்ததும், தனக்கு நியாயமாகச் சேர வேண்டிய உரிமையை அவன் கேட்கிறான். இதில் பிசகென்ன இருக்கிறது? சொல்லப்போனால், அம்மாவின் இறுதிச் சடங்குகள் முடிந்த மறுநாளே உங்கள் இருவரையும் அழைத்து உண்மையை அறிவித்து, சட்ட பூர்வமாகவும், பகிரங்கமாகவும் நான் எனது பாத்திய

தையை உங்கள் இருவருக்கும் விட்டுக் கொடுத்து வந்திருக்கவேண்டும். தவறு செய்தவன் நானிருக்க, செந்திலை நொந்துகொள்வது நேர்மையாகுமா?"

கோவிந்தனின் கண்கள் கலங்கின. இதயத்தைப் பாக்குரலில் வைத்து யாரோ நைப்பது போன்ற வேதனை உண்டாயிற்று.

"இப்படிப் பேசினால் அப்புறம் நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது அண்ணா? உங்களைப்போலவே எல்லோரும் இருப்பார்கள் என்று நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். கறுப்பெல்லாம் உங்களுக்கு வெள்ளையாகத் தெரிகிறது. புலியைப் பசு என்கிறீர்கள். ஜிப்பியை மன்மதன் என்கிறீர்கள். நம்மை ஒவ்வொருவராக ஒழித்துக்கட்டுவதே அவனுடைய திட்டம். 'அண்ணாவின் பங்கை நாம் இருவரும் பகிர்ந்துகொள்ளலாம்' என்று இன்றைக்கு எனக்கு ஆசை காட்டி உங்களிடமிருந்து பிரிக்க முயன்றவன் நாளைக்கு எனக்கே வெடி வைக்கப் போகிறான். இது நிச்சயம். சூழ்ச்சியில் ஊறிய அவனது மூளைக்கு முன் இந்த அப்பாவி கோவிந்தன் எம்மாத்திரம்? அண்ணா, செந்தில் உங்களையும் என்னையும் குழி வெட்டி இறக்கப் பார்க்கிறான் அண்ணா." அவன் குரல் தழுதழுத்தது. "இந்தக் கடைசி நிமிஷத்திலாவது விழித்துக் கொள்ளுங்கள் அண்ணா."

ரத்தினம் சிரித்தான். "செந்திலைக் காட்டிலும் உனக்குத்தான் பணப் பித்து அதிகமாய் இருக்கிறது என்று நினைக்கிறேன்."

"எனக்கா?"

"இன்னும் நிறையப் பணம் சேர மாட்டேன் என்கிறதே என்று அவன் தவிக்கிறான். எனக்குப் பணம் போய் விடப் போகிறதே என்று நீ துடிக்கிறாய். ஆக இருவருக்குமே பணம் தானே முக்கியமாக இருக்கிறது?"

சிவந்த கண்களும் நடுங்கும் உதடுகளுமாய் உட்கார்ந்திருந்த கோவிந்தன் தனது கலைந்த கேசத்தினூடே விரல்களைச் செலுத்தி மேலும் கலைத்துக்கொண்டான்.

"நான் எழுதிய கடிதத்தையோ செந்தில் கொண்டுவந்த பத்திரத்தையோ நீ தர விரும்பவில்லை என்று வைத்துக்கொள்வோம். அதனால் கொஞ்சம் தாமதம் ஏற்படலாமே தவிர, செந்திலுடைய கட்சி தோற்று விடப்போவதில்லை. உண்மையை எடுத்துச் சொல்ல என் அப்பா தாமோதரரும், ஏற்றுக்கொள்ள நானும் இருக்கும் வரை..."

அதற்குமேல் ரத்தினம் என்ன பேசினானோ கோவிந்தனுக்குத் தெரியாது. குபீரென்று உடலெல்லாம் வியர்த்துக் கொட்டிற்று. முகம் வெளுத்தது. வெறியிலே பிறந்த ஒரு சின்னஞ்சிறு யோசனை நொடிப்பொழுதில் மடமடவென்று பிரம்மாண்டமாகப் பெருத்து அவன் சிந்தையைக் கௌவி அம்மானை ஆடிற்று.

மதுவின் நெடி அறையை நிரப்பிற்று.

எஞ்சியிருந்த விஸ்கியை ஓரே மடக்கில் பருகிவிட்டுக் கண்ணாடி டம்ளரை டக்கென்று மேஜை மீது வைத்த கனகசபை, "புரிந்ததா?" என்று உறுமினான்.

கதவருகே கையைக் கட்டிக்கொண்டு பயபக்தியுடன் நின்ற அந்தக் கிருதா மீசைக்காரன் தனக்குப் பின்னால் தடிகளுடன் குழுமியிருந்த ஐவரின் சார்பாக, "புரிஞ்சுதுங்க எசமான்," என்றான். "ஓட்டுப் பங்களாவிலே ரெண்டு பொண்ணுங்க இருக்கும். அதிலே குதிரை வால் கொண்டை போட்ட பொண்ணைக் குண்டுக்கட்டாத் தூக்கிட்டு வந்துடணும்."

விக்கலைப் பொருட்படுத்தாமல் கனகசபை கடகடவென்று சிரித்தான். "அண்ணன் தம்பி மூவரும் இங்கே குடுமியைப் பிடித்துக்கொண்டு நிற்கிறார்கள். நீங்கள் போய்ச் சீக்கிரம் காரியத்தை முடித்து வாருங்கள்."

"ஆகட்டுங்க எசமான்," என்றான் கிருதாதாரி.

சிரம் தாழ்த்தி வணங்கிவிட்டு நகர்ந்தவனை, "ஏய்!" என்ற கனகசபையின் குரல் சுண்டி இழுத்தது.

"எசமான்!"

"கெட்ட *போக்கிரி அவள். ஏற்கெனவே இரண்டு தரம் நம் பிடியிலிருந்து நழுவியிருக்கிறாள். ஏமாற்றி விடப் போகிறாள். உஷார்!"

மற்றவன் பதில் பேசவில்லை. அவன் கைமட்டும் அடர்ந்த மீசையை முறுக்கி விட்டது.

சுவர்க் கடியாரம், நேரம் பறப்பதை உரக்க எச்சரிக்கவே, "அடடே! மணி ஏழாகிவிட்டதே! சீக்கிரம் போங்கள்," என்று எழுந்தான் கனகசபை.




## இருபத்தேழு

இரைச்சலுடன் பிரம்பு நாற்காலியின் கால்கள் தரையில் உரச, ஆசனத்தைத் திடீரென்று பின்னுக்கு உதைத்துவிட்டு எழுந்தான் கோவிந்தன்.

''அந்தப் பத்திரம் வேண்டும் உங்களுக்கு. அவ்வளவுதானே அண்ணா? போய் அனுப்பி வைக்கிறேன். ஜாம் ஜாமென்று உங்கள் இஷ்டப்படி எத்தனை கையெழுத்து வேண்டுமானாலும் போட்டுச் செந்திலிடம் கொடுத்து விடுங்கள்.''

ரத்தினத்தின் விழிகள் பளிச்சிட்டன. ''அதுதான் அழகு,'' என்றான், மகிழ்ச்சியோடு. ''ஆனாலும் முழு மனசோடு சிரித்தபடி சம்மதித்தாயானால் இன்னும் எவ்வளவு அழகாக இருக்கும், தெரியுமா?''

கோவிந்தனின் செவியில் அந்த வேண்டுகோள் ஏறக் காணோம். ''நான் போகிறேன்.''

அவன் வேகமாக நடந்தான்.

மூத்தவன், இனம் தெரியாத ஒருவித சந்தேகத்துக்கும் கவலைக்கும் இரையானவனாய், ''கோவிந்தா, நில்!'' என்று தம்பியை நிறுத்துவதற்குள், மடமடவென்று வராந்தாவைக் கடந்து படிக்கட்டுப்பக்கம் திரும்பிப் பார்வையிலிருந்து மறைந்துவிட்டான்.

''கோவிந்தா!''

இரண்டாவது அழைப்பு, குரல் வளைக்கும் உதடுகளுக்கும் இடையே துவண்டு விழுந்தது.

ரத்தினம் கைப்பிடிச் சுவரில் கைகளை ஊன்றிக்கொண்டு மாடியில் மௌனமாக நின்றான், தோட்டத்தில் மின்சார விளக்கு வரைந்திருக்கும் தன் நிழலைப் பார்த்தபடி.

தம்பி நடந்துகொண்ட விதத்தை நினைக்க நினைக்க ரத்தினத்துக்கு என்னவோ போலிருந்தது. அவன் ஏன் அப்படித் திடுமென எழுந்து பரக்கப் பரக்க ஓடவேண்டும்! கொஞ்சநேரமாகவே, தான் சொல்லிக் கொண்டிருந்ததை அவன் சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை என்பதை ரத்தினம் அறிவான். குழப்பத்தாலும் கோபத்தாலும் கலங்கியிருந்த கோவிந்தனின் கண்கள் உறுதியால் குறுகியதையும், விம்மிக் கொண்டிருந்த மார்பு அடங்கி மூச்சு வெகு சன்னமாக ஓடத்தொடங்கியதையும் எண்ணிப் பார்க்கையில், காரணம் காணமுடியாத அச்சம் ரத்தினத்தைக் கவ்விற்று.

அவன் நெடுமூச்செறிந்தான். தம்பியின் சம்மதத்தால் பூத்த திருப்தியும், அவன் தோல்வியால் ஊறிய பரிவும், அவன் நடத்தையால் முளைத்த திகிலும் அந்தப் பெருமூச்சில் கலந்திருந்தன.

வெற்றி விழாக் கொண்டாட்டம் போல், ஹால் வெளிச்சத்தில் மூழ்கியிருந்தது. மூலை முடுக்குகளில் ஒளிந்து கொண்டிருந்த இருள் கட்டிகளையும் நொண்டி எறிந்துவிட்ட ஒளி விரல்கள், செந்திலின் மூக்குக் கண்ணாடியைத் தடவிக் கொடுத்து அதில் வர்ண ஜாலம் செய்து கொண்டிருந்தன.

அவனருகே, வினயத்துடன் கைகளை கட்டிக்கொண்டு, எப்படிப் பேச்சைத் துவக்கலாம் என்று யோசித்தபடி நின்று கொண்டிருந்தார் தாமோதரம். அவரது தராசில் செந்திலின் எடை இப்போது இரண்டு மடங்காகப் பெருகிவிட்டது. தலைச்சனைப் பிடிக்கக் கடைச்சன் வலை வீசிக்கொண்டிருக்கும் முக்கியமான கட்டத்தில் இந்தப் பாழாய்ப் போன கோவிந்தன் தன்னையும் மீறி உள்ளே நுழைந்து விட்டானே என்று அவர் உளம் பதைத்த நேரத்தில், ''பத்திரத்தை எடுத்து வா!'' என்று கோவிந்தனை நோக்கி ரத்தினம் கூறிய சொற்கள் எப்போது

தேனொழுக்காக அவர் காதில் இறங்கிற்று. அந்த வினாடியே தான் பெரிய லட்சாதிபதியாகிவிட்ட உணர்ச்சி அவருக்கு உண்டாயிற்று.

கோவிந்தனை அழைத்துக்கொண்டு ரத்தினம் மாடிக்குச் சென்றதும் அவர் செந்திலை அணுகினார். அவனுக்கும் ரத்தினத்துக்கும் நிகழ்ந்த உரையாடலை வார்த்தை வார்த்தையாகச் செந்தில் சொல்லிக் கேட்க வேண்டுமென்று அவருக்கு ஆவலாக இருந்தது.

ஆனால் செந்திலோ, அவரை நெருங்க விடவில்லை. வெற்றிப் பெருமிதம் அவனைக் குதூகலத்தால் இளக்குவதற்குப் பதில் கர்வத்தால் இறுக்கிவிட்டது.

தடதடவென்று யாரோ இறங்கி வரும் ஒலி இருவரது கவனத்தையும் கவர்ந்தது.

கோவிந்தன் அவர்களைக் கவனியாதவன் போல் கடந்தவனாய், கேட்டை நோக்கி அடியெடுத்து வைத்தான்.

திடீரென்று நின்றான். திரும்பி, ''பத்திரத்தைக் கொடுத்துவிட வேண்டுமாம். அண்ணா ஆர்டர். நான் தரத் தயார். ஆனால் மறுபடியும் இந்த வீட்டுக்கு வர எனக்கு இஷ்டமில்லை. என்னுடன் யாராவது வாருங்கள். ஒப்படைக்கிறேன்.''

பதிலுக்குக் காத்திராமல் அவன் விரைந்தான்.



"சாமி, வண்டியைப் பூட்டட்டுங்களா?" என்ற வண்டிக்காரனின் கேள்வி காற்றிலே கரைந்தது.

செந்தில் அதிகாரத்தோடு தாமோதரத்தை நோக்கினன்.

ஒரு விநாடி தயங்கியவர், சமாளித்துக் கொண்டு புறப்பட்டார்.

"பாம்புக்குப் பல்லைப் பிடுங்கியாகிவிட்டது. இனிப் பயமென்ன?" என்பது அவர் கருத்து.

"அவர்களை இன்னும் காணுமே!" என்ருள் துளசி, வாசற்புறம் நோக்கிய படி. இரட்டை மாட்டு வண்டியின் சலங்கை ஒலிக்காக அவள் செவிகள் ஏங்கின. மடியில் தலைவைத்து உறங்கிக்கொண்டிருந்த கோலியின் மார்பில் அவள் கை இலேசாகப் படிந்திருந்தது.

பாப்பா சிரித்தாள்.

உடனே, எட்டத்தில் ஈடுபட்டிருந்த துளசியின் கவனம் நொடியில் திரும்பி, விழிகளோடு ஒன்றி அவற்றுக்கு உயிர் ஊட்டிற்று. பாப்பாவின் பார்வை தன் கூந்தலில் பதிந்திருப்பதை அவள் உணர்ந்தாள்.

புதுக் குடித்தனக்காரருடன் பழகுவதுபோல் அவளது நீண்ட விரல்கள் எச்சரிக்கையுடனும், சந்தேகத்துடனும் கொண்டையைத் தொட்டுப் பார்த்தன.

"போடுவதையும் போட்டுவிட்டுக் கேலியா பண்ணுகிருய்?"

முழங்கால்களைக் கட்டிக்கொண்டு தூண்மீது சாய்ந்தபடி உட்கார்ந்திருந்த பாப்பா, படம் பார்ப்பதற்காகக் கையிலெடுத்த பத்திரிகையைக் கீழே போட்டாள்.

"அதற்கில்லை அக்கா. அசப்பிலே உங்களைப் பார்க்கிறவர்கள், நான்தானுக்கும் என்று நினைத்துக் கொண்டு விடுவார்கள். நிஜமாக!" அவள் குறும்புத்தனமாகக் கண் சிமிட்டினுள். "அக்கா! ஒன்று பண்ணுவோமா? புடவையையும் மாற்றிக் கட்டிக்கொண்டு விடுவோம். அவர்கள் இரண்டு பேரும் வந்ததும் தடுமாறிப் போய்விடுவார்கள், தடுமாறி! கொஞ்ச நேரத்துக்குக் கலாட்டா பண்ணுவோம். என்ன சொல்கிறீர்கள்!"

துளசி மௌனமாக இருந்தாள்.

"உம்? என்ன சொல்கிறீர்கள்?"

மற்றவளுடைய பார்வை பழையபடி எங்கோ நழுவிவிட்டது. கொண்டையை அவிழ்த்துவிட்டுக் கொண்டாள்.

"அக்கா!" என்று ஆட்சேபித்தாள் பாப்பா.

"கலாட்டாவுக்கு இது நேரமில்லை பாப்பா," என்ருள் துளசி. "நேரம் ஆக ஆக எனக்கென்னவோ வயிற்றில் புளியைக்கரைக்கிறது. என்ன விபரீதம் நடக்கப்போகிறதோ!"

"அனுவசியமாக அலட்டிக் கொள்ளாதீர்கள் அக்கா," என்று தேற்றிய பாப்பா, "அவ்வளவு கஷ்டப்பட்டு ஆசையாகப் போட்டேன். கொண்டையை ஒரு நிமிஷத்திலே கலைத்துவிட்டீர்களே!" என்று குறைப்பட்டுக் கொண்டாள்.





''இது என்ன? மணைப் பலகை பின்னால் ஒட்டிக் கொண்டுவிட்டதே!''
''அடடா! அது அப்பளம் இட்ட பலகை ஆச்சே!''

''ஏண்ணே தவக்கம்? சட்டென வேலையை முடிக்காமே!''

ஓட்டுப் பங்களாவுக்கும் வைக்கோற் போர்களுக்தும் இடையில் நின்ற கட்டைச் சுவர் அருகே, ஒரு நாவிலும் மூன்று உள்ளங்களிலும் ஒரே சமயம் எழுந்த இந்தக் கேள்வி பரபரப்பைக் கிளறிவிட்டது.

தலைவனின் வழக்கத்திற்கு விரோதமான மலைப்பு, மற்றவர்களின் பொறுமையைச் சோதித்ததோடல்லாமல் துணிச்சலை அசைக்கவும் செய்தது.

''உஷ்!'' என்றான் கிருதாக்காரன்.

சகாக்கள் அடங்கி விட்டார்கள். அவன் தனக்கிருந்த சொற்ப மூளையைப் பலம் கொண்ட மட்டும் கசக்கிக் கொண்டான். காரணத்தைக்கூட்டாளிகளிடம் வெளியிட விருப்பமில்லை. ஏற்கெனவே தாமதமாகி விட்டதாகக் குறைப்பட்டுக் கொண்டிருக்கும் அவர்கள், பிரசினையின் தன்மையை அறிந்தும் நழுவினாலும் நழுவிவிடுவார்கள். உடனே அவர்களுக்கு ஏதாவது கட்டளையிடுவதுதான் அவர்களது கலக்கத்தைத் தீர்க்க வழி என்று தோன்றிற்று.

''டேய்!'' என்றான், மெள்ள, ஆனால் உறுதியோடு. ''நீங்கள்ளாம் தயாரா இருங்க. நான் கிழக்காலே போய், தோட்டத்துப் பக்கமா உள்ளே நுழைஞ்சு, அதோ தெரியுதே கிணறு, அதன் கிட்டே நின்னுட்டுச் சீட்டி அடிப்பேன். குபீர்னு பாய்ஞ்சு வந்து, பெண்ணைக் குண்டுக்கட்டாத் தூக்கிட்டுப் போயிடணும். மருந்து, துணி எல்லாம் வச்சிருக்கீங்கள்ள!''

...ன் திட்டவட்டமான உத்தரவுகள் அந்தச் சிறு கூட்டத்தில் ஜிவ்வென்று சுறுசுறுப்பைப் பாய்ச்சி விட்டன.

''அண்ணே,'' என்றது ஒரு குரல். ''எந்தப் பெண்ணைச் சொல்றே?''

ஆம். தான் குறிப்பிட்டது எந்தப் பெண்ணை? கிருதாக்காரன் குழம்பினான். மடியிலிருந்த பயலை எடுத்துப் பாயில் கிடத்தி விட்டு வருகிறாளே, அவளா? அல்ல. அவள் தலையை அள்ளி முடித்திருக்கிறாள். அடுப்படிக்குச் சென்று, அசைபோடும் வாயுடன் திரும்பி வருகிறாளே, அவளா! அவளும் அல்ல. அவள் கூந்தலைப் பின்னலாகப் போட்டிருக்கிறாள். அப்படியானால் குதிரை வால் கொண்டைக்காரி யார்! அவளை அல்லவோ எசமான் தூக்கிக்கொண்டு வரச் சொன்னார்!

வாழ்க்கையில் முதன் முறையாக, கிருதாக்காரனின் மனம் அச்சத்தின் சாயலைக் கண்டது. வெறும் கையுடன் திரும்புவதென்பது முடியாத காரியம். மிராசுதாரின் கோபத்துக்கு இலக்காவது அழிவுக்குக் குறுக்கு வழியாகும். இரண்டு பெண்களையும் தூக்கிச்செல்ல ஆள் போதாது. புத்திசாலித்தனமும் ஆகாது. குருட்டாம் போக்கில் ஒருத்தியைக் கிளப்பிக் கொண்டு போகும் பட்சத்தில், காசைச் சுண்டிப்பார்க்கும் லாட்டரியாக முடியும். தலை விழுந்தால் பரிசு வரும்; பூ விழுந்தால், தலை போகும். பின்னே என்னதான் வழி?

''யாரோ வர்றாங்க அண்ணே!''

கிருதாக்காரனின் நரம்புகள் விறைத்தன. கூட்டாளி கூறியது உண்மைதான். மாடுகளின் சலங்கை ஓசை பங்களாவை நெருங்கிக் கொண்டிருந்தது. பங்களாவுக்கு உள்ளேயிருந்தவர்களின் செவிகளில் இனிமையாக விழுந்த அந்த ஒலி, வெளியே இருந்தவர்களின் காதுகளை அபாய அறிவிப்பாகத் துளைத்தது.

இரண்டு பெண்களில் ஒருத்தி, ஆவலுடன் வாசலுக்கு விரைந்தாள்.



"இது என்ன? மணைப் பலகை பின்னால் ஒட்டிக் கொண்டுவிட்டதே!"

"அடடா! அது அப்பளம் இட்ட பலகை ஆச்சே!"

"ஏண்ணே தவக்கம்? சட்டென வேலையை முடிக்காமே!"

ஓட்டுப் பங்களாவுக்கும் வைக்கோற் போர்களுக்கும் இடையில் நின்ற கட்டைச் சுவர் அருகே, ஒரு நாவிலும் மூன்று உள்ளங்களிலும் ஒரே சமயம் எழுந்த இந்தக் கேள்வி பரபரப்பைக் கிளறிவிட்டது.

தலைவனின் வழக்கத்திற்கு விரோதமான மலைப்பு, மற்றவர்களின் பொறுமையைச் சோதித்ததோடல்லாமல் துணிச்சலை அசைக்கவும் செய்தது.

"உஷ்!" என்றான் கிருதாக்காரன்.

சகாக்கள் அடங்கி விட்டார்கள். அவன் தனக்கிருந்த சொற்ப மூளையைப் பலம் கொண்ட மட்டும் கசக்கிக் கொண்டான். காரணத்தைக் கூட்டாளிகளிடம் வெளியிட விருப்பமில்லை. ஏற்கெனவே தாமதமாகி விட்டதாகக் குறைப்பட்டுக் கொண்டிருக்கும் அவர்கள், பிரசினையின் தன்மையை அறிந்ததும் நழுவினாலும் நழுவிவிடுவார்கள். உடனே அவர்களுக்கு ஏதாவது கட்டளையிடுவதுதான் அவர்களது கலக்கத்தைத் தீர்க்க வழி என்று தோன்றிற்று.

"டேய்!" என்றான், மெள்ள, ஆனால் உறுதியோடு. "நீங்கள்ளாம் தயாரா இருங்க. நான் கிழக்காலே போய், தோட்டத்துப் பக்கமா உள்ளே நுழைஞ்சு, அதோ தெரியுதே கிணறு, அதன் கிட்டே நின்னுட்டுச் சீட்டி அடிப்பேன். குபீர்னு பாய்ஞ்சு வந்து, பெண்ணைக் குண்டுக்கட்டாத் தூக்கிட்டுப் போயிடணும். மருந்து, துணி எல்லாம் வச்சிருக்கீங்கள்ள!"

"ஓ!"

தலைவன்ன் திட்டவட்டமான உத்தரவுகள் அந்தச் சிறு கூட்டத்தில் ஜிவ்வென்று சுறுசுறுப்பைப் பாய்ச்சி விட்டன.

"அண்ணே," என்றது ஒரு குரல். "எந்தப் பெண்ணைச் சொல்றே?"

ஆம். தான் குறிப்பிட்டது எந்தப் பெண்ணை? கிருதாக்காரன் குழம்பினான். மடியிலிருந்த பயலை எடுத்துப் பாயில் கிடத்தி விட்டு வருகிறாளே, அவளா? அல்ல. அவள் தலையை அள்ளி முடித்திருக்கிறாள். அடுப்படிக்குச் சென்று, அசைபோடும் வாயுடன் திரும்பி வருகிறாளே, அவளா? அவளும் அல்ல. அவள் கூந்தலைப் பின்னலாகப் போட்டிருக்கிறாள். அப்படியானால் குதிரை வால் கொண்டைக்காரி யார்? அவளை அல்லவோ எசமான் தூக்கிக்கொண்டு வரச் சொன்னார்!

வாழ்க்கையில் முதன் முறையாக, கிருதாக்காரனின் மனம் அச்சத்தின் சாயலைக் கண்டது. வெறும் கையுடன் திரும்புவதென்பது முடியாத காரியம். மிராசுதாரின் கோபத்துக்கு இலக்காவது அழிவுக்குக் குறுக்கு வழியாகும். இரண்டு பெண்களையும் தூக்கிச்செல்ல ஆள் போதாது. புத்திசாலித்தனமும் ஆகாது. குருட்டாம் போக்கில் ஒருத்தியைக் கிளப்பிக் கொண்டு போகும் பட்சத்தில், காசைச் சுண்டிப்பார்க்கும் லாட்டரியாக முடியும். தலை விழுந்தால் பரிசு வரும்; பூ விழுந்தால், தலை போகும். பின்னே என்னதான் வழி?

"யாரோ வர்றாங்க அண்ணே!"

கிருதாக்காரனின் நரம்புகள் விறைத்தன. கூட்டாளி கூறியது உண்மைதான். மாடுகளின் சலங்கை ஓசை பங்களாவை நெருங்கிக் கொண்டிருந்தது. பங்களாவுக்கு உள்ளேயிருந்தவர்களின் செவிகளில் இனிமையாக விழுந்த அந்த ஒலி, வெளியே இருந்தவர்களின் காதுகளை அபாய அறிவிப்பாகத் துளைத்தது.

இரண்டு பெண்களில் ஒருத்தி, ஆவலுடன் வாசலுக்கு விரைந்தாள்.

கிருதாக்காரன் ஒரு முடிவுக்கு வந்து விட்டான். இனியும் காத்திருப்பதில் பயனில்லை. திண்ணையில் உட்கார்ந்திருக்கும் பெண்ணைக் கைப்பற்றவேண்டியதுதான். அதிர்ஷ்டப்படி நடக்கட்டும்.

"உம்," என்று சைகை காட்டினான்.

மாடுகள் வந்து நின்றன, வண்டியை இழுத்துக்கொண்டு. யாருமே இறங்கவில்லை. இருந்தால் தானே இறங்குவதற்கு?

பாப்பா முதலில் திகைத்தாள். பிறகு முறுவலித்தாள். ஓகோ. கோவிந்தனுடைய குறும்பா இது! திருப்பத்தில் இறங்கிக்கொண்டு இந்த வேலை செய்திருக்கிறார் போலும். தான் ஏமாறவில்லை என்று காட்டவேண்டும் அவருக்கு.

அசாதாரணமாக ஏதும் நடக்காதது போல், அவள் ஏதோ பாட்டை முணுமுணுத்துக்கொண்டு அங்கேயே நின்றாள். ஒரு நிமிடம், இரண்டு நிமிடம் ஆயிற்று. அவள் புருவங்களை நெறித்தாள்.

துளசியிடம் ஏதோ சொல்லத் திரும்பினாள். திடுக்கிட்டாள். அக்கா எங்கே! ஏதோ ஒருவிதவீச்சம் மூக்கைப் பிளந்தது. பதட்டத்துடன் இங்குமங்கும் ஓடினாள். கிணற்றருகே, ஈர மண்ணில், தடம் தெரிந்தது. அதைப் பின்பற்றினாள். சுவருக்கு அப்பால், இருட்டில், நாலைந்து உருவங்கள் மறைந்து கொண்டிருந்தன. வரிந்து கட்டிக்கொண்டு சுவரைத் தாண்டினாள்.

முன்னே போய்க் கொண்டிருந்தவர்கள், ஓட்டமும் நடையுமாகத் தோப்புக்குள் நுழைந்தனர். கடைசியாகச் சென்றவன் திரும்பிப் பார்த்தான். சரேலென்று ஒரு மரத்துக்குப் பின்னால் ஒளிந்து கொண்டாள் பாப்பா.

அவளுக்குப் பின்னால், பத்தடிக்கு அப்பால், தரையிலிருந்து புறப்பட்ட ஒரு முனகல் சப்தம் அவளைத் தூக்கி வாரிப் போட்டது. அடிமேல் அடி வைத்து முனகல் வந்த திசையில் நடந்தவள், கட்டைபோல் கிடந்த ஏதோ ஒன்றின் மீது இடறி விழுந்தாள்.

மேகத்தால் மறைக்கப்பட்டிருந்த சந்திரன் வெளிவர, மங்கலான வெளிச்சத்தில் அந்த முகத்தை நோக்கினாள் பாப்பா.

அவள் ரத்தம் எல்லாம் உறைந்தது. விழிகள் பிதுங்கின.












## இருபத்தெட்டு

ரத்தினக் கம்பளத்தின் மீது துவண்டு கிடந்த துளசியின் உதடுகள் லேசாக அசைந்தன. வெகு நேரம் கழித்துத் திரும்பிக்கொண்டிருக்கும் உணர்வுக்குக் கட்டியம் கூறுபவைபோல. ஆயினும் தன்னுணர்வு இன்னும் முழுமையாக நிலைபெறவில்லை.

இருளும் ஒளியும் அவளது மூடிய கண்களுக்குள் தட்டாமாலை சுற்றின. ஆனால் இடைவிடாமல் இரண்டையும் இணைத்தது பிடரியைப் பிளக்கும் தலைவலி. ஒரு முனகல். இடம், நேரம், சந்தர்ப்பம் ஆகியவற்றை நிர்ணயிக்க இயலாமல் இருளில் தட்டுத்தடுமாறிய அவள் அறிவு, எங்கு திரும்பினாலும் தலைவலி ஒன்றையே சந்தித்ததால் ஏற்பட்ட வேதனையின் விளைவே அந்த முனகல்.

"அறிவு கெட்ட நாயே! முட்டாள்! சோறுதானே தின்கிறாய் நீ?"

துளசி திடீரென்று கண் விழித்தாள். புறத்தேயுள்ள சூழ்நிலை அவளுக்குப் புலப்படுமுன், ஓட்டுப் பங்களாவிலும் தோப்பு நடுவிலும் நடந்தேறிய நிகழ்ச்சிகள் தபதபவென்று அவள் உள்ளத்தின்மீது சரிந்து விழுந்தன. அவற்றை ஒழுங்குபடுத்த அவளுக்கு அவகாசமில்லாவிட்டாலும் அவற்றின் மொத்தப் பொருளையும் தன் அப்போதைய நிலையையும் அவள் நொடியிலே புரிந்துகொண்டுவிட்டாள்.

...மாட்டுவண்டியின் சலங்கை ஓசை. வந்துவிட்டார்கள் போலிருக்கிறதே! பாப்பா வாசலுக்கு ஓடுகிறாள், வரவேற்க. நல்ல வேளை. அவள் போட்டுவிட்ட கொண்டையை அவிழ்த்துவிட்டோம். இல்லாவிட்டால் கேலிக் கூத்துத்தான். சமையல் எல்லாம் ஆறி அவலாய்ப் போயிருக்கும். ஆள் ஒருவரையும் காணோம். கிணற்றடிக்குப் போய் நாமே இலை அறுத்து வந்தால் என்ன? ஆ, யாரது? இது என்ன நெடி!...இருள், ஒரே இருள்!...

அவளது மருண்ட விழிகள் சுழன்றன. மின்சார விளக்கு, மேஜை, சீசாக்கள், சோபா. அவள் பதைபதைத்தாள்.

யாரோ வரும் ஓசை கேட்டது. அவள் எழுந்து உட்கார முயன்றாள். ஆடைகளையும் கூந்தலையும் அவசரத்துடன் சரிப்படுத்தின அவள் கைகள்.

ஜிப்பா அணிந்த அந்தப் பருமனான ஆள், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கத் தொப்பென்று சோபாவில் விழுந்தான். ஏனோ அவள் உள்ளம் அருவருப்பால் சுருங்கிற்று. இந்த இடத்தை விட்டு எப்படியாவது தப்பித்துக்கொண்டுவிட வேண்டும். கதவுப் பக்கம் பார்த்தாள். எஜமானின் கோபத்துக்கு ஆளான நாலைந்து பேர் தலை குனிந்தவாறு வழியை அடைத்து நின்றார்கள்.

"நான் குறிப்பிட்டது யாரை, நீங்கள் கொண்டுவந்திருப்பது யாரை! உங்களை என்ன செய்தால் தகும்!"

சோபாவில் உட்கார்ந்தவன் உதட்டு விளிம்பில் ஒரு சிகரெட்டை ஒட்ட வைத்துத் தீக்குச்சியைக் கிழித்தான்.

துளசியின் மனத்தில் நம்பிக்கை சுடர் விட்டது.

கிருதா மீசைக்காரன் விளக்கம் சொன்னான். "தெரியாத்தனமாகச் செய்துவிட்டோம், எசமான். செருப்பாலே அடிங்க, பட்டுக்கிறோம். ஆனால்..."

எஜமானன் கால்மேல் கால் போட்டிருந்தான். அவன் அணிந்திருந்த பளபளப்பான செருகு ஜோடு அவர்கள் முதுகைப் பதம் பார்க்கத் துடிப்பது போல் மேலும் கீழுமாக ஆடியது.

அவன் புகையை ஊதினான் உத்தரத்தை நோக்கி.

"இரண்டு பேரிலே நீங்க சொன்னதுபோல ஒருத்தருமே கொண்டை போட்டிருக்கலிங்களே!"

"அப்படியானால் பேசாமல் திரும்பி வரவேண்டியதுதானே!"

ஆட்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

ஒருவன் சொன்னான். "மத்தவ பின்னல் போட்டிட்டிருந்தா. அதனாலே அவளா இருக்கமுடியாதுன்னு நினைச்சோம்."

கிருதா மீசைக்காரன் குறுக்கிட்டான். "எசமான் காத்திட்டிருப்பீங்க. வெறுங்கையோட திரும்பி வந்தா..."

"ஓ!" என்று சீறினான் எஜமானன், சிகரெட்டைக் கீழே எறிந்து ஜோட்டால் தேய்த்து நசுக்கியபடி. "காம வெறி பிடித்தவன் என்று என்னை நினைத்துக் கொண்டீர்கள்? முண்டங்களா! ஆவலோடு காத்திருப்பேனாம். வெறுங்கையோடு திரும்பக் கூடாதே என்று நினைத்தார்களாம்." அவன் எழுந்து கிருதா மீசைக்காரனை நோக்கி நடந்தான். மற்றவர்கள் தம்மை அறியாமலே ஓரடி பின் வாங்கினார்கள். "காரணத்தோடுதான் அந்தப் பெண்ணைக் கொண்டுவரச் சொன்னேன். தெரியுமா? கண்ணிலே பட்ட கழுதையொன்றைத் தூக்கி வந்து விட்டுக் கதையா அளக்கிறீர்கள், கதை!"

அவனை அவன் தாழ்த்திக் கூறிய சொல் ஒவ்வொன்றும் துளசியின் செவியில் தேனாய், கிலி நீக்கும் தேறுதலாய், உற்சாகத்தைக் கிளறும் இன்னிசையாய் இறங்கிற்று. அதே சமயம் சூழ்ச்சிக்கு இலக்கு பாப்பா என்பதையும் சூழ்ச்சிக்காரன் கனகசபை என்பதையும் புரிந்துகொள்ள அவளுக்கு அதிக நேரம் தேவைப்படவில்லை.

கிருதா மீசைக்காரன் உறுதி கூறினான். "எசமான்! சரின்னு ஒரு வார்த்தை சொல்லுங்க. இப்பவே போய், அந்தப் பொண்ணு எந்தக் கோட்டைக்குள்ளே இருந்தாலும் சரி, பத்து எண்ணுறதுக்குள்ளே கிளப்பிட்டு வந்துடறோம்."

"புலிகள்தான்!" என்று பரிகசித்தான் கனகசபை. "உங்கள் வீரப் பிரதாபங்களை இன்றைக்கு இத்தோடு நிறுத்திக் கொள்ளுங்கள், போதும்."



"அப்போ இவள்!"

அவன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. "எந்தக் குப்பை மேட்டிலிருந்து இவளைப் பொறுக்கிவந்தீர்களோ அங்கேயே கொண்டுபோய்த் தள்ளுங்கள்."

துளசியின் உள்ளம் நன்றியால் நிறைந்தது. வேடனது கண்ணியிலிருந்து விடுவிக்கப்பட்ட பறவைபோல் அவள் உள்ளம் படபடத்தது.

"அண்ணே!"

தனது காதுக்குள் கிசுகிசுக்கும் கூட்டாளியிடம், 'என்னடா!' என்று முகம் சுளித்தான், எஜமானனுடைய ஏச்சு மொழியைக் கேட்டு ஏற்கெனவே புண்பட்டிருந்த கிருதா மீசைக்காரன்.

இரண்டு நிமிடம் கழிந்தது.

மேஜையண்டை நின்றபடி மதுக் கிண்ணத்தில் குறியாக இருந்த கனகசபை, "இன்னும் போகவில்லை நீங்கள் எல்லாம்!" என்று உறுமினான்.



கனகசபையை நோக்கிச் சென்ற கிருதா மீசைக்காரன் சற்றுத் தள்ளி நின்றபடி, வினயத்துடன், "பொண்ணுக்கு அப்பவே மயக்கம் தெளிஞ்சுட்டாப்பலே இருக்கு. நாம் பேசினதையெல்லாம் கேட்டிருந்ததோடே இல்லாமே ஆள் அடையாளம் எல்லாம் பாத்துட்டுது. இதை இப்படியே கொண்டுபோய் வடறது ஆபத்தில்லையான்னு யோசிச்சிட்டிருக்கோம்."

"மயக்கம் தெளிந்துவிட்டதா!' கனகசபை அவளை முதல் தடவையாகப் பார்த்தான்.

துளசி கெஞ்சினாள். அவள் குரல் நடுங்கிற்று. "நான் யாரிடத்திலும் மூச்சுக்கூட விடமாட்டேன். ஐயா, என்னைத் தயவு செய்து விட்டுவிடுங்கள் ஐயா."

கனகசபையின் கண்களிலிருந்த சினமும் ஏமாற்றமும் எரிச்சலும் திடீரென்று மறைந்தன. நூதனமான ஒரு பொருளை—திடுமென உயிர் பெற்றெழுந்துவிட்ட ஒரு சிற்பத்தை—ஆராய்பவன்போல் அக்கறையுடனும் ஆர்வத்துடனும் கவனித்தான்.

அவன் கிண்ணத்தை எடுத்து மதுவைச் சுவைத்தான். கிண்ணத்தின் வட்டமான விளிம்புக்கு மேல் அவனது கண்களிரண்டும் மின்னின.

அவற்றின் பார்வை பட்ட இடமெல்லாம் பொசுங்குவது போலிருந்தது துளசிக்கு. நா வரண்டது.

கண்காட்சிப் பொருளை ஆராயும் கலை ரசிகனைப்போல அவன் மெள்ள துளசியைச் சுற்றி வந்து வெவ்வேறு கோணங்களிலிருந்து பரிசோதித்தான்.

பீதியால் மார்பகம் விம்ம, அவமானத்தால் கன்னங்கள் சிவப்பேற, ஆத்திரத்தால் விழிகள் ஜொலிக்க, துளசி கூனிக் குறுகியபோது, கவர்ச்சி அதிகரிப்பதுபோல் தோன்றிற்று போலும் கனகசபைக்கு.

"இவள் இங்கேயே இருக்கட்டும். நீங்கள் போகலாம்," என்றான் கிருதா மீசைக்காரனிடம்.

கனகசபையின் வீட்டு மாடியில் கைப்பிடிச் சுவர்மீது முழந்தாளை ஊன்றிக்கொண்டு சிந்தனையில் ஆழ்ந்திருந்த ரத்தினம் சூழ்நிலையையே மறந்துவிட்டான்.

எதிர்காலத்தைப் பற்றிய இன்பக் கனவுகள் அவன் உள்ளத்தில் பூத்த வண்ணமாகவே இருந்தன. கோவிந்தன் திடுமென எழுந்து அண்ணாவின் அழைப்புக்குச் செவி கொடுக்காமல் விடு விடென்று சென்று மறைந்ததால் விளைந்த அச்சமும் இனம் தெரியாத திகிலும் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிவிட்டன.

ரத்தினம் நெடுமூச்செறிந்தான். ஆனால் இம்முறை நிம்மதியின் குளுமையும் உவகையின் மணமும் அதில் கலந்திருந்தன.

ஆம். அவனது வாழ்க்கையில் பெரியதொரு திருப்பம் நிகழ்ந்துவிட்டது. அவனுடைய முயற்சியின் நிமித்தமாகவே நடந்தேறி, குழப்பத்திலிருந்தும் சிக்கலிலிருந்தும் அவனை விடுவித்துவிட்டது. 'நான் உங்களுக்கு உடன்பிறந்தவனில்லை. நான் அன்னியன். வெறும் வளர்ப்புப் பிள்ளை' என்று கோவிந்தனிடமும் செந்திலிடமும் எப்படித் தெரிவிப்பதெனப் புரியாமல் அவன் கலங்கிக்கொண்டிருந்த கட்டம் தாண்டிவிட்டது. 'உங்கள் சொத்திலே எனக்கு உரிமையில்லை,' என்று எவ்வாறு விளக்கி விலக்கிக்கொள்வதென்று அவன் தடுமாறியதுண்டு. அதற்கும் இப்போது ஒரு முடிவு ஏற்பட்டுவிட்டது. இத்தனை ஆண்டுகளாக ஒரே வீட்டில் ஓடி விளையாடி, ஒரே தாய் உருட்டித் தந்த அன்னத்தை உண்டு வளர்ந்து, நகமும் சதையுமாய் உறவாடிவிட்டு, 'நீங்கள் வேறு, நான் வேறு,' என்று ஒரு செயற்கையான பிளவை உண்டுபண்ணுவது தம்பியர் மனத்தை நோக வைக்குமே என்று அவன் தயங்கியபடி, அந்தரங்கத்தில் எழும் எண்ணங்களுக்கு நாவினால் உருக் கொடுக்க முடியாமல் அமுக்கி அலமலந்ததுண்டு.

இப்போது ஒரே நாளில் உண்மை வெளியாகி விட்டது. அனாவசியமான மனக் கலக்கத்துக்கோ சஞ்சலத்துக்கோ இடமில்லாதபடி காரியம் முடியப்போகிறது. அதற்காக ரத்தினம் மனத்துக்குள் செந்திலுக்கு நன்றி செலுத்தினான். சொத்துக்கும் அவனுக்கும் சம்பந்தமில்லை என்பதை அறிந்தவனன்றோ செந்தில்? அவன் புத்திசாலி. ஆனால் கோவிந்தனைப்பற்றி நினைக்கும்போது ரத்தினத்துக்குச் சற்று வருத்தமாகத்தான் இருந்தது. அவன் குழந்தை. காரணமில்லாமல் பல்லைக் கடிக்கிறான், முகத்தைச் சுளிக்கிறான். உண்மை நிலையை ஒப்புக்கொள்ளத் துணிச்சல் இல்லாத

காரணத்தாலும், தன்னம்பிக்கை குறைவாக உள்ள காரணத்தாலும் பழமையையே பிடித்துக் கொண்டு தொங்க விரும்புகிறான்.

எல்லாம் எத்தனை நாளைக்கு? நாளா வட்டத்தில் கோவிந்தனின் கோபம் ஆறிவிடும் என்று ரத்தினத்துக்குத் தெரியும். அவனுக்கும் பாப்பாவுக்கும் திருமணம் நடந்தேறி, சென்னையில் குடும்பத்தை ஏற்படுத்திவிட்டார்களானால் அவனுடைய எண்ணங்களும் ஆசைக் கனவுகளும், மற்றவர்களைப் பற்றி நினைக்கவோ ஏங்கவோ வாய்ப்பின்றிக் காதல் வட்டத்துக்குள்ளேயே அடங்கிவிடாதா?

காதல்! ரத்தினம் முறுவலித்தான். துளசியின் முகம் அவன் கண் முன் வந்து நின்றது. அவன் இதயம் குளுமையில் தோய்ந்தது. துளசி அவனுடன் இருக்கும்வரை அவனுக்கு எவ்வித குறைவும் கிடையாது. தம்பி, தோழன், காதலி எல்லாம் அவளே. இந்த உண்மையைச் சொல்லிலே வடித்து அவள் முன்னிலையில் விளக்க அவன் தயாராக இல்லாமலிருக்கலாம். ஆயினும் அவள்தான் அவனுக்கு உயிர் மூச்சு.

ரத்தினத்துக்கு நினைவு வந்தது. அச்சகத்தில் அவன் - தந்த திருமண அழைப்புக்களைத் தயாரித்துப் புரூப் தருவதாகச் சொல்லியிருந்த நாள் இன்றல்லவா! நாளைக் காலையில் முதல் வேலையாகப் புரூப்களை வாங்கிவர ஏற்பாடு செய்யவேண்டும் என்று தனக்குள் அவன் தீர்மானித்துக்கொண்டான்.

இன்னொன்று. செந்திலுடன் வந்த தாமோதரத்தை அவனுடன் அனுப்பச் சம்மதிக்கக்கூடாது. ஒரு மாத காலத்துக்காவது அவரை இங்கே தங்கச் செய்து, உடம்பைத் தேற்றிக்கொள்ள வகை பண்ண வேண்டும். இல்லாவிட்டால் துளசி அவனைச் சும்மா விடமாட்டாள். கோவிந்தன் தனது மாமனாரை எவ்வளக்கெவ்வளவு கேவலமாகக் கருதுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு உயர்வாக அவரை மதிக்கிறாள் துளசி. இரண்டு அழைப்புக்களும் அவர் பெயரில்தான் கொடுக்கப்பட்டிருந்தன. பிள்ளையுடைய கல்யாணம் ஒன்று; பெண்ணுடையது மற்றொன்று. கல்யாணங்களைக் கூத்தனூரிலேயே நடத்திவிடுவதாக ஏற்பாடு. சென்னைக்கு ஒரு கடிதம் எழுதி, மற்றக் குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு வந்துசேருமாறு மங்களம் சித்திக்கு எழுத வேண்டும்.

பாட்டுப் பாடியோ சீழ்க்கை அடித்தோ ரத்தினத்துக்குப் பழக்கமில்லை. பழக்கமுள்ளவனாக இருந்தானேயாகில் அப்போதைய உற்சாகத்தில் ஓயாது மணிக் கணக்கில் இசையாய் ஊதித் தள்ளியிருப்பான்.

சட்டென்று ஒரு யோசனை. கோவிந்தன் போய் எவ்வளவு நேரமாயிற்று!

ரத்தினம் கீழே இறங்கி வந்தான். அவன் மனத்தில் எழுந்த கேள்வி, வராந்தாவில் இருப்புக் கொள்ளாமல் உலவிக் கொண்டிருந்த செந்திலின் முகத்தில் வெளிப்படையாகத் தெரிந்தது.




## இவ்வழக்கில் எவ்வாறு தீர்ப்பளிப்பீர்கள்?

புத்தகம் வெளியிடும் பிரசுரகர்த்தர் ஒருவர் எழுத்தாளர் ஒருவருக்கு ஒரு புத்தகத்தின் முழு உரிமையை இரண்டு ஆண்டிற்குள் ஆயிரம் ரூபாய் தந்து விலைக்கு வாங்குவதாக ஒப்பந்தம் செய்தார். மூன்று ஆண்டுகள் கழிந்தன. புத்தகம் வெளியிடுவோர் எழுத்தாளரின் நூலை வெளியிடுவது பற்றிய தகவல் ஒன்றையும் தெரிவிக்காமல் இருந்தார். எழுத்தாளர் அந்தப் புத்தகத்தின் முழு உரிமையை வேறொரு புத்தகக் கம்பெனிக்கு விற்று விட்டார். முதல் புத்தகக் கம்பெனிக்காரர் தன்னிடம் அளித்த வாக்கைக் காப்பாற்றத் தவறியதற்காக எழுத்தாளர் மீது குற்றம் சுமத்திப் புத்தகத்தின் முழு உரிமையைப் பெற வழக்குத் தொடுத்தார். இது சரியா?

—வை. ச. சு.

(விடை: 48-ம் பக்கம் பார்க்க)

"வந்துவிடுவான், வந்துவிடுவான். சற்றுப் பொறுப்போம்," என்றான் ரத்தினம் சமாதானமாக.

செந்தில் பதில் சொல்லவில்லை.

"ரயிலுக்கு இன்னும் நேரமிருக்கிறது, செந்தில்."

"அதற்கில்லை. இருக்கவே இருக்கிறது என் கார். அதில் போய்க்கொள்ளலாம். கோவிந்தன் வேண்டுமென்று இடக்குப் பண்ணுகிறான் போலிருக்கிறது."

ரத்தினத்துக்கு, தம்பியின் பொறுமை அதற்குமேல் தாளாது என்று தோன்றிற்று. "நாமே போய்ப் பார்க்கலாமே? எதிர்ப்பட்டால் கூட்டிக்கொள்வோம். மத்தியானம் கூட நீ வரவில்லையே."

செந்தில் ஒரு விநாடி தயங்கினான். பிறகு காரை எடுத்து வந்தான்.

வீடு வெறிச்சென்று கிடந்தது. குழந்தைகள்மட்டும் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தார்கள். யாரையுமே காணோமே!

அண்ணாவும் தம்பியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். எல்லோரும் எங்கே மாயமாய் மறைந்துவிட்டார்கள்?

புதிரால் குழப்பமுற்று, வாசலில் நிற்கும் காருக்கு அவர்கள் திரும்பிய போதுதான், மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க, கண்களில் பயத்துடனும், முகத்தில் சேற்றுடனும் பித்துப்பிடித்தவள்போல் ஓடிவந்தாள் பாப்பா.

"கோவிந்தன் அடிபட்டுக் கிடக்கிறார். பலமான அடி. உடனே புறப்படுங்கள். வாருங்கள்."

ரத்தினம் பதறினான்.

"கோவிந்தனா! அடிபட்டுக் கிடக்கிறானா? எங்கே பாப்பா? கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லேன்." பிறகு செந்திலைக் கேட்டான். "இரண்டு பேருமாகத்தானே கிளம்பினார்கள்? வண்டியும் வந்தது என்று சொன்னாயே!"

அவன் கையைப் பிடித்துக்கொண்டு கத்தினாள் பாப்பா.

"ஐயோ, அண்ணா! சீக்கிரம் புறப்படுங்கள், சீக்கிரம்! சீக்கிரம்!"

இதற்குள், கிராமவாசிகள் சிலர் கூடிவிட்டார்கள்.

ரத்தினம் மடமடவென்று உத்தரவிட்டான். ஒரு டார்ச்சும் மூன்று அரிக்கன் விளக்குகளும் கண்மூடிக் கண் திறக்கு முன் சேகரிக்கப்பட்டன. கும்பல் தோப்புக்கள் பாய்ந்தது.

இருந்தாற்போலிருந்து, "இதோ!" என்று கூவினான் ஒரு குடியானவன்.

"எங்கே?" ரத்தினம் குரல் வந்த திசையில் விளக்கைத் திருப்பினான்.

ஒளி வட்டத்துக்குள், தரையில் கிடக்கும் உருவம் தெரிந்தது.

"அப்பா!" என்றான் ரத்தினம், துடுக்கிட்டவனாக.

பிறகு, டார்ச் விளக்கைச் செந்திலிடம் கொடுத்து விட்டு, தரையில் உட்கார்ந்து, தாமோதரத்தின் தலையை மடியில் எடுத்து வைத்துக் கொண்டான். அவர் நெஞ்சில் கைவைத்துப் பார்த்தபோது, இதயம் இலேசாக அடித்துக்கொள்வது கேட்டது. தங்கையின் பக்கம் திரும்பி, "பாப்பா! இருட்டில் அடையாளம் தெரியாமல் அப்பாவைக் கோவிந்தன் என்று நினைத்து விட்டாய் போலிருக்கிறது!" என்றான்.

பாப்பாவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. அவள் பதிலிறுத்த போது குரல் கரகரத்தது.

"கோவிந்தன் தான் அடிபட்டுக் கிடந்தார். சந்தேகமே இல்லை. புடவைத் தலைப்பைக் கிழித்துக் கட்டுக்கூடப் போட்டு விட்டேனே!"

"ஆமாம், நீ எப்படித் தோப்புக்கு வந்தாய்?" என்றான் ரத்தினம். வெகு நேரத்துக்கு முன்பு கேட்டிருக்க வேண்டிய கேள்வி அது.

"பார்த்தீர்களா? இந்தக் கலாட்டாவில் அதைச் சொல்லவே மறந்து போய்விட்டேன்," என்று துடித்தாள் பாப்பா. "துளசி அக்காவை நாலைந்து முரடர்கள் தூக்கிக்கொண்டு போய் விட்டார்கள்."

"என்னது!"

"ஆமாம் அண்ணா. அவர்கள் பின்னால் நான் வந்துகொண்டிருந்தேன். அப்போதுதான் ஏதோ கட்டை மாதிரி காலை இடறிவிட்டது. கோவிந்தனுக்கு அடி என்றதும் அக்காவுக்கு நேர்ந்த ஆபத்து நினைவில்லாமல் ஓட்டு பங்களாவுக்கு ஓடிவந்தேன். ஐயையோ! அக்காவிற்கு என்ன ஆயிற்றோ தெரியவில்லையே!"

ரத்தினத்தின் நெற்றியில் கோடுகள் தென்பட்டன. கவலையால் முகம் வாடிற்று.




## இருபத்தொன்பது

தான் அழுது கொண்டிருப்பது துளசிக்கே தெரியாது.

இருளைக் காட்டிலும் கறுத்திருந்த அந்த ஒதுப்புறமான அறையிலே, ஓதமேறிய சுவர்களின் வீச்சமும், மூலை முடுக்குகளில் அடர்ந்திருக்கும் ஒட்டடையின் மெல்லிய — ஆனால் உடலில் பட்ட மாத்திரத்தில் புல்லரிக்கச் செய்யும்—ஸ்பரிசமும், தேங்கிக் கிடந்து கிடந்து குணம் மாறிவிட்ட காற்றின் நச்சுத் தன்மையும் ஒன்றுகூடிக் குரூரத்துடன் அவளை முற்றுகையிட, துளசி துயரத்துக்கு இரையானாள்.

கொதிக்கும் கண்ணீர்த் துளிகள் திரண்டு உருண்டு அவள் கன்னங்களில் விழுந்த வண்ணமிருந்தன. ரவிக்கையில் ஈரம் சார்ந்து அது அவள் சருமத்தோடு ஒட்டிக் கொண்டுவிட்டது. ஆனால் அவள் துக்கம் இன்னும் அடங்கிய பாடாக இல்லை. திகிலினால் மூண்ட வெப்பம், கடந்தகால நினைவுகளையும் எதிர்காலக் கனவுகளையும் மனத்தின் அடித் தளத்திலிருந்து மேலே கிளப்பி, உருக்கி, விழிகளின் வழியே வெளியேற்றிக் கொண்டிருந்தது.

காமமும், அதே சமயம் நிதானமும்; மிருகத்தனமான வேட்கையும், அத்துடன் தோல்வியறியாப் பொறுமையும் ஒரு விசித்திரக் கலவையாகக் கனகசபையின் கொடுமை தெறிக்கும் முகத்திலே அப்பியிருந்ததை நினைத்துப்பார்க்கப் பார்க்க அவள் மேனி நடுங்கிற்று. கிருதா மீசைக்காரனைக் கனகசபை கை தட்டி அழைத்துத் துளசியின் பக்கம் திரும்பி ஏதோ சைகை செய்ததன் விளைவாக, அந்த முரடன் அவளை இழுத்துக்கொண்டு வந்து மாளிகையின் மற்றொரு பகுதியிலுள்ள இந்த அறையிலே தள்ளிவிட்டுச் சென்ற போதிலும், தனக்குக் கிடைத்திருப்பது தற்காலிக ஓய்வுதான் என்ற பயங்கர ஊகம், துளசியின் இதயத்தைப் படபடக்கச் செய்தது.

அவள் எழுந்து நின்றாள். கால்கள் தள்ளாடின. கண்ணின் கருமணிகளை இயன்ற மட்டும் பெரிதாக்கி இருளைத் துளைக்க முயன்றாள். முடியவில்லை. பார்வை இருந்தும் இல்லாதவளாய், சுவரைத் தடவியபடி அவள் பக்கவாட்டில் அடியெடுத்து வைத்தாள். அவளது விரல்கள் பட்டதும், சுவரில் ஒட்டியும் ஒட்டாமலுமிருந்த சுண்ணாம்புப் பூச்சு பல இடங்களில் பொலபொலவென்று உதிர்ந்தது.

அறையின் கதவு திறந்து வைக்கப்பட்டிருக்காது என்பது அவளுக்குத் தெரியாமலில்லை. சொல்லப் போனால், கிருதா மீசைக்காரன் படாரென்று கதவைச் சாத்தித் தாழ் போட்ட ஓசை அவள் செவிகளில் ரீங்காரம் செய்து கொண்டேயிருந்தது. ஆனால் அந்த ரீங்காரத்தைத் தாலாட்டாக எடுத்துக்கொண்டு தூங்கிப் போகத் துளசி தயாராக இல்லை. கிணற்றடியில் எதிர்ப்பட்ட அதிர்ச்சி; மயக்க மருந்

தின் கிறுகிறுப்பு; கனகசபையின் திடீர் மாறுதல்; எல்லாமாகச் சேர்ந்து அவள் உடல் வலுவையும் உள்ளத்தின் திண்மையையும் பெருமளவுக்கு உறிஞ்சிவிட்ட போதிலும், இந்தப் பாழும் குழியிலிருந்து எங்ஙனமாவது தப்பிச் சென்றுவிட வேண்டுமென்ற துடிப்பு மட்டும் வினாடிக்கு வினாடி தீவிரமாகிக்கொண்டே வந்தது.

ஓட்டு பங்களாவுக்குப் பறந்துபோய், ரத்தினத்தின் பரந்த மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு, ''எனக்கு இந்தக் கதி நேரும்படியாக விட்டுவிட்டீர்களே!'' என்று பொருமவேண்டும் போலிருந்தது துளசிக்கு. அவன் எவ்வளவு ஆசையுடனும், ஆதரத்துடனும், கவலை நீங்கிய நிம்மதியுடனும் அவளை அணைத்து ஆறுதல் கூறுவான்! அவனுடைய கை விரல்கள் தன் கூந்தலைத் தடவிக்கொடுப்பதுபோல் கற்பனை செய்துகொள்ள முடிந்தது துளசியால். வலிமையும் வனப்பும் நிறைந்த அந்த விரல்களுக்கு, விலையுயர்ந்த பேனாப் பிடித்து மழமழவென்று 'செக்' தாளில் கையெழுத்துப் போடவும் தெரியும்; டிராக்டர் இஞ்ஜின் பழுதாகிவிட்டால் அதைப் பிரித்துச் சரி செய்யவும் தெரியும்; மென்மையான மலரைக் கதிர் ஒளி தொடுவதுபோல் காதலியின் முகத்தை மெள்ள நிமிர்த்திக் கண்ணீரைத் துடைத்து விடவும் தெரியுமே!

துளசியின் கைகளுக்கு ஏதோ தட்டுப்பட்டது. கயிறு!

வேறு நினைவாக அவள் அதைப் பிடித்து இழுக்கவே, ஏதோ கிறீச்சிட்டது. அடுத்த விநாடி, குளுமையான காற்று அறைக்குள் நுழையவே துளசி மகிழ்ச்சியுடன் அண்ணாந்து பார்த்தாள். நிலவொளியால் துலக்கப்பட்ட வானத்தின் ஒரு பகுதி, திறந்த ஜன்னல் வழியாகத் தெரிந்தது.

அவள் உடல் தாராளமாக நுழையக்கூடிய அளவுக்கு இடைவெளி இருந்தது. ஆனால், எட்டாத உயரத்திலுள்ள அதை அடைவது எப்படி!

துளசி எழும்பி குதித்துப் பார்த்தாள். கால் வைத்துச் சுவரில் ஏற முடியுமா என்று முயன்றாள். களைத்து விழுந்ததுதான் மிச்சம்.

மூச்சு வாங்க, அவள் அப்படியே கிடந்தாள்.

ஏதோ அரவம் கேட்டது.

துளசி காதுகளைத் தீட்டிக்கொண்டாள்.

ஆம். எலியின் பிறாண்டல் அது. உலோகத்தால் ஆன ஏதோ ஒரு பொருளை—அவளுக்கு வெகு அண்மையில் உள்ள ஒரு பொருளை—அது நகத்தால் கீறிக்கொண்டிருந்தது.

அவள் கையை நீட்டினாள். நிமிர்த்தி நிறுத்தப்பட்டிருந்த ஒரு தகர பீப்பாயின் விளிம்பு அவள் கையில் பட்டது.

துளசி பரபரப்புடன் எழுந்தாள். ஆவலுடன் சோதித்தாள். எலி விழுந்தடித்துக்கொண்டு ஓடிவிட்டது.

வரிசையாகப் பீப்பாய்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. தப்பிக்க வழி கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில் சேலையை உற்சாகமாக வரிந்து கட்டிக்கொண்டு பீப்பாயை நகர்த்த முயன்றாள். அவள் நினைத்தாற்போல் அது அவ்வளவு இலேசாக இருக்கவில்லை. இரும்பாகக் கனத்தது. அதை எப்படியாவது கீழே சாய்த்துவிட்டால்? சுலபமாக உருட்டிக்கொண்டே ஜன்னலை அடைந்துவிடலாம்.





''நீங்கள் வேலை நிறுத்தம் செய்து விட்டதால் அந்த முதலாளி கத வடைப்புச் செய்து விட்டானே என்று பயப்பட வேண்டாம். எவ்வளவு நாள் கதவடைக்க முடியும்? அவன் பெண் சாதி பிள்ளைகள் வயிறு காயும் பொழுது எப்படியும் ஒருநாள் திறக் காமலா போவான்!...''

உதட்டைக் கடித்தபடி, அந்தப் பீப்பாவை வாட்டமாகப் பற்றிக் கொண்டு பலங்கொண்ட மட்டும் நெட்டித் தள்ளினாள்.

தொபீர்!

துளசி மார்பைப் பிடித்துக்கொண் டாள். பேரொலி எதையும் உண்டாக் காவிடினும், தரையை அதிரச் செய்து விட்டது அந்தப் பீப்பாய். ஆனால் துளசியின் திகில் நிறைந்த மனத்துக்கு அந்தச் சப்தம் ஊரெங்கும் கேட்டிருக் கும்போல் தோன்றிற்று.

நிமிடங்கள் கழிந்தன. யாரையுமே காணோம். துளசிக்கு மூச்சு வந்தது. முகத்தில் அரும்பியிருந்த வியர்வைத் துளிகளைத் துடைத்துக்கொண்டு அவள் குனிந்தாள்.

நல்ல காலம். ஜன்னல் இருந்த திசைக்குக் குறுக்கு வசமாகவே பீப் பாய் விழுந்திருந்தது. உள்ளங் கை இரண்டையும் அதில் பதித்துத் தள்ளி னாள். பீப்பாய் அசைந்தால்தானே? அதன் ஒத்துழையாமை அவளது பரபரப்பை அதிகரிக்கச் செய் தது. பின்னாலிருந்த சுவரில் ஒரு காலை மிதித்து, முட்டுக் கொடுத்தபடி உந்தினாள்.

பீப்பாய் நிலைபெயர்ந்து சற்றே நகர்ந்தது. அது மறுபடியும் நின்றுவிடாமல் துளசி உருட்டி னாள்.

நாலு தடவை இப்படிச் செய் திருப்பாள். அதற்குத் திடீ ரென்று ரோஷம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது போலும். துளசியின் உதவியை எதிர்பார்க்காமல் தானாகவே உருள ஆரம்பித்துவிட்டது.

உழைப்பின் பயனை இனி குதூகலத்துடன் அனுபவிப் பதே வேலை என்ற திருப்தியுடன் நிமிர்ந்த துளசி துணுக்குற்றாள்.

தானே உருள ஆரம்பித்து விட்ட அந்தக் கனமான பீப் பாய், அடிக்கு அடி வேகத்தில் முன்னேறிக் கொண்டே போய் எதிர்ச் சுவரில் மோதி ஊரை எழுப்பி விட்டால் என்ன கதி?

துளசி தாவினாள். ஓட்டமும் நடையுமாக விரைந்து, உருண்டு கொண்டிருக்கும் பீப்பாயைக் கடந்து; சுவரை அடைந்தாள். சட்டென்று திரும்பி, சுவரில் சாய்ந்தவளாய், இரு கைகளையும் நீட்டி, பீப்பாயைத் தடுப்பதற்கு அவள் ஆயத்தமாவதற்கும் அது அவள்காலில் வந்து மோதுவதற்கும் சரியாக இருந் தது.

''அம்மா! ...''

துளசியின் கட்டை விரல் முதல் உச்சந் தலைவரை உடலைக் கிழித்துக் கொண்டு ஏறிற்று, அவள் அதுகாறும் கற்பனை செய்தும் பார்த்திருக்க முடி யாத ஒரு வலி.

புருவங்கள், விழிகள், உதடுகள், கதுப்புக்கள் அனைத்தும் வடிவிழந்து அவளது வதனத்தின் மையத்தை நோக்கிச் சுருங்க, ஓலத்துக்கும் கத றலுக்கும் அடங்காத ஒரு வேதனை உடலைப் பிழிய, நினைவுக்கும், மூச் சைக்குமாகத் துளசி ஊசலாடினாள். அவள் அந்த நோவை இனித் தாங்க முடியாதென்று நினைத்திருந்தால் அந்த நொடியிலேயே உணர்விழந்து, வெறுமை வெளியிலே கலந்து, தற் காலிகமாகவேனும் அந்த வலியிலிருந்து

# ஐஸ் டீ







## தேநீரும்
## எலுமிச்சையும்
## கோடையில்
## நல்ல பானமாகும்



*அதைத் தயாரிப்பதும் சுலபம்!*

1. கெட்டிலை புதிய நீரால் நிரப்பி, கொதிக்க வையுங்கள்.
2. ஆவி வந்தவுடன் கெட்டிலை அடுப்பிலிருந்து அகற்றி தேநீர் பாத்திரத்தை வெந்நீரால அலசிக் கழுவுங்கள்.
3. நம்பகமான வியாபாரியிடம் வாங்கிய தேயிலையில் மூன்று தேக்கரண்டிகள் தேநீர் பாத்திரத்தில் (12 அவுன்ஸ் பிடிக்கும்) போட்டு, ஐந்து நிமிஷங்கள் வரை ஊற வைக்கவும்.
4. இப்பொழுது, ஊறிய தேநீரை ஐஸ் துண்டுகள் நிறைந்த ஒரு கண்ணாடி 'டம்ளரில் வடிகட்டியின் மூலம் வடிகட்டிக் கொள்ளுங்கள். ருசிக்கு ஏற்ப சர்க்கரையையும், எலுமிச் சம்பழத்துண்டுகளையும் சேர்த்துக் பால் வேண்டாம். கொள்ளுங்கள். ஆனால்
5. சில நிமிஷங்கள் குளிரவைத்து கலக்கி ஆனந்தமாக அருந்துங்கள்.




நீங்கள் அதிகப்படியான ஐஸ் டீ தயாரிக்க விரும்பினால் ஒவ்வொரு 6 அவுன்ஸ் பிடிக்கும், கோப்பைக்கு 1 தேக்கரண்டி வீதமும், உருகும் ஐஸுக்காக அரைக்கரண்டி வீதமும் கணக்கிட்டுப் போடவும்.



PST 19

விடுபட்டிருக்கக் கூடும். அவள் அதை விரும்பவில்லை. விரல்கள் நசுங்கி விட்டன என்பதைக் கால்களின் சொதசொதப்பிலிருந்தும், பிசுபிசுப்பிலிருந்தும் அவள் புரிந்து கொண்ட போதிலும், நினைவின் மெல்லிய இழையொன்றைப் பிடித்துக்கொண்டு அவள் தொங்கினாள்.

எங்கோ விசைகள் தட்டப்பட்டன. இருள் ஒளியாயிற்று.

"அடடே!" என்று திகைப்பிலே அனுதாபத்தைக் குழைத்து வினவிற்று கனகசபையின் குரல். அவள் போட்ட அந்த ஒரே அலறல். அவனை ஈர்த்து விட்டது போலும். "இதென்ன அலங்கோலம்? டேய், அந்த மருந்துப் பெட்டியை எடுத்துக் கொண்டு ஓடிவா. சிக்கிரம்."

வந்திருப்பது யார் என்று தெரிந்து கொள்ளத் துளசி கண்களைத் திறக்கவில்லை. கனகசபை, அந்த வெளிறிய முகத்தையும், பற்களால் கசக்கப்பட்ட அதரங்களையும், இறுக மூடியிருக்கும் முட்டிகளையும், பலவீனமுற்று வெடவெடவென்று ஆடிக்கொண்டிருக்கும் கால்களையும் கவனித்தான். கீழே கிடக்கும் பீப்பாயிலிருந்து, மேலே திறந்திருக்கும் ஜன்னலுக்கு அவன் பார்வை தாவியதும் துளசியின் திட்டமும் அது தடம் புரண்ட விதமும் அவனுக்குத் தெற்றெனப் புலப்பட்டன.

"இது என்ன விபரீத யோசனை! என்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருந்தால் ஜாம் ஜாமென்று வண்டியிலேற்றிப் பங்களாவில் கொண்டுபோய் விட்டுவரச் செய்திருக்கமாட்டேனா! ச்சொ ச்சொ. கொடகொடவென்று ரத்தம் கொட்டுகிறதே!" என்று தந்திரமாகப் பேசியவன், கதவுப்புறம் திரும்பி, "அப்போது போனவனை இன்னும் காணுமே! டேய், எங்கே அந்த மருந்துப் பெட்டி!" என்று குரலைக் கடுமையாக்கிக் கொண்டு அதட்டினான்.

துளசிக்கு நினைவு பிறழாத போதிலும் புலன்கள் மழுங்கிப் போயிருந்தன. என்ன நடக்கிறதென்று தெளிவாகப் புரிந்து கொள்ளும் சக்தி இல்லாதவளாய் அவள் சரிந்து கீழே விழுந்தாள்.

"இதோ வந்திட்டேன் எசமான்." வேலையாள் வந்து சேர்ந்தான்.

அவசர சிகிச்சைக்கான மருந்துகள் அடங்கிய அந்தப் பெட்டியிலிருந்து கற்றைப் பஞ்சை எடுத்த கனகசபை அதைத் தண்ணீர்க் குவளையில் நனைத்துத் துளசியை நெருங்கினான்.

கண்ணுக்கு எட்டாத தொலைவரை அகன்று விரிந்த பூமிக்கு அதிபதியும், சவரன்களைச் செப்புக் காசுக்களாகக் கருதும் செல்வரும், கையில் சிக்கிய மங்கையர்களைக் கால் தூசுக்கும் கேவலமாக மதிப்பவருமான கூத்தனூர் மிராசுதாரா ஒரு பெண்ணின் காலைத் தொட்டுப் பணிவிடை செய்கிறார் என்ற வியப்பில் மூழ்கித் திணறிப்போய் நின்றான் கனகசபையின் ஏவலாளன்.

வலியினால் நேர்ந்த மயக்கம் ஓரளவு தெளிந்து, துளசி சூழ்நிலையை ஒரு வாறாகப் புரிந்துகொள்ளத் தலைப்பட்டபோது, அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவளது பாதங்களில் ஒன்றை மடிமேல் இருத்திக் கொண்டிருந்தான் கனகசபை. அவளது குதிகாலை அவனது இடது கை தாங்கிக் கொள்ள, மருந்து தடவும் சாக்கில் வலது கரத்தால் அவன் அவளது காலை வருடிக்கொண்டிருந்தான்.

நல்ல பாம்பும் கட்டுவாக்கிளியும் ஒரே சமயத்தில் தீண்டினாற்போல்



## ஆலாபணம்

தற்போது நாங்கள் எந்தக் கச்சேரியையும் ஏற்க இயலாமலிருப்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். எங்களுக்குள் பாகப் பிரிவினை நடந்து கொண்டிருக்கிறது. இதுவரை நாங்கள் கூட்டாக உபயோகித்து வந்த ஒரே தம்புராவை யார் எடுத்துக் கொள்வது என்ற தகராறு தீர்ந்த பிறகுதான் கச்சேரிகளுக்கு ஒப்புக் கொள்ள முடியும்.

குளத்தூர் சகோதரர்கள்.

இருந்தது துளசிக்கு. அவள் சரே லெனக் காலே இழுத்துக்கொண்ட வேகத்தில் அது கனகசபையின் கவிழ்ந்த முகத்தைத் தாக்கிவிட்டது.

மாற்றுன் ஒருவன் மடியில் தன் கால் இருப்பதைக் கண்டவுடன், பிப் பாயால் ஏற்பட்ட காயத்தைப்போல் இரு மடங்கு வலி துளசியின் மனத் துக்கு உண்டாயிற்றென்றால், அதைப் போல் பத்து மடங்கு வேதனை கனக சபையின் உள்ளத்துக்கு உண்டா யிற்று. அவளது கால் பட்ட கார ணத்தால் மல்லாந்து விழுந்தபோது.

நடந்ததைப் பார்த்துக்கொண்டிருந்த வேலையாள் தன் கண்களையே நம்ப முடியாமல் திறந்த வாயுடன் சிலே யாய்ச் சமைந்து நின்றுன்.

சில விநாடிகளுக்கு முன்பு குழைவும் கனிவும் நிறைந்திருந்த கனகசபையின் கண்களில் பயங்கர மாறுதலொன்று நிகழ்ந்தது. நூறு எரிமலைகளின் ஆவே சத்தை அவற்றிலே கண்ட துளசியின் உடலில் வலியைக் கிலி மிஞ்சிற்று.

அடுத்தாற்போல் கனகசபை என்ன செய்திருப்பாரோ — அறைக்குள் நுழைந்த கிருதா மீசைக்காரன் அவன் காதுக்குள் ஏதோ முணுமுணுத்திருக் காவிடில். கனகசபை சற்றுத் தயங்கி னுன். பிறகு துளசியை ஒருமுறை வெறித்து நோக்கிவிட்டு, மருந்துப் பெட்டியைக் காலால் ஓங்கி உதைத்த வனுய், சூடுபட்ட புலிபோல் வெளி யேறினுன்.

மருந்து சீசாக்கள் நொறுங்கும் சப் தத்தில் கதவு சாத்தப்படும் ஓசை கலந்தது.

பாப்பா அலறிப் புடைத்துக் கொண்டு வந்து அறிவித்த செய்தியைக் கேட்டுக் கூட்டம் கூடிட பொழுது, அதிர்ச்சியோ வருத்தமோ அடையாத ஓர் உள்ளம் அந்தக் கும் பலினூடே இருந்ததென்றால் அது செந்திலுடையதுதான்.

உண்மையைச் சொல்லப் போனால், கோவிந்தன் அடிபட்டுக் கிடக்கிறான் என்று அறிந்ததும் செந்திலின் புருவங்கள் சுருங்கினவே தவிர, உள்ளம் சற்று விரியத்தான் செய்தது. கோவிந்தனுடைய திமிரும் துடுக்குத்தனமும் அவனை என்றைக்காவது இக்கட்டில் மாட்டிவிடுமென்றும், அதன் பயனாக அவன் செம்மையாக உதை வாங்குவான் என்றும் செந்தில் துவக்கத்திலிருந்தே நினைத்ததுண்டு. கோவிந்தனுக்குப் பாடம் கற்பிக்கப் போகிறவன் யாராக இருக்கும் என்பதை மட்டுமே செந்திலால் ஊகிக்க முடியாமல் இருந்தது. இப்போது ஊகிக்க முடிந்தது. அவன் தனக்குள்ளாகச் சிரித்துக் கொண்டான். 'நன்றாக வேண்டும் இந்தப் பயலுக்கு' என்று முணுமுணுத்தது அவன் உள்ளம். எந்தத் தாமோதரத்துக்குக் கோவிந்தனைக் கண்டதும் உள்ளுக்குள் உதைப்பெடுத்துக் கொள்ளுமோ, துணிச்சலில் சற்றுப் பின்தங்கியவர்போல் எவர் தோற்றமளிப்பாரோ அவரல்லவா கடைசியில் இந்த அயோக்கியனின் வாலை நறுக்கி விட்டிருக்கிறார் என்ற எண்ணம் அவனை வியப்பில் ஆழ்த்திற்று. நடந்ததை அப்படியே தாமோதரத்திடமிருந்து தனிமையில் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டான்.

அரிக்கன் விளக்குகளைச் சேகரித்துக்கொண்டு எல்லோரும் தோப்பை நோக்கி விரைந்தபொழுது செந்தில் அவர்களுடன் கலந்துகொள்ளவில்லை. கோவிந்தனுக்கு நேர்ந்த விபத்தைப் பற்றி அவனுக்கு அக்கறையோ, அனுதாபமோ கிடையாது என்பது மட்டும் அதற்குக் காரணமில்லை.

சில வினாடிகளுக்கு அவன் வாசலிலேயே நின்றான். விளக்குகளின் சிமிட்டொளியும் கும்பலின் ஆரவாரமும் தேய்ந்து அனேகமாக மறைந்தபின்னர் அவன் வேகமாகப் பங்களாவிற்குள் நுழைந்தான். கோலி, சச்சு, சம்பந்தம் முதலியோர் ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருந்தார்கள். சுற்றுத் திண்ணையில் எரிந்துகொண்டிருந்த விளக்கு, திறந்திருந்த கதவுகள் வழியே இரண்டு அறைகளுக்குள்ளும் வெளிச்சத்தைத் தூவிக்கொண்டிருந்தது.

பங்களாவில் வேறு யாரும் இல்லாமலிருந்தது செந்திலுக்கு நன்மையாகவே பட்டது. கண்ணில் தென்பட்ட பெட்டிகளையும் கூடைகளையும் அவன் கவிழ்த்துப் பரிசோதித்தான் கோவி



பின் புத்தகப் பையைக்கூட அவன் விடவில்லை. சுருட்டி வைக்கப்பட்டிருந்த பாய்களுக்குள்ளும் துழாவினன்.

ஆனல் எவ்வளவு தேடியும் என்ன பயன்! செந்திலுக்கு வெற்றி கிடைக்கவில்லை.

'எங்கே தான் வைத்திருப்பான்?' என்று மூளையைப் பிசைந்தபடி அவன் உலவியபோது, தோப்புக்குப் புறப்பட்ட கூட்டம் திரும்பி வரும் ஓசை அவனை அடைந்தது.

சுற்றுத் திண்ணையில் கிடத்தப்பட்டவரை அடையாளம் கண்டதும், செந்திலின் முகம் விகாரமாக மாறிற்று.

"என்ன இது! அடிபட்டது கோவிந்தன் இல்லையா?"

யாரோ அவனுக்கு விளக்கினர்கள்.

செந்தில் வெகுண்டான். நினைத்தது ஒன்று, நடந்தது ஒன்று!

இதற்குள், வெளியூர் சென்றிருந்த தாசில் ஐயா—சகோதரர்களின் சார்பாக அவர்களது நிலங்களை மேற்பார்த்து வந்தவர்—வந்து சேர்ந்தார்.

அடிக்கொரு தரம் தனது புராதனக் குல்லாயைக் கழற்றிக் கட்டம் போட்ட கைக்குட்டையால் தமது வழுக்கைத் தலையைத் துடைத்துக் கொள்ளும் அவரது பழக்கம் வேடிக்கையாகத் தோன்றினலும், மனிதர் காரியத்தில் சூரனக இருந்தார்.

பதினைந்து மைலுக்கு அப்பாலிருந்த ஒரு பட்டணத்துக்குச் சென்று டாக்டரை வரவழைப்பதைக் காட்டிலும், கூத்தனூர் மிராசுதாருடைய டெலிபோனைப் பயன் படுத்திக்கொண்டால் டாக்டர் தானே புறப்பட்டு வந்துவிடுவாரென்றும், அரை மணி மிச்சமாகுமென்றும் யோசனை சொன்னவர் அவர் தான்.

தாமோதரத்தின் கவலைக்கிடமான நிலை, செந்திலின் வயிற்றைக் கலக்கிக் கொண்டிருந்த விதத்தை அவனது முகம் தெளிவாக எடுத்துக்காட்டிற்று. கோவிந்தனையோ காணும். பத்திரமும் அகப்படவில்லை. தாமோதரத்துக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால்?

ரத்தினமோ, மூன்று இடிகளுக்கு ஏக காலத்தில் இரையாகிவிட்டவன் போல் காணப்பட்டான். தாமோதரத்தைப் பார்க்கப் பார்க்க அவன் கண்கள் கலங்கின. "துளசி! துளசி!" என்று அலறிக்கொண்டிருந்தது உள்ளம். ஊடே, காயமடைந்த கோவிந்தனின் கதி என்ன என்ற குழப்பம்.

குழந்தைகள் எழுந்து அப்பாவை நெருங்கவும் துணிவின்றி, துளசிக்காகவும் பாப்பாவுக்காகவும் அழத் தொடங்கிவிட்டன.

அப்போதுதான், துளசிக்கு நேர்ந்த ஆபத்தைப்பற்றித் தாசில் ஐயாவிடம் யாரோ கூறினர்கள்.

உடனே அவர், இடிந்துபோய் உட்கார்ந்திருந்த ரத்தினத்தைத் தனியே அழைத்து, "நேரம் தாழ்த்தக்கூடாது சார். துளசியை மீட்க ஏற்பாடு செய்ய வேண்டும்," என்று முடுக்கினர். தொடர்ந்து, "நாலா பக்கத்திலும் ஆட்களை விட்டுத் தேடவேண்டும். நம்மிடம் போதுமான பேர் இல்லை. மிராசுதார் கனகசபை இருக்கிரூர் அல்லவா, அவர் உதவியை நாடுவோம். அவருக்குச் சரியான ஆள்கட்டு உண்டு. செந்திலுக்கும் நண்பர் அல்லவா? நிச்சயம் ஒத்தாசை செய்வார்," என்று வாதாடி, சகோதரர்கள் இருவரையும் காருக்கு இழுத்துச் சென்ருர்.

காரின் கியரைப் போட்டுக் கிளட்ச்சை மிதித்த ரத்தினத்தின் பார்வை ஓட்டு பங்களாவிலேயே பதிந்திருந்தது.

"என்ன யோசிக்கிறீர்கள்?" என்ருர் தாசில் ஐயா.

"அவரைத் தனியாக விட்டுப் போகிருேமே!" என்ருன் அவன், தழதழத்த குரலில். "நான் இங்கேயே இருக்கிறேன். நீங்கள் இரண்டு பேரும் போய் விட்டு வாருங்களேன்."

தாசில் ஐயா தமது குல்லாயைக் கழற்றி, கைக்குட்டையால் வழுக்கைத் தலையைத் துடைத்துக் கொண்டார். "என்ன இருந்தாலும் மிராசுதாரிடம் நேரில் நீங்கள் ஒரு வார்த்தை சொன்னல், அதற்குண்டான மதிப்பே தனி..."

அண்ணாவின் மதிப்பை உயர்த்திக் கூறிய அவரைச் செந்தில் பார்த்த பார்வை அந்த இருட்டில் அவருக்கு எங்கே தெரிந்திருக்கப்போகிறது?

ரத்தினம் தயங்கினன். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனக, வண்டிக்குப் பக்கத்தில் நின்ற ஆட்களிடம், "ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள்! தெரிகிறதா?" என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக எச்சரித்துவிட்டு, கிளட்சிலிருந்த காலை மெள்ளத் தூக்கினன்.



## முப்பது

“எசமான் அசந்து தூங்கிட்டிருக்காருங்க. எழுப்பினால் ரொம்பக் கோவிச்சுக்கிடுவாரே!”

தாசில் ஐயா தோல்வியை ஒப்புக் கொண்டு பழக்கப்பட்டவரல்ல. “மிகவும் முக்கியமான விஷயம். நாங்கள் எவ்வளவு நேரமானாலும் காத்திருக்கத் தயார். புரண்டு கொடுக்கிறபோது மெள்ளச் சொல்லிப் பாரேன்.”

“வேண்டாமே,” என்றான் ரத்தினம். “அவர் தூக்கத்தை அனாவசியமாய்க் கலைப்பானேன்! நாமாக ஏதாவது ஏற்பாடு செய்துகொள்ளலாம், வாருங்கள்.”

அவன் சொற்களைத் தாசில் ஐயா ஒரு காதில் வாங்கி மறு காதில் வீட்டு விட்டார். வேலையாளின் தோள்மீது கைபோட்டுத் தனியே அழைத்துச் சென்றவராய், அவனை மசியவைக்கும் முயற்சியில் தீவிரமாக முனைந்தார்.

வராந்தாவில் தூணைப் பிடித்துக் கொண்டு நின்ற ரத்தினம், “என்ன மணியாகிறது!” என்றான்.

மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்தான் செந்தில். “பதினொன்று அடித்துப் பத்து நிமிஷம்.”

வராந்தா விளக்கு, போர்ட்டிகோவில் களைப்பாறிக் கொண்டிருந்த செந்திலின் காரையும், அதற்கு அடுத்தாற்போலிருந்த தோட்டத்தின் ஒரு பகுதியையும் பளிச்சென்று எடுத்துக் காட்டிற்று. மற்றப்படி வானமும் பூமியும் இருளின் மடிப்புக்குள் ஒளிந்து கொண்டிருந்தன. சில்வண்டுகளின் ரீங்காரமும் கொல்லைப் பக்கமிருந்து ஒரு மாட்டின் ‘அம்மா!’ என்ற அழைப்புமே ரத்தினத்தின் செவிகளுக்கு எட்டின.

அவன் தாசில் ஐயா சென்ற திசையில் நோக்கினான். அவர் தனியே நின்றுகொண்டு உள்பக்கம் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய விடாமுயற்சிக்கு முன் பணியாளால் ஈடுகொடுக்க முடியவில்லை போலும்.

முதல் தடவையாக ரத்தினம் தன் சட்டையின் நிலையைக் கவனித்தான். அவனைக் கண்ட மாத்திரத்தில் கனகசபையின் வேலைக்காரன் ஏன் அப்படித் திகைத்தான் என்பதற்கு இப்போது காரணம் விளங்கிற்று. ஒரே ரத்தக் கறை! திட்டுத் திட்டாகக் கருஞ்சிவப்பு நிறத்தில் படிந்திருந்த அந்தக் கறைகள் இரவு நேரத்தில் சற்றுப் பயங்கரமாகக் காட்சியளித்தது இயல்புதான். ஆனால் அவை அவனுக்கு என்னவோ அருவருப்பை ஊட்டவில்லை. சட்டையைக் கழற்றி எறிந்து வேறு உடை அணிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தையும் தூண்டவில்லை. தன் உடலுக்குள் ஓடுவது வேறு; சட்டைமீது படிந்திருப்பது வேறா! இரண்டும் ஒரே ரத்தம்தான். பாவம், எவ்வளவு ரத்தம் சிந்திப் போயிற்றே! இளமையும் வலுவும் தன்னிடம் மதர்த்திருக்கும் பொழுது, மெலிந்து நலிந்த தாமோதரத்தின் தேகத்துக்கா இவ்வளவு

பெரிய காயம் உண்டாக வேண்டும்!

"அதோ! மிராசுதார் வந்து விட்டாரே!"

தாசில் ஐயாவுக்கு ஒரே உற்சாகம். கனகசபையின் முகத்திலும் குதூகலம் கூத்தாடிற்று. "என்னய்யா, படுக்கும் போதுகூட உன் குல்லாயைக் கழற்ற மாட்டாய் போலிருக்கிறதே! ஊம்!" என்று அவன் பரிகசித்துக் கொண்டே வர, தாசில் ஆடா ரத்தினம் நின்றிருந்த பக்கம் அவனை வினயத்துடன் அழைத்தபடி, "உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள்," என்று வழிகாட்ட, கனகசபை கைகூப்பி, "வரவேண்டும், வரவேண்டும்," என்று வணக்கம் தெரிவித்து விட்டு, செந்திலைப் பக்கவாட்டில் பார்த்தபடி, "என்னமிஸ்டர் செந்தில் நாதன்! வந்த காரியம் எல்லாம் நல்லபடியாக முடிந்ததா? நமது ஆட்கள் வேண்டிய வசதி செய்து தந்தார்களா?" என்று விசாரித்துக் கொண்டே மூவரையும் ஹாலுக்குள் அழைத்துச் சென்றான்.

'வீடெல்லாம் சௌகரியமாகத்தான் இருக்கிறது. ஆனால் வந்த காரியம் தான் முடிந்த பாடாக இல்லை' என்று மனத்துக்குள் நினைத்துக்கொண்ட



செந்தில், "கிராமத்துப் பக்கம் இத்தனை வசதியோடு ஒரு மாளிகை இருக்குமென்றுநான் எதிர்பார்க்கவே இல்லை," என்று பாராட்டினான். "நீங்கள் எப்போது வந்தீர்கள்?"

கால் மேல் கால் போட்டுக்கொண்டு சோபாவில் உட்கார்ந்த கனகசபை, "நான் வந்த சமயம், நீங்கள் அப்பொழுதுதான் புறப்பட்டுப் போனதாகச் சொன்னார்கள். ஒரே அசதியாக இருந்தது. குளித்துவிட்டு அப்படியே படுத்துவிட்டேன்."

அவனுடைய வார்த்தைகளைச் சந்தேகிக்க வேண்டிய காரணம் எதுவுமே செந்திலுக்கு இருக்கவில்லை. தனக்கு முன்பே கனகசபை கூத்தானூரை அடைந்துவிட்டான் என்பதையோ, கோவிந்தனைத் தேடிப் பிடித்து அவனைத் தன்மீது ஏவிவிட்டவன் கனகசபைதான் என்பதையோ, மறைவிடத்தில் பதுங்கியிருந்தபோதிலும் சகோதரர்களுக்கிடையே நடந்த சச்சரவின் விவரம் அனைத்தையும் அவன் அறிவான் என்பதையோ செந்தில் உணரமாட்டான்.

தாசில் ஐயா ஒருமுறை செருமினார். "நடு ராத்திரியில் வந்து உங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதற்காக மன்னிக்க வேண்டும்."

"அதொன்றுமில்லை. விஷயத்தைச் சொல்லுங்கள். ரத்தினம் அவர்களோடு நான் நெருங்



கிப் பழகுவதற்கு வாய்ப்பு இருந்ததில்லையே தவிர, அவர்களைப் பற்றி ரொம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன். செந்திலே நிறையச் சொல்லியிருக்கிறார். என்னாலான உதவியைச் செய்ய நான் எப்பொழுதும் தயார்.''

செந்திலின் முகம் சிவந்ததை ரத்தினம் கவனிக்கவில்லை. கனகசபையின் பரந்த உள்ளம் அவனைக் கவர்ந்தது. கோவிந்தனுடைய வர்ணனையைக் கேட்டு ரத்தினம் தன் மனத்துக்குள் கற்பனை செய்துகொண்ட கனகசபைக்கும் எதிரிலுள்ள சோபாவில் கம்பீரமாக உட்கார்ந்துகொண்டு பண்பு சொட்டப் பேசிப் பெருந்தன்மையுடன் நடந்துகொள்ளும் கனகசபைக்கும் சம்பந்தமே கிடையாது போல் தோன்றிற்று. கனகசபையின் கண்கள் சிவந்திருப்பதன் காரணத்தையும் விரல் இடுக்கில் மஞ்சள் ஏறி இருப்பதன் பொருளையும் ரத்தினம் ஊகிக்கத்தான் செய்தான். ஆனால் புகைப் பழக்கமும் குடிப் பழக்கமும் பெரிய பெரிய இடங்களில் எல்லாம் ஊறியிருப்பது அவனுக்குத் தெரியும். அத்தகையவர்கள் இரக்கத்துக்கு உரியவர்கள் என்று அவன் கருதியதுண்டே தவிர வெறுக்கத்தக்கவர்கள் என்று ஒதுக்கியதில்லை. குடிப்பவர்கள் எல்லாம் கெட்டவர்களாக இருக்கவேண்டும் என்பது கட்டாயமா என்ன? செந்திலைப் போலவே கனகசபையையும் தவறாக எடை போட்டுவிட்டான் தம்பி என்ற முடிவுக்கு ரத்தினம் வந்தான்.

தாசில் ஐயா தெரிவித்த செய்தி கனகசபையைத் துள்ளி எழச் செய்தது.

''கூத்தனூரிலேயா இந்த மாதிரி அக்கிரமம் நடக்கிறது? கேட்க சகிக்கவில்லையே! ஏனய்யா, நீர் இருந்துமா இப்படிக் கோட்டை விட்டுவிட்டீர்?''

''நான் வெளியூர் போய்விட்டு இப்பொழுதுதானே வந்தேன்! அண்ணன் தம்பி மூவரும் இங்கே உங்கள் வீட்டில் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்திருக்கிறார்கள். அதற்குள் அங்கே இப்படி நடந்துவிட்டது. போலீஸில் புகார் செய்யலாமென்றாலோ...''

''ஹூம்!'' என்றான் கனகசபை. ''போலீஸில் புகார் செய்வதற்கு, மூன்று முழுக்குப் போட்டுவிட்டுப் பேசாமல் இருந்துவிடலாம். கிழித்துத்தான் விடுவார்கள்.''

''நூற்றிலொரு வார்த்தை,'' என்று ஆமோதித்தார் தாசில் ஐயா. ''கூத்தனூர் மிராசுதார் இவ்வளவு பக்கத்தில் இருக்கும்போது போலீஸாவது பிட்டுக்கூடையாவது என்றுதான் உங்களிடம் வந்திருக்கிறோம். உங்கள் ஆட்களில் பத்துப் பேரை அனுப்பினீர்களானால், இந்த வட்டாரத்தை அப்படியே சல்லடை போட்டுச் சலித்துவிடமாட்டார்களா!'' என்று அவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே கனகசபை ஒருமுறை கைகளைத் தட்டினான்.

வந்து நின்ற பணியாளிடம் அவன் ஏதோ உத்தரவிட, மூன்றாவது நிமிடம் கிருதா மீசைக்காரன் தோன்றினான்.

''அந்த அம்மாளின் உயரம், நிறம் இவற்றைப்பற்றி விவரம் கொடுத்தால் ஆட்கள் தேடுவதற்கு வசதியாக இருக்கும்,'' என்றான் கனகசபை.

தாசில் ஐயா குல்லாயைக் கழற்றித் தலையைச் சொரிந்துகொண்டே ரத்தினத்தைப் பார்த்தார்.

''நடுத்தரமான உயரம். நல்ல சிவப்பு...'' என்று அடுக்கிக்கொண்டிருக்கும்பொழுதே ரத்தினத்துக்குத் தொண்டை அடைத்தது.

சொல்லுக்குள் அடங்கக்கூடியதா துளசியின் தோற்றம்? அவளது கரிய கூந்தலின் நீளத்தையும் உடலின் நிறையையும் இடையின் சுற்றளவையும் கணக்காகச் சொல்வது எளிது. அவள் ஓடி ஆடி வேலை செய்யும்பொழுது அவள் உதடுகளைச் சுற்றி அரும்பும் சின்னஞ்சிறு வியர்வைத் துளிகளின் அழகை வர்ணிக்க முடியுமா? தனிமையில் உட்கார்ந்து அளவளாவும்போது அவள் பேச்சிலே கசியும் தேன் சுவையை விளக்க முடியுமா? அடக்கமும் உரிமையும் ஒருங்கே கலக்க, அவள் அவனைப் பார்க்கும்போதெல்லாம் அந்த விழிகளில் பொங்கும் அன்பை எடுத்துக் கூற இயலுமா? ரத்தினம் ஒருவழியாகச் சில அடையாளங்களைக் குறிப்பிட்டு முடித்ததும் மேற்கொண்டு அங்கே உட்கார்ந்திருக்க விரும்பாதவனாய் விடைபெற்றுக்கொண்டு எழுந்தான்.

கனகசபையின் குரலில் கனிவு தொனித்தது. ''உங்களைப் பார்க்கவே எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படவேண்டாம். உங்கள் துளசிக்கு ஒரு வழி பண்ண நானாயிற்று,'' என்று உறுதி

அணித்தவன், செந்திலைமட்டும் நிறுத்தி வைத்துக்கொண்டான்.

"கொஞ்சம் விளக்கைப் பிரகாசமாய்ப் போட்டால்தான் என்னவாம்? முதலில் மாட்டு வண்டியாக்கும் என்று நினைத்து விட்டேன்," என்று முணுமுணுத்தார் தாசில் ஐயா. "நீங்கள் கொஞ்சம் ஓரமாக ஒதுக்குங்கள். அந்தக் கார் போய்விடட்டும்."

ரத்தினம் ஸ்டீயரிங்கை இடது பக்கமாகத் திருப்பி கியரை மாற்றினான். வண்டி நத்தை வேகத்தில் நகர்ந்தது.

எதிரில் வந்து கொண்டிருந்த அந்தப் பழைய, சிறிய காரின் எண்கள் தெளிவாகத் தெரியத் தொடங்கியதும், "அடடே! இது நமக்குப் பழக்கமான வண்டி போலிருக்கிறதே!" என்று தனக்குள் சொல்லிக்கொண்ட தாசில் ஐயா, "நமது டாக்டருடைய காரல்லவா இது! அங்கேதான் போய்விட்டு வருகிறார் போலிருக்கிறது. டாக்டர், டாக்டர்!" என்று உரக்கக் கூவினார்.

சாலையின் வலது பக்கத்தில் டாக்டரின் வண்டி நின்றது.

தாசில் ஐயா கதவைத் திறந்து கொண்டு டாக்டரிடம் ஓட, ரத்தினம் அவரைப் பின்தொடர்ந்தான்.

அவர்களைக் கண்டதும், "உங்கள் போன் கிடைத்ததும் உடனே புறப்பட்டு வந்தேன். அடிபட்டவரைப் பார்த்துவிட்டேன்," என்றார், இஞ்சினை அமர்த்தியபடி.

"மிக்க நன்றி டாக்டர்," என்றான் ரத்தினம். "அவருக்கு இப்பொழுது எப்படி இருக்கிறது? ஆபத்து ஒன்றுமில்லையே!"

இருட்டில் டாக்டரின் முகம் சரியாகத் தெரியவில்லை. ஒரு விநாடி மௌனமாக இருந்தார்.

"எதற்கும் ஆஸ்பத்திரிக்கே எடுத்துக்கொண்டு வந்துவிடுங்கள்."

"டாக்டர்!" ரத்தினத்தின் அச்சம் அவன் குரலில் பிரதிபலித்தது.

தாசில் ஐயா கேட்டார். "காலையில் கூட்டிக்கொண்டு வரலாமா?..."

"உடனே வாருங்கள்." டாக்டர் கண்டிப்புடன் கூறிவிட்டு விசையைத் திருப்பிப் பொத்தானை அமுக்கினார்.

அவர் கார் மறையும்வரை அதன் சிவப்பு விளக்கையே பார்த்துக் கொண்டு நின்றான் ரத்தினம்.

சாலை ஓரத்திலிருந்த மரங்களின்



### அவசரம அவசரம்

"பாட்டியம்மா, வண்டியை அவிழ்த்துப் போடட்டுமா, இப்படியே நினனுக்கட்டுமா?"

"இப்படியே இரு. மருமகள் ஊரிலே இல்லையாக்கும்னு நினைச்சு வந்தேன். இருக்கிறாப்பலே தெரியுது."

கிளைகள் அசையவில்லை. காற்றென்ற பேச்சையே காணோம்.

"இப்படியே நின்றுகொண்டிருந்தால் என்ன அர்த்தம்! நடக்க வேண்டியதைப் பார்ப்போம்."

தாசில் ஐயாவின் குரல் ரத்தினத்துக்குத் தன்னினைவூட்டிற்று. காரில் வந்து ஏறிக்கொண்டவன் அதை முடுக்கிவிட்டான்.

செந்தில் மாடிப்படி ஏறிவரும் ஓசை கேட்டது. அவன் நடையிலே தென்பில்லை. கர்வம் இல்லை.

கட்டிலில் தொப்பென்று உட்கார்ந்தவன், தலையைப் பிடித்துக்கொண்டு சாய்ந்து விட்டான். எதிர்த்தாற் போலிருந்த சாய்வு நாற்காலியில் புகை ஊதியபடி படுத்திருந்த கனக சபையை அவன் கவனிக்கவில்லை.

சில விநாடிகள் கழிந்தன. சிகரெட் துண்டை ஜன்னல் கம்பிகளுக்கு ஊடே குறிபார்த்து எறிந்த கனக சபை, "டிரங்க் டெலிபோனா!" என்றான்.

செந்தில் பேசவில்லை.

"சென்னையிலிருந்து தானே!" என்றான் கனகசபை தொடர்ந்து.

'ஆம்' என்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தான் செந்தில்.

மற்றவன் மேற்கொண்டு ஏதும்

கேட்காமலிருக்கவே, "நாளை மறுநாள் காலை பதினொரு மணிக்குள் கட்டியாக வேண்டும். இல்லாவிட்டால் •என் திட்டமெல்லாம் தவிடு பொடியாகிவிடும்," என்று விளக்கினான்.

"எவ்வளவு?" கனகசபை தன் மூக்கின் வழியே புகையை ஊதினான்.

செந்திலின் எரிச்சலும் ஏக்கமும் ஒரு பெரு மூச்சாக வெளிப்பட்டன. "கேவலம் ஐம்பதினாயிரம். நான் கூத்தனூருக்குப் புறப்பட்டு வந்த காரியம் பலித்திருந்தால், ஒரே நாளில் நாலு ஐம்பதினாயிரம் திரட்டியிருப்பேன்."

எங்கோ கவனமாய் இருப்பவன் போல் காணப்பட்ட கனகசபை திடீரென்று, "செக்காக இருந்தாலும் பரவாயில்லையா?" என்றான்.

செந்திலுக்குப் புரியவில்லைபோலும். "என்ன கேட்டீர்கள்?"

கனகசபை எழுந்து சென்று செக் புத்தகத்துடனும், வெள்ளைத் தாள், ரெவினியூ தபால் தலை இவற்றுடனும் திரும்பி வந்தான். கையெழுத்திட்ட செக்கை அவன் செந்திலிடம் நீட்டியபோது செந்தில் திக்குமுக்காடிப் போனான். கடன் பத்திரத்தை எழுதும் பொழுது, "வட்டி?" என்றான்.

"இது நட்புக்காகச் செய்கிற காரியம். லேவாதேவியல்ல. அரை வட்டி போதும்."

நன்றிப் பெருக்கால் செந்திலுக்கு நா எழவில்லை. பத்திரத்தில் கையெழுத்திடும்பொழுது விரல்கள் நடுங்கின. ஒருவழியாக, "உங்கள் உதவியை மறக்கமாட்டேன்," என்றான்.

"விட்டுத் தள்ளுங்கள்," என்று அலட்சியமாகக் கையை அசைத்தான் கனகசபை. "தாமோதரத்துக்கு அடி பலமோ?"

செந்திலுக்கு ஆச்சரியமாக இருந்தது. ரத்தினம் இங்கு இருந்த வரையிலோ அதன் பின்போ தாமோதரத்தைப்பற்றி யாரும் பேச்செடுக்கவில்லை. "உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றான்.

கனகசபை மற்றொரு சிகரெட்டைப் பற்றவைத்தான். "எனக்கு ஆயிரம் கைகள்; ஆயிரம் கண்கள். அதைப் பற்றி என்ன? அவரைத் தாக்கியது யாராக இருக்கக்கூடும்?"

"அவருக்கு மூர்ச்சை தெளிந்த பிறகுதான் தெரியும்."

"உங்கள் ஊகம்?"

இருவருடைய கண்களும் சந்தித்தன.

"அவன்தான்," என்றான் செந்தில்.

"நமது பொது எதிரி," என்று ஆமோதித்தான் கனகசபை.

"சந்தேகமில்லாமல் இது கோவிந்தனின் வேலைதான். இங்கிருந்து அவன் புறப்படும்பொழுதே கவனித்தேன். முகம் நன்றாகவே இல்லை. மனத்துக்குள் ஏதோ தீர்மானம் செய்துகொண்டுதான் அவன் கிளம்பியிருக்கிறான். நான் ஏமாந்து விட்டேன்."

"உங்களைக் காட்டிலும் எனக்குக் கோவிந்தனை நன்றாகத் தெரியும். அவன் வெறும் கைப் பொம்மை."

செந்திலின் கண்கள் குறுகின. "யாருக்கு?"

கனகசபை தன் நாக்கு நுனியில் ஒட்டிக்கொண்டிருந்த சிகரெட் காகிதத்தை நகத்தால் சுரண்டி உதறினான். "யாருக்கோ!"

"அப்படியென்றால்?"

"விடுதலைப் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால் யாருக்கு நஷ்டமோ, தாமோதரம் அடிபட்டுச் செத்தால் யாருக்கு லாபமோ, அவனுக்கு!"

செந்தில் யோசனையில் ஆழ்ந்தான்.

"இதெல்லாம் ரத்தினம் நடத்துகிற நாடகம் என்கிறீர்களா?"

"புத்திசாலித்தனமாக நடந்துகொள்ள வேண்டியது உங்கள் பொறுப்பு."

செந்தில் திடீரென்று கிளம்பினான். "நான் உடனே ஓட்டுப் பங்களாவுக்குப் போயாக வேண்டும்."

"அப்படி என்ன அவசரமோ?"

செந்தில் பல்லைக் கடித்தான். "தாமோதரத்தைத் தனிமையில் அணுக ரத்தினத்துக்கு வாய்ப்புத் தரக்கூடாது. என்னுடைய எதிர்காலம் அவருடைய சாட்சியத்தோடல்லவா ஊசலாடிக் கொண்டிருக்கிறது! பத்திரமும் காணோம்; தாமோதரமும் மண்டையைப் போட்டுவிட்டால்..." அதை நினைக்கும்போதே அவனுக்கு உடம்பு சிலிர்த்தது.

"பரவாயில்லை." என்றான் கனகசபை சாவதானமாக.

"எது பரவாயில்லை?" என்றான் செந்தில் கோபத்துடன். "என் எதிர்காலம் பாழாவதா?"

கனகசபை செந்திலின் கையைப் பிடித்து, அருகிலிருந்த ஓர் அறைக்கு

அழைத்துச் சென்றான். "ரத்தினம் பத்திரத்தைக் கிழித்துப் போடலாம். அல்லது தாமோதரத்தைக் கொலை செய்யலாம் ஆனால் விலைமதிக்க முடியாத அவனது பொருள் ஒன்று என் கையிலே—நம் கையிலே, சிக்கியிருக்கிறது. பாருங்கள்." என்று கதவைத் திறந்து விளக்கைத் தட்டிவிட்டான்.

செந்தில் திகைத்தான். ஆம். மேசைப் படுக்கையிலே துயிலும் பிறைச் சந்திரன்போல் மெய்ம்மறந்து உறங்கிக் கொண்டிருந்தவள் துளசியேதான்.

சென்னையிலுள்ள அவர்கள் வீட்டில், படிக்கட்டுக்குப் பின்னாலும், கதவு மறைவிலும், தோட்டத்து மூலையிலும் நின்று கொண்டு எவளைச் செந்தில் பன்முறை தன் விழிகளால் சுவைத்திருக்கிறானோ, எவள் அவனைப் பார்த்ததும் மருண்டு ஓடிப் பதுங்கிவிடுவாளோ, எவளைக் கோயமுத்தூரில் முதன்முதல் கண்டவுடன் தனக்கேயுரியவள் என்று அவன் மனத்துக்குள் முடிவு கட்டியிருந்தானோ, எவளை அவனிடமிருந்து ரத்தினம் பறித்துக் கொண்டானோ. அவள் இதோ படுத்திருக்கிறாள். நாணமோ, தயக்கமோ, மறுப்போ இன்றி, நல்விருந்தாக அவனுக்குக் காட்சியளித்த வண்ணமாயிருக்கிறாள். பார்க்கப் பார்க்க. அவன் ரத்தக் குழாய்களில் தீக் - குழம்பு பாயத் துவங்கிவிட்டது அவன் ஒரு புரட்சிக்கு ஆளானான். ஆண்களிடையே ஒரு சிங்கமாகப் பழகத் தெரிந்த அவனுக்கு, பெண்களை நிமிர்ந்து பார்க்க மட்டும் என்றுமே துணிச்சல் இருந்ததில்லை. இப்போது, துளசியின் புருவங்களையும், அதரங்களையும், கை வளைகளையும் அவன் வைத்த கண் வாங்காமல் நோக்கிக் கொண்டிருக்க இருக்க, அவனுக்குள் இளமை குமுறிற்று. ஆண்மை பூத்தது.

"பாப்பாவைத் தூக்கிவரச் சொன்னேன். தவறுதலாக, இவளைக்கொண்டு வந்துவிட்டார்கள். ரத்தினத்திடம் சாதிக்க வேண்டியதை எல்லாம் இவளைக் கொண்டு அடைந்துவிடலாம். இவள் அவன் உயிர்," என்றான் கனகசபை.

"என் உயிருங்கூட," என்று முழங்கிற்று செந்திலின் இதயம்.




## முப்பத்தொன்று

சுற்று முற்றும் ஒரு முறை பார்த்துவிட்டுக் கார்க் கூடத்தைத் திறந்தான் கனகசபை.

விளக்கு விசை அண்மையிலேயே இருந்தபோதிலும் அதை அவன் நாடவில்லை. வண்டியின் பின்புறத்தில் வீங்கினாற்போல் உப்பியிருந்த பெட்டியையும் வலக் கதவுகளின் வழுவழுப்பான மேற்பரப்பையும் தடவியபடி மெள்ள முன்னேறியவன், கைப்பிடியைப் பற்றியவாறு தாழ்ந்த குரலில் அறிவித்தான்.

"கார் வேண்டுமாம், அவர்களுக்கு. ஐந்து நிமிடத்தில் வந்து விடுகிறேன். இரு." எந்த இடத்தை நோக்கிப் பேசினானோ அங்கிருந்து எவ்விதச் சலனமும் ஏற்படவில்லை. இருளைப் போலவே மௌனமும் அடர்ந்திருந்தது.

கனகசபை வண்டியை வெளியே எடுத்துப் போர்ட்டிகோவுக்கு ஓட்டிச் சென்றான். வராந்தாவில் காத்துக் கொண்டிருந்த செந்திலிடம் அதை ஒப்படைத்து, "பிரேக்கைப் பழுது பார்க்க வேண்டியிருக்கிறது. எதற்கும் ஜாக்கிரதையாகவே போங்கள்," என்று எச்சரித்தான்.

"இந்தக் கலாட்டாவில் மறந்தாலும் மறந்து விடுவேன். நீங்களே தயவு செய்து தபாலில் சேர்ப்பித்து விடுகிறீர்களா?" டிரைவரின் ஆசனத்தில் உட்கார்ந்த செந்தில், சட்டைப் பையிலிருந்து ஓர் உறையை எடுத்து நீட்டினான்.

"ஆகா! காலையில் முதல் வேலையாகச் செய்துவிடுகிறேன். உள்ளே செக் வைத்திருக்கிறீர்கள் அல்லவா? ரிஜிஸ்டரிலேயே அனுப்பிவிடச் சொல்கிறேன்."

"உங்களுக்கு எப்படி நன்றி கூறுவதென்றே தெரியவில்லை," என்றான் செந்தில்.

"இதென்ன பிரமாதம்!"

"தபாலில் சேர்ப்பதைச் சொல்லவில்லை. செக் கொடுத்ததைக் குறிப்பிடுகிறேன்."

கனகசபை சிரித்தான். "என்னைப் பொறுத்தவரையில் அதுவும் ஒரு பிரமாதமில்லை!" என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே, ஜிப்பாப் பையில் திணிக்கப் பட்டிருந்த கை விரல்கள் உறையைக் கசக்கிக் கொண்டிருந்தன.

செந்தில் மறைந்ததும், அருகிலிருந்த பூந்தொட்டிக்குள் உறையைக் கிழித் தெறிந்த கனகசபை, கார்க் கூடத்தை நோக்கி விரைந்தான்.

ஆனால் இம்முறை உள்ளே நுழையவில்லை. திறந்த கதவைப் பிடித்துக் கொண்டு, "எல்லோரும் போய்விட்டார்கள்," என்றான்,

கூடத்தின் உட்புறத்திலிருந்து யாரோ நகர்ந்துவரும் மெல்லிய அரவம் கேட்டது. 'யார் வந்திருந்தார்கள்?" என்றது, பயத்தால் கரகரத்த ஒரு குரல்.

"வேறு யார்?" என்றான் கனகசபை. "ரத்தினம், செந்தில், தாசில் ஐயா."

மற்றவன் எச்சில் விழுங்கினான். "என்னவாம்?"

"பயந்தபடி ஆயிற்று. தாமோதரம் மண்டையைப் போட்டுவிட்டாராம்."

"ஆ!"

"கொலை செய்தவனைப் பிடிக்க வேண்டுமென்று துடித்துக் கொண்டிருக்கிறார்கள் அவர்கள். எனது பண்ணையாட்களையும் விட்டுத் தேட வேண்டும் என்று கேட்டுக்கொண்

டார்கள், ஏழெட்டுப் பேரை அனுப்பி யிருக்கிறேன்.''

இருளில் மறைந்திருந்தவனுக்கு மூச்சு வாங்கிற்று. குரல் நடுங்க, ''ஆள் இன்னாரென்று தெரிந்து விட்டதா?'' என்றான்.

அடித்தொண்டையில் அப்போது கனகசபை சிரித்த சிரிப்பைக் கேட்டிருந்தால் பேய்க்குக்கூட மயிர்க்கூச் செறிந்திருக்கும். ''அப்படியொன்றும் துப்பறியும் சிங்கம் தேவையில்லையே கொலை செய்தவனைக் கண்டு பிடிக்க? இரண்டு சண்டைக்காரர்கள் இரவில் புறப்பட்டுப் போனார்கள். ஒருவன் அடிபட்டுச் செத்துவிட்டான். மற்றவன் போன இடம் தெரியவில்லை. குழந்தையைக் கேட்டால்கூடச் சொல்லுமே குற்றவாளி யார் என்று?''

''கனகசபை!'' ஓசையின் அளவில் இல்லாவிட்டாலும் வேதனையின் ஆழத்தில் பிரசவ வேதனையை நினைவூட்டிற்று அந்த அழைப்பு.

''கையை விடு,'' என்று உதறினான் கனகசபை, வியர்வை கசியும் மற்றவனுடைய பிடியை விரும்பாதவனாய்.

''கனகசபை, இப்பொழுது நான் என்ன செய்யட்டும் கனகசபை? தலை பம்பரமாகச் சுற்றுகிறது. எல்லாம் ஒரே குழப்பமாக இருக்கிறது.''

''இருக்காதா பின்னே!'' என்றான் கனகசபை எகத்தாளமாக.

''அவரைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணம் எனக்குக் கொஞ்சம் கூட இல்லையே! அவர் எப்படிச் செத்தார்?''

''மண்டை ஓடே சிதறுங்கிப் போய்விட்டதாம். அந்த வினாடியே உயிர் பிரிந்து விட்டதென்று டாக்டர்...''

அதற்குள் மற்றவன் கனகசபையின் வாயைப் பொத்திவிட்டான். ''எனக்குத் தலை நடுங்குகிறது. கொஞ்சம் பேசாமல் இரேன்.''

''நான் பேசாமலிருந்து விடுவேன். தந்தையைப் பறிகொடுத்த ரத்தினமும் பாப்பாவும் பேசாமல் இருப்பார்களா? அவர்களது புகாரைப் பதிவு செய்து கொள்ளப் போகும் போலீஸார் வாயை மூடிக் கொண்டிருப்பார்களா? சட்டம் வாளாவிருக்குமா? நீதிபதி சும்மா உட்கார்ந்திருப்பாரா? அல்லது இவர்களெல்லாம் கூடித் தீர்ப்புச் சொன்ன பிறகு, தூக்குமேடைதான் தூங்கிக் கொண்டிருக்குமா?''

திரிகை மீனின் வாலைப் போல விளாசி விட்டது கனகசபையின் நா.

ஒரு வினாடி மௌனம்.

மூசு மூசென்று அழும் ஓசையிலிருந்து, தரையில் உட்கார்ந்திருக்கும் உருவத்தைக் கனகசபையில் கற்பனை செய்து கொள்ள முடிந்தது. ''செய்வதையும் செய்துவிட்டுப் பெட்டை மாதிரி அழுகிறாயா!''

விம்மல்களுக்கிடையே பதில் வந்



தது. "எப்படியோ ஆரம்பித்து எப்படியோ முடிந்து விட்டதே! எனக்கு எங்கிருந்து இந்தப் புத்தி வந்தது! அண்ணாவுக்கு நல்லது செய்வதாக நினைத்து, எவ்வளவு பெரிய பாதகத்தைச் செய்து விட்டேன்!" கோவிந்தனுக்குள் துக்கம் குமுறிற்று. "அவருடைய பாகத்தைக் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும் என்று நினைக்கப் போய், தாமோதரத்தின் தலையையும் அண்ணாவின் நெஞ்சையும் பிளந்து விட்டேனே பாவி! அவருடைய முகத்தில் இனிமேல் எப்படி விழிப்பேன்! 'தம்பி, நீயா இந்தக் காரியம் செய்தாய்!' என்று அவர் கண்கள் என்னைக் கேட்கும்பொழுது நான் என்ன வென்று பதில் சொல்லுவேன்!"

"உஸ்ஸ்..." என்றான் கனகசபை. "உன்னுடைய ஒப்பாரியை நிறுத்திக் கொள்ளப் போகிறாயா இல்லையா? உன் குரல் கேட்டு யாராவது வந்துவிட்டால் அப்புறம் நான் பொறுப்பில்லை."

அச்ச மேலீட்டால் துள்ளி எழுந்தான் கோவிந்தன். "இனிமேல் பேச மாட்டேன் கனகசபை! என்னைக் காப்பாற்று."

ஆனால் தனது வாக்குறுதியைக் காப்பாற்றக் கூடிய வலு கோவிந்தனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. சில விநாடிகள் சும்மா இருந்தவன் மறுபடியும் ஆரம்பித்து விட்டான்.

"நேற்றுத்தான் நடந்தது போலிருக்கிறது கனகசபை. ஒரு நாள் இரவு, மாமாவுடைய தகனக் கிரியைகளையெல்லாம் முடித்துவிட்டுக் கோவையிலிருந்து துளசியுடன் நாங்கள் சென்னைக்குக் காரில் திரும்பிக் கொண்டிருந்தோம். எல்லோருக்கும் தூக்கக் கலக்கம். ஆனால் அண்ணா மட்டும் கண்ணிமைக்காமல் கவனத்துடன் காரை ஓட்டிக் கொண்டிருந்தார். ஒரு டீக் கடையண்டை நிறுத்தித் தேனீர் குடித்ததும் நான் அவரிடம் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு, ஓட்டும் பொறுப்பை வாங்கிக் கொண்டேன். ஒரே குஷி எனக்கு. அறுபது எழுபது என்று வண்டி பிய்த்துக் கொண்டு போயிற்று. நான் ஒழுங்காக ஓட்டுகிறேன் என்ற நம்பிக்கையில் அண்ணா சாய்ந்து உட்காரும் சமயம், திடீரென்று சாலையின் நடுவே ஒரு மாடு அசையாமல் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. கேட்கிறாயா கனகசபை!"



"சொல்லு."

"ஹாரன் சப்தத்தைக் கேட்டு அந்த மாடு இம்மியும் அசையவில்லை. காரோ அதற்கு வெகு சமீபத்தில் வந்துவிட்டது. எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. ஆக்ஸிலரேட்டரிலிருந்து காலை எடுக்கக் கூடத் தோன்றவில்லை. முரட்டு மாடு அது. அந்த அசுர வேகத்தில் அதன்மீது கார் ஏறினால் எங்களுக்குத்தான் ஆபத்து. சற்று விலகலாம் என்றாலோ, சாலை



"ஏண்டா! எப்படி டயர் பஞ்சராச்சு?"

"ஒரு கண்ணாடி பாட்டில் மேலே ஏறிட்டதுங்க!"

"ஏண்டா! உனக்குக் கண் குருடா? பாட்டில் கிடக்கிறது கண்ணுக்குத் தெரியலே?"

"இல்லீங்களே! அதை ஒரு மனுசன் தன் பாக்கட்டிலே வைத்துக்கிட்டு இருந்தாரே!"

யோரத்திலிருந்த மரங்கள் மீது மோத வேண்டியதுதான். என் ரத்தமெல்லாம் உறைந்துவிட்டது. இன்றைக்குச் செத்தோம் என்று புரிந்துகொண்டுவிட்டேன். அப்போது அண்ணா என்ன செய்தார் தெரியுமா?" அந்தச் சம்பவத்தை வர்ணிக்கும்பொழுது அந்த நிலையிலும் கோவிந்தனின் குரலில் பெருமை பூரித்தது. "எங்கிருந்து தான் அவருக்கு அந்த அமைதியும் சமயோசித புத்தியும் வருமோ! நான் செயலற்றுப் போனதைத் தெரிந்துகொண்டார். எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தபடி சிறிதும் அலட்டிக்கொள்ளாமல், தனது வலது கையை மட்டும் ஸ்டீயரிங்கில் வைத்தார். ஒரு பக்கமாக அதைச் சற்றே ஒடித்தார். தொடர்ந்தாற்போல் லாகவமாக நேர்ப்படுத்தியும்விட்டார். அவ்வளவுதான். மாடும் தப்பிவிட்டது. நாங்களும் பிழைத்துவிட்டோம். செந்தில் என்னைப் பார்த்து, 'முட்டாள்!' என்று திட்டினான். அச்சத்தாலும் அவமானத்தாலும் கூனிக் குறுகி வண்டியை ஆமை வேகத்தில் ஓட்டத் தொடங்கினேன். அண்ணாவின் குணம் எப்பேர்ப்பட்டது! என்பதை விளக்குவதற்காகத்தான் இதைச் சொல்கிறேன். என் மனநிலை அவருக்குப் புரிந்துவிட்டது. என் முதுகில் தட்டிக் கொடுத்தார். 'தவறு நேர்வது சகஜம். பயப்படாதே. தைரியமாக ஓட்டு. நானிருக்கிறேன்' என்று நம்பிக்கையூட்டினார்."

கனகசபை குத்தலாக மொழிந்தான். "ஆனால் இந்த மாதிரித் தவறை அவர் குறிப்பிட்டிருப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை."

"உண்மைதான்." கோவிந்தனின் உற்சாகமெல்லாம் வடிந்துவிட்டது. "அண்ணா என் பக்கத்தில் இருந்தால் இந்த உலகத்துக்கே சவால் கொடுப்பேன். ஜயிக்கவும் ஜயிப்பேன். ஆனால் இப்போது அவர் என் பக்கத்தில் இல்லை என்பது மட்டுமல்ல. அவரையே பகைத்துக் கொண்டும்விட்டேனே! இனிமேல் நான் யாருக்காக வாழ வேண்டும்!"

கனகசபை நிதானமாக ஒரு சிகரெட்டை எடுத்து உதடுகளுக்கிடையே செருகி, பற்ற வைத்தான். குபீரென்று பளிச்சிட்ட சிகரெட் லைட்டர் இருளைப் படீரெனக் கிழித்தெறிந்தது. ஒரு விநாடி திகைத்து நின்ற கோவிந்தன் கூடத்தின் உட்புறத்துக்குப் பாய்ந்து பதுங்கினான்.

கனகசபையின் முகத்தில் படர்ந்த அந்தப் பரிகாசப் புன்னகை கோவிந்தனுக்குப் புலப்பட்டிருக்க முடியாது. "எங்கே உயிரை வெறுத்துவிட்டாயோ என்று பயந்து போனேன். ஆனால் அது இன்னும் உனக்கு வெல்லமாகத்தான் இருக்கிறது போலும்," என்ற முணுமுணுப்பும் அவன் செவிகளுக்கு எட்டியிருக்க முடியாது.

"ஆமாம், என்னதான் நடந்தது!" என்றான் கனகசபை. தொடர்ந்து, "நமது பண்ணையாள் ஒருவன் வழிக்கு வராமல் தகராறு பண்ணிக்கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில்தான் யாரோ கார் ஷெட்டில் ஒளிந்துகொண்டிருப்பதாகச் சொன்னார்கள்.

ஓடிவந்தேன், பார்த்தாய் நீ!'' தான் குறிப்பிட்ட தகராறு பண்ணையாளோடு அல்ல, துளசியோடு என்று வெளியிடுவது அவசியமெனக் கனகசபை கருதவில்லை.

"நான் ஒன்றுமே செய்யவில்லை கனகசபை. என்னை நம்பு. ஏதோ ஒன்று எனக்குள் புகுந்து கொண்டு என்னை இப்படியெல்லாம் ஆட்டிவைத்துவிட்டது. தாமோதரத்தின் மீது எனக்கு எப்போதும் ஆத்திரம் உண்டு என்பது உண்மைதான். ஆனால் அவர் உயிருக்கு உலைவைக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு எப்போது உண்டாயிற்று தெரியுமா? அண்ணா என்னிடம், 'விடுதலைப் பத்திரத்தை நீ திருப்பித் தரவில்லையென்றே வைத்துக்கொள்வோம் அதனால் ஒன்றும் கெட்டுப் போய்விடாது. தாமோதரம் இருக்கும்வரை, வேண்டிய சாட்சியம் செந்திலுக்கு இருக்கிறது.' என்று எப்போது சொன்னாரோ, அந்த வினாடியே என் பகுத்தறிவை இழந்துவிட்டேன். அண்ணா இன்னும் என்னென்னவோ எல்லாம் சொன்னார். ஒன்றுமே காதில் ஏறவில்லை. 'தாமோதரம் உயிரோடு இருக்கும் வரைதானே இந்தச் சிக்கலெல்லாம்!' என்ற யோசனை என் புத்தியை இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டுவிட்டது. அண்ணாவுக்கு நான் செய்யக்கூடிய பேருதவி தாமோதரத்தைத் தீர்த்துக் கட்டுவதுதான் என்று தீர்மானித்து விட்டேன்.''

"கொலை செய்வது அவ்வளவு சுலபம் என்று நினைத்துவிட்டாயாக்கும்!'' என்றான் கனகசபை.

மனச் சாட்சியின் உறுத்தலாலும் எதிர்காலத்தைப் பற்றிய அச்சத்தாலும் கவ்வப்பட்டவனைக் கோவிந்தன் அடுக்கினான். "அப்படித்தான் நினைத்துவிட்டேன் போலும். இல்லாவிட்டால் 'வண்டி கட்டட்டுமா?' என்று கேட்ட வேலையாளுக்குப் பதிலொன்றும் சொல்லாமல் வேகமாக உன் வீட்டைவிட்டு வெளியேறியிருப்பேனா? விடுதலைப் பத்திரத்தை வாங்கி வருவதற்காகத் தாமோதரத்தைச் செந்தில் என் பின்னோடு அனுப்புவான் என்ற திட நம்பிக்கையோடு அவரைச் சாய்த்துவிடத் திட்டம் போட்டிருப்பேனா! நேர் வழியில் போகாமல் சாலைக்குச் சற்றுத் தொலைவிலிருக்கும் இருண்ட தோப்புக்குள் நுழைந்து, அங்கே கிடந்த துறட்டி ஒன்றைக் கையிலெடுத்துக் கொண்டு காத்திருந்திருப்பேனா? ஊருக்குப் புதியவரான தாமோதரம் அதுதான் குறுக்கு வழி தோன்றும் என்று நினைத்துத் தோப்புக்குள் நுழைந்தபோது அவர் மண்டையில் ஓங்கி ஒரு போடு போட்டிருப்பேனா?''

கனகசபை குறுக்கிட்டான். சிகரெட்டின் செம்புள்ளி மலர்ந்து குவிந்து, அவன் ஒருமுறை புகை இழுத்து ஊதியதைக் காட்டிற்று. "உன் தலையிலுள்ள கட்டு? அது எப்படி வந்தது?''

"அதுதான் எனக்கும் விளங்கவில்லை!'' என்று குழம்பினான் கோவிந்தன். "தாமோதரம் 'ஐயோ!' என்று அலறியபடி விழுந்தார். ஆனால் எனக்கு ஆவேசம் அடங்கவில்லை. மறுபடியும் கம்பை ஓங்கினேன். அதற்குள் ஏதோ ஒன்று என் தலையைத் தாக்கிற்று. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். கண் விழித்தபோது, நான் தரையில் கிடந்தேன். நெற்றியைச் சுற்றிக் கம்பி கட்டி இறுக்கினாற் போலிருந்தது வலி. யாராலோ நல்ல சமயத்தில் போடப்பட்ட இந்தக் கட்டு, ரத்தப் பெருக்கைத் தடுத்துவிட்டிருந்தது. தள்ளாடிக் கொண்டே எழுந்தேன். தாமோதரத்தைக் கண்டதும் திடுக்கிட்டேன், மனிதர் பேச்சு மூச்சற்றுக் கிடந்தார். எனக்குக் பகீர் என்றது. மனிதர் செத்துவிட்டாரோ! கிலியால் பீடிக்கப்பட்டு என் உடம்பு வெடவெடவென்று உதறிற்று. அந்த இடத்தில் அதற்குமேல் அங்கு நிற்பது அபாயமென்று தோன்றவே ஓட்டமெடுத்தேன். என்னை அறியாமலே என் கால்கள் உன் வீட்டுக்கு என்னை இழுத்து வந்துவிட்டன, இவ்வளவுக்கும் நீ இங்கிருப்பது எனக்கு ஞாபகமில்லை. எங்காவது பதுங்கிக்கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். அதற்குமேல் ஓட உடலும் இடம் கொடுக்கவில்லை. ஷெட் கதவு திறந்திருந்தது. உள்ளே நுழைந்தேன் அதற்குள் உன்னுடைய ஆள் பார்த்து விட்டான்...கனகசபை! எங்கே போகிறாய்?''

"யாரோ வந்திருக்கிறாற்போலிருக்கிறது,'' தொலைவில் எழுந்த பேச்சுக் குரல்கள் அவன் கூறியதை உறுதி செய்தன.

பத்து நிமிடம் கழித்துத் திரும்பி வந்த கனகசபையின் பேச்சில் அவசரமும் திகிலும் தொனித்தன. "கோவிந்தா, நீ இனிமேல் இங்கிருக்கக் கூடாது."

கோவிந்தன் திகைத்தான். "ஏன்?"

"ஏனா!" என்றான் கனகசபை. "என் கையிலும் விலங்கு மாட்டிப் பார்க்க ஆசைப்படுகிறாயா?"

கோவிந்தனுக்குத் தொண்டை அடைத்தது. "இப்போது நான் எங்கே போவேன்!"

"யாருக்குத் தெரியும்? கொலை செய்வதற்கு முன்னால் என்னைக் கேட்டுக் கொண்டா செய்தாய்?"

மற்றவன் கெஞ்சினான். "கனகசபை, நம் இருவருக்குமுள்ள நட்பின் தன்மையை எண்ணிப் பார் கனகசபை!"

"என்ன வேண்டியது தான், ஜெயில் கம்பிகளை," என்று சிரித்தான் கனகசபை. "அந்த அதிர்ஷ்டத்தை நீயே அனுபவித்துக்கொள் அப்பா, எனக்குப் பங்கு வேண்டாம்."

"உன்னை ஒருத்தரும் ஒன்றும் செய்ய முடியாது, கனகசபை. நீ நினைத்தால் எது வேண்டுமானாலும் நடக்குமே!"

"நடக்காது கோவிந்தா, பறக்கும்!" என்று மறுத்தான் கனகசபை. "கூத்தனூர் மிராசுதார் தன் வீட்டில் ஒரு கொலைகாரனை ஒளித்துவைத்திருந்தார் என்ற செய்தி போலீசுக்கு எட்டினால் அவர் மானம், மட்டு மரியாதையெல்லாம் காற்றிலே பறந்து விடாதா!"

"இந்நேரம் அமைதியாகத்தானே இருந்தாய்! இப்போது திடீரென்று மாறிவிட்டாயே?"

"உன்னைத் தேடுவதற்காக ஆட்களை அனுப்பினேன் அல்லவா? அவர்கள் திரும்பி வந்து தகவல் தந்தார்கள். விஷயம் போலீஸாருக்கு எட்டிவிட்டதாம். அவர்களும் வேலையை ஜரூராக ஆரம்பித்து விட்டார்களாம், என் ஆட்கள் சொன்னார்கள். கோவிந்தா, உனக்குப் புண்ணியமாகப் போகட்டும். தயவு செய்து போய் விடேன்!"

சொல்லில் அடங்காத ஓர் உணர்ச்சித் தாக்குதல் கோவிந்தனை மல்லாத்தி விட்டது போலும். உடன் பிறந்த விரோதியான செந்திலும், கசப்படைந்துவிட்ட ரத்தினமும், கோபாவேசமுற்ற பாப்பாவும் நிறைந்த உலகத்தில் தன்னைக் காப்பாற்றக்கூடிய ஒரு மனிதன் இருக்கிறானென்றால் அவன் கனகசபையாகத்தான் இருக்க முடியும் என்று ஊகித்த கோவிந்தன், தனது நண்பனின் காலில் விழுந்து கோவெனக் கதறிவிட்டான்.

கனகசபை தடுக்கவில்லை. சிகரெட்டைச் சாவதானமாகக் குடித்தபடி அவன் பெருமிதத்துடன் நின்றுகொண்டிருந்தான். கோவிந்தனின் கண்களிலிருந்து உதிர்ந்த ஒவ்வொரு துளி நீரும் தன் பாதங்கள்மீது தூவப்படும் மலராகக் கருதினானோ! பாப்பா விஷயத்தில் தன்னிடம் வாலாட்டியவனுக்குச் சரியாகப் பாடம் கற்பித்து விட்டோம் என்று கர்வப் பட்டானோ! அல்லது எதிர்காலத்தில் நேரவிருக்கும் சம்பவங்களை ஊகித்து உவகையில் மிதந்தானோ! அசையாமல் கொஞ்ச நேரம் நின்றிருந்தான்.

பிறகு கோவிந்தனது தோளைத் தொட்டு, "எழுந்திரு," என்றான்.

"என்னைக் காப்பாற்றுவதாக வாக்களித்தாலொழிய நான் எழுந்திருக்க மாட்டேன்." என்றான் கோவிந்தன்.

"முதலில் நான் சொல்கிறபடி நீ நடப்பதாக வாக்குக் கொடுக்க வேண்டும்."

"என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார்," என்றான் கோவிந்தன்.

"அப்படியானால் உனக்கு ஒரு ஆபத்தும் வராது, எழுந்திரு," என்றான் கனகசபை.

கோவிந்தன் எழுந்தான், கனகசபையின் அடிமையாக.

## சதி பழி



"இன்றைக்குக் காப்பி போட்டுக் கொடுத்திருந்தாயே, மகா மட்டம்."

"அதிலே என்ன இவ்வளவு சந்தோஷம்?"

"காப்பியை மானேஜருக்கு அப்படியே கொடுத்துவிட்டேன்!"



## கூத்தனூரில் நடந்த கூத்து

### முதல் நாள்

மாலை 6-00 : பிரா சுதார் கனகசபை ரகசியமாகக் கூத்தனூரை அடைகிறான்.

இரவு 7-00 : பழுதாகிவிட்ட காரை ஒரு வழியாகச் சரிசெய்து கொண்டு செந்திலும் தாமோதரமும் கூத்தனூர் வந்து சேர்ந்து, சென்னையில் கனகசபையிடமிருந்து வாங்கி வந்த அறிமுகக் கடிதத்தின் உதவியால், அவனது மாளிகையில் தங்குகிறார்கள். கனகசபை அங்கு வந்திருக்கும் விவரம் அவர்களுக்குத் தெரியாது.

,, 10-15 : ஏரிக் கரையில் கோவிந்தனும் கனகசபையும் சந்திக்கிறார்கள். குடிபோதையில் தான் பாப்பாவுக்கு இழைக்க முயன்ற தவறுகளுக்காக நண்பனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்ட கனகசபை, ரத்தினத்திடம் கையெழுத்து வாங்கி அவன் சொத்தைப் பறிக்கும் பொருட்டுச் செந்தில் சென்னையிலிருந்து புறப்பட்டு வந்திருப்பதைத் தெரிவிக்கிறான்.

,, 3-00 : கோவிந்தனும் பாப்பாவும் செந்திலின் அறையிலிருந்து பத்திரத்தைக் கைப்பற்றி விடுகிறார்கள்.

### இரண்டாம் நாள்

காலை 10-00 : செந்தில் தான் வந்திருக்கும் தகவலை ரத்தினத்திற்கு [illegible] அனுப்புகிறான்.

,, 11-00 : செந்திலையும் தாமோதரத்தையும் சாப்பாட்டுக்கு அழைத்து வருவதாக ரத்தினத்திடம் கூறிப் புறப்பட்ட கோவிந்தன், கனகசபையின் மாளிகையில் செந்திலோடு மோதுகிறான். 'பத்திரமும் பலிக்காது, பாப்பாவும் கிடைக்க மாட்டாள்' என்று எச்சரித்துவிட்டு வருகிறான்.

இரவு 6-30 : தான் பகலில் அயர்ந்து உறங்கியபோது செந்திலைச் சந்திப்பதற்காக ரத்தினம் புறப்பட்டுப்போன செய்தி அறிந்ததும் கோவிந்தன் கனகசபையின் மாளிகைக்கு விரைகிறான்.

,, 7-00 : பத்திரத்தைத் திரும்பக் கொடுத்து விடுமாறு கோவிந்தனுக்கு ரத்தினம் கட்டளை இடுவதுடன், தாமோதரம் உயிரோடு

இருக்கும்வரை செந்திலின் கட்சியை அசைக்க முடியாது என்பதைப் பேச்சுவாக்கில் வெளியிடுகிறான்.

இரவு 7-10. ஓட்டுப் பங்களாவுக்குத் தன் பின்னேடு யாரையாவது அனுப்பினால் அவரிடம் பத்திரத்தை ஒப்படைத்துவிடத் தயார் என்று செந்திலிடம் அறிவித்துவிட்டுக் கோவிந்தன் வெளியேறுகிறான். செந்தில் தாமோதரத்தை அனுப்பிவிட்டுப் பின்னர் மாட்டு வண்டியையும் போகச் சொல்லுகிறான்.

7-20 தோப்பில் மறைந்திருந்த கோவிந்தன் தாமோதரத்தைப் பலமாகத் தாக்கிய மறு நிமிடம் அவன் மண்டையில் யாரோ அடித்துச் சாய்த்து விடுகிறார்கள். இருளில் தாமோதரமும் கோவிந்தனும் கொஞ்சம் இடைவெளி விட்டு விழுந்து கிடக்கிறார்கள்.

7-45. இதற்கிடையே, பாப்பாவைத் தூக்கி வருமாறு தன் ஆட்களுக்குக் கனகசபை கட்டளை இடுகிறான். அவர்கள் தவறுதலாகத் துளசியைக் கொண்டுவந்து விடுகிறார்கள்.

8-00. அவர்களைப் பின்தொடர்ந்த பாப்பா, தோப்பில் மயக்கமுற்றுக் கிடக்கும் கோவிந்தன்மீது தற்செயலாக இடறி விழுகிறாள். அவன் தலையில் கட்டுப் போட்டுவிட்டு, உதவிக்காக ஓட்டுப் பங்களாவுக்கு விரைகிறாள்.

8-30: தாமோதரத்தைக் காணுமல், ரத்தினமும் செந்திலும் ஓட்டுப் பங்களாவுக்கு வருகிறார்கள். குழந்தைகளைத் தவிர வேறு யாரும் இல்லாதது கண்டு மலைக்கும்பொழுது, கோவிந்தன் அடிபட்டுக் கிடக்கும் தகவலைப் பாப்பா ஓடிவந்து கூறுகிறாள்.

8-40. ரத்தினத்தின் கோஷ்டி தோப்பை அடைவதற்குள் மயக்கம் தெளிந்த கோவிந்தன், தாமோதரத்தின் நிலை கண்டு பதறி, கால் போன திசையில் ஓட்டம் பிடிக்கிறான்.

இரவு 8-50. கனகசபையின் மாளிகையிலிருந்து தப்பியோட முயலும் துளசி காய மடைவதுடன், அவசர சிகிச்சை செய்ய முனையும் கனகசபையை வெறுத்துத் தள்ளுகிறாள். வெகுண்டெழுந்த கனகசபையின் காதுக்குள் கார் ஷெட்டில் யாரோ ஒளிந்திருப்பதாக வேலைக்காரன் அறிவிக்கிறான்.

10-00: ஓட்டுப் பங்களாவுக்குத் தாமோதரம் எடுத்துவரப் பட்டதும் டாக்டரை வரவழைக்க ஏற்பாடுகள் செய்யப் படுகின்றன. துளசியை மீட்கத் தாசில் ஐயா சொன்ன யோசனையின் பேரில், அவரை அழைத்துக்



மேஸ்திரி:—என்னப்பா இது! எப்பொழுதும் டீ வாங்கிவரச் சொன்னல் பச்சைத் தண்ணி மாதிரி ஆறிப்போனதாய் வாங்கி வருகிறாயே?

கொண்டு ரத்தினம் செந்திலுடன் கனகசபையின் மாளிகைக்குச் செல்கிறான்.

இரவு 11-15: ரத்தினத்தின் வேண்டுகோளுக்கிணங்கத் துளசியைத் தேடிக் 'கண்டு பிடிக்குமாறு' கனகசபை தன் ஆட்களை ஏவுகிறான்.

12-00: ரத்தினம் விடை பெற்றுச் சென்றபின், கனகசபை செந்திலைத் தனியே அழைத்துச் சென்று, தூக்க மருந்தின் விளைவாக அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் துளசியைக் காட்டுகிறான். செந்தில் ஆர்வத்துடன் அவள் அழகைப் பருகுகிறான். பின்னர், ஊசலாடிக் கொண்டிருக்கும் தாமோதரத்தின் உயிருக்கு ரத்தினத்தால் ஊறு விளையுமோ என்ற அச்சத்தால் செந்தில் ஓட்டுப் பங்களாவுக்குப் புறப்படுகிறான்.

12-30: தாமோதரம் இறந்து விட்டதாகவும், போலீஸார் குற்றவாளியைத் தேடிக் கொண்டிருப்பதாகவும் கோவிந்தனைப் பயமுறுத்திய கனகசபை, தன் சொற்படியெல்லாம் நடக்கும் பட்சத்தில் அவனைக் காப்பாற்றுவதாக வாக்களிக்கிறான்.

## முப்பத்திரண்டு

தாமோதரத்தின் இல்லாமையைப் பற்றி ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாக நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

கோவிந்தனுடைய மனக்கண்ணில் அவர் ஒருசடலமாகவும், பத்திரிகைகளில் பரபரப்பூட்டப் போகும் புதிய கொலை வழக்காகவும், தூக்கு மேடைக்கு வழி சொல்லும் கை காட்டிக் கம்பமாகவும் தோற்றமளித்தார்.

கனகசபைக்கோ, தசையும் ரத்தமும் கொண்ட ஒரு மனிதரல்ல தாமோதரம். அவனைப் பொறுத்தவரை, தாமோதரம் என்பது கோவிந்தனுடைய உள்ளத்தைக் கிடுகிடுக்கச் செய்யப் பயன்பட்ட ஒரு பெயர். கோவிந்தனின் மனத்தில் உற்பத்தியான கிலியைத் திரட்டி, அதனின்று உறுதியான ஒரு விலங்கைத் தயாரித்து, அதைக் கொண்டே அவனை அடிமைகொள்ளக் கனகசபைக்கு உதவிய கருவி.

கனகசபையின் மாளிகையிலிருந்து ஓட்டுப் பங்களாவுக்குக் காற்றெனப் பறந்து கொண்டிருந்த செந்திலுக்கோ, தாமோதரம் ஐந்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள தங்கச் சுரங்கம். மிக உயர்ந்த அந்தஸ்துக்குத் தன்னை ஏற்றி வைக்கப் போகும் ஏணி. விரைந்து சென்று காப்பாற்றுவிடில் ரத்தினத்தின் சுயநலத்தால் ஊதி

## நீங்கள் நீதிபதியாயிருந்தால்

### இவ்வழக்கில் எவ்வாறு தீர்ப்பளிப்பீர்கள்?

இராமசாமி என்பவர், நன்செய், புன்செய் விளைந்து வந்த எட்டு நிலங்களைக் கோவிந்தனுக்கு ஐயாயிரம் ரூபாய்க்கு விற்றார். கிரயப் பத்திரத்தில் தவறாக இரு நிலங்கள் குறிப்பிடாமல் விட்டுப்போயின. இருந்தபோதிலும் யாரும் அதைக் கவனிக்காததால் எட்டு நிலங்களும் முறைப்படி கோவிந்தனிடம் ஒப்படைக்கப்பட்டன. கோவிந்தன் அந்த நிலங்களில் அழகான இரண்டு கட்டிடங்கள் கட்டினார். சில ஆண்டுகள் கழிந்தன. கிரயப் பத்திரத்தில் ஆறு நிலங்கள் தான் குறிப்பிடப்பட்டுள்ளன என்பதை ராமசாமி கவனித்தார். விட்டுப்போன இரண்டு நிலங்களும் கோவிந்தனுக்குச் சொந்தமானவை அல்ல என வழக்குத் தாக்கல் செய்தார். ராமசாமியின் கட்சி சரிதானா?

(விடை: 62-ஆம் பக்கம்)



''ஏய்! அதோ பார்த்தாயா? கோபுவும் கோவிந்தனும் வரு கிறார்கள். அவர்களுக்கு நாம் பெயிலானது தெரியக்கூடாது. முகத்தைச் சிரித்த முகமாய் வைத் துக் கொண்டு விறைப்பாக நிமிர்ந்து நடந்து போகணும்!''

அணைக்கப்பட்டு விடக்கூடிய மெல்லிய உயிர்ச் சுடர்.

செந்தில் ஒட்டுப் பங்களாவை அடைந்தபோது, அங்கு காணப்பட்ட பரபரப்பு ஒரு விநாடி அவனைத் திகைக்க வைத்தது. வாசலில் நிறுத்தப் பட்டிருந்த காரின் கதவை ஒருவன் திறந்து வைத்திருக்க, உள்ளே ஏறி நின்ற மற்றொருவன் எதையோ தாங் கிக் கொள்ளும் பொருட்டுக் கைகளை நீட்டிக் கொண்டிருக்க, நாலைந்து பேர் தாமோதரத்தைச் சுமந்தபடி காரை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

அரிக்கன் விளக்குகள் பெரிய மின் மினிப் பூச்சிகளைப் போல் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. • ''மெள்ள,'' ''பார்த்து,'' ''தலையில் இடித்துவிடப் போகிறது,'' என்பன போன்ற எச் சரிக்கைகள் தாழ்ந்த குரலில் கவலை யுடன் உச்சரிக்கப்பட, பங்களாவுக் குள்ளிருந்து ஒரு குழந்தையின், ''அப்பா...அப்பா!'' என்ற அழுகை உயர்ந்த சுருதியில் ஒலித்தது.

செந்தில் தாசில் ஐயாவை அழைத்து, ''என்ன?'' என்றான்.

காரியத்திலே தீவிரமாய் முனைந் திருந்த தாசில் ஐயா சற்றுக் கடுகடுப் போடு திரும்பினார். செந்திலைக் கண் டதும் அடக்கத்தை வரவழைத்துக் கொண்டவராய், தணிந்த குரலில், ''ஒன்றுமில்லை. டாக்டர் தான் உடனே கொண்டுவரச் சொன்னார். அதுதான் புறப்பட்டு க்கொண்டிருக்கிறோம்,'' என்றார்.

செந்திலின் இதயத்தைப் பிடித்து அழுத்திய பயம் தளர்ந்தது. கைக் குட்டையை எடுத்து முகத்திலும் கழுத்திலும் துளித்திருந்த வியர்வை யைத் துடைத்துக்கொண்டான். கழு குக் கண்களோடு தாமோதரத்தைக் கண்காணிக்கத் தான் இருக்கும்போது இனிமேல் ரத்தினத்தின் விஷமம் எது வும் பலிக்காது என்ற தெம்பால், விளிம்பில்லாத மூக்குக் கண்ணாடிக்கு இப்பாலிருந்த அவனது விழிகள் மின்னின.

தாமோதரத்தின் நெடிய உடல் காருக்குள் அடங்குவதாக இல்லை. தலைக்குக் கீழ் ஒரு தலையணை கொடுத் துச் சற்றுத் தூக்கினாற்போல் வைத்த பிறகு, இந்தப் பக்கம் காருக்கு வெளியே நீட்டிக்கொண்டிருந்த கால் களை மடித்து வைக்க நேர்ந்தது. அவ ரது ஒட்டிப்போன கன்னங்களும், வெளிறிய முகமும், மண்டையில் போடப்பட்டிருந்த கட்டுமாக அவரது தோற்றம் சுற்றியிருந்தவர்களிடையே இரக்கத்தைத் தூண்டுவதாக அமைந் திருந்தது.

சச்சு ஒன்றும் புரியாமல் வெறித்து நோக்கிக்கொண்டிருக்க, ''நானும் அப்பாவோடு போவேன்,'' என்று பாய்ந்த கோலியை அவன் அண்ணா சம்பந்தம் பிடித்து நிறுத்தினான்.

வண்டியில் ஏறி உட்காரப்போன ரத்தினம் கீழே இறங்கினான். சுற்று திண்ணைக்குச் சென்று, அலறிக்கொண் டிருக்கும் கோலியை வாரியெடுத்து இரண்டு கன்னத்திலும் முத்தமிட் டான். பிறகு, ''அப்பா சௌக்கிய மாக இருப்பார். டாக்டரிடம் மருந்து வாங்கிக்கொண்டு நாளைக்கே திரும்பிவிடுகிறோம். அழாதே,'' என்று தேற்றினான்.

தேம்பலுக்கிடையே கோலி, ''நீ பொய் சொல்லுகிறாய்,'' என்றான்.

''பொய்யில்லை கண்ணா, நிஜம்,'' என்றான் ரத்தினம்.

சேர்ந்தாற்போல் பேசமுடியாதவாறு தொண்டை அடைக்க, ''அண்ணா

சொன்னால்தான் கேட்பேன். அண்ணி எங்கே?'' என்றான் கோவி.

ஆம். துளசி எங்கே? பார்வையில் பரிவைத் தேக்கி கோவியைக் கருணையுடன் நோக்கிக்கொண்டிருந்த ரத்தினத்தின் கண்கள் கூர்மை இழந்தன. குழந்தையின் முகம் மறைந்து அந்த இடத்தில் ஒரு பெண்ணின் வதனம் தோன்றிற்று. கோவியின் குட்டையான சுருண்ட கேசம் அடர்ந்த கருங் கூந்தலாக மாற, கண்ணீரில் மிதந்த அவனது கண்கள் துளசியின் மீன்விழிகளாக நீள, ரத்தினத்தின் இதயம் ஏதோ யந்திரத்தில் சிக்கிவிட்டாற்போல் நைந்தது. துயரத்தின் முத்திரையைத் தாங்கி நிற்கும் அந்த நீள்விழிகள் என்ன பேசுகின்றன? செதுக்கினாற்போலிருக்கும் அந்தச் சிவந்த உதடுகள் என்ன முணுமுணுக்கின்றன? ரத்தினத்தின் செவிகளுக்குத் துளசியின் குரல் தெளிவாகக் கேட்டது. அவளது கண்களின் பொருமலுக்கும் அதரங்களின் அசைவுக்கும் ஏற்றாற்போல், 'எனக்கு இந்தக் கதி நேரும்படியாக விட்டுவிட்டீர்களே?' என்ற சொற்கள் அவன் உள்ளத்தில் ஒலித்தன.

அடுத்த விநாடி, ஆராய்ச்சி மணியால் உலுப்பப்பட்ட அரசவைபோல் கலக்கமடைந்தது ரத்தினத்தின் மனம். கவலைகளும் உணர்ச்சிகளும் எண்ணங்களும் மூலை முடுக்குகளினின்று விடுபட்டுத் துளசியின் நினைவைச் சுற்றிச் சூழ்மின. தன் சக்தியனைத்தையும் திரட்டித் துளசியின் மீட்சி என்றஒரே செயலில் ஈடுபடுத்த அவன் துடித்தான். 'மீட்கவேண்டும்' என்ற உறுதி வலுப்பட்ட அடுத்த கணமே, 'மீட்டாயிற்று' என்ற குதூகலம் அவன் உடலெங்கும் பரவிற்று. அதோ! துளசி ஓடிவருகிறாள். துக்கம் ஓய்ந்து இன்பம் உதயமாகிவிட்ட உவகையுடன் அவன் மார்பில் முகத்தைப் புதைத்துக்கொள்கிறாள். அவளது மென்மையான கூந்தலைத் தன் விரல்களால் கோதியபடி அவன் ஆறுதல் மொழிகளை அடுக்குகிறான்.

''மனிதருடைய உயிர் மயிரிழையில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. கொஞ்சிக் கொண்டிருக்க இதுவா நேரம்?''

செந்திலின் சுடுசொல் ரத்தினத்தின் காதில் மோதி அவன் கற்பனையைச் சரியவைத்துவிட்டது. அடர்ந்த கருங் கூந்தல் சடாரென்று கோவியின் சுருட்டைத் தலைமயிராகமாற, தான் அணைத்துக்கொண்டிருப்பது துளசியை அல்ல என்பதைப்புரிந்துகொண்டான். ஆனால் புறச்செவியைத் தம்பியின் அதட்டல் தாக்கியபோதிலும் அகத்திலே துளசி கேட்ட கேள்விதான் ரீங்காரம் செய்துகொண்டேயிருந்தது. அவளது மோவாயை நிமிர்த்தி, கன்னங்களின் வழியும் வேதனைத் துளிகளை வழித்தெறிய அவனது விரல்கள் தவித்தன. அவளது மௌனக் கதறல் தனக்குள்ளே ஒலித்துக்கொண்டிருக்கும் வரை தான் அரை ஆளாக, கால் ஆளாக, தன்னுணர்வற்ற யந்திரமாக மட்டுமே நடமாடமுடியும் என்று அவனுக்குத் தோன்றிற்று.

பணிவான குரலில், ''புறப்படலாமா?'' என்று வினவியபடி, அவன் கையிலிருந்து கோவியை வாங்கிச் சம்பந்தத்திடம் ஒப்படைத்தார் தாசில் ஐயா.

ரத்தினம் நெடு மூச்செறிந்துவிட்டுக் காருக்குத் திரும்பினான். என்ன இருந்தாலும் துளசி அவனுடையவள். அவனில் ஒரு பகுதி. அவள் துயரம் அவன் துயரம். தன் துயரத்தைக் கவனிக்குமுன், பிறர் துயரத்தைத் தீர்ப்பது தானே முறை? வாழ்க்கைக்கும் மரணத்துக்கும் இடையேயுள்ள எல்லைக் கோட்டில் காலை ஊன்றிக்கொள்ளவும் திராணியில்லாமல் தடுமாறிக்கொண்டிருக்கும் தாமோதரனைத் கவனிப்பது தனது முதல் கடமை என்று அவனுக்குத் தோன்றிற்று. இந்த நெருக்கடியான கட்டத்தில் தனது சொந்தக் கவலைகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பது சுயநலத்துக்கு அடையாளமாகும் என்று அவன் கருதினான்.

சந்தேகத்துடன் அவனை ஏறிட்டுப் பார்த்த செந்திலுக்கு வண்டியைத் தான் ஓட்டுவதே நல்லதென்று பட்டது போலும்.

''உங்கள் மனம் சரியாயில்லை. நகர்ந்துகொள்ளுங்கள்,'' என்று ரத்தினத்தை நகரச் சொல்லிவிட்டுச் செந்திலே காரைச் செலுத்தலானான்.

ஆஸ்பத்திரி அப்படியொன்றும் பெரிதானதல்ல. ஆயினும், முக்கியமான வைத்திய வசதிகளை சேகரித்து வைத்திருந்தார் டாக்டர் குருநாதன். சென்னையைப் போன்ற நகரங்களிலே அவர் எளிதில் அள்ளக்கூடிய கொள்ளை வருமானம் அந்தச் சிறு பட்டணத்தில் சாத்தியமில்லா

விடினும், தனது சொந்த ஊரில் தொண்டு செய்கிறோம் என்ற திருப்தியும், 'பணத்தாசையில்லாத திறமைசாலி; கைராசியுள்ள இளைஞர்' என்ற செல்வாக்கும் அவருக்குப் போதுமான சம்பாத்தியமாகத் தென்பட்டன போலும்.

தாசில் ஐயா அவரது அறைக் கதவைத் தட்டியபோது குருநாதன் அப்போதுதான் ஒரு வைத்தியப் பத்திரிகையிலிருந்து சில குறிப்புகளை எடுத்து முடித்துவிட்டுப் படுக்கையில் சாய்ந்திருந்தார். ஆயினும், • முணுமுணுக்காமல் எழுந்திருந்து, உடை மாற்றிக்கொண்டு வெளிவர அவர் தயங்கவில்லை. ரண சிகிச்சை அறை சில நிமிடங்களில் தயாராகி விட்டது. தாமோதரத்தை உள்ளே எடுத்துச் சென்றார்கள்.

ரத்தினமும் நுழைய முற்பட்டபோது, செந்திலும் போட்டிக்குப் புறப்பட்டு விட்டான்.

"யாராவது ஒருவர் வாருங்கள்," என்றார் குருநாதன்.

கடைசியில், சகோதரர் இருவரும் வெளியே காத்திருக்க, டாக்டரின் அழைப்பைத் தாசில் ஐயா ஏற்றுக்கொண்டார்.



கத்தி விழுங்கும் மாஜிக்காரர் : இதோ பார் இன்று வரும்படி தம்படி கிடையாது. எனக்கு ஆகாரம் இன்றைக்கு இவைகள் தான். நீயும் பசிக்குக் கொஞ்சம் சாப்பிட்டு வை!

ஆபரேஷன் அறைக் கதவு மூடப்பட்டது.

ரத்தினம் குருநாதனின் முகத்தை அதற்கு முன் பார்த்ததில்லை. அவனும் தாசில் ஐயாவும் கனகசபையின் மாணி கையிலிருந்து கிளம்பி ஒட்டு பங்களாவுக்கு வரும் வழியில் டாக்டரின் காரை நிறுத்தி அவருடன் தாமோதரத்தின் உடல்நிலை குறித்து விசாரித்தபோது கூட, அவர் காருக்குள் உட்கார்ந்திருந்ததால் முகம் இருளில் மறைந்திருந்தது.

ஆனால் இப்போது—சுவரோரமாகப் போடப்பட்டிருந்த விசுப்பலகையில் உட்கார்ந்துகொண்டு, மங்குப் பாத்திரத்தில் வெந்நீரைத் தூக்கிச் செல்லும் பணியாளை நோக்கிக்கொண்டிருந்த ரத்தினத்துக்கு—குருநாதனிடம் அளவுகடந்த நம்பிக்கை விழுந்துவிட்டது. தாமோதரத்தின் மரணப் பயணத்தைப் பாதியில் நிறுத்த வழியுண்டென்றால், ஒட்ட வெட்டிய தலை முடியும், நிமிர்ந்த நாசியும் கொண்ட இந்தக் குருநாதன் அதை நிச்சயம் கடைப்பிடிப்பார் என்ற உறுதி பலப்பட்டது.

தரையில் ஒரு காலும், எதிர் பெஞ்சில் ஒரு காலுமாக நின்றிருந்த செந்தில் அருவருப்பால் முகத்தைச் சுளித்தான். வராந்தாவிலிருந்து மிதந்து வந்த ஒரு நோயாளியின் இருமல் ஓசையும், ஆஸ்பத்திரியெங்கும் பரவியிருந்த டெட்டால் நெடியும், மூக்கில் ரப்பர் குழாய் பொருத்தப்பட்டுப் படுக்கையில் சாய்ந்திருந்த ஒரு கிழவனின் மங்கலான தோற்றமும் அவன் வயிற்றைக் குமட்டலெடுக்கச் செய்தன. பல்லைக் கடித்துக்கொண்டு, அவன் பார்வையைத் திருப்பிக்கொண்டான்.

முக்கால் மணி நேரம் கழித்து, ஆபரேஷன் தியேட்டரின் கதவு திறந்தது. சோப்புப் போட்டுக் கழுவிய கையை ஒரு சுத்தமான துண்டில் துடைத்தபடி வெளியே வந்த குருநாதனிடம் ரத்தினத்தின் பார்வை ஆவலோடு தாவிற்று.

"எப்படியும் காலைக்குள் மயக்கம் தெளிந்துவிடும் என்று நினைக்கிறோம்," என்று சொல்லிவிட்டு அவர் போய் விட்டார்.

இருப்பதற்குள் சற்று வசதியான ஓர் அறை தாமோதரத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. உண்மையில் அது ஒன்றுதான் தனி அறை. மற்றக் கட்டில்கள் வராந்தாவை ஒட்டிய ஒரு

கீண்ட கூடத்தில் போடப்பட்டிருந்தன.

தாமோதரத்தின் தலைமாட்டில் ரத்தினமும், அடுத்தாற்போல் தாசில் ஐயாவும் முக்காலிகளில் அமர்ந்து கொள்ள, செந்தில் கதவோரமாக நின்றுகொண்டான். கட்டிலை நெருங்க அவனுக்கு விருப்பமில்லாவிடினும், அவன் கண்கள் மட்டும் ரத்தினத்தை ஊன்றிக் கவனிக்கத் தவறவில்லை.

தாமோதரத்தின் தோற்றத்தில் ஒரு வித மாறுதலும் காணோம்—தலையில் புதிய கட்டுப் போட்டு, உடலை வெள்ளை விரிப்பால் போர்த்தியிருந்தார்கள் என்பதைத் தவிர.

"நேரம் ரொம்ப ஆகிவிட்டது," என்று இழுத்தார் தாசில் ஐயா. "நீங்கள் கொஞ்சம் களைப்பாறுங்களேன்? ஏதாவது இருந்தால் நான் வந்து எழுப்புகிறேன்."

ரத்தினம் தலையசைத்தான். "நீங்கள் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள். நான் இருக்கிறேன். செந்தில்! நீயும் கொஞ்சம் கண்ணயர். போ."

செந்தில் உஷாரானான். தாமோதரத்தை ரத்தினத்திடம் ஒப்படைத்து விட்டுத் தான் கண்ணயர்வதாவது! ஆ! அண்ணா தன் சாமர்த்தியத்தைக் காண்பிக்க ஆரம்பித்து விட்டாரே?

"எனக்கொன்றும் தூக்கம் வரவில்லை," என்றான் அவன்." "தாசில் ஐயா வேண்டுமானால் போகட்டும்."

"சேச்சே." தாசில் ஐயா தன் குல்லாயைக் கழற்றிவிட்டுத் தலையைச் சொறிந்து கொண்டார். "நான் கிழவன். படுத்தாலும் எங்கே தூக்கம்வரப் போகிறது?"

ஆனால் சரியாகப் பதினைந்துவது நிமிடம், உட்கார்ந்தபடியே, கண்கள்பாதி திறந்திருக்க, இலேசாகக் குறட்டை விடத் துவங்கியவர் அவர்தான்.

செந்திலின்கண்ணிமைகள்கெஞ்சின. ஆனால் அவன் உறுதி தளரவில்லை. பசி வேறு வயிற்றைக் குடைந்தது.

மூன்று மணி இருக்கலாம்.

அறைக்குள் நுழைந்து, தாமோதரத்தின் மணிக்கட்டைப் பரிசோதித்தவர் டாக்டர் குருநாதன் என்பதைக்கண்டு செந்தில் மகிழ்ச்சி அடைந்தான்.

ரத்தினம் அங்கில்லை. நொடியில் திரும்பி விடுவதாகச் சொல்லி விட்டு, தோட்டப்புறம் சென்றிருந்தான்.

"டாக்டர்," என்றான் செந்தில்.

"உம்!"

"ஒரு வேண்டுகோள்."

செந்தில் சுற்று முற்றும் பார்த்தான். ரத்தினம் இன்னும் வரவில்லை. தாசில் ஐயா குல்லாய் நழுவி விழுந்தது கூடத் தெரியாமல் நித்திரை வசப்பட்டிருந்தார்.

"டாக்டர்! இந்த மனிதரை நீங்கள் எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும். உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் தருகிறேன்."

குருநாதன் பதிலிறுத்தார், கைக் கடிகார முள்ளைக் கணக்கிட்டவாறு.

"நான் வைத்தியம்தான் செய்யலாம். விளைவு என் கையில் இல்லையே!"

"இரண்டாயிரம் ரூபாய் பீஸ் தருகிறேன். இவரைப் பிழைக்க வைத்து விடுங்கள்."

டாக்டர் மௌனமாக முறுவலித்தார்.

செந்தில் தொடர்ந்தான், "தாமோதரம் மட்டும் எழுந்திருக்கட்டும். எல்லா விதமான நவீனக் கருவிகளுடன் உங்களுக்கு ஒரு வார்டே கட்டித் தந்து விடுகிறேன்."

"நன்றி. உங்கள் அண்ணா எங்கே?",

செந்தில் அவர் காதிற்குள் கிசுகிசுத்தான். "டாக்டர்! ஒரு எச்சரிக்கை. எனக்கும் ரத்தினத்துக்கும் உள்ள பெரிய தகராறில் இந்தத் தாமோதரம் ஒரு முக்கியமான சாட்சி. கொஞ்சம் அயர்ந்தால், அவனே இவரை மேலுலகத்துக்கு அனுப்பி விடுவான். அதனால் தான் நான் காவலாக இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன். எங்கள் குடும்ப விஷயத்தை இப்படி உடைத்துச் சொல்கிறேனே என்று நீங்கள் நினைக்கலாம். உங்கள் வைத்தியத்தினால் மட்டும் தாமோதரத்தைக் காப்பாற்றிவிட முடியாது என்பதற்காகச் சொல்கிறேன்."

"ஓ!" என்றார் டாக்டர். அவர் புன்னகை மறைந்து விட்டது.

இதற்குள் ரத்தினம் வந்து விட்டான்.

டாக்டரைப் பொருட்செறிவுடன் பார்த்துவிட்டுச் செந்தில் நிம்மதியுடன் வெளியேறினான். அசதி அமுக்கவே, தனது காரின் கதவைத் திறந்து, வசதியாகவிருந்த ஆசனத்தில் படுத்துத் தூங்கிவிட்டான்.

அந்த நேரத்தில் டாக்டர் வந்தது ரத்தினத்துக்கு ஆச்சரியமாக இருந்தது. அவரது பொறுப்புணர்ச்சியால் வலுப்பெற்றவனாய் அவருக்கு நன்றி

செலுத்திவிட்டு, "டாக்டர்! உங்கள் திறமையில் எனக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. உங்கள் முயற்சி வெற்றி பெற முழு மனத்துடன் பிரார்த்தித்த வண்ணமிருக்கிறேன்," என்றான்.

குருநாதன் கடைக்கண்ணால் அவனைக் கூர்ந்து கவனித்தார். பிறகு, "இவர் உயிர் பிழைப்பதை நீங்கள் உண்மையிலேயே விரும்புகிறீர்களா?" என்றார்.

அந்த விசித்திரமான கேள்வி ஒரு வினாடி ரத்தினத்தைத் திகைக்க வைத்தது.

ஆனால் சமாளித்துக் கொண்டு, "அவசியமானால், இவரைக் காப்பாற்ற என் உயிரைக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன்," என்றான் உணர்ச்சியோடு.

ஆனால் குருநாதன் அசட்டையாக இருக்க விரும்பவில்லை போலும். மற்றொரு நாற்காலியைக் கட்டிலுக்குப் பக்கத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டு அவரும் உட்கார்ந்துவிட்டார்.

செந்தில் கண் விழித்தபோது, பலபலவென்று விடிந்துவிட்டது.

காருக்கு வெளியே தெரியும் தாசில் ஐயாவின் முகத்தைக் கண்டதும், அவசரம் அவசரமாகக் கண்ணாடியைக் கீழே இறக்கினான்.

"கண்டம் தாண்டியாயிற்று. இனி ஆபத்தில்லையாம்," என்றார் தாசில் ஐயா. ஆனால் இந்த நற்செய்தியை அறிவித்த அவர் ஏன் இப்படிக் கவலையோடு காட்சியளிக்கவேண்டும்!

செந்தில் வாயைத் திறப்பதற்குள் அவரே காரணத்தை விளக்கிவிட்டார்.

"பிரக்ஞை வந்துதான் என்ன! ஞாபக சக்தி போய்விட்டது. மனிதர் பேந்தப் பேந்த விழிக்கிறார். தன் பெயர்கூடவா நினைவில்லாமல் போய்விடும். கண்றாவி! கண்றாவி!"

செந்திலுக்கு நா வரண்டது. கால் இடறிப் படுகுழியில் விழுவது போன்ற திகில் உண்டாயிற்று.




## முப்பத்துமூன்று

"ஏனய்யா, தாமோதரம்! என்னை உமக்குத் தெரியவில்லை?"

நான்காவது முறையாகச் செந்தில் தொடுத்த வினாவில் திகைப்பும் கவலையும் எரிச்சலும் இழையோடின.

இல்லை என்று பொருள்படக் கட்டிலில் கிடந்தவர் லேசாகத் தலையாட்டினார். வெறித்த பார்வையில் மிரட்சியும் கலந்திருந்தது.

பொதுவாகச் செந்தில் இன்னொருவர் தன் கரத்தைப் பற்றினாலோ, தோளில் கை போட்டாலோ, அருவருப்பால் கூனிக் குறுகுவான். அது போலவே, அவன் மற்றவர் உடலைத் தொட நேரிட்டாலும் அவனுக்குச் சகிக்க முடியாத எரிச்சல் உண்டாகும். ஆனால் இப்போது அவன் கட்டில்மீது உட்கார்ந்து, தாமோதரத்தின் தோள்களை இறுகப் பற்றினான். "நான்தான் செந்தில். உமக்குத் தெரியவில்லை? சரியாகப் பாரும். நேற்றிரவு கோவிந்தனிடமிருந்து பத்திரத்தை வாங்கிக்கொண்டு வருவதற்காக நீர் அவன் பின்னால் போகவில்லை? கொஞ்சம் சிரமப்பட்டு யோசனை பண்ணிப் பாரும்!"

தாமோதரம் கழுத்தைச் சற்றுப் பின்னுக்கு இழுத்துக் கொண்டார். கண்கள் டாக்டரிடம் கெஞ்சின. குழந்தையின் அப்பாவித்தனம் அவற்றில் நிறைந்திருப்பதுபோல் தோன்றிற்று. தன்னைச் சூழ்ந்திருக்கும் அன்னியர்களின் மத்தியில், நம்பகமானவரும், வேண்டியவரும், மற்றவர்களுடைய பிடுங்கலிலிருந்து தன்னைக் காப்பாற்றக் கூடியவரும் டாக்டர் குருநாதன்தான் என்ற எண்ணம் அவற்றில் தெளிவாகத் தெரிந்தது.

நர்ஸ் ஊற்றித் தந்த மருந்தை ரத்தினம் வாங்கி, தாமோதரத்திடம் நீட்டினான்.

சோகம் தேங்கிய அவன் முகத்தை நோக்கிய நோயாளி, குருநாதனிருந்த பக்கம் திரும்பினார்.

"சாப்பிடுங்கள். நல்லது," என்று உறுதி கூறினார் டாக்டர், அன்போடு.

தாமோதரம் மடக்கென்று குடித்ததும் காலிக் கிண்ணத்தை ரத்தினம் வாங்கி நர்ஸிடம் ஒப்படைத்துவிட்டு, தாமோதரத்தின் வாயைத் தன் கைக்குட்டையால் துடைத்து விட்டான்.

மருந்து குடி படலத்தின் ஒவ்வொரு வினாடியும் செந்திலுக்கு ஓர் யுகமாக இருந்தது.

"தாமோதரம்..." ஏதோ கேட்க வாயெடுத்தான் செந்தில்.

"போதும்," என்றார் குருநாதன் அமைதியுடன், ஆனால் ஆணித்தரமாக.

செந்தில் கேட்டுக் கொண்டான்: "இத்தனை பேர் கூட்டம் போட்டுக் கொண்டிருப்பதால்தான் தாமோதரத்துக்குக் குழப்பம் நீங்கவில்லை. எல்லோரும் ஓர் ஐந்து நிமிடம் வெளியே போய் இருக்கிறீர்களா?"

"ஆமாம்," என்று ஆமோதித்தார் குருநாதன். "நோயாளிக்கு இப்போது ஓய்வு மிக மிக அவசியம். எல்லோரும் வெளியே போங்கள். மிஸ்டர் செந்தில், உங்களையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்."

"டாக்டர்!" என்று ஆட்சேபித்தான் செந்தில்.

"என்ன?" என்றார் குருநாதன்.

"தனிமையில் இவருடன் நான் பேச வேண்டியது ரொம்ப முக்கியம்."

"நோயாளியைப் பாதுகாக்க வேண்டியது அதைவிட முக்கியம்," என்றார் குருநாதன். "அவருக்கு இப்போதுதான் மூர்ச்சை தெளிந்திருக்கிறது. அதற்குள் கசக்குவது ஆபத்தில் முடியலாம்."

டாக்டரின் கண்டிப்பு செந்திலுக்கு ஆத்திரமூட்டிற்று. சமாளித்துக் கொண்டு, அவரை ஒரு பக்கமாக

அழைத்துச் சென்றவனாய், தணிந்த குரலில் விளக்கினான்.

"இரவு நான் உங்களிடம் சொல்லவில்லை? ரத்தினம் ஏதோ செய்துவிட்டான் டாக்டர்! பத்து நிமிடம் கொடுங்கள். தாமோதரத்தின் வாயிலிருந்தே உண்மையை வாங்கிவிடுகிறேன்."

"மிஸ்டர் செந்தில்," என்றார் குருநாதன். "ஆதாரமற்ற குற்றச்சாட்டுகளை நான் ஒருகாலும் அனுமதிக்க மாட்டேன். காலை மூன்று மணி முதல் இதுவரை நான் இந்த அறையைவிட்டு அசையவில்லை. அது உங்களுக்குத் தெரியுமா?"

"அப்படியா!" என்றான் செந்தில், போலி வியப்புடன். குருநாதன் எதிர்க்கட்சியில் சேர்ந்துவிட்டார் என்று அவன் தீர்மானித்துவிட்டான்.

"உங்கள் முன்னிலையிலேயே விஷமம் நடந்திருக்கிறதென்றால், நான் வேறு முடிவுக்கு வரவேண்டியதுதான்."

"என்ன முடிவு?"

செந்திலின் உதடுகள் ஏளனமாக வளைந்தன. "நான் சொல்லித்தான் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமா?"

குருநாதன் பொறுமை இழக்கவில்லை. ஆனால் அவரது தொனி கத்தியைக் காட்டிலும் கூர்மையாக இருந்தது.

"மிஸ்டர் செந்தில்! இத்துடன் நம் சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி வைப்பது உசிதமென்று நினைக்கிறேன்."

சண்டைச் சேவல்போல் செந்தில் சிலுப்பிக்கொண்டு நின்றான். "அப்படியானால் நான் தனியே தாமோதரத்துடன் பேச அனுமதிக்க மாட்டீர்கள்!"

"தாமோதரத்துடன் பேசுவது இருக்கட்டும். நீங்கள் தனியே வந்தால் இந்த ஆஸ்பத்திரிக்குள்ளேயே உங்களை அனுமதிக்க மாட்டேன்."

சிவப்பு வர்ணம் தீட்டினாற்போல் செந்திலின் உடலெல்லாம் சிவந்தது.

"அண்ணா!" என்றான் ரத்தினத்தை நோக்கி.

அவர்கள் உரையாடல் காதில் விழாவிட்டாலும் தம்பியின் கோபம் உச்ச நிலை அடைந்துவிட்டதையும் அதனால் அவன் நிதானமிழந்து கொண்டிருப்பதையும் ரத்தினம் புரிந்துகொண்டான். முன்னொரு சமயம், கணக்குப் புத்தகங்கள் பூட்டி வைக்கப்பட்டபோது செந்தில் சுத்தியலுடன் தோன்றி, தாயையும் அவதூறாகப் பேசத் துணிந்த அந்த இரவுக்குப் பிறகு, இப்பொழுதுதான் அவன் இந்த அளவுக்குச் சினம் கொள்ள நேர்ந்திருக்கிறது, என்று ஊகித்த ரத்தினம் சமாதானம் செய்ய முற்பட்டான்.

"ஆத்திரப் படாதே செந்தில். நம்முடைய நன்மைக்காகத்தானே டாக்டர் இவ்வளவு கண்டிப்பாக இருக்கிறார்? அனுபவமும் தேர்ச்சியும் பெற்ற ஒரு டாக்டர் அமைதியோடு கூறுவது சரியாக இருக்குமா; வைத்தியத்தின் அரிச்சுவடிகூடத் தெரியாத நாம் பதட்டத்தில் சொல்வது பொருத்தமாக இருக்குமா? கொஞ்சம் யோசனை பண்ணிப் பார். நமது பரபரப்பை அடக்கிக்கொண்டு நோயாளிக்கு ஓய்வு கொடுத்தால், கடந்த கால நினைவு அவருக்கு மறந்துபோய் விட்டாலும், இப்போதிருக்கிற சூழ்நிலையோடு தன்னைப் பொருத்திக்கொள்ளவாவது அவருக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். இன்றைக்கில்லாவிட்டாலும் இன்னொரு நாள் பளிச்சென்று பழைய நினைவுகள் எல்லாம் திரும்பினாலும் திரும்பக்கூடும். ஆனால் இப்போது எல்லோருமாகச் சேர்ந்து அவரைக் கலக்கினால் மூளை குழம்பி, பைத்தியம் பிடிக்க ஏதுவுண்டு என்று டாக்டர் பயப்படுகிறார். நாம் ஜாக்கிரதையாக இருப்பது நல்லதுதானே!"

"அப்படியானால் நான் தாமோதரத்துடன் தனிமையில் பேசுவதை நீங்களும் விரும்பவில்லை என்று ஒப்புக்கொள்ளுங்கள்!" செந்தில் கொழுந்துவிட்டு எரிந்தான்.

"அப்படி இல்லையப்பா," என்றான் ரத்தினம், சமாதானமாகச் சொல்லப்பட்ட தன் வார்த்தைகள் நேர் எதிரான விளைவை ஏற்படுத்தி விட்டது கண்டு வருந்தியவனாய். "அவசரப்பட்டுக் காரியத்தைக் கெடுத்துவிடக் கூடாதே என்பதற்காகத்தான் சொன்னேன். இவர் உயிர்பிழைத்ததே பெரிய அதிசயம். அந்த அளவில் இப்போது திருப்திப் பட்டுக் கொள்வோம். உடம்பு ரொம்பப் பலவீனமாக இருக்கிறதாம். கொஞ்சம் தேறட்டும். அப்புறம் எவ்வளவு மணி நேரமானாலும் பேசிக்கொண்டே இருக்கலாம்."

"அது உண்மைதான்," என்று ஒப்புக்கொண்டார் தாசில் ஐயா. "நாம் இன்னும் குளிக்கவில்லை; சாப்பிடவில்லை. ஊருக்குப் போய்

விட்டுப் பத்து மணி வாக்கில் திரும்ப வருவோமே? என்ன சொல்கிறீர்கள்?''

செந்தில் விடுவிடென்று வெளியேறினான்.

பெருமூச்சு விட்ட ரத்தினம் டாக்டரை நோக்கி, ''என் தம்பி ரொம்ப நல்லவன். முன்கோபம்தான் அதிகம். அவன் ஏதாவது சற்று ஏறுமாருகப் பேசியிருந்தால் நீங்கள் தயவுசெய்து...'' என்று முடிப்பதற்குள், ''அதெல்லாம் ஒன்றுமில்லை. கவலைப்படாதீர்கள்,'' என்று டாக்டர் புன்னகை செய்தார்.

பிறகு தாமோதரத்திடம், ''கொஞ்ச நேரத்தில் சிற்றுண்டி வரும். சாப்பிட்டதும் நிம்மதியாக ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். சரிதானு?'' என்று சொல்லிவிட்டு மற்ற இருவரையும் அறைக்கு வெளியே அழைத்து வந்தார்.

''சென்னைக்கு ஒரு தந்தி கொடுத்து விட்டால் தேவலை,'' என்ருன் ரத்தினம்.

''அதற்கென்ன, கொடுத்துவிட்டால் போகிறது. விலாசத்தைச் சொல்லுங்கள்,'' என்ருர் தாசில் ஐயா.

ரத்தினம் குறித்துக் கொடுத்த சீட்டைக் கையில் பெற்றுக் கொண்டவர், முகவரியை ஒரு தடவை படித்து விட்டு, ''இவர்கள் வந்து... தாமோதரத்தின்...'' என்று இழுத்தார்.

''ஆமாம்,'' என்ருன் ரத்தினம்.



''வாசகம்! 'உங்கள் கணவருக்கு உடல் நிலை சரியில்லை,' என்று கொடுக்கட்டுமா?''

''தந்தியைப் பார்த்துவிட்டு அவர்கள் பயந்துவிடவும் கூடாது; அசட்டையாக இருந்துவிடவும் கூடாது.''

டாக்டர் குறுக்கிட்டார். ''நீங்கள் பேசிக்கொள்வது நோயாளியின் மனைவியைப் பற்றியா? அவரை உடனே புறப்பட்டு வரச் சொல்லுங்கள். அவரைக் கண்டால் ஏதேனும் மாறுதல் ஏற்படக்கூடும்.''

''அப்படியே தந்தி கொடுத்து விடுகிறோம்,'' என்றார் தாசில் ஐயா.

இதற்குள், யாரிடமும் எதுவும் சொல்லாமல் செந்தில் காரில் எங்கோ கிளம்பிவிட்டான்.

''செந்தில்!'' என்று ரத்தினம் கைதட்டிக் கூப்பிட்டதையும் கவனிக்கவில்லை.

தாசில் ஐயா, ''ஐயையோ! அவர் காரை எடுத்துக்கொண்டு போய்விட்டாரே! தந்தி ஆபீசுக்கு எப்படிப் போவது !'' என்று குறைபட்டுக் கொண்டார்.

''இதென்ன பிரமாதம்? ஏதேனும் வண்டி அமர்த்திக் கொள்வோம், வாருங்கள். கிடைக்கவில்லை என்றால், நடந்து போய்விட்டு வருவோம். காலை வேளைதானே!'' என்றான் ரத்தினம்.

தனியே காரைச் செலுத்திக் கொண்டிருந்த செந்திலின் மனம் அலைபாய்ந்தது.

சில மணி நேரத்துக்கு முன்பு, தாமோதரம் உயிர் பிழைத்தால் போதும் என்று அவன் நினைத்தது உண்மை. அவர் உயிரோடு இருக்கும் வரை தன் கட்சிதான் வெல்லும் என்று அவன் திட நம்பிக்கையுடன் அப்போது இருந்தான். அந்தத் தைரியமே டாக்டர் குருநாதனுக்கு ஒரு புது வார்டு கட்டித் தருவதாக வாக்களிக்கத் தூண்டிற்று. இப்போது தாமோதரம் பிழைத்துவிட்டார். ஆனால் அதே சமயம் செந்திலின் காலையும் வாரி விட்டுவிட்டார். ஆறடி உயரமுள்ள, ஒல்லியான, தலையில் கட்டுப் போட்ட அந்த உருவத்தைக் கற்பனை செய்து பார்க்கப் பார்க்கச் செந்திலுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. அந்த மனிதருடைய வெறித்த நோக்கு அவன் உள்ளத்தைப் பட படக்கச் செய்தது. பிழைத்தும் பிணமாகக் கிடக்கிறாரே தாமோதரம்! எல்லாம் அந்த அரைக் கிறுக்குக் கோவிந்தனால் வந்த வினை. அவன் தாமோதரத்தின் மண்டையில் அடித்த அடி, செந்திலுடைய கட்சியின் அடித்தளத்தையே பிளந்துவிட்டது. ஆள் பிராணனை விட்டிருந்தாலாவது கோவிந்தன் கொலை வழக்கில் சிக்கித் தடுமாறுவதைக் கண்டு ஓரளவு திருப்தியடைந்திருக்கலாம். செந்தில் பெருமூச்சுவிட்டான்.

தனக்கு ஏற்பட்ட பலவீனத்தை ஈடு செய்வது எப்படி என்பதில் அவன் நாட்டம் சென்றது. ரத்தினத்தின் போக்கில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. தனிமையில் தாமோதரத்துடன் பேசக் கடைசிவரை அனுமதிக்க மறுத்துவிட்டானே! ஆக, இதுவரை மறைவாகவேலை செய்துவந்தவன், இப்போது தன்னை வெளிப்படையாகவே எதிர்க்க ஆரம்பித்துவிட்டான். தாமோதரம் சாக என்று திட்டம் போட்ட ரத்தினத்துக்கு அவர் பிழைத்துவிட்ட செய்தி அதிர்ச்சியாக இருந்திருக்கிறது. ஆனால் நினைவு போய்விட்டது என்றதும் அவன் உள்ளுக்குள் கும்மாளமிட்டுக்கொண்டிருப்பான். வெளிப் பார்வைக்கோ, தாமோதரத்தின் பழைய நினைவுகளை மீட்கப் பாடுபடுபவன் போல் வேடம் போடுகிறான். செந்திலின் கை தளர்ந்துவிட்டது அவனுக்குத் தெரிந்திருக்கிறது.

சில பேர் ரத்தினத்தைப் பெரிய மகாத்மா என்று தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடுவது செந்திலுக்குத் தெரியும். மகாத்மாவாம் மகாத்மா! செல்லாக் காசு பெறாத தாமோதரத்துக்குப் பிறந்தவன் பெரிய பெற்ற பிள்ளைபோல் இத்தனை வருடகாலம் நாடகமாடியிருக்கிறானே, அதுதான் மகாத்மாவின் குணம் போலும். தாமோதரமே தன்னிடம் நேரில் வந்து ரகசியத்தை வெளியிட்டிருக்காவிடில் ரத்தினம் இன்னும் எத்தனை ஆண்டுகளுக்குத் தன் பிறப்பைப் பற்றிய உண்மையை மூடி மறைத்திருப்பானோ! சொத்தில் அவனுக்கு எந்த வித ஆசையும் இல்லாதவன் போலவும் எந்த நிமிடத்திலும் அவனது 'பாக'த்தை விட்டுக் கொடுக்கத் தயாராய் இருப்பவன் போலவும் நடிப்பதில் மட்டும் குறைவில்லை. முதலில் கோவிந்தனை முடுக்கி விட்டுத் தன்னிடமிருந்த

விடுதலைப்பத்திரத்தைக் களவாடி வரச் சொல்லுகிறான். மறுநாள் புருவத்தை நெறித்து, 'கோவிந்தன் அப்படியா செய்தான்! எனக்குத் தெரியாதே!' என்று திகைக்கிறான். ஒரு பக்கம் பத்திரத்தை வரவழைக்க ஏற்பாடு செய்து விட்டு, மறுபக்கம் தாமோதரத்தின் உயிருக்கு—பெற்ற தகப்பன் என்பதையும் பாராமல்—உலை வைக்கப் பார்க்கிறான். தாமோதரம் தாக்குண்டது குறித்துத் தன் முன்னிலையில் முதலைக் கண்ணீர் வடித்துவிட்டு, தான் அப்பால் சென்றதும் அவரது மூளையைக் குழப்பச் சதி செய்திருக்கிறான். இது தான் மகாத்மாவின் லட்சணமா?

ரத்தினத்தின் நெஞ்சு முழுக்க முழுக்க விஷம் நிறைந்தது என்று சாதிக்கச் செந்தில் தயாராயில்லை. ஒரிரு சமயம் அதில் நல்லெண்ணம் உதித்திருக்கக் கூடும். ஆனால் என்ன இருந்தாலும் ரத்தினமும் மனிதன் தானே! பணத்தாசை அவனைப்பிடித்து ஆட்டுகிறது. ஆகவே, அவன் நேரிடையாகத் தீமை செய்யத் துணிவின்றி, மறைமுகமாகப் பிறர் மூலம் கேடு விளைவிக்கிறான். நல்லவன் என்ற பெயரையும் இழக்காமல் சொத்தையும் பிடித்து வைத்துக்கொள்ளப் பாடுபடுகிறான்.

ரத்தினம் ஒரு தியாகி என்று செந்தில் ஒப்புக்கொள்ள மாட்டான். தியாகியாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கவும் மாட்டான். அவனவனுடைய உரிமைகளைத் தேடிக் கொள்வதும் உடைமைகளைக் காப்பாற்றிக் கொள்வதும் அவனவனுடைய திறமையைப் பொறுத்தது என்பது அவன் கொள்கை. தூங்கியவன் கோட்டை விட்டால் திருடியவன் குற்றவாளியல்ல. ஆகவே குருட்டு அதிர்ஷ்டத்தால் கிடைத்த சுகபோகத்தை இழக்க மறுப்பது ரத்தினத்துக்கு இயற்கை தான். அவனுக்குத் தெரிந்த வித்தையை எல்லாம் காட்டுவான். காட்டட்டும்.

செந்தில் ஒரு தீர்மானத்துக்கு வந்தான். அனாவசியமாகப் பல்லைக் கடிப்பதில் பயனில்லை. தன் திட்டத்தில் புதுத் திருப்பம் ஒன்று கொடுத்து, ரத்தினத்தை மடக்க வேண்டும்.

ஒரு மாடி வீட்டின் முன் செந்தில் காரை நிறுத்தினான்.

எவ்வளவு பயங்கரமான கனவு—

இரண்டு முரடர்கள்—கிருதா மீசை வைத்தவர்கள்—துளசி ஓடிவிடாதபடி பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு முன்னால் பெரிய தீ மூட்டப்பட்டு, கொப்பரையில் எண்ணெய் சளபுளவென்று கொதித்துக் கொண்டிருக்கிறது. அவளைச் செந்தூக்காகத் தூக்கிக் கொப்பரைக்குள் எறியும் தருணம், ''நிறுத்துங்கள்!'' என்ற குரல் கேட்கிறது. துளசி நன்றியுடன் திரும்பிப் பார்க்கிறாள். கையில் பெரிய புட்டியுடன், சிவப்பாக, உருண்டு திரண்ட உடலுடன் ஒரு போக்கிரி நிற்கிறான், அவன் சிரிக்கிறான். ''இவளை இப்படியே போட்டால் என் மனம் குளிராது. துண்டு துண்டாக நறுக்கிப் போட வேண்டும்,'' என்று அவன் சொல்லி முடிப்பதற்குள், கொடுவாள் ஒன்று அவளது காலில் பாய்ந்து பாதத்தைத் துண்டித்து விடுகிறது. வலி தாங்காதவளாய்க் காவலாளர்களின் பிடியிலிருந்து திமிறித் தன்னை விடுவித்துக்கொண்டு ஓடுகிறாள். ''பிடி! பிடி!'' என்று ஆயிரம் குரல்கள்! காற்றெனப் பறக்கிறாள். குறுக்கே



நண்பர்: என்னப்பா இது! உன் டிரஸ்ஸும் நீயும்! பார்க்க நன்றாகவே இல்லையே. உங்கப்பா கோட்டும் கால் சட்டையும் அணிந்துகொண்டு வருவார். எப்படி 'ஜம்'மென்று இருப்பார் தெரியுமா?

மற்றவர்: அப்படியா? இந்தக் கோட்டும் கால் சட்டையும் அவருடையதுதான்!

வழியை அடைத்துக் கொண்டு நிற்கிறது ஒரு கோபுரம். அண்ணாந்து பார்க்கிறாள். தகரப் பிப்பாய்களாலான அது, கண்ணுக்கெட்டாத தூரம்வரை உயர்ந்திருக்கிறது. அதோ, போக்கிரியும் அவனது ஆட்களும் அருகில் வந்து விட்டார்கள்! வேறு வழியில்லாமல் பிப்பாய் மேல் கால் வைத்து ஏறுகிறாள். கண்ணை மூடிக்கொண்டு நூறு ஆயிரம் என்று ஏறி, உச்சியிலுள்ள பிப்பாயை அடைந்து விடுகிறாள். குனிந்து பார்த்தால், தலை சுற்றுகிறது. எங்கும் மயக்க மருந்தின் நெடி. ஓட்டுப் பங்களா பொம்மை வீடு போல் தெரிகிறது. மாட்டு வண்டியிலிருந்து கோவிந்தன், தாமோதரம், செந்தில் இவர்களுடன் இறங்கும் ரத்தினம் பாப்பாவைப் பார்த்து, ''துளசி எங்கே?'' என்கிறார். அவள் பதிலுக்கு, ''துளசி எங்கே?'' என்று வினவுகிறாள். தூக்கம் கலைந்து எழுந்த கோவி, ''அண்ணி எங்கே?'' என்கிறான். உச்சியிலிருந்தபடி துளசி, ''இங்கிருக்கிறேன்,'' என்று கூவுகிறாள். அவர்கள் காதில் விழவில்லை. உரக்க, தொண்டை கிழியும்படியாக அவள் கத்துகிறாள். பலன் இல்லை. இதற்குள் வெற்றிச் சிரிப்புச் சிரித்தபடி போக்கிரி, பிப்பாய் அடுக்கை ஆட்டுகிறான். புயலில் சிக்கிய மரம் போல் அது இப்படியும் அப்படியுமாக நெளிய, துளசி நிலை பெயர்ந்து தலைகுப்புற விழுகிறாள்...விழுகிறாள்...விழுகிறாள்...

''அம்மா! அம்மா!''

ஒரு நிமிடத்துக்குத் துளசி கண்களைத் திறக்கவில்லை.

''கெட்ட கனவு போலிருக்கிறது. ஓரேயடியாகக் கூச்சல் போட்டு விட்டீர்களே!''

பெண்ணின் குரல் அது. அதில் அன்பு தோய்ந்திருந்தது. தான் கண்டது சொப்பனமே என்ற உண்மை துளசிக்குக் கட்டிலடங்காத் திருப்தியைத் தந்தாலும் அவளது மூச்சு இன்னும்



**குள நாசம்**

“ஏம்பா...குளத்தை அசுத்தப் படுத்த வேண்டாம்னு பலகையிலே எழுதியிருக்கிறதே, கண்ணு தெரியிலே,”
“அசுத்தப் படுத்தலேப்பா, குளிக்கிறேன்.”
“அதைத்தான் சொல்றேன். ஏறிவாய்யா மேலே...”

நிதானத்துக்கு வரவில்லை.

மென்மையான துண்டு ஒன்றால் தன் முகத்தில் அரும்பிய வியர்வை ஒற்றியெடுக்கப் படுவதை அவள் உணர்ந்தாள்.

“கொஞ்ச நேரம் அப்படியே படுத்திருங்கள் அம்மா. நொடியில் காப்பி கொண்டு வந்து விடுகிறேன்.”

வேலைக்காரி போய் விட்டாள் போலும். நிம்மதிப் பொழிலிலே ஊறி, பயத்தையும் திகிலையும் அதிர்ச்சியையும் அறவே நீக்கிக் களைப்பாற அவள் ஆசைப் பட்டாள். ஆனால், உடல் நிலை அனுமதிக்கவில்லை. காலில் ஏதோ விண் விண்ணென்று விட்டு விட்டுத் தெறித்தது. தலை வலியோ இடை விடாமல் வதைத்தது. பட்டு விரிப்புப் போட்ட பஞ்சு மெத்தையில் அவள் படுத்திருப்பதைக் கைகளும் முதுகும் அறிவித்தன. தலையணை நனைந்து போயிருந்தது. காலை வேளைக்குரிய ஓசைகள் சாளரம் வழியே நுழைந்தனவே தவிர, அறைக்குள் வேறு சப்தமில்லை. தொண்டை வரண்டிருந்தது. மயக்க மருந்தின் காட்டத்தோடு கலந்து வந்தது மல்லிகை மணம்.

துளசி கண்களைத் திறக்க விரும்பவில்லை. சூழல் குறித்தும் தன் நிலையைப் பற்றியும் அமைதியாகச் சிந்தித்து ஒரு முடிவிற்கு வரும்வரை அவள் அசையாமல் கிடக்க விரும்பினாள். ஆனால் கோவையாக யோசிக்க முடியாதபடி தடுத்தது அடித்துப் போட்டாற் போன்ற உடல் சோர்வு.

மருந்தையும் மல்லிகையையும் தூக்கியடித்தது காப்பி மணம். வேலைக்காரி வருகிறாள் போலும்.

“அம்மா!”

துளசி மெல்லக் கண் விழித்தாள்.

வேலைக்காரியின் பார்வையிலே பரிவு சொட்டிற்று. துளசி எழுந்து அமர்ந்து கோப்பையை வாங்கிக் கொண்ட போது அவளுடைய உடலில் புது வலிகள் தோன்றின. ஒரு வாய் குடித்தாள். சுவையும் சூடும் வாசனையும் களைப்பில் பாதியை விரட்டி ஓட்டின.

முதல் தடவையாகக் கண்களைச் சுற்றிலும் சுழற்றித் தான் இருக்குமிடத்தைக் கவனித்தாள். அலங்காரப் பொருள்களும் போக சாதனங்களும் அறையில் நிறைந்திருந்தன. திடீரென்று துளசியின் கண்கள் குத்திட்டு நிற்க, அவள் முகத்திலிருந்த ரத்த மெல்லாம் வடிந்து விட்டது.

சுவரில் மாட்டப் பட்டிருந்த அந்தப் பெரிய புகைப் படம்!

இது கனகசபையின் வீடா?

முந்தின இரவு நடந்த சம்பவங்கள் தெற்றென நினைவுக்கு வந்தன.

ஒரு விநாடி கூட அங்கு தாமதிக்கலாகாது என்ற முடிவுக்கு வந்தவளாய்த் துள்ளி எழுந்தாள். கோப்பையும் தட்டும் கீழே விழுந்து மெத்தென்றிருந்த வர்ண ஜமுக்காளத்தை நனைத்தன.

ஓரடி எடுத்து வைத்திருப்பாள். பீப்பாயால் நசுக்குண்ட கால்கள் தாங்கொணாத நோவின் மூலம் தங்கள் நிலை குறித்துப் புகார் செய்ய, உதட்டைக் கடித்தபடி அப்படியே உட்கார்ந்து விட்டாள்.

“என்னம்மா இது, இப்போது என்ன அவசரம் வந்து விட்டது உனக்கு? அதற்குள்ளே கிளம்பி விட்டாயே! உன் கால் இருக்கும் நிலையில் உன்னால் ஓட முடியுமா! அல்லது நடக்கத்தான் முடியுமா?” என்று கோபித்துக் கொண்டாள் வேலைக்காரி.

பிறகு, “கொஞ்ச நாளைக்குப் போட்ட இடத்தில் அப்படியே கிடக்க வேண்டியதுதான். எல்லாம் நீயாகத் தேடிக் கொண்டதுதானே!” என்றாள் குத்தலாக.

துளசி எவ்வளவு முரண்டு செய்த போதிலும் அவளது கால் வலியும் வேலைக்காரியின் பிடிவாதமுமாகச் சேர்ந்து கட்டில்மீதே அவளை மல்லாத்தி விட்டன.

தன்னைத் தாங்கிக் கொண்டிருப்பது கனகசபையின் படுக்கை என்று நினைத்த மாத்திரத்தில் துளசிக்கு உடம்பெல்லாம் எரிந்தது. வேலைக்காரிக்கு அது புரிந்து விட்டது போலும்.

"என்னம்மா அப்படிப் பிகுபண்ணிக் கொள்கிறாய்! ஆளுனப் பட்ட ரதியெல்லாம் இதில் படுக்கத் தவசு பண்ணுகிறார்கள், தெரியுமா!"

கால் நோவுக்கு அச்சமும் அருவருப்பும் துணை செய்ய, துளசியின் கண்களில் நீர் துளித்தது. 'இவளும் ஒரு பெண் தானா!' என்று வியப்புடன் ஏறிட்டு நோக்கினாள்.

பணிப்பெண்ணின் தொனி மாறிற்று. சினந்தவள் குழைந்தாள்.

"அழாதே கண்ணு. எதற்காக அழ வேண்டும்! நீ கொடுத்து வைத்தவளாக இருப்பதால்தான் எங்கள் எசமானின் பார்வை உன் மீது பட்டது. அவருக்கு என்ன குறைவு! அழகென்றால் அழகு, கொள்ளை அழகு. அழகுக்கு மேல் பணம்." அவள் பெருமூச்சு விட்டாள். "உன் அதிர்ஷ்டம் மட்டும் எனக்குக் கிடைத்திருந்தால்..."

துளசி கையெடுத்துக் கும்பிட்டாள். "தாயே! உனக்குப் புண்ணியமாகப் போகும். தயவுசெய்து நீ வெளியில் போய்விடேன்."

குரலில் கெஞ்சுதல் இருந்தாலும் கொந்தளிக்கும் சினத்தால் அவள் முகம் குங்குமமாய்ச் சிவந்ததை வேலைக்காரி கவனித்து விட்டாள்.

"அம்மாடியோ! கோபத்தைப் பாரேன்! அது கிடக்கட்டும். உனக்குத் தலை வாரி விடட்டுமா!" என்றாள் அவள், குரலில் கனிவைக் கூட்டி.

"நீ எனக்கு ஒன்றும் செய்ய வேண்டாம். தனியே விட்டால் போதும்."

வேலைக்காரி இடுப்பில் கை வைத்துக் கொண்டு தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து, "உனக்குத் தலைமயிர் நிறைய இருக்கிறது. குதிரை வால் கொண்டை போட்டால் ரொம்ப அழகாய் இருக்கும்," என்று அவள் அருகில் நெருங்கித் தலையைக் கோதிக் கொடுத்தாள்.

குதிரை வால் கொண்டையா! கண்ணீர்த் திரையினூடே வேலைக்காரியைத் திரும்பிப் பார்த்தாள் துளசி.

வேலைக்காரியின் குரல் மாறிற்று. துளசிக்குப் பழக்கப்பட்ட குரல்.

"சும்மா டபாய்க்காதே கண்ணு. சின்ன பாப்பாவாட்டம் முழிக்கிறியே? என்னைத் தெரிலே?"

அவள் இடது கண்ணைச் சிமிட்டினாள்.

திடுக்கிட்ட துளசி திறந்த வாயுடன் எதிரில் நின்ற வேலைக்காரியின் முகத்தை ஊன்றிக் கவனித்தாள்.

திடீரென்று அவள் கண்கள் விரிந்தன. உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை ஆனந்தம் பரவிற்று.

எல்லோருக்கும் தெரியும்—

ஒவ்வொரு
ப்ரூக் பாண்ட்
பாக்கெட் டிலிருந்தும்
உங்களுக்கு அதிகப்படியான,
ருசியான தேயிலை
கிடைக்கிறது

...மேலும்
தோட்டத்திலிருந்து
கடைகளுக்கு துரிதமாக
அனுப்பப்படுவதாலேயே
ப்ரூக் பாண்ட் தேயிலை
புத்தம் புதியதாக
இருக்கிறது

...மேலும்
ஒவ்வொரு நாளும்
5 கோடி கோப்பை
களுக்கு அதிகமாகவே
ப்ரூக் பாண்ட் தேயிலை
அருந்தப்படுகிறது




ஆகையால்தான் மற்றெந்தத்
தேயிலையையும் விட
அதிகப்படியான
ஜனங்கள்
ப்ரூக்
பாண்ட்
தேயிலையையே
அருந்துகிறார்கள் !

ப்ருக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

BB 247 TB.

# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## முப்பத்து நான்கு

துளசி திக்குமுக்காடினாள்.

இடுப்பில் கை வைத்துக் கொண்டு, தலையை ஒரு பக்கமாகச் சாய்த்தவாறு கண் சிமிட்டிப் புன்னகை செய்யும் வேலைக்காரியின் தோற்றமும், அந்தத் தோற்றத்துக்குள் ஒளிந்திருக்கும் பாப்பாவின் குறும்புத்தனமும் தாங்கொணா மகிழ்ச்சியை அவள் இதயத்தில் திணித்துவிட்டன.

புருவங்கள் நெற்றிக்கு ஏற, தொண்டையை ஏதோ ஒன்று அடைக்க, அவள் மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது.

''பாப்பா!'' உதடுகள் மட்டுமே அசைந்தன.

ஜமுக்காளத்தில் சிதறிக் கிடக்கும் பீங்கான் சில்லுகளைப் பொருட்படுத்தாமல் பாப்பா தாவி வந்து துளசியைத் தழுவிக் கொண்டாள்.

அந்த அரவணைப்பிலே இரண்டு உள்ளங்களும் கலந்தன. மேட்டு நீர் பள்ளத்திற்குப் பாய்வதுபோல், ஒருத்தியின் கனிவும் துணிச்சலும் உற்சாகமும் மற்றவளின் துயரம் நிறைந்த, குழப்பத்தால் கலங்கிய, சோர்வால் மெலிந்த இதயத்துக்கு இதமளித்தன. வயதில் மூத்தவளானாலும் தன்னைக் காட்டிலும் பாப்பாவின்மீதே துளசி அதிக நம்பிக்கை வைத்திருப்பதுபோல் தோன்றிற்று. அவள் விழிகளிலிருந்து



வழிந்த கண்ணீர் பாப்பாவின் முதுகை நனைத்தது.

கட்டிலில் கிடந்த துண்டை எடுத்துக் கண்ணீரைத் துடைத்துவிட்டாள் பாப்பா. "இது ஆனந்தக் கண்ணீர் தானே அக்கா?"

"ஆம்" என்றாள் துளசி. "ஆனால் அதில் கொஞ்சம் கோபமும் கலந்திருக்கிறது."

"அதனால்தான் சூடாக இருக்கிறதோ? நான் என்ன அக்கா தப்பு செய்தேன்?"

"சுட்டி! சற்று நேரத்துக்குள் என்ன பேச்செல்லாம் பேசிவிட்டாய்!"

"அப்படியெல்லாம் பேசினதால் தான் நீங்கள் கையெடுத்துக் கும்பிட்டீர்கள். இப்போது? கன்னத்தைக் கிள்ளுகிறீர்களே!"

அவளைப் பிடித்துப் பக்கத்தில் இருத்தி வைத்துக்கொண்டாள் துளசி. "நான் இங்கு இருக்கிறேன் என்பது உனக்கு எப்படித் தெரிந்தது? நீ எப்படி இங்கே வந்தாய்? இதெல்லாம் என்ன வேஷம்? உன்னை எப்படி உள்ளே விட்டார்கள்? ஒருவர் கூட அடையாளம் கண்டு கொள்ளவில்லையா?"

அவள் ஒவ்வொரு கேள்வியாகத் தொடுக்கத் தொடுக்க விரல்விட்டு எண்ணிக் கொண்டே வந்த பாப்பா, "தெரியாமல் தான் கேட்கிறேன். உங்கள் பெயர் துளசி அக்காவா, கேள்வித் தாளா?" என்றாள்.

"விளையாடாமல் பதில் சொல்லு," என்று வற்புறுத்தினாள் துளசி.

பாப்பா தோள்களை ஒருமுறை குலுக்கிக்கொண்டாள். "அதெல்லாம் கிடக்கட்டும் அக்கா. எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமான 'எப்படி' நாம் இந்த இடத்திலிருந்து கம்பி நீட்டுவது எப்படி என்பது தான். போதும் போதாததற்குக்காலில் ஒரு கட்டை வேறு



சம்பாதித்து வைத்துக் கொண்டிருக்கிறீர்களே!''

திடையில் ஏற்பட்ட குதூகலம் துளசியின் கண்களினின்று உள்வாங்கிற்று.

''பாப்பா! என்றால் இங்கே ஒரு நிமிஷம் கூட இருக்கமுடியாது இனிமேல்! எப்படியாவது தப்பித்துக் கொண்டு விடவேண்டும். உயிர் போனாலும் பரவாயில்லை.''

பாப்பா நகைத்தாள். ''ஏன் அக்கா, உயிர் போய்விட்டால் அப்புறம் தப்பிப்பது எப்படியாம்? நீங்கள் ஒன்று. உயிரோடு, உருப்படியாக வெளியேறுவதுதான் சாமர்த்தியம்.''

இருந்தாற் போலிருந்து, அலுப்பு துளசியை ஆட்கொண்டது. ''உயிரோடு வெளியேற வேண்டிய அவசியம் எனக்கென்ன இருக்கிறது பாப்பா? நான் காணாமற் போய் விட்டேனே என்று யார் கவலைப்பட்டார்கள்? என்னை மீட்கவேண்டும் என்ற எண்ணம் யாருக்கு உண்டாயிற்று? இங்கிருந்து தப்பிச் செல்வதாக வைத்துக் கொண்டாலும், எனக்காக ஒருவரும் காத்திருக்கப்போவதில்லையே? பாப்பா, உன்னைப் பற்றி நான் சொல்லவில்லை. எவரை நான் நம்பிக் கொண்டிருக்கிறேனே, எவருக்காக உயிர் வாழ்கிறேனே, அவர் என்னிடத்தில் அக்கறை காட்டுவதாகத் தோன்றவில்லை.''



''ஏனப்பா! உருப்படியா ஏதாவது கொண்டு வந்திருக்கியா?''

''ஐயோ அசட்டு அக்காவே, அசட்டு அக்காவே..''

மற்றவளைப் பேச விடவில்லை துளசி. ''இல்லை பாப்பா. அப்பா என்றைக்குக் காலமானாரோ, அன்றைக்கே நானும் போயிருக்க வேண்டும். இவ்வளவு கஷ்டப்பட வேண்டி இருந்திருக்காது பார்?''

''அக்கா!'' என்று அதட்டினாள் பாப்பா. ''நீங்கள் ஒருத்திதான் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். மற்றவர்கள் எல்லாம்—நீங்கள் அண்ணாவை மனத்தில் வைத்துக்கொண்டு பேசுகிறீர்கள் என்பது புரிகிறது—எது எக்கேடு கெட்டால் என்ன என்று குறட்டைவிட்டுத் தூங்குகிறார்கள். அப்படித்தானே உங்கள் எண்ணம்? சரி. இப்போது சொல்கிறேன், கேட்டுக் கொள்ளுங்கள். எங்கள் அப்பா மண்டையை யாரோ உடைத்து விட்டான். பேச்சு மூச்சில்லாமல் மாந்தோப்பிலே கிடந்த அவரைத் தூக்கிப் போட்டுக்கொண்டு, பக்கத்து டவுனிலுள்ள ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறார் அண்ணா.''

துளசி கலவரமடைந்தாள். ''அப்புறம்?''

''இன்னும் கேளுங்கள்,'' என்று தொடர்ந்தாள் பாப்பா, சூட்டோடு சூடாக. ''அதே சமயம் கோவிந்தனையும் யாரோ தாக்கியிருக்கிறார்கள். மூர்ச்சையாகிக் கிடந்தவருக்கு நான்தான் கட்டுப் போட்டு விட்டேன். ஆனால் உதவி தேடி நான் ஓட்டு பங்களாவுக்கு வந்து போவதற்குள், ஆளையே காணோம். அவரை யார், எங்கே கொண்டுபோய் விட்டார்கள் என்பதும் தெரியவில்லை.''

துளசியின் திகைப்பு அவள் குரலில் பிரதிபலித்தது. ''இதெல்லாம் எப்போது நடந்தது?''

''உங்களை அந்தக் கிருதா மீசைக்காரன் கடத்திக்கொண்டு வந்தான் அல்லவா? அப்போதுதான்.''

''பாப்பா!'' என்று பதறினாள் துளசி, ''வா. புறப்படு—நாம் உடனே கிளம்பியாக வேண்டும்.''

''நீங்கள் போய் ஆகவேண்டியது ஒன்றுமில்லை என்றீர்களே அக்கா, கொஞ்ச நேரத்துக்கு முன்னால்?''

''இப்போது நான் அவருக்குப் பக்கத்தில் இருந்தாக வேண்டும், பாப்பா, என்னுடைய அற்பத் துயரத்தைப்

பற்றி முணு முணுக்க இது நேரமல்ல. பாப்பா! சீக்கிரம்...''

இருவரும் எச்சரிக்கை அடைந்தார்கள். யாரோ வரும் ஓசை கேட்டது.

சஞ்சலம் மேலிட, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, கதவு திறந்தது.

கையில் சிகரெட்டுடன் காட்சியளித்தான் கனகசபை.

துளசிக்கு வியர்த்துக் கொட்டிற்று.

கதவருகே நின்றபடி கனகசபை கேட்டான். "இப்போது வலி எப்படி இருக்கிறது?''

துளசிக்கு நா எழும்பவில்லை. அவள் கண்கள், பீங்கான் துண்டுகளைப் பொறுக்கிக்கொண்டிருந்த பாப்பாமீது பசை வைத்து ஒட்டினாற்போல் பதிந்திருந்தன. அச்சத்தால் கூர்மை பெற்ற அவள் அறிவிற்கு, பாப்பாவின் ஆபத்தான நிலை தெற்றெனெ விளங்கிற்று. ஆரம்பத்திலிருந்து கனகசபை கைப்பற்ற முயன்றது பாப்பாவைத்தான் என்பதும், தான் இடையில் வந்தவள் என்பதும் அவள் நினைவுக்கு வந்ததோடல்லாமல், மற்றொரு பயமும் அவள் மேனியைச் சிலிர்க்க வைத்தது. மயக்க மருந்தாலும் கால் நோவாலும் மிக்க பலவீனம் அடைந்திருந்த நிலையில், பாப்பாவின் வேடம் தன்னை ஏமாற்றிவிட்டது. உண்மைதான். ஆனால் இப்போது பார்க்கும்போது, அந்தக் கண்களும், மூக்கும், வாயும், 'இவள்தான் பாப்பா! இவள்தான் பாப்பா!' என்று அலறுகின்றனவே!

கனகசபையுடன் பேச்சுக் கொடுத்து அவன் கவனத்தைப் பாப்பாவின்பால் செல்லவொட்டாமல் தடுக்க, "இன்னும் மயக்கமாகவே இருக்கிறது. டாக்டரைக் கூட்டி வரச் சொல்லுங்களேன்!'' என்று நெற்றியைப் பிடித்துக் கொண்டாள்.

பாப்பா! சீக்கிரம் போய்த் தொலையேன்!

துளசி அமைதியாகப் பதிலிறுப்பாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை போலும். அறைக்குள் நுழைந்தான்.

துளசிக்குப் பகீரென்றது. பாப்பா! போய்விடாதே. இரு! இரு!

வேலைக்காரி வெகு நேரமாக அறையைச் சுத்தம் செய்து கொண்டிருப்பது கனகசபைக்கு அப்போதுதான் தெரிந்தது.

''ஏய்!''

''எசமான்!''

அவன் அவளை முதல் தடவையாக உற்று நோக்கினான்.

துளசி மிடறு விழுங்கினாள்.

''யார் நீ?'' என்றான் கனகசபை.

பாப்பா ஓர் ஓரமாக ஒதுங்கி நின்று, "நான் இருளாயிக்குத் தங்கச்சிங்க, அதுக்கு...வந்து...அது வீட்டுக்குள்ளே வரக் கூடாது. என்னை அனுப்பிச்சுது,'' என்று காதைச் சொறிந்தாள்.

துளசிக்கு உண்மையாகவே தலை சுற்றிற்று. அதைக் கொஞ்சம் மிகைப்படுத்தி—

''எனக்கு வயிற்றைக் குமட்டுகிறது. அந்த பேஸினை எடு! சீக்கிரம்!'' என்று கழுத்தைப் பிடித்துக் கொண்டு, குனிந்தாள்.

கனகசபை ஒரு விநாடி தயங்கியவன், ''நீ கவனி!'' என்று பாப்பாவுக்குக் கட்டளையிட்டு வெளியே விரைந்தான்.

கதவைச் சாத்திவிட்டு வந்த பாப்பா, ''ஏன் அக்கா, நடிப்பில் என்னையே தூக்கி*அடித்துவிட்டீர்களே!'' என்று பாராட்டினாள்.

துளசி அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''நீ முதலில் இங்கேயிருந்து போய்விடு, பாப்பா. கனகசபை உன்னை நோக்கும்போதெல்லாம், என் நெஞ்சு தொண்டைக்கு வந்துவிடுகிறது. நான் எப்படியாவது சமாளித்துக்கொள்கிறேன். நீ போய்விடு,'' என்று கெஞ்சினாள்.



## கணக்காரழிவர்

"நூறு எப்படிப்பா?"

"டஜனுக் கேளுங்க. டஜன மூணு ரூபாய்."

"டஜன் மூணு ரூபாயின்னா... நூறு என்ன ஆகுது? இது தெரியலியா? நூறிலே எத்தனை டஜன்? எட்டு டஜன்... எட்டு பன்னிரண்டு தொண்ணூற்றாறு... மேலே நாலு... அதாவது ஒரு டஜனில் மூன்றில் ஒரு பாகம்... அப்போ..."

"சாமி, சாமி. புண்ணியமாகப் போகுது. இனமா ஒரு பழம் தர்ரேன். போயிடு சாமி."

''அவன் கிடக்கிறான்!'' என்றாள் பாப்பா, அலட்சியமாக. ''இவன் மாதிரி இன்னும் பத்துப் பேருக்கு நான் ஜவாப் சொல்வேன். நான் மெட்ராஸிலே பிறந்து மெட்ராஸிலே வளர்ந்தவளாக்கும். இந்தப் பட்டிக் காட்டு மிராசுதார் பருப்பெல்லாம் நம்[illegible] [illegible].''

அவளுடைய தைரியம் துளசியின் கவலையை மேலும் தூண்டிவிட்டது.

''பாப்பா! நீ இன்னும் குழந்தையாகவே இருக்கிறாயே!''

''பரவாயில்லை அக்கா!'' என்று சிரித்தாள் பாப்பா. ''பயந்து பயந்து எண்பது வயது வரை பிழைத்திருப்பதைக் காட்டிலும், தைரியமாக வாழ்ந்து சின்ன வயசிலேயே சாவது மேல். உங்களுக்கு வேறொரு கோப்பை காப்பி கொண்டு வருகிறேன். பேசாமல் படுத்திருங்கள்.''

''பாப்பா!''

அவள் போய்விட்டாள்.

தந்தி நிலையத்திலிருந்து ரத்தினமும் தாசில் ஐயாவும் வைத்திய விடுதிக்குத் திரும்பியபோது, ஒருகால் செந்தில் அவர்களுக்காகக் காருடன் காத்திருக்கக் கூடும் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் அவர்கள் ஏமாந்து போனார்கள்.

செந்தில் எங்கே போயிருக்கிறான், எப்போது வருவான் என்று அவர்களால் ஊகிக்க முடியவில்லை. மரத்தடியில் நின்றபடி, ''அந்தப் பச்சைக் காரையும் எடுத்துவந்திருந்தால் வசதியாய் இருந்திருக்கும்,'' என்றார் தாசில் ஐயா.

அவர் குறிப்பிட்டது கனகசபையின் வண்டியை. முந்தின நாள் இரவு மிராசுதாரிடம் விடை பெற்றுக்கொண்டு ரத்தினமும் தாசில் ஐயாவும் புறப்பட்டபோது, சென்னையிலிருந்து செந்தில் கொண்டுவந்திருந்த காரை உபயோகித்துக் கொண்டார்கள். பின்னர் செந்தில் கிளம்பியபோது கனகசபை தன் வண்டியை இரவலாகத் தந்தான். அது கூத்தனூரில் ஓட்டு பங்களா வாசலில் தூங்கிக் கொண்டிருந்தது. ரத்தினத்திடம் கார் ஓட்டும் பொறுப்பை ஒப்படைக்கச் செந்தில் விரும்பாத காரணத்தால் எல்லோரும் ஒரே வண்டியில் ஆஸ்பத்திரியை வந்தடைய நேர்ந்தது.

தாசில் ஐயாவுக்குப் பசி வயிற்றைக் கிள்ளிற்று. செந்தில் இன்னும் ஐந்து நிமிடத்தில் வந்துவிடுவான், பத்து நிமிடத்தில் வந்துவிடுவான் என்று ரத்தினம் ஆசை காட்டிக்கொண்டே இருக்க, சூரியன் விடுவிடுவென்று மேலெழும்பிக் கொண்டிருந்தான். தாமோதரத்தை யாரும் தொந்தரவு செய்யலாகாதென்று டாக்டர் கண்டிப்பாக உத்தரவிட்டிருந்ததால் அந்த அறைக்கும் போக முடியவில்லை.

ஒருவழியாகச் செந்தில் வந்து சேர்ந்த பொழுது தாசில் ஐயா, சுவரில் மாட்டியிருந்த கடியாரத்தைப் பார்த்தார். மணி ஒன்பதரை. ஒன்பதரைக்காவது வந்து சேர்ந்தானே என்று அவர் திருப்திப் பட்டுக்கொண்டார். ஆனால் செந்தி லின் முகம் என்னவோ போலிருப்பதாக அவருக்குப் பட்டது. எதையோ உள்ளடக்கி வைத்திருப்பது போன்ற கடுகடுப்பு வெளிப்படையாகத் தெரிந்தது. தாமதம் குறித்து அவன் ரத்தினத்திடம் ஒருவார்த்தையாவது விளக்கம் தர வேண்டுமே!

கூத்தனூரை நோக்கிச் செல்லும் பொழுது, வண்டியில் யாருமே பேசவில்லை. செந்தில்தான் ஸ்டீயரிங்கைப் பிடித்திருந்தான். தாசில் ஐயா—செந்திலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்—திரும்பிப் பார்த்தார். ரத்தினம் கண்களை மூடிக்கொண்டு ஒரு மூலையில் சாய்ந்துகொண்டிருந்தான். ஆனால் அவன் தூங்கவில்லை என்பதை அவர் அறிவார். இவ்வளவுக்கும், இரவு முழுவதும் அவன் கண் விழித்திருந்தான். காலை மூன்று மணிவரை தாமோதரத்தின் அறையில் செந்திலும் தாசில் ஐயாவும் அவனுக்குத் துணையிருந்தார்கள். அவர்கள் எழுந்து சென்ற பின்னர், அவனும் டாக்டருமாகக் கட்டில் அருகே அமர்ந்து நோயாளியைக் கண்காணித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் எவ்வளவு அசதி இருந்தபோதிலும் ரத்தினத்தைத் தூங்கவிடாதபடி தடுக்கும் கவலை எது என்பதைத் தாசில் ஐயா உணர்வார். தாமோதரத்துக்கும் கோவிந்தனுக்கும் நேர்ந்த விபத்துக்கள் ரத்தினத்தை அயர்த்தி விட்டன என்பது உண்மை. ஆனால் எல்லாவற்றுக்கும் மேலாக, துளசியைப் பற்றிய விசனம்தான் அவன் உள்ளத்தை அரித்துக் கொண்டிருக்கிறது என்று தாசில் ஐயா ஊகித்தார்.

கூத்தனூரைக் கார் நெருங்கியதும் அவர் சொன்னார். ''மிராசுதாரைப்

பார்த்துவிட்டு அப்படியே போக லாமே. துளசியைப் பற்றிய தகவல் ஏதேனும் கிடைத்திருக்கிறதா என்று விசாரிப்போம்.''

விசாரித்தார்கள்.

ஏதும்றியாதவன் போல் செந்தில் உடனிருக்க, ஆவலோடு ரத்தினமும், அனுதாபத்தோடு காசில் தயாவும், பட்டாடையும் அத்தர் மணமுமாக விளங்கிய கனகசபையை விசாரித்தார் கள்.

''என் ஆட்கள் எங்கெங்கெல்லாமோ தேடிவிட்டார்கள். ஒரு தகவலும் கிடைக்கவில்லையாமே! என்ன செய்ய லாம். எதற்கும் கொஞ்சம் பொறுத் துப் பார்ப்போம். இன்னும் ஓரிருவர் வரவேண்டியதிருக்கிறது. அவர்களைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கி றேன். வந்தவுடன் உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன்.''

ரத்தினம் எழுந்தான். ''உங்களுக்கு ரொம்பத் தொந்தரவு கொடுத்துவிட்ட தாக நினைக்கிறேன். மன்னித்துக் கொள்ளவேண்டும்,'' என்று நன்றி தெரிவித்துவிட்டு, மற்ற இருவருட னும் ஓட்டு பங்களாவுக்குத் திரும்பி னான்.

குழந்தைகளைப் பார்த்ததும் அவன் முகத்தில் படிந்திருந்த துயரத் திரை சற்றே விலகிற்று. 'அப்பாவுக்கு இனி ஆபத்தில்லை, அம்மா நாளைக்கு வந்து விடுவாள்' என்ற செய்தி அவர்களைக் கும்மாளமிடச் செய்தது கண்டு அவன் அக மகிழ்ந்தான். ஆனால், ''பாப்பா எங்கே அண்ணா?'' என்று சச்சு கேட்ட போதோ?

கோவிந்தனுக்கு அடிபட்டு விட்ட தாக அறிவித்தவள் பாப்பாதான். மாந் தோப்புக்கு அவர்கள் கூட்டமாகச் சென்ற போது அவள்தான் வழி காட் டினாள். தாமோதரத்தைப் பார்த்த வுடன், ''ஏன் பாப்பா, கோவிந்தன் அல்லவோ அடிபட்டுக் கிடப்பதாகச் சொன்னாய்?'' என்று அவன் அவளைக் கேட்டதும் நன்றாக நினைவிருந்தது. பிறகு? அப்புறம்தான் அவளைக் காணோம்.

மேலும், கோவிந்தனுடைய புதிர் வேறு அவன் மூளையைக் குழப்பிற்று.

எல்லாமாகச் சேர்ந்து, ரத்தினத் தின் சக்தியை எல்லாம் உறிஞ்சிக் கொண்டிருந்தன. பல் தேய்க்கப் போனவன் இடறி விழுந்து விட் டான். ஆனால் அதை யாருமே கவ



''பரீட்சையில் பெயிலாகி, தற் கொலை பண்ணிக் கொள்பவர் கள் அத்தனை பேரும் பையன் களாகவே இருக்கிறார்களே, பார்த்தீர்களா? ஏன் பெண்கள் உயிரை விடுவதில்லை?''

''நீங்கள் ஒன்று! உயிரை எடுக் கத்தானே தெரியும் அவர் களுக்கு?'

னிக்கவில்லை. நனைந்துவிட்ட ஆடை களை மாற்றிக்கொள்ளவும் திராணியற் றவனாய், அவன் சுற்றுத் திண்ணையில் உட்கார்ந்து ஒரு தூண்மீது சாய்ந்து கொண்டிருந்தபோதுதான், செந்தில் அங்கே தோன்றி, முகவுரையோ விளக்கமோ தராமல் டைப் அடித்த சில தாள்களை நீட்டினான்.

''என்ன?'' என்றான் ரத்தினம், கண்களைப் பாதி திறந்தவாறு.

''விடுதலைப் பத்திரம்.''

''ஏது?'' ஒருகால் கோவிந்தன் வந்து விட்டானோ என்ற ஆவல் ரத்தினத் துக்கு.

செந்தில் கிணற்றைப் பார்த்துக் கொண்டு பேசினான். ''முதல் பத்தி ரத்தை ஒளித்துவிட்டதால் உலகம் அஸ்தமித்துப் போய்விடாது. வேறொரு வக்கீலைப் பிடித்து, இன்னொன்று தயார் செய்து எடுத்து வந்திருக் கிறேன்.

ரத்தினம் பத்திரத்தைக் கையில் எடுத்தான். கண்களை வாட்டிய

எரிச்சலினூடே எழுத்துக்கள் தெளிவில்லாமல் நீந்தின. கண்களைத் தேய்த்து விட்டுக்கொண்டு புருவங்களை நெறித்துப் பார்த்தான். தலை நோவு தான் மிச்சம்.

"செந்தில்!" என்றான் கெஞ்சுதலாக. "எனக்கு ஒரே அசதியாக இருக்கிறது. ஒன்றுமே ஓடவில்லை. இது என்னிடத்திலேயே இருக்கட்டும். நாளைக்கு ஆகட்டுமே?"

குபீரென்று தீப்பற்றி எரிந்தன செந்திலின் விழிகள்.

அவன் போட்ட கணக்கு சரிதான். காரியமென்று வரும்போது ரத்தினம் எவ்வளவு சாமர்த்தியமாகப் பின் வாங்குகிறான்! நாளைக்கு ஆகட்டுமாம். அதுவரையில் பத்திரத்தை அவனிடம் விட்டு வைக்க வேண்டுமாம். இரண்டாவது பத்திரத்தையும் பறிகொடுக்கச் செந்தில் ஒன்றும் முட்டாள் இல்லை.

வெடுக்கென்று பறிக்காத குறையாகப் பத்திரத்தை வாங்கிக் கொண்டே, "பரவாயில்லை. என்னிடத்திலேயே இருக்கட்டும்," என்று செந்தில் உறுமினான்.

வாசற்புறமிருந்து ஏதோ ஆரவாரம் கேட்டது.

மேல் மூச்சு வாங்க ஓடி வந்த ஓர் ஆள் ரத்தினத்தின் காலில் விழுந்தான். "எசமான். நீங்கதான் காப்பாத்தணும். என் மகனை மாடு முட்டி வயித்தைக் கிழிச்சிடுச்சுங்க."

"யார்? முனியனையா?"

"ஆமாங்க. உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போனாப் 'பிழைச்சுக்கிடுவான்னு சொல்றாங்க..."

சில நிமிடங்களுக்கு முன்னால் சோர்ந்துபோய் உட்கார்ந்திருந்த ரத்தினமா இவன்? சரேலெனக் காரை நோக்கிப் பாய்ந்தவனாய், "பையனைத் தூக்கிக் கொண்டுவா. வேண்டாம்... அவன் எங்கிருக்கிறான்? நீயும் ஏறிக் கொள். நாமே அங்கே போகலாம்," என்றான்.

கார் புறப்படும் ஓசை கேட்டது. செந்தில் பல்லைக் கடித்தான். பத்திரத்தில் கையெழுத்துப் போடக்கூடச் சக்தி இல்லாதவன் போல் காட்சியளித்தான். இப்போது பறக்கிறான்.

ரத்தினத்துக்கு ஏதாவது தீங்கு செய்யாவிடில் மனம் ஆறாதுபோலிருந்தது செந்திலுக்கு.

# திருமணம்

*வலம்புரி பிக்சர்ஸ்*

எல்லோருக்குமே பணம் அவசியமாக இருக்கிறது. ஆனால் எல்லோரும் பணத்துக்கு அடிமையாகி விடுவதில்லை.

இயல்பாக அமைந்த ஒரு கலைத் திறனையோ, தற்செயலாகக் கிடைக்கப் பெற்ற ஒரு சக்தியையோ, பொருளுக்காக விற்பதில்லை என்று ஒருவர் கொள்கை வகுத்துக்கொண்டால் நாம் ஆச்சரியப்படமாட்டோம்.

ஆனால், இசைக் • குடும்பத்தைச் சேர்ந்த கதாநாயகனின் அண்ணா, பணத்துக்குப் பாடுபவன் பிணமாவான் என்ற ஒரு பரம்பரைச் சாபத்தைச் சொல்லிப் பூச்சாண்டி காட்டுவதுடன், வராத ஆபத்து தம்பிக்கு வந்ததாகக் கற்பனை செய்துகொண்டு அந்தப் பூச்சாண்டிக்குத் தம்மையே பலி கொடுத்துக்கொள்வது, 1958-ஆம் ஆண்டுத் தமிழ் நாட்டுக்கு எந்த அளவுக்கு உகந்தது என்பது சந்தேகமாக இருக்கிறது.

கணேஷ்தான் தம்பி, கதாநாயகன். கதை அவருக்கெனவே தயாரிக்கப்பட்டது போலும். ஆரம்ப முதல் கடைசி வரை, 'நான் ஒரு பாவமும் அறியேனே!' முகபாவம் அவருக்குப் பெரிதும் உதவி செய்கிறது. கிராமாந்தர வாலிபன் பட்டணத்து யுவனாக மாறும் போதும் சரி, காதலியின் அன்புக்கும் அவமதிப்புக்கும் ஆளாகும்போதும் சரி, அண்ணாவை நினைத்துக் கதறும் போதும் சரி, நடிப்புப் பொருத்தமாக இருக்கிறது.

செல்லம் கொடுத்து வளர்க்கப்பட்ட பணக்காரப் பெண்ணாக வருகிறார் சாவித்திரி. 'என்னைப் பார்த்தால் தாயாகவும் குழந்தையாகவும்தான் உங்களுக்குத் தோன்றுகிறதா?' என்று எரிந்து விழும் கட்டத்தில் திருப்திகரமாக இருக்கிறது. உடல் சற்று வடிந்திருப்பதால், இவரது நடனத்தைச் சற்றுச் சகித்துக்கொள்ள முடிகிறது.

நாகையாதான் அண்ணா. உணர்ந்து நடிக்கிறார் என்பது உண்மையானாலும், பார்ப்பதற்குப் பட்டினி கிடந்து இளைத்தவர் மாதிரியா காட்சியளிக்கிறார்? ரேடியோவில் பாடியது தனது தம்பி என்று கேட்டமாத்திரத்தில் இவர் காட்டும் திடீர் ஆவேசம் மிகையே.

அந்த உள்ளம் கவர் 'கிழவர்'—ரங்கராவ்—மற்றுமொரு முறை சாவித்திரியைப் பெண்ணாகப் பெற்றுக் கணேஷின் கரத்தில் ஒப்படைக்கிறார். அவர் மருமகளாக வரும் சந்தியாவின் பாகத்தை இன்னும் கொஞ்சம் விரித்திருக்கலாம்.

தரமான நடிப்பு, எம். என். ராஜத்துடையது. தங்கவேலுவின் தமாஷுடன் அது சேரும்போது அழகாகப் பொலிகிறது. பின்னவருடைய வழக்கமான சேட்டைகளுக்கு இடையே, பேச்சிலும் நடிப்பிலும் நகைச்சுவையில் ஓரளவுக்கு நுட்பம் அதிகரித்திருப்பதைக் காண்கிறோம்.

உயிருள்ள, சரளமான வசனம்; நகைச்சுவைக் கட்டங்களில் உச்சத்தை அடைகிறது. ஆனால் எம். என். ராஜத்தைத் துரத்தும் ஒரு பட்டிக்காட்டுக் 'கேடி'யின் வாயில், சிவாஜி கணேசன் சொல்லவேண்டிய ஆர்ப்பாட்ட வசனத்தைப் புகுத்தியிருப்பது வேடிக்கையிலும் வேடிக்கை.

கேவா கலரில் இரண்டு நாட்டியங்கள் இணைக்கப்பட்டிருக்கின்றன. வண்ண ஜாலங்கள் கண்களுக்குக் கிச்சுக்கிச்சு மூட்டுகின்றன. ஆனால் கமலா. கோபிகிருஷ்ணா இருவரின் திறமையும் அவற்றில் பிரதிபலிப்பதாகக் கூறமுடியாது. பாழ் இல்லையென்றாலும் வீணே.

ஒளிப்பதிவு நெடுகிலும் தூயதாயிருக்க, இசையமைப்பில் ஒவ்வொரு சமயம் இதம் உண்டு.

வேரிலே வலுவில்லைதான். ஆயினும் திருமணத்தில் கொஞ்சம் நறுமணமும் இல்லாமலில்லை.



# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

## முப்பத்தைந்து

கடைசியாக ஒரு மூச்சு இழுத்து விட்டு, சிகரெட்டைத் தூர எறிந்த கனகசபை, கதவின் மீது கை வைத்துத் தள்ளினான்.

கதவு திறக்கவில்லை.

ஒருமுறை தட்டிப் பார்த்தான். பதில் ஏதும் வராமல் போகவே எட்டி ஓர் உதை கொடுத்தான்.

தடால் என்ற ஓசையுடன் கதவு வழி விட, ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த முக்காலியும், முக்காலியின் மீதிருந்த கட்டையும் பெருத்த ஓசையுடன் கீழே விழுந்தன.

சட்டென்று துள்ளி ஒரு மூலையில் பதுங்கிக் கொண்ட உருவம் மெள்ளத் தலையை நீட்டிற்று.

''கனக சபையா?''

''தட்டினவுடன் திறப்பதற்கென்ன!'' என்றான் கனகசபை எரிச்சலோடு.

''மன்னித்துக்கொள் கனக சபை,'' என்றான் கோவிந்தன் மறைவிடத்திலிருந்து வெளியே வந்தபடி. ''யாரோ என்று நினைத்துப் பயந்து விட்டேன்.''

''இதெல்லாம் என்ன!'' நிலைபுரண்டு கிடந்த மேசை நாற்காலிகளின் மேல் கண்களை ஓட்டியபடி கேட்டான் கனக சபை.

கோவிந்தன் சமாதானம் சொன்னான். ''கதவுக்குத் தாழ் இல்லை. முட்டுக் கொடுப்பதற்காக இவற்றையெல்லாம் ஒன்றன் மேல் ஒன்றாக நிறுத்திவைத்திருந்தேன்.'' அவன் அவற்றை ஒவ்வொன்றாக நிமிர்த்தி வைத்தான்.

ஒரு நாற்காலியில் அமர்ந்து கால் மேல் கால் போட்டுக் கொண்ட கனக சபை அடுத்த சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

''ராத்திரி நன்றாகத் தூங்கினாயா?''

சாம்பல் தட்டைக் கொண்டு வந்து வைத்த கோவிந்தன் உதட்டைப் பிதுக்கினான். ''இமையோடு இமை ஒட்டினால்தானே? கனகசபை, எந்த நிமிடத்தில் யார் வந்து என் கையில் விலங்கைப் பூட்டிவிடுவார்களோ என்று நான் பயந்து பயந்து செத்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு எங்கிருந்து தூக்கம் வரும்!''

ரத்தம்போல் சிவந்திருந்த அவன் கண்களும் கலைந்து கலையிழந்து கிடந்த தலைமயிரும் அவன கூற்றுக்குச் சாட்சியம் கூறின.

''யாரேனும் காப்பி கொண்டுவந்து கொடுத்தார்களா?''

கோவிந்தன் தூசு படிந்த தரையில் உட்கார்ந்து கொண்டான். ''யாரோ தட்டினார்கள். நான் ஏன் திறக்கிறேன்? கொஞ்ச நேரத்தில் அவர்களாகவே போய்விட்டார்கள். கனக சபை, எனக்குக் காப்பியும் வேண்டாம் ஒரு மண்ணும் வேண்டாம். தயவு செய்து யாரையும் இங்கே அனுப்பாதே. காலடி சப்தம் கேட்டாலே வயிற்றில் புளியைக் கரைக்கிறது.'' அவன் கனகசபையின் முழந்தாள்களைக் கட்டிக் கொண்டான்.

கனகசபை புகையை ஊதினான். ''ஆமாம், நீ இன்னும் எத்தனை நாளைக்கு யாரும் அறியாமல் இங்கே ஒளிந்திருக்க முடியும் என்று நினைக்கிறாய்?''

''உன் தயவு இருக்கும்வரை.''

''திருத்திக்கொள்,'' என்றான் கனக சபை. ''உன்னைப் பதுக்கி வைத்திருப்பதாக என்மீது போலீஸார் சந்தேகப் படும்வரை.''

கோவிந்தன் கெஞ்சினான். ''கனக சபை, இன்னும் நான்கு நாள் பொறுத்துக்கொள். அதற்குள் நான் வேறு எங்காவது ஓடிப் போய் விடுகிறேன்.''

கனகசபை சிரித்தபடி தலையை ஆட்டினான்.

ஆனால் கவலையோடு கேட்டான் கோவிந்தன். ''சிரித்தால்? உன் சிரிப்பிற்கு என்ன அர்த்தம்?''

"அவனவனுக்கு அவனவன் உயிர் சர்க்கரை. உன்னைக் காப்பாற்றப் போய் நானே ஆபத்தில் மாட்டிக் கொண்டுவிட்டால் என்ன ஆவது?"

கோவிந்தன் கலங்கினான். "நீ கொடுத்த வாக்கை மறந்துவிட்டாயா கனகசபை?"

கனகசபையின் முகத்திலிருந்த புன்னகை மறைந்தது. "உன் வாக்கை நீ மறக்கவில்லையே?"

"ஒருகாலும் இல்லை."

"சரி." கனகசபை எழுந்தான். "நீ தயாராக இரு. சரியாகப் பதினொரு மணிக்கு நீ இங்கிருந்து புறப்பட வேண்டியிருக்கும்."

கோவிந்தனின் கண்கள் திகிலால் நிரம்பின. "இங்கிருந்தா? எங்கே கனகசபை? எதற்காக? இந்த நிலைமையில்..."

கனகசபை அவனை முறைத்துப் பார்த்தான். கோவிந்தனின் குரல் அறுந்து அந்தரத்தில் தொங்கிற்று. மறுபடியும் ஏதோ பேச ஆரம்பித்தவன் வாயை மூடிக்கொண்டான். கையைப் பிசைந்தபடி நின்றான்.

"சரியாகப் பதினொரு மணிக்கு. நினைவிருக்கட்டும்."

திரும்பிப் பாராமல் கனகசபை வெளியேறினான். திரும்பியிருந்தால் தரையில் கை வைத்தபடி குந்திவிட்ட கோவிந்தனின் உருவம் அவனுக்குத் தெரிந்திருக்கும்.

மேஜை மீது நிறுத்திவைக்கப் பட்டிருந்த பிரயாண கடியாரத்தை நோக்கித் துளசியின் பார்வை தாவிற்று.

10-46. சே! இன்னும் பதினான்கு நிமிடம் இருக்கிறதே. துளசியின் உடலெங்கும் ஈரம் கசிந்தது. கடியாரத்தில் ஏதும் கோளாறு இருக்குமோ என்ற ஐயம் முளைக்க அதைக் கையிலெடுத்துக் காதுடன் பொருத்திப் பார்த்தாள். அவளுடைய அவசரத்தையும் திகிலையும் சிறிதுகூடப் பொருட்படுத்தாமல் யந்திரத்துக்கே சாத்தியமான நிதானத்துடன் கடியாரம் டிக்கிட்டுக் கொண்டிருந்தது.

பரபரப்பில் கால்நோவுகூட மறந்து போய் விட்டது துளசிக்கு. பாப்பாவின் திட்டம் வெற்றி பெற்று தான் உடனடியாகத் தப்பிவிட வேண்டும் என்ற ஆவலின் வேகத்துக்கும் திட்டம் நிறைவேறுமுன் கனகசபையிடம் அகப்பட்டுக் கொண்டு விடுவோம் என்ற அவநம்பிக்கையின் கூர்மைக்கும் இடையில் சிக்கி அவள் விநாடிக்கு விநாடி கசங்கிக் கொண்டிருந்தாள்.

பாப்பாவின் சாமர்த்தியத்திலும் துணிச்சலிலும் அவளுக்கு நம்பிக்கை கிடையாது என்பதல்ல. ஆனால் அதிர்ஷ்டம் எவ்வளவு நேரத்துக்குத்தான் தங்கள் இருவருக்கும் கைகொடுத்துக் கொண்டே இருக்க முடியும்?

இருளாயிக்குத் தங்கை என்று பாப்பா தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டபோதே கனகசபையிடம் அவள் குட்டு உடைபட்டிருக்கும், உற்ற தருணத்தில் துளசிக்கு அந்தத் தலை சுற்றல் வந்திராவிட்டால். ஆனால் பாப்பாவுக்குச் சிறிதேனும் அச்சம் இருக்க வேண்டுமே! அவளது தைரியத்தைக் கண்டு பயந்தே அபாயம் எட்டி நிற்பதுபோல் துளசிக்குத் தோன்றிற்று. ஆனால் அது மருண்டு ஓடிவிடப் போவதில்லை. கோல் வைத்திருக்கும் மனிதனுக்குப் பயந்து பதுங்கியபடி காத்திருக்கும் நரிகளைப்போல அது சமயம் பார்த்துக் கொண்டேயிருக்கும்.

ஜன்னல் வழியே மப்பும் மந்தாரமுமாகக் காட்சியளிக்கும் வானத்தின் ஒரு பகுதி தெரிந்தது. கொஞ்சங் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டே வந்த புழுக்கம் திடீரென்று அடங்க, சடசடவென்று மழை பிடித்துக் கொண்டது. பாதி சாளரத்தை மூடியிருந்த பூப்போட்ட திரை நன்றாக நனைந்துவிட்டது. மூர்க்கத்துடன் மழைதொடரவே மேல் பகுதி வழியே அறைக்குள் நுழைந்த பெரும் துளிகள் அருகேயிருந்த மேஜைமீது விழுந்து அதிலிருந்த சில காகிதங்களை நாசம் செய்யலாயின. சனகசபையின் வீடேயாயினும் அதிலுள்ள பொருள்கள் வீணே கெட்டுப் போவதை ஒழுங்கிலும் சிக்கனத்திலும் சுத்தத்திலும் நாட்டமுள்ள துளசியின் மனத்தால் அனுமதிக்க முடியவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு கட்டில் குமிழின்மீது கையை நன்றாக ஊன்றியபடி சாளரக் கதவுகளைச் சாத்தப்போனவளின் கண்களுக்கு உற்சாக மூட்டும் காட்சியொன்று தென்பட்டது.

சொன்னபடி செய்துவிட்டாள் பாப்பா. தலையில் முக்காடிட்டபடி ஈரப்புடவை உடலோடு படிய மாட்டுக் கொட்டிலினின்று அவசரம் அவசர

மாகத் தூரத்தில் வந்து கொண்டிருக்கும் பாப்பாவின் உருவம் மாடியிலிருந்து நோக்கும்பொழுது சிறியதாகத் தெரிந்தாலும் புத்தியின் சுறுசுறுப்பும் காரியத்தில் கவனமும் அவளது ஒவ்வொரு உடல் அசைவிலும் பளிச்சென்று வெளிப்பட்டன.

துளசிக்குத் தெரியும், அந்த உயரமான சுவர்களுக்கு அப்பால் ஆள் நடமாட்டமே இல்லாத ஒரு மூலையிலே அவனுக்காக ஒரு வண்டி காத்திருக்கிறது என்று. ஒற்றை மாட்டு வண்டியோ, ஜட்காவோ, காரோ எதுவாக இருந்தாலும் அது இன்னும் சில நிமிடங்களுக்குள் அவளை இந்தச் சிறையிலிருந்து மீட்டு ரத்தினத்தின் இருப்பிடத்தை நோக்கிப் பறந்து சென்று அவன் கைகளிலே அவளை ஒப்படைக்கப் போகிறது.

பாப்பா கிட்டே வந்துவிட்டாள். நடந்து வந்து கொண்டே தற்செயலாகத் தலை நிமிர்ந்து பார்த்தாள். நான்கு கண்களும் சந்திக்க, துளசி முகமலர்ந்து கையை ஆட்டினாள். புன்முறுவல் செய்தபடி அங்கே ஒரு கணம் அப்படியே நின்ற பாப்பா அடுத்தகணம் தன் நினைவு பெற்றவளாய் எச்சரிக்கையுடன் சுற்றுமுற்றும் நோக்கிவிட்டுப் பார்வையினின்று மறைந்துவிட்டாள்.

ஜன்னல் கதவை இழுத்துச் சாத்திய துளசி மெதுவாக நடந்து கதவருகே வந்து, எட்டிப் பார்த்தாள். பற்பல அறைகளும் மூலைகளும் திருப்பங்களும் நிறைந்த அந்தப் பங்களாவில் பாப்பா மாடிப்படி ஏறிவந்து தன்னை அடைய இன்னும் இரண்டு மூன்று நிமிடங்களாவது பிடிக்கும் என்பதை அவள் அறிவாள். கால்கள் கடுத்தன. டிரஸ்ஸிங் மேசைக்கு முன்னால் மெத்தை தைத்த ஒரு தாழ்ந்த நாற்காலிமீது அவள் சரிந்து உட்கார்ந்தாள். அவளது முழு வடிவமும்—லேசாகக் கலைந்து சுருள் சுருளாகச் சிலுப்பிக் கொண்டிருந்த கரிய கேசம் முதல், வெள்ளைத் துணியால் கட்டப்பட்டு உருத் தெரியாமல் மறைந்திருந்த பாதங்கள்வரை—மாசு மறுவில்லாமல் பளபளத்துக் கொண்டிருந்த அந்த ஆளுயரக் கண்ணாடியில் தெளிவாகத் தெரிந்தது. பழக்கம் காரணமாகக் கூந்தலின் நிலையைக் கண்டதும் அவள் கைகள் சீப்பை நாடின. தங்கப் பூண் போட்ட தந்தசீப்பை மேசை மீதிருந்து எடுத்துத் தலையில் பதித்து வாரிக்



கொள்ளப் போனவள், சட்டென்று நிறுத்தி அதைப் பழைய இடத்திலேயே கிடத்திவிட்டாள். திலகம் இல்லாத நெற்றிக்குக் கீழ் விழிகள் ஆவலால் மினு மினுத்துக் கொண்டிருந்தன. 'நெஞ்சே! பதறுதே. இன்னும் கொஞ்சநேரத்தில் நீ அவரைப் பார்க்கப் போகிறாய். அவர் உள்ளத்தோடு இரண்டறக் கலந்து, அவர் அன்பிலே திளைக்கப்



## பல குரல்கள்

சின்ன விஷயம்தான் பகுதியில் (20—7—58) உதடு ஒட்டாமல் சொல்லக் கூடிய குறள் என்ன என்ற கேள்விக்கு ஒரு குறள் குறிப்பிடப் பட்டிருந்தது. அது தவிர அது போன்ற குறள்கள் இன்னும் சில இருப்பதாகக் கீழ்க் காணும் அன்பர்கள் குறித்திருக்கிறார்கள்.

திருவல்லிக்கேணி கே. திருவேங்கடாச்சாரி:

**"எய்தற்கரியது இயைந்தக் கால் அந்நிலையே**
**செய்தற்கரிய செயல்"**

*(489—ஆம் குறள்)*

பாம்பம்பாளையம் பா. கா. இளங்கோ:

**"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்"**

*(341-ஆம் குறள்)*

காந்திக் கிராமம் அ. கோபாலன்:

**"இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை"**

*(310-ஆம் குறள்)*

போகிருய்' என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டாள்.

ரத்தினத்தைப் பற்றி நினைத்ததுமே காலையில் அவர் மீது அலுப்புற்றுப் பாப்பாவிடம் தான் குறைப் பட்டுக் கொண்ட குற்றம் அவள் நினைவுக்கு வந்து ஊசியாய் உறுத்திற்று. தாமோதரத்துக்குப் பணிவிடை செய்வதன் மூலமாகவும் கோவிந்தனுக்கு நேர்ந்த கதியைக் கண்டுபிடிக்க உதவி செய்வதன் மூலமாகவும் ரத்தினத்துக்குத் தான் உற்ற துணைவியாக விளங்குவதை விடுத்து, தன்னைப் பற்றி யாரும் கவலைப்படவில்லையே என்று கற்பனை செய்து கொண்டு மனம் வெதும்பிய அசட்டுத்தனத்தை எண்ணி அவள் வெட்கித் தலை குனிவதற்கும் ஒசைப் படாமல் பாப்பா உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது.

துளசி அவள் கைகளைப் பற்றினாள்.

"புறப்படலாமா?"

"சீக்கிரம்!" என்று துரிதப்படுத்தினாள் பாப்பா, துளசியின் இடையை அணைத்துக் கொண்டு அவளது இடது கையைத் தன் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண்டபடி, "கால்வலி எப்படி இருக்கிறது அக்கா?" என்றாள் பரிவுடன்.

நாலடி எடுத்து வைப்பதற்குள் சகிக்க முடியாத வலி துளசியின் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைக்குப் பாய்ந்தது. தோழியின் ஈர ஆடைகளின் அணைப்பில் சில்லுற்று உடல் நடுக்கம் கண்டது. ஆயினும் மிடறு விழுங்கிய படி, "ஒன்றுமில்லை. போய்விடலாம்," என்று ஊக்கினாள்.

அவள் மற்றவளுக்குச் சுமையாக இருக்கலாகாது என்று எவ்வளவுதான் முயன்றபோதிலும் முயற்சி பலிக்க வில்லை என்பதற்குப் பாப்பா அடிக் கொருதரம் நின்று நின்று களைப்பாற நேர்ந்த காட்சி எடுத்துக் காட்டிற்று.

முதல் திருப்பம் திரும்பியாகிவிட்டது. அதற்குள் இப்படி மூச்சு வாங்குகிறதே. துளசியால் கால் நோவைத் தாள முடியவில்லை.

"பாப்பா, இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும்?"

"கொஞ்ச தூரம்தான். சீக்கிரம், சீக்கிரம்!"

துளசிக்குப் பாப்பாவின் கூற்றில் எவ்வளவு உண்மை உண்டு என்பது தெளிவாகத் தெரியும். தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ள அவள் தயாராக இருந்தாள். ஆனால் முடியவில்லை. படிக் கட்டு இன்னும் கண்ணிலேயே தென் படவில்லை. ஒரு படி இறங்குவதற்குள் ஒரு தடவை உயிர் போய் வந்துவிடும், அப்புறம் மாட்டுக்கொட்டில்வரை நடந்தாக வேண்டும். தாங்கள் கடக்க வேண்டிய தூரத்தைக் கணக்கிட்டுக் கணக்கிட்டுக் கொஞ்சநஞ்சமிருந்த நம்பிக்கையையும் இழந்து கொண்டிருந்த போதுதான் அவள் தற்செயலாகத் திரும்பிப் பார்க்க நேர்ந்தது.

தோள் மீதிருந்த அவள் கை பாப்பாவின் கழுத்தைத் திடீரென்று நெறித்தது போலும். துளசியின் முகத்தைப் பார்த்தவள் தானாகவே பின்பக்கம் திரும்பினாள். துளசியின் திகைப்புக்குக் காரணம் விளங்கிற்று.

கனகசபை தூரத்திலிருந்து கிழக்கத்தி வராந்தா வழியே நடந்து வந்து கொண்டிருந்தான்.

ஒரே கேள்வி இருவர் மனத்துக்கும் அதிர்ச்சி தர, பாப்பாவும் துளசியும் அசையாமல் நின்றார்கள்.

கனகசபை கதவைத் திறந்து புறா பறந்து விட்டதைப் புரிந்து கொண்டு விட்டால்'

அவர்கள் இதயம் படபடத்தது. ஒரே ஒரு சப்தம் கொடுத்தானால் அத்தனை வேலையாட்களும் தேட ஆரம்பித்து விடுவார்களே. பத்தே வினாடிகளில் பெண்களிருவரும் மறுபடியும் சிக்கிவிட மாட்டார்களா?

பாப்பாவுக்கு என்ன தோன்றிற்றோ, துளசியின் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு அறையை நோக்கி நடக்க முயன்றாள். ஆனால் துளசி அவளை விடவில்லை.

இதற்குள், கனகசபையும் அறைக் கதவை நெருங்கி விட்டான், திருப்பத்தின் மறைவில் ஒளிந்தபடி எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் இரு உயிர்களின் கட்டுக்கடங்காத படபடப்பை அறியாதவனாய்.

கனகசபை கதவைத் திறந்ததும் வெடிக்கப்போகும் பூகம்பத்தை நினைத்து உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நடுங்கிய துளசி ஏமாந்தாள். ஆனால் எவ்வளவு இனிப்பான, அமுத ஊற்றையொத்த, ஆனந்தமான ஏமாற்றம் அது!

கனகசபை, சாத்தியிருந்த அறைக் கதவை ஒருமுறை பார்த்துவிட்டுத் தன் பாட்டுக்கு நடந்துபோய்க்கொண்டிருந்தான். துளசியின் அறைக்குள் நுழையும் நோக்கமே அவனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை.

மகிழ்ச்சியுடன் பாப்பா மற்றவளது கையை அழுத்தினாள். ஆபத்தின் தலைவாயிலில் நிற்கும்பொழுது எவ்வளவு கடுமையாக அதிர்ச்சியுற்றாளோ, அதற்குக்கடுகளவும் குறைவாக இருக்கவில்லை, எதிர்பார்த்த அபாயம் திடீரென்று நீங்கிவிட்டதால் ஏற்பட்ட அதிர்ச்சி. ஆனால் அதே சம்பவம் பாப்பாவுக்கு இரட்டிப்புச் சுறுசுறுப்பைக் கொடுத்தது. தரதர வென்று இழுக்காத குறையாகத் துளசியை அழைத்துக் கொண்டு அவள் முன்னேறினாள்.

மழை இன்னும் பெய்யவில்லை. பல மாதங்களாக வெய்யிலில் காய்ந்த பழைய சுவர்கள் மழைத் துளிகளை இல்லென்று இழுத்துக் கொண்டு மண் வாசனையைப் பரப்பின. வெட்ட வெளிச்சத்தில் முதல் முறையாக மாளிகையின் அமைப்பை ஓரளவாவது கவனிக்கும் வாய்ப்புப் பெற்ற துளசி, குறுக்கும் நெடுக்குமாக ஓடும் வராந்தாக்களையும் எத்தனையோ காலமாக உபயோகிக்கப் படாமல் இழுத்துப் பூட்டப்பட்டிருக்கும் அறைகளையும் இருளடர்ந்த முடுக்குகளையும் கண்டு உடம்பைச் சிலிர்த்துக் கொண்டாள்.

எங்கோ ஒரு கடியாரத்தில் மணி அடிக்கும் ஓசை மிதந்து வந்தது.

மாடிப் படிக்கட்டை அடைந்தவுடன் பாப்பா சற்றுத் தயங்கினாள். பிறகு துளசியை மெள்ள அழைத்துக் கொண்டு பாதி வழி வந்திருப்பாள். மேலேயிருந்து தொங்கிய பிரம்மாண்டமான கண்ணாடிக் கொத்து விளக்கின் நிழல் படிந்து இருண்டிருந்த இடம் அது.

சுற்று வட்டாரத்தை மற்றொரு முறை ஆராயாமல் அவசரப்பட்டுக் காரியத்தைக் கெடுக்க விருப்பமில்லாதவளாய்த் துளசியை அங்கே அந்தப் படியிலேயே உட்கார வைத்துவிட்டு முன்னோட்டம் விட்டு வருவதற்காகக் கீழே இறங்கிப் போனாள்.

பக்கத்து அறையிலிருந்து கேட்ட பழக்கப்பட்ட குரலால் ஈர்க்கப்பட்டவள், ஆவலால் இதயம் படபடக்க உள்ளே எட்டிப் பார்த்தாள். இனமறியாத குளுமை அவள் உள்ளத்தை நிரப்பிற்று.

ஆம், சந்தேகமே இல்லை. எதிர் வெளிச்சத்தில் அவன் உருவம் சரியாகத் தெரியாவிட்டாலும் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டிருப்பவன் கோவிந்தன் தான்!

ஆயுட்காலம் முழுவதும் தேடி அலைந்த ஒரு பொருள் எதிர்பாராத சமயத்தில் கிட்டியதால் விளைந்த ஆனந்தம் அவள் வாயை அடைக்க, செய்தியைத் துளசியுடன் பகிர்ந்து கொள்ளும் நோக்கத்துடன் படிக்கட்டுப் பக்கம் திரும்பிய பாப்பா திகைத்து நின்றாள்.

கடைசிப் படியில் நின்றபடி செந்தில் துளசியை விழிகளால் விழுங்கிக் கொண்டிருந்தான்.

# குமுதம்

மாதம் மும்முறை

| இந்தியா, இலங்கை | ரூ. | பை | பர்மா, மலேயா, வெளிநாடு | ரூ. | பை |
|---|---|---|---|---|---|
| வருட சந்தா | 9 | 00 | வருட சந்தா | 13 | .50 |
| ஆறுமாத சந்தா | 4 | 50 | ஆறுமாத சந்தா | 6 | 75 |

(மூன்று மாத சந்தா கிடையாது)

தனிப் பிரதி : 25 பை

(டெலிபோன் எண் : 61936)

83, புரசைவாக்கம் ஹைரோடு, சென்னை-10.



# சொல்லாதே!

எஸ். ஏ. பி.

## முப்பத்தாறு

ரண சிகிச்சை அறையின் கதவு திறந்தது.

ஈரக் கைகளை ஒரு சலவைத் துண்டில் துடைத்தபடி வெள்ளை அங்கி அணிந்த டாக்டர் குருநாதன் வெளியே வந்ததும் அவர் கண்கள் ரத்தினத்தின் விழிகளைச் சந்தித்தன.

அவர் ஏதோ ஆங்கிலத்தில் சொல்வதையும் ரத்தினம் அவர் கையைக் குலுக்குவதையும் கண்டு ஒன்றும் புரியாமல் ஓரமாக நின்ற கிராமத்தான் ஆவலை அடக்க முடியாமல் ஓரடி முன்வந்தான். தன் இரண்டு கைகளாலும் தன் தோள்களைப் பற்றியபடி குனிந்து தழுதழுக்கும் குரலில், "சாமி, என் மகன் பிழைச்சிடுவானா?" என்று கேட்டபோது டாக்டர் புன்னகை செய்தார்.

"உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லை. பயப்படாதே."

நன்றியும் ஆனந்தமும் அவனுள் ஊற்றெடுத்துக் கண்ணீராக வழிய, "சாமி, நீங்க நல்லா இருக்கணும். என் வயிற்றில் பாலைக் கறந்தீங்க," என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறியபடி நெடுஞ்சாண் கிடையாகக் கீழே விழுந்தான்.

டாக்டர், "நீ நன்றி தெரிவிக்க வேண்டியது எனக்கல்ல; இவருக்கு." என்று ரத்தினத்தைச் சுட்டிக் காட்டினார். "இன்னும் கொஞ்ச நேரம் தாமதித்திருந்தால் எட்டு டாக்டர்கள் கூடியும் உன் மகனுடைய உயிரை இழுத்துப் பிடித்திருக்க முடியாது."

கிராமத்தான் ரத்தினத்தின் பக்கம் திரும்பினான். பேச்சின் எல்லையைக் கடந்து விட்டவனாய்த் தடாலென்று கீழே விழுந்து அவன் கால்களைக்கட்டிக் கொண்டு விம்மி விம்மி அழுதான்.

தான் என்ன சொல்லியும் பிடியைத் தளரவிடாமல் தன் பாதங்களைக் கண்ணீரால் கழுவிக் கொண்டிருக்கும் குடியானவனை எப்படி எழச் செய்வதென்று தெரியாமல் ரத்தினம் திண்டாடிக் கொண்டிருந்தபொழுது ஆபரேஷன் அறையிலிருந்து நோயாளி வெளிக் கொணரப்படுவதைக் கவனித்தான்.

"அதோ, உன் பிள்ளை! பார்!"

துள்ளியெழுந்த நாட்டுப்புறத்தான் கழுத்துவரை துணியால் போர்த்தப்பட்டு, மூடிய கண்களும் வெளிறிய முகமுமாய் ஸ்ட்ரெச்சரில் தூக்கிச் செல்லப்படும் உருவத்தைக் கண்டு திடுக்கிட்டு, திகிலுடன் டாக்டரின் முகத்தை நோக்கினான்.

"மயக்க மருந்து கொஞ்ச நேரத்தில் விழித்துக் கொண்டு விடுவான்."

கிராமத்தான் நோயாளியைப் பின்தொடர, டாக்டர் குருநாதன், ரத்தினத்துடன் தன் அறையை நோக்கி நடந்தார்.

காலையில் வைத்தியசாலையிலிருந்து புறப்பட்டுப் போனபோது ரத்தினம் அணிந்திருந்த அதே ஆடைகள் இப்போதும் அவனை அலங்கோலப் படுத்திக் கொண்டிருப்பதையும், இமைகளைச்சுற்றி அளவு கடந்த களைப்பின் அறிகுறியாகச் சருமத்தின்மீது கருவளையங்கள்பதிந்திருப்பதையும் கடைக்கண்ணால் பார்த்தவர், "மிஸ்டர் ரத்தினம், இந்தத் தினம் என் வாழ்க்கையிலேயே மறக்க முடியாத ஒரு நாள்," என்றார்.

"ஏன் டாக்டர்?" என்றான் ரத்தினம்.

அவனுக்கு ஒரு நாற்காலியைக்காண்பித்து விட்டுத் தமது மேஜைக்குப்பின்னால் உட்கார்ந்தார் குருநாதன். அருகிலிருந்த மேஜை விசிறியின் விசையைத் தட்டிவிட்டு, "பையா, இரண்டு காப்பி வாங்கிவா, கொதிக்கக் கொதிக்க இருக்க வேண்டும்," என்று உத்தரவிட்டவர், ரத்தினத்தை நோக்கி முறுவலித்தார்.

ரத்தினம் கேட்டான். "இந்தக் கேஸ் அவ்வளவு விசித்திரமானதா?

மாடு முட்டிக் காயமடைந்த எத்தனையோ பேருக்கு நீங்கள் இதற்கு முன் வைத்தியம் செய்திருப்பீர்களே டாக்டர்?''

குருநாதன், தமது கழுத்தை இறுக்கிய கழுத்துப் பட்டையைத் தளர்த்தி விட்டுக் கொண்டார். ''இன்றைய தினத்தை மறக்க முடியாத நாளாக்கியது இந்தக் கேஸ் அல்ல, மிஸ்டர் ரத்தினம். இதற்கு முன் இது போல் பதினறு பேருக்கு வைத்தியம் செய்திருக்கிறேன். ஆனல் உங்களைப்போல் ஒரு மனிதரை இன்றுதான் முதல் தடவையாகப் பார்க்கிறேன். ஆமாம், உங்கள் வீட்டுக்குப் போனதும் எவ்வளவு நேரம் ஓய்வெடுத்துக் கொண்டீர்கள்?''

''நான் உங்களை ஒரு கேள்வி கேட்கலாமா?'' என்ருன் ரத்தினம். ''நாங்கள் சென்றதும் நீங்கள் எவ்வளவு நேரம் ஓய்வெடுத்துக் கொண்டீர்கள்?''

டாக்டர் பதில் சொல்லவில்லை. ரத்தினம் சிரித்துக் கொண்டே பேசினன். ''நீங்கள் உடை மாற்றிக் கொண்டீர்கள்; நான் பழைய உடையிலேயே இருக்கிறேன். அவ்வளவு தான் வித்தியாசம். என்னுடைய அலுப்பையும் களைப்பையும் வெளிக் காட்டி ஓரளவு திருப்தியடையவாவது எனக்கு வாய்ப்புண்டு. ஆனல் உங்களுக்கு அந்த உரிமை கூடக் கிடையாது. இரவு ஒரு மணிக்குப் படுக்கச்சென்றவர், மூன்று மணிக்கு எழுந்துவிட்டீர்கள். ஆனல் தூக்கம் உண்டோ இல்லையோ மூளையில் ஒரு சிறிதும் கலக்கம் ஏற்படக் கூடாது; கண்களைக் களைப்புத் திரை மறைக்கக் கூடாது; கை விரல்களைச் சோர்வு நடுங்கச் செய்யக்கூடாது. நோயாளிகளைப் பரிசோதிப்பதும் சீட்டெழுதிக் கொடுப்பதும் ஆபரேஷன் செய்வதுமாக இருக்க வேண்டும். தினசரி இதுதானே உங்கள் வாழ்க்கை? அத்துடன் ஒப்பிடும்பொழுது என்றைக்கோ ஒரு நாள் மட்டும் அனுபவிக்கும் எங்கள் கஷ்டம் எந்த மூலை? நீங்கள்தான் அபூர்வ மனிதர்; நானல்ல.''

பையன் இரண்டு டம்ளர்களைக் கொண்டுவந்து வைக்க, ''சாப்பிடுங்கள்,'' என்று உபசரித்தார் டாக்டர். ''இரவெல்லாம் கண்விழித்து விட்டு, இத்தனை கவலைகளுக்கிடையே, கேவலம் ஒரு நாட்டுப்புறத் தானின் மகனுக்காக நீங்கள் காரைப்போட்டுக் கொண்டு ஓடிவரவேண்டிய அவசியம் என்ன?''

ரத்தினம் காப்பியை உறிஞ்சினன்.

''உங்களைப் போன்ற திறமை மிகுந்த டாக்டருக்குப் பதி னயிரக்



கணக்கில் சம்பாதிக்கும் வாய்ப்பு சென்னையில் இருக்கும் பொழுது, நீங்கள் கேவலம் இந்தச் சிறு டவுனில் பிராக்டீஸ் செய்ய வேண்டிய அவசியம் என்ன! முதலில் அதைச் சொல்லுங்கள். அன்றாட ஆஸ்பத்திரி செலவுகளுக்கே வசதியில்லாமலிருக்கும் பொழுது பத்தில் எட்டுக் கேஸ்களை இலவசமாகக் கவனிக்கிறீர்களாமே, அதன் அவசியம் என்ன!''

டாக்டர் டம்ளரைக் கீழே வைத்தார். அதற்குள் ஒரு நர்ஸ் வந்து ''டாக்டர், 8-ஆம் நம்பரில் அந்த நிமோனியா பேஷண்ட் மருந்து சாப்பிட மறுக்கிறார். எவ்வளவு சொன்னாலும் கேட்கவில்லை. நீங்கள் வருகிறீர்களா!'' என்று அழைத்தாள்.

டாக்டர் குருநாதன் ரத்தினத்தைப் பார்த்தார். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டது போல் இருவரும் ஒரே சமயத்தில் புன்னகை செய்தனர், பன்னிரண்டு மணி நேரத்துக்குள் பூத்துக் காய்த்துப் பழுத்துவிட்ட முதிர்ந்த நட்பைச் சுவைத்தபடி.

டாக்டர் எழுந்தார். ''மிஸ்டர் ரத்தினம், உங்கள் சோர்வுக்குக் காரணம் அலுப்பு மட்டுமல்ல என்று நினைக்கிறேன். தாமோதரத்தைப் பற்றிய கவலை அதற்குக் காரணமாக இருக்கும் பட்சத்தில், உங்களுக்கு ஒன்று சொல்வேன். அவரைப் பழைய நிலைக்குக் கொண்டுவருவது என் பொறுப்பு. நீங்கள் நிம்மதியாக ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்.''

நிம்மதியா? தனக்கா? துளசியை எண்ணி எண்ணி மனம் ஏங்கிக் கொண்டிருக்கும் சமயத்திலா?

ரத்தினமும் எழுந்தான். ''நன்றி டாக்டர்,'' என்றான். அவன் இதயத்திலிருந்து பீறிட்ட பெருமூச்சு அவர் காதில் விழவில்லை.



### சேறன் புகழ்

வாரி இறைத்திட்ட
வள்ளல்கள் பாரினிலே
பாரிக்குப் பின்னால்
யாருமில்லை என்று
யாரேனும் சொன்னால்
நம்பாதீர், ஐயா.

மழை பெய்த வேளை.
வாருங்கள் வெளியே
சாலை ஓரத்தில்
சற்றே நில்லுங்கள்.

காண்பீர்—
காரிலே செல்லும்
கனவான்கள் பலபேர்
வாரி வழங்குவதை.

(வேட்டி ஜாக்கிரதை!)

படிக்கட்டின் திருப்பத்தில் உட்கார்ந்தபடி, கைப்பிடியைத் தாங்கி நிற்கும் செங்குத்தான கம்பிகளின் ஊடே பரபரப்பான பார்வையைச் செலுத்திப் பாப்பாவின் நடமாட்டத்தை ஆவலுடன் கவனித்துக் கொண்டிருந்த துளசியின் கண்கள் தற்செயலாகத் திரும்பியபோது, கடைசிப் படியில் அசையாமல் நிற்கும் உருவத்தால் பளாரென்று தாக்கப்பட்டன.

ஒரு விநாடி அவள் வெலவெலத்துப் போய்விட்டாள்.

'யார் எவர் என்று அடையாளம் கண்டுகொள்ளு முன்னர், 'கனகசபை!' என்ற பெயர்தான் குபீரென்று அவள் எண்ணத்தில் பீறிட்டு ரத்த ஓட்டத்தை நிறுத்திற்று. மஸ்லின், ஜிப்பாவுக்குப் பதில் காற்சட்டையும், வைரச் சங்கிலிக்குப் பதில் மூக்குக் கண்ணாடியும் அணிந்துகொண்டு, தன்மீது வைத்த கண் வாங்காமல் உற்று நோக்கும் நபர் செந்தில்தான் என்ற உணர்வு உண்டானதும் அவளது அதிர்ச்சி கரைந்தது.

அச்சத்தின் உச்சத்திலிருந்த அவளுக்கு, கனகசபையையும் அவனது ஆட்களையும் தவிர வேறு யார் வந்திருந்தாலும் அச்சமயம் உற்ற நண்பராகவே காட்சியளித்திருப்பார்கள். செந்திலைக் கண்டவுடனே தன்னைக் காப்பாற்றுவதற்காக ரத்தினத்தால் அனுப்பப்பட்ட பிரதிநிதி என்று அவள் முடிவு கட்டி விட்டாள். அண்ணன்மேல் தம்பிக்கு எவ்வளவுதான் பொறாமையும் வெறுப்பும் தகராறும் இருந்தபோதிலும் இம்மாதிரி இக்கட்

டில் ரத்த பாசம் மேலோங்கி ஒருவருக்கொருவர் கைகொடுத்து உதவிக்கொள்வார்கள் என்று அவள் உள்ளுணர்வு உற்சாகமூட்ட, தன்னை விடுவிக்கும் முயற்சியில் தன்னந்தனியாகப் பாடுபடும் பாப்பாவுக்கு ஒரு துணை கிடைத்துவிட்டது என்று தைரியமடைந்தாள்.

மைத்துனருக்கு மரியாதை தெரிவிக்கும் முறையில் அவள் எழுந்து நிற்க முயன்றாள். அவளது தாழ்ந்த தலையும் கவிழ்ந்த கண்களும் நிமிர முடியாமல் தடுமாறின.

மின்சார சக்தி பாய்ந்தாற் போலிருந்தது செந்திலுக்கு. அவன் துளசியைப் பார்த்தான். மறுபடியும் பார்த்தான். இத்தனை மாதங்களுக்குப் பிறகு இருவரும் முதன் முறையாக எதிரும் புதிருமாக நிற்க நேர்ந்த அபூர்வ நிகழ்ச்சியைச் சுவைத்தபடி பார்த்தான். அவள் வனப்பின் திரட்சியை எல்லாம் மூந்தின இரவு கனகசபை அவனுக்குக் காட்டியது உண்மையே. ஆனால் அப்போது துளசி தூங்கிக் கொண்டிருந்தாள். மயக்க மருந்தின் போதையிலே அரை உயிருடன் படுத்திருந்தாள். ஆனால் இப்போது சட்டம் போட்டுச் சுவரிலே மாட்டப்பட்ட சித்திரமாகத் தொங்கவில்லை துளசி. வாள் விழியும் கரிய கேசமுமாக, சிவந்த நிறமும் திரண்ட சதையுமாக, தன்னைக் கண்டதும் எழுந்து தான் உற்று நோக்கியதும் சிரம் சாய்த்து, தன்னை மதித்து வரவேற்கும் ஒரு புதுப் பெண்ணாகக் காட்சியளித்தாள்.

ஆனால் ஒன்றைமட்டும் செந்தில் புரிந்து கொண்டுவிட்டான். இவள் இவ்வளவு சுதந்திரமாக நடமாடுவதற்குக் கனகசபை அனுமதி கொடுத்திருக்க முடியாது. அவன் அறியாமல் துளசி தப்பியோட முயலுகிறாள் என்று அவன் புரிந்துகொண்டான்.

பாப்பா! செந்திலைக் கண்ட மாத்திரத்தில் அவளுக்கு நல்ல பாம்பைப் பார்த்தாற் போலிருந்தது.

கோவிந்தனுடைய குரலைக் கேட்டதால் ஏற்பட்ட மகிழ்ச்சி அத்தனையும் மங்கி மறைய, துளசியை விடுவிக்கும் முயற்சி கடைசி விநாடியில் கவிழ்ந்துவிட்டதே என்ற கவலையோடு ஒரு மூலையில் பதுங்கியபடி படிக்கட்டை நோக்கினாள்.

செந்தில் ஏதோ கேட்க, துளசி அதற்குப் பதிலிறுப்பது தெரிந்தது. ஆனால் தெளிவாகக் காதில் விழவில்லை. ஆகவே பாப்பா சுவர் ஓரமாகவே நகர்ந்து, திறந்த வாசற்கதவின் மறைவிலே இருண்ட மூலையில் ஒண்டிக்கொண்டு ஒட்டுக்கேட்டாள்.

"நீ..." என்று இழுத்தான் செந்தில், துளசியை நோக்கி. அவளுடன் அவன் அடிக்கடி பேசிப் பழக்கமில்லை என்று பாப்பா புரிந்துகொண்டாள். ஆனால் அவன் துளசியைப் பார்க்கும் பார்வை அவளுக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை.

"ஆம்," என்று தலையாட்டினாள் துளசி. அவன் கேட்காத ஒரு கேள்விக்குப் பதில் அளித்தவாறு. "கனகசபையின் ஆட்கள்தான் என்னை இங்கே தூக்கிவந்து விட்டார்கள். இரவு முதல் என்னை இங்கேதான் அடைத்து வைத்திருந்தார்கள்."

ஒருகால் தனக்குப் பின்புறம் கனகசபை சிகரெட் குடித்துக்கொண்டு



"கல்யாணியா, வசந்தாவா?"

"யாராயிருந்தால் என்ன? கச்சேரி கேட்க வந்திருக்கிறீர்களா, யார் யார் வருகிறார்களென்று கணக்குப் பண்ண வந்திருக்கிறீர்களா?"



"நேற்று நீங்கள் நடித்த நாடகத்தில் கூட்டத்தினர் உங்களை ரொம்பக் கேலி பண்ணிக் கூச்சல் போட்டதாகக் கேள்விப்பட்டேனே, உண்மையா?"

"சுத்தப் பொய்! அங்கே நேற்றுக் கூட்டமே கிடையாதே? நாலைந்து பேர் தானே வந்திருந்தார்கள்!"

சாவதானமாக நின்றாலும் நிற்பான் என்று பயந்தவள்போல் அவள் ஒரு முறை மாடியை நோக்கினாள்.

செந்திலின் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைப் பாப்பா கவனித்தாள். போர்க்களத்தின் நெருக்கடியிலே தளபதி தன் ராணுவத் தந்திரத்தைத் திருத்தி அமைத்துக் கொள்வதைப் போல அவன் தன்னுடைய பேச்சின் தோரணையை அமைத்துக்கொள்வது அவளுக்குத் தெரிந்தது.

"என்ன!" என்றான் ஆச்சரியத்தை அடக்க முடியாதவன் போல். "கனகசபையா அப்படிச் செய்தான்!"

அவன் தந்திரத்துக்குத் துளசி பலியாகி விட்டதைக் கண்டு பாப்பா கையைப் பிசைந்தாள். அந்தக் கேள்வியிலே அவன் புகுத்திய வியப்பையும் புண்பட்ட மனத்தின் பொருமலையும் நிஜமெனத் துளசி நம்பியதில் ஆச்சரியமென்ன?

செந்தில் தொடர்ந்தான். "எப்பேர்ப்பட்ட துரோகம்! உன்னைக் காரணமென்றதும் ஊருக்குப் பெரியவன் என்ற முறையில் இவன் உதவியைத் தேடி அண்ணாவும் நானும் வந்தோமே, என்ன பைத்தியக்காரத்தனம்!"

"நிஜமாகவா?" என்றாள் துளசி, ரத்தினம் தனக்காகத் தேடி அலைந்திருக்கிறான் என்ற செய்தியால் திருப்தி அடைந்தவளாக.

"தன் ஆட்களை விட்டுச் சுற்றுப்புறத்தையெல்லாம் சல்லடை போட்டுச் சலிப்பதாக உறுதி சொன்னான். தன் ஊரில் இம் மாதிரி அக்கிரமம் நடப்பதை நினைத்து மனம் கொதிப்பதாக அளந்தான். எல்லாம் பாசாங்கா? அத்தனையும் வேஷமா?"

இந்தத் தகவல் கனகசபையைப் பற்றித் துளசி கொண்டிருந்த பயத்தைத் தூண்டிவிட்டுவிட்டது.

ஒரு படி இறங்கியவள், "இங்கிருந்து போய்விடலாம், சீக்கிரம்," என்று அவசரப்பட்டாள்.

ஆனால் செந்தில் நகர்ந்தால் தானே!

"முடியாது," என்றான் கண்டிப்பாக. "கனகசபையிடம் என்ன சேதி என்று கேட்காமல் நான் வரமாட்டேன்."

"ஐயையோ!"

"நம் குடும்பத்துக்கு இவ்வளவு பெரிய களங்கத்தை உண்டாக்க முயன்றவனுக்குச் சரியான பாடம் கற்பிக்கவேண்டும்."

"வேண்டாம், வேண்டாம்." துளசி கலங்கிவிட்டாள்.

செந்தில் உறுதியுடன் சொன்னான். "இருக்கிற கவலைகள் போதாதென்று இது ஒன்றையும் சேர்த்து அண்ணாவை நிலைகுலையச் செய்துவிட்டானே! அவர் எத்தனை பெருமூச்சுவிட்டார்? எத்தனை தடவை கண்களைத் துடைத்துக் கொண்டார்? இதற்கெல்லாம் இந்தக் கிராதகன்தானே காரணம்!"

"இல்லை இல்லை," என்று மறுத்தாள் துளசி. கனகசபையின்மேல் செந்திலுக்குள் பொங்கியெழும் சினத்தின் மீது தண்ணீர் தெளித்தாலொழிய அது பெரும் தீயாக மூண்டு தான் தப்பிச் செல்லக்கூடிய கயிற்றுப் பாலத்

தைப் பொசுக்கிவிடும் என்ற பீதி அவளுக்கு. "கனகசபையின் கட்டளை ஒன்று, அவனுடைய ஆட்கள் செய்தது வேறொன்று. அடையாளம் தெரியாமல் பாப்பாவுக்குப் பதிலாக அவர்கள் என்னைத் தூக்கிக்கொண்டுவந்து விட்டார்கள்."

பாப்பா உஷாரானாள். தன் பெயர் அடிபட ஆரம்பித்தது நல்லதற்கல்ல என்று அவளுக்குத் தோன்றிற்று. செந்தில் அரை விநாடி மௌனமாக நின்றது அவள் சந்தேகத்தை உறுதி செய்தது.

செந்தில்கேட்டான். "பாப்பாவுக்குப் பதில் உன்னைத் தூக்கிவந்து விட்டார்களா? அப்படியானால் பாப்பா எங்கே? அவள் அங்கேயும் இல்லையே!"

ஒரு புன்னகையின் சாயல் துளசியின் முகத்தில் படர்ந்தது.

"நீங்கள் வரும்பொழுது இங்கே தானே இருந்தாள். பார்க்கவில்லை?"

"பாப்பா இங்கே இருந்தாளா? எங்கே? எங்கே?"

ஒரே கேள்வியை இரண்டு குரல்கள் கேட்டன. கீழே இருந்து எழுந்தது செந்திலுடையது; மேலிருந்து வந்தது கனகசபையுடையது.

மேலிருந்தவன் தடவைக்கு இரண்டு படியாக இறங்கிவர, மற்றவன் விரைந்து படியேற, துளசியை நடுவில் வைத்து ஆளுக்கொரு புறமாய் நின்று கொண்டு அதே கேள்வியை மறுபடியும் கேட்டார்கள்.

கண்களை இமைத்தால் கூட ஆபத்தென்று பாப்பா அசையாமல் நின்றாள். சிறிது நேரத்திற்குமுன் கோவிந்தனுடைய குரல் கேட்டு அடுத்த அறைக்குள் எட்டிப் பார்த்தவள், அங்கேயே ஒளிந்திருக்கும் பட்சத்தில் இப்போது இந்த இக்கட்டு நேர்ந்திருக்காது. துளசிக்கும் செந்திலுக்கும் நடக்கும் உரையாடலை அறிந்துகொள்ளும் பொருட்டுப் பத்தடி நகர்ந்தது இப்போது சங்கடத்தில் அவளை மாட்டி விட்டுவிட்டது.

தனது நிலை ஒரு புறமிருக்க, துளசியின் ஏமாற்றமும் திகைப்பும் பாப்பாவின் நெஞ்சில் இரக்கத்தை மூட்டின. இனி தப்பிக்க முடியாது என்று திட்டவட்டமாகத் தெரிந்து போனது மட்டுமல்ல. செந்திலின் நடத்தை அவளைப்பெரிதும் குழப்பிவிட்டுவிட்டது.

இந்நேரம் கனகசபையின் பெயரைத் தூற்றலில் புரட்டியெடுத்தவன், அண்ணாவுக்கு நேர்ந்த அவமானத்தை எண்ணி அடங்காச் சீற்றம் கொண்டவன், மிராசுதாரைக் கண்டமாத்திரத்திலேயே வெட்டிப் போட்டுவிடுபவன் போல் துடித்தவன் இப்போது என்ன செய்தான்?

"இவள் சொல்வதைக் கேட்டீர்களா? பாப்பா இங்குதான் இருக்க வேண்டும். உங்கள் ஆட்களைக் கூப்பிடுங்கள். மூலை முடுக்கையெல்லாம் தேடச் சொல்லுங்கள்!"

பாப்பாவின் மூளை வேகமாக வேலை செய்தது. துளசி அகப்பட்டுக் கொண்டவள்தான். நல்ல சந்தர்ப்பம் நழுவி விட்டது. ஆனால் அதை நினைத்து வருந்த நேரமில்லை. குறைந்த பட்சம் தன்னைக் காப்பாற்றிக்கொண்டால், மற்றொரு சமயம் வாய்க்கும் பொழுது துளசிக்கு உதவலாம்.

துளசியின் முன்னிலையில் கனகசபையும் செந்திலும் பரபரப்புடன் பேசிக் கொண்டிருக்கும் பொழுது அவள் தன் மறைவிடத்தை விட்டு மெள்ள நகர்ந்து வாசற்கதவு வழியே வெளியேறத் தீர்மானித்தாள்.

சில அங்குலங்களே அசைந்திருப்பாள்.

'ஏய்!"

கனகசபையின் அதட்டல் அவளை ஆணியாக அறைந்தது.

மழையில் நனைந்த காரணத்தால் தன் வேடம் ஓரளவு கலைந்திருக்கும் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும்.

வெளியே ஓடவும் முடியாமல், முகத்தைத் திருப்பவும் துணிச்சலில்லாமல், "எசமான்!" என்றாள் பாப்பா.

## முத்திரைகள்

இந்த இதழில் கதைகள், நாடகம் இவற்றின் தலைப்பில் காணப்படும் நடன முத்திரைப் படங்களும், இலக்கணக் குறிப்புக்களும், 'அபிநய தர்ப்பணம்' என்ற புத்தகத்திலிருந்து கையாளப்பெற்றவை.




## முப்பத்தேழு

"அரட்டையடிப்பதற்கு இதுவா நேரம்? உதவாக்கரைகள். ஆபீசுக்கு வந்தோமா, வேலையைப் பார்த்தோமா என்றில்லையே! பட்டதாரிகளாம், பட்டதாரிகள். எங்கள் காலத்து மெட்ரிகுலேஷனுக்கு ஈடாகுமா இந்த பி. ஏ. யும், எம். ஏ. யும்?"

அக்கௌண்டண்ட் ஜம்பு மேற் சொன்ன கருத்துக்களை மனத்துக்குள் நினைத்துக்கொண்டார். ஆனால் வெளியிடவில்லை.

அடுத்த நிமிடம் அவர் கண்கள் கலங்கின. தமக்குக் கீழ் வேலை பார்க்கும் குமாஸ்தாக்கள் மீது ஏற்பட்ட ஆத்திரத்தில் மூக்குப் பொடியை அளவுக்கதிகமான வேகத்துடன் உறிஞ்சிய காரணத்தாலும், ஓங்கி உதறிய விரல்களிலிருந்து புறப்பட்ட தூள் அவர் விழிகளில் விழுந்துவிட்ட காரணத்தாலுமே அந்தச் சோக பாவம் அவருக்கு ஏற்பட நேர்ந்தது.

ஆனால் உண்மையில் அவர் சோகத்தில் ஆழ்வதற்கும் ஏற்ற ஏதும் இருந்தது. இரண்டு நாட்களுக்கு முன்பு செந்தில் திடீரென்று புறப்பட்டுக் கூத்தனூருக்குப் போன பின்னர் அலை அலையாக எழுந்த பிரசினைகளைச் சமாளிக்க முடியாமல் அவர் மூச்சுத் திணறிக்கொண்டிருந்தார்.

போன் மணி இனிமையாகத்தான் அலறிற்று. ஆனால் அது ஜம்புவின் செவிகளில் நாராசமாகப் பாய்ந்தது.

"நான்தான் வேண்டுமென்றே ரிஸீவரை எடுத்துக் கீழே வைத்திருந்தேனே? ஏன் கணபதி! நீயா அதை மேலே வைத்தாய்!" என்று சீறினார் அவர். "எவனாவது கரடிமாதிரி மேலே விழுவான். யார் பதில் சொல்லுவது? நீயே சொல்லிக்கொள்."

"இதோ பாரும்," என்றான் பக்கத்து மேசையில் உட்கார்ந்து ஒரு சினிமாப் பத்திரிகை வாசித்துக்கொண்டிருந்த இளைஞன். "என்னிடத்தில் இப்படி மரியாதை இல்லாமல் பேசக் கூடாது என்று உமக்கு எத்தனை தடவை எச்சரித்திருக்கிறேன்? ரிஸீவரை எடுத்து நானா போன்மீது வைத்தேன்? நீர் கண்டீரா?"

இளைஞனின் தோரணையில் காணப்பட்ட ஏதோ ஒன்று ஜம்புவை அந்தக் கணமே அடக்கிவிட்டது.

"அதற்கில்லை கணபதி, உன்னை எனக்குத் தெரியாதா? விஷயம் என்னவென்றால்..." அவர் எழுந்து ரகசியம் சொல்வதற்காகக் கணபதியின் காதருகே தம் முகத்தைக் கொண்டுபோனார்.

பொடி சகவாசத்தால் அழுக்கையும் அவலட்சணத்தையும் ஒருங்கே சம்பாதித்துக்கொண்ட அவரது முகத்தைக் காணவும் நுகரவும் விருப்பமில்லாதவனாய் மூக்கைச் சுளித்த வாலிபன், சட்டென்று சினிமாப் பத்திரிகையை ஒரு கேடயமாகப் பயன்படுத்திக் கொண்டதுடன், "அது, எப்பேர்ப்பட்ட ரகசியமாய் இருந்தாலும் இரண்டு கெஜத்துக்கு அப்பாலிருந்தபடியே சொல்லும். எனக்குக் காது ரொம்பக் கூர்மை," என்றான்.

அக்கௌண்டண்ட் ஜம்பு அயரவில்லை. "அதாவது கணபதி, நமக்குத்தான் எப்போதும் பண நெருக்கடி என்றால் இப்போது நமது கம்பெனியையும் அது பிடித்துக்கொண்டு விட்டது. ஒவ்வொருவனும் மென்னியில் ஏறி மிதிக்கிறான். நேற்றைக்குப் பார்..."

"பூ..." என்றான் கணபதி. "பெரிதாக இதைத்தான் சொல்ல வந்துவிட்டீராக்கும்? இது ஊரறிந்த ரகசியமாயிற்றே! அதனால்தான் போன மாதமே நான் வேறு வேலைக்கு முயற்சி பண்ண ஆரம்பித்துவிட்டேன். கரக்பூரில் என் மைத்துனன் இருக்கிறான்..."

ஆபீஸ் பையனின் குரல் கம்பீரமாகக் கேட்டது. "எம்மா நேரமா

போன் அடிச்சிட்டிருக்குது? நீங்க எடுக்கப்போறிங்களா, நான் எடுக்கட்டுமா?''

ஐம்பு ஒருகணம் யோசித்தார். பிறகு, ''நீயே எடு,'' என்றார். ''முதலாளி இருக்கிறாரா என்று கேட்டால் இல்லை என்று சொல்லிவிடு.''

பையன் போனில் பேசினான்: ''ஹலோ... ஆமாம்... ஆமாம்... அவர் வெளியூர் போயிருக்கிறார்... தெரியலீங்க... தெரியலே... அக்கௌண்டண்ட் டோட பேசணுமா? (இந்த இடத்தில் வேண்டாம் வேண்டாம் என்று ஐம்பு கையாட்டியதைப் பையன் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.) ...இதோ, இதோ இருக்கார். பேசச் சொல்றேன்...''

தலையிலடித்துக்கொண்டு ஐம்பு ரிஸீவரை வாங்கிக்கொண்டார்.

அடுத்த பத்து நிமிடத்திற்கு மறுகோடியில் இருந்த குரல்தான் மூச்சு விடாமல் உரத்த குரலில் ஆணித்தரமாகப் பேசிற்று.

ரிஸீவரைக் கீழே வைத்து விட்டு, ஐம்பு, ''அப்பாடா!'' என்று சாய்ந்ததும், ''வேறென்ன செய்வது? கூத்தனூருக்கு இன்னொரு கால் புக் பண்ணும்,'' என்றான் கணபதி அனுதாபத்துடன்.

ஆணி அடித்தாற்போல் பாப்பா வாசற்கதவருகே நின்று விட்டாள்.

கனகசபையின் அதட்டலை மீறி, நடப்பது நடக்கட்டுமென்று வெளியே பாய்ந்தோடத் துணிச்சலின்றி, அவனை நோக்கி உள்புறம் முகத்தைத் திருப்பவும் மனமின்றி அவள் வேரூன்றி நின்றிருந்த பொழுது, படிக்கட்டிலிருந்து எழுந்தது ஒரு கர்ஜனை.

''ஏய், நான் கூப்பிடுவது காதில் விழவில்லை?''

நொடிப் பொழுதின் ஒரு பகுதிக்கு மகிழ்ச்சியொன்று அவள் இதயத்தைக் கடந்து சென்றது. அவன் இன்னும் தன்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை!

''யாரையோ தேடணும்னு ஐயா சொன்னாங்களே? நாலு ஆளுங்களைப் போய்க் கூட்டியாறேன் எசமான்.''

''போ, சீக்கிரம்,'' என்றான் துளசியருகே நின்றிருந்த செந்தில்.

''இதோ!'' பாப்பா நகர்ந்தாள்.

''நில்.''

கனகசபை படிகளில் இறங்கலானான்.

பாப்பாவின் புறங்கழுத்து வியர்வையால் நனைந்தது.

''கழுதை! இதுதான் நீ காவலிருக்கிற லட்சணமா? துளசியைத் தனியே விட்டுவிட்டு எங்கே போயிருந்தாய் இந்நேரம்?''

பயபக்தியுடன் குழைபவள்போல் நடித்த பாப்பாவின் தற்காப்பு உணர்ச்சி, பிரம்மாண்டமான ஒரு கல் தூணுக்குப் பின்னால் அவளைத் தள்ளிற்று.

''ஐயோ எசமான், வென்னித் தண்ணி வேணும்னு கேட்டாங்க. கொண்டாறேன்னு வந்தேன். இப்படிப்பண்ணுவாங்கன்னு. கண்டனா?''

''எப்படிக் காண்பாய்! காணமாட்டாய்,'' என்று பழித்துக் காட்டினான் கனகசபை. ''மரத்தில் கட்டி வைத்து நாலு தரம் விளாசினால் அப்போது காண்பாய்.''

செந்தில் குறுக்கிட்டான். ''கனகசபை, விளாசுவதற்கு வேண்டிய அவகாசம் இருக்கிறது. முதலில் பாப்பாவைப் பிடியுங்கள். இன்னொரு தரம் அவளைத் தப்பவிட்டால் நாம் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகவேண்டியது தான்.''

கடைசிப் படிவரை வந்துவிட்ட கனகசபை, கைப்பிடியின் மேல் நிறுத்தப்பட்டிருந்த பளிங்குச் சிலையொன்றைத் தடவிக் கொடுத்தபடி செந்திலை நோக்கினான்.

எகத்தாளப் புன்னகையொன்று அவன் உதடுகளை விரித்து, கன்னங்களை உப்ப வைத்தது.

''செந்தில் அவர்கள் பெண்களுடன் அவ்வளவாகப் பழகியதில்லை என்று நினைக்கிறேன்.''

''ஏன்?''

''அந்த அனுபவம் இருந்தால் துளசி சொன்னதை அப்படியே சத்திய வாக்காக எடுத்துக்கொண்டிருக்க மாட்டீர்கள்.''

''எனக்கு விளங்கவில்லை,'' என்றான் செந்தில்.

''ஆனால் துளசிக்கு விளங்கியிருக்கும். இல்லையா துளசி!''

மூன்று ஜோடிக் கண்கள் துளசிமீது குறுகின. மருட்சியால் வலுவிழந்த அவள் தள்ளாடினாள். யாருடைய முகத்தையும் அவளால் ஏறெடுத்துப் பார்க்க முடியவில்லை.

கனகசபை தொடர்ந்தான்.

"பாப்பாவின் பெயரைச் சொன்னதும் நாமெல்லாம் ஆளுக்கொரு பக்கமாகத் தேடப் புறப்பட்டுவிடுவோம் என்பது அவள் எண்ணம். கூட்டத்தின் நடுவே தான் தப்பியோடி விடலாம் என்பது அவள் கணக்கு. ஆனால் துளசி, தெரிந்துகொள். இந்த மூன்றாந்தரத் தந்திரமெல்லாம் செந்திலைப் போன்றவர்களிடம் பலிக்கலாம்; என்னிடம் பலிக்காது."

செந்திலின் முகம் சிவந்தது. அவன் துளசியை நோக்கினான். அவள் தன் கால் கட்டைவிரலைப் பார்த்தாள்.

கனகசபை நிறுத்தவில்லை. "செந்திலை உரமுள்ளவள்தான் பாப்பா. ஒப்புக்கொள்கிறேன். ஆனால் என் மாளிகைக்குள்ளே பட்டப்பகலில் நுழைந்து—அதுவும் நானிருக்கும் பொழுது—வாலாட்டக்கூடிய அளவுக்கு அவளுக்குத் துணிச்சல் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை."

அவனது விருப்பு செந்திலைத் திருப்திப் படுத்தக் காணோம்.

வேலைக்காரியை விளித்து, "ஏய்! துளசி சொல்வது உண்மைதானா? இந்தப் பக்கம் எங்காவது பாப்பா உன் கண்ணில் பட்டாளா?" என்று விசாரித்தான்.

ஆனந்தத்தை அடக்கிக்கொள்ள முயன்றாள்பாப்பா.முடியவில்லை. கனகசபையையும் செந்திலையும் பார்த்து அவள் உள்ளம் கைகொட்டிச்சிரித்தது.

"அது யாருங்க பாப்பா?" என்றாள் அவள், பரிகாசமாக. "பால் குடிக்கிற குழந்தையா, இல்லே பாவாடை கட்டிய குட்டியா? எப்படி இருப்பாண்ணு கொஞ்சம் சொல்லுங்க. மயிரைப் பிடிச்சு நானே இஸ்த்துக்கினு வர்றேன்."

பாப்பா நாக்கைக் கடித்துக்கொண்டாள். ஆனால் அதற்குள் காரியம் மிஞ்சி விட்டது. உற்சாக வெறியில் அவள் தன்னை மறந்தபொழுது வெளியான அந்த ஒரு சொல் அவள் காலை வாரி விட்டுவிட்டது.

சடாரென்று திரும்பினான் கனகசபை. அவன் புருவங்கள் ஒன்றோடொன்று உரசின. பட்டணத்துக்கே உரிய ஒரு மொழி நூற்றுக் கணக்கான மைல்களைக் கடந்து கூத்தனூரில் வந்து குதித்த அதிசயத்தைக் கண்டு வியந்தவனாக அவன் மெள்ளப் பாப்பாவை நோக்கி அடியெடுத்து வைத்

---

## கடந்த கதை

"ஏய்!" என்ற அதட்டல் கேட்கிறது. கனகசபையின் குரல்தான்.

தப்பியோடிவதற்காக வாசற் கதவருகே வந்த பாப்பா திடுக்கிட்டு நிற்கிறாள்.

மழையில் பாதி நனைந்துவிட்ட அவளது வேலைக்காரி வேடம் அவளைக் காட்டிக் கொடுத்துவிடும் கட்டம்.

படிக்கட்டில், அடிபட்ட காலும் வெடவெடக்கும் உடலுமாக நிற்கிறாள் துளசி. அவளுக்குப் பக்கத்தில் காவலிருக்கிறான் செந்தில்.

அவன் தன் 'அண்ணா' ரத்தினத்தின் காதலியாகத் துளசியை மதித்தால்தானே! அவள் தனக்கே உரியவள் என்று கருதுகிறான்.

ஒரு விதத்தில், ரத்தினத்துக்கு இல்லாத உரிமை செந்திலுக்கு உண்டு. துளசி, செந்திலுக்கு மாமா பெண்.

அதே உறவு தனக்கும் உண்டு என்று இத்தனை வருடகாலமாக ரத்தினம் நினைத்து வந்தான். உலகமும் நினைத்து வந்தது.

ஆனால் இப்போது, ரத்தினம் வெறும் வளர்ப்புப் பிள்ளை என்பதும், அவன் 'அம்மா, அம்மா' என்று அன்புடன் அழைத்து வந்த தங்கம்மாளின் வயிற்றில் பிறந்தவர்கள் கோவிந்தனும் செந்திலும் மட்டுமே என்பதும் தெரிந்துவிட்டது.

ஆகவேதான், சென்னையிலுள்ள கம்பெனி நிர்வாகத்தைச் செந்திலிடம் ஒப்படைத்துவிட்டு ரத்தினம் கூத்தனூர் என்ற கிராமத்துக்கு நழுவிவிட்டான்.

சந்தேக புத்தியுள்ள செந்தில் அவனிடம் சட்டபூர்மாகப் பத்திரமெழுதி வாங்கிக் கொள்ளக் கூத்தனூர் வரவும், சிக்கல்கள் முளைக்கின்றன.

ரத்தினத்தின் அப்பா தாமோதரம். அவர் பாப்பாவின் தந்தை (இரண்டாம் தாரத்தின்மூலம்). ரத்தினத்தின் பிறப்பைப் பற்றிய ரகசியத்துக்கு ஒரே சாட்சி தாமோதரம் தான் என்று முடிவு கட்டிய கோவிந்தன், 'அண்ணா' மேலுள்ள பாசத்தால் தாமோதரத்தை இருளில் தாக்கிவிடுகிறான். உயிர் பிழைத்து விட்ட போதிலும், பழைய நினைவுகளை இழந்து பேசாமல் வைத்திய சாலையில் படுத்திருக்கிறார் தாமோதரம்.



தான். அவன் எடுத்து வைத்த ஒவ்வோர் அடியும் அவள் நெஞ்சில் ஓர் உதையாக விழுந்தது.

அவன் அவள் அருகே வந்துவிட்டான். அவளை விட்டுக் கண்களைப் பெயர்க்காதபடி வலது கையை நீட்டிச் சுவரிலிருந்த அத்தனை விசைகளையும் தட்டிவிட்டான்.

ஒரு சதுர அங்குல நிழல்கூட இல்லாதபடி திக்கனைத்திலுமிருந்து குபீரென்று பொங்கிய சோதி அவளைச் சூழ்ந்தது. நூற்றுக்கணக்கான மின் விளக்குகளும் குழல் விளக்குகளும் பகபகவென்று நகைத்தன.

அவற்றின் குளுமையான ஒளி பாப்பாவைத் தீயாகச் சுட்டது.

அதில் தன் வேடம் உருகுவதை அவள் உணர்ந்தாள். வேடத்தோடு தன் சதையும் சேர்ந்து பொசுங்குவதையும். துளசியை மீட்கும் திட்டம் சாம்பலாவதையும், கோவிந்தனைக் கண்ணுற்ற உவகை எரிந்து சரிவதையும் அவள் கண்டாள்.

கனகசபை அசையாமல் நின்றான். அவனது இரு விழிகளிலும் பாப்பாவின் உருவம் தெரிந்தது.

மௌனத்தைக் கலைத்தவன் செந்தில் தான்.

பெருமிதத்தின் விம்மலைத் தாங்க வொண்ணாது குரல் கரகரக்க, "கனகசபை, நான் சொன்னேனா இல்லையா? பாருங்கள்! பாப்பா இங்கேதான் இருக்கிறாள்!" என்று தாவி வந்தான். "எனக்கு அப்போதே தெரியும், நீங்கள் கேட்கமாட்டேன் என்றுவிட்டீர்களே! எனக்கு அப்போதே தெரியும்!"

கனகசபை வாயைத் திறக்கவில்லை. அபாயச் சேற்றிலிருந்து கரையேறி வெற்றியின் தலைவாயிலை அடைந்து விட்டோம் என்ற குதூகலம்தான் பாப்பாவின் நாக்கைத் தளர்த்தி அவளைக் காட்டிக் கொடுத்துவிட்டது என்பதை அவன் நினைவுபடுத்திக் கொண்டுவிட்டானோ என்னவோ, அவன் எந்தவித உணர்ச்சியையும் வெளிக் காட்டவில்லை. பாறையில் செதுக்கினாற்போல் முகம் இறுகிக் கிடக்க, கண்களைக்கூட இமைக்காமல் அவன் பாப்பாவையே பார்த்துக் கொண்டு நின்றான்.

பிறகு, "செந்தில், நீங்கள் துளசியை அழைத்துக்கொண்டு அவள் அறைக்குப் போங்கள். எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது," என்றான். அந்தக் குரலின் அமைதி இரு பெண்களையும் மேனி சிலிர்க்க வைத்தது. வெற்றிச் சுவையை மேன்மேலும் ரசித்து இன்புற விரும்பிய செந்தில் காரியத்திலும் கண்ணாகவிருந்தான்.

"கனகசபை' என்றைக்குப் பாப்பாவைப் பிடித்துத் தரவேண்டுமென்று என்னிடம் கேட்டுக்கொண்டீர்களோ, அன்றைக்கே முடிவு செய்துவிட்டேன், எப்படியும் உங்கள் கோரிக்கையை நிறைவேற்றித் தருவதென்று. இப்போதுதான் என் கடமை முடிந்தது," என்றான்.

கனகசபை ஒரு முறைசெந்திலைக்கண்களால் தலையோடு கால் அளந்துவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

செந்தில் மேலும் பேசினான். "எனக்கு எவ்வளவோ உதவி செய்திருக்கிறீர்கள். இன்னும் எவ்வளவோ செய்வதாக வாக்களித்திருக்கிறீர்கள். அதற்கெல்லாம் எந்த வகையில் நன்றி செலுத்தப் போகிறேன்



என்று தெரியாமல் திண்டாடிக் கொண்டிருந்தேன். இப்போதுதான் என் மனம் நிம்மதியடைந்தது.''

''ஓகோ!'' என்றான் கனகசபை.

மற்றவன் பெருமையோடு சிரித்துக் கொண்டான்.

''சரியான சமயத்தில் நான் வந்திரா விட்டால் நீங்கள் மறுபடியும் துளசியைப் பார்த்திருக்க முடியுமா? அவளைக் காப்பாற்ற வந்தவன்போல் நான் நடித்திராவிட்டால் பாப்பா இங்கிருக்கும் செய்தியை அவள் வாயிலிருந்து பறித்திருக்க முடியுமா? துளசி சொல்வது உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று நான் பிடிவாதம் பிடித்திராவிடில் பாப்பாதான் நம் கையில் சிக்கியிருப்பாளா?''

''மிக்க நன்றி,'' என்றான் கனகசபை. அவன் குரல் பக்குவமாகத் தீட்டிய கத்தி முனையைப் போலிருந்தது.

''அதைப் பற்றிப் பரவாயில்லை,'' என்றான் செந்தில். ''நீங்கள் சந்தோஷமாக இருந்தால் சரிதான். ஒன்று கேட்க மறந்துவிட்டேனே. கனகசபை, அந்தச் செக்கை இன்று காலையிலேயே அனுப்பிவிட்டீர்களா? பாக்கித் தொகையை நாளை வாங்கிக் கொள்கிறேன். ஒன்றும் அவசரமில்லை.''

கனகசபை, மாடிப் படியில் இடிந்து போய் உட்கார்ந்துவிட்ட துளசியைச் சுட்டிக் காட்டினான். ''செந்தில், பெண்ணைக் காக்க வைப்பது அநாகரிகம். உங்களுக்குத் தெரியாதா?''

செந்தில் திரும்பிப் பார்த்தான். அவன் கண்களில் துளசியின் உருவம் விளக்கேற்றி வைத்தது.

''நீங்கள் சொல்வது உண்மை,'' என்று கனகசபையைப் பார்த்துச் சிரித்தவன், படியில் கால் வைத்துக் கிடுகிடுவென்று ஏறினான்.

அவன் தாழ்ந்த குரலில் துளசியிடம் என்ன கேட்டானோ, தேளைக் கண்டவளைப்போல் அவள் அருவருப்பால் பின் வாங்கினாள்.

அவன் குனிந்து மறுபடியும் ஏதோ சொன்னான்

அவள் கைப்பிடியின் குறுக்குக் கம்பிகளை இறுகப் பற்றிக்கொண்டாள்.

செந்தில் கையை நீட்டி, அவள் தோளைத் தொடப் போனான்.

பாப்பாவின் ரத்தம் கொதிக்க, ஆத்திரத்தால் குரல் உயர ஆவேசமாக—ஆனால் அழுத்தம் திருத்தமாக, ''அவளைத் தொட்டாய்; தொலைந்தாய்!'' என்று கூவினாள்.

அவளது எச்சரிக்கை செந்திலின் அகந்தைக்கு ஒரு சவாலாய் அமையவே அவன் சண்டைக் கோழிபோல் சிலுப்பிக்கொண்டு துளசியின் கையைப் பற்றினான்.

தானே எழுந்து நடக்க முடியாத நிலையிலிருந்த துளசி, அவமானத்தாலும் அச்சத்தாலும் வெடவெடவென்று நடுங்குவதைப் பார்த்தாளோ இல்லையோ, பாப்பா சரேலெனப் பாய்ந்தாள்.

ஆனால் அடுத்த வினாடி பெரிய கல்லொன்று அவள் கன்னத்தைத் தாக்கினாற்போலிருந்தது. விண்ணென்ற அந்த அதிர்ச்சியில் அவளை கண்முன் அந்த மாளிகையே சுற்றிற்று.

குட்டையிலே விழுந்த நாய் தலையை உதறுவதுபோல் ஒரு முறை உதறிய பிறகுதான் அவளுக்குப் புரிந்தது, தன் கன்னத்தோடு உறவாடியது கனகசபையின் கரம் என்று.

அவளை அறியாமலேயே அவள் கை விரல்கள் கன்னத்தைத் தடவிப் பார்த்தன. முள் கிழித்தாற்போல் அவன் தந்த அறையின் அடையாளங்கள் மேலெழும்பி நின்றன.



''கடியாரம கட்டிக்கிறவர்கள் தங்கச் செயின் போட்டுக்கிறது தப்பு. அது பாஷன் இல்லை!''

''நீ ஏன் அப்படி நினைக்கிறாய்?''

''எங்கிட்ட தங்கச் செயின இல்லை!''

கனகசபை ஏதும் நடவாதது போல் அப்படியே நின்று கொண்டிருந்தான். படிக்கட்டுப் பக்கம் பார்த்தான்.

நினைவிழந்துவிட்ட துளசியைச் சென்றில் ஏந்திச் செல்கிறான் என்பதை வளையணிந்த அந்தத் தொய்ந்த கரங்கள் எடுத்துக் காட்டின.

கரை புரண்டு ஓடிற்று பாப்பாவின் சினம். என்ன பேசுகிறோம் என்பதே அவளுக்குத் தெரியவில்லை.

"பொறுக்கி நாயே! காலாடி ராஸ்கல்! கந்திரி! பேடிப் பையா!" என்று அவள் வசைமாரி பொழியத் துவங்கி, விளுடிக்குப் பத்துப் பட்டமாக வழங்கத் தொடங்கியதும்—

பளாரென்று விழுந்தது மற்றோர் அறை.

இப்போது, வெகு நேரமாயிற்று அதன் அதிர்ச்சியிலிருந்து பாப்பா மீள்வதற்கு.

"இப்போது என்னை என்ன செய்யப் போகிறாய்!"

அவள் குரலில் ஆங்காரமில்லை. படபடப்பு இல்லை. திகிலும் இல்லை. யந்திரம்போல் கேட்டாள்.

கனகசபை அவள் நிலையைக் கண்டு திருப்தி அடைந்தவன் போலிருந்தான்.

ஒரு நாற்காலியைக் காட்டினான். "உட்கார்."

அவள் கீழ்ப்படிந்தாள்.

பெரிய சோபாவின் பக்கத்தில் பதித்திருந்த பொத்தான் ஒன்றை அவன் அழுத்திய சில நிமிடங்களுக்கெல்லாம் ஒரு தட்டில் மது புட்டி, கண்ணாடிக் குவளை, சோடா இவற்றுடன் ஒரு பணியாள் தோன்றினான்.

அடுத்த அரை மணி நேரத்துக்கு, கனகசபை வேறெதிலும் தன் கவனத்தைச் செலுத்தவில்லை.

பாப்பாவும் அவன் சுட்டிக் காட்டிய நாற்காலியிலேயே உட்கார்ந்திருந்தாள்.

நிமிர்ந்து பார்க்காமலேயே, கதவுக்குக் கதவு ஆட்கள் நிற்பதை அவள் புரிந்து கொண்டாள்.

"திரௌபதியின் கதை தெரியுமா?" என்றான் கனகசபை.

அவள் பேசாமலிருந்தாள். ஆனால் உள்ளுக்குள் என்னவோ செய்யலாயிற்று. அச்சம் என்பதையே அறியாத அவள் உள்ளத்தில், கற்பனைக்கும் எட்டாத ஒரு பயங்கரம் நிகழப் போகிறதென்ற உள்ளுணர்வு உண்டாயிற்று.

"உன் புடவை எத்தனை முழம்?" என்றான் கனகசபை.

ஒன்றும் புரியாமல் விழித்தாள் பாப்பா.

# சொல்லாதே!

எஸ்.ஏ.பி.

முப்பத்தெட்டு

தோசைக் கல்லில் மாவை ஊற்றி, கரண்டியால் பரப்பிவிட்ட மங்களம், திரும்பிப் பாராமலே பதில் சொன்னாள்.

"சரிதான் போடா. எல்லாம் அப்பா வந்த பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம். போ."

சமையல் அறைக் கதவைப் பிடித்துக் கொண்டு நின்ற அவளது மூத்த மகன் ராஜாபாதர் ஏதோ முணு முணுத்தான்.

"நீ இன்னும் போகவில்லை!" என்று அதட்டினாள் மங்களம். அடுத்த தோசைக்காக ஆவலோடு காத்துக் கொண்டு அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த குழந்தை மாணிக்கம் அம்மாவின் தொனியைக் கொண்டு ஒரு முடிவுக்கு வந்தவனாகக் காலித் தட்டை எடுத்துக் கொண்டு கழுவச் சென்றான்.

ராஜாபாதரின் முகம் உர்ரென்று இருந்தது. ஏற்கனவே பாழ்பட்டிருந்த சகத்தைக் கொறித்தபடி, "அப்பாவாம் அப்பா! அப்பாவென்று அவரைச் சொல்லிக் கொள்ளவே வெட்கமாய் இருக்கிறது," என்றான் ஆத்திரத்தோடு.

"என்னடா சொன்னாய்?"

"பின் என்னவாம்! அவனவன் ஆபீசுக்குப் போகிறான். மில்லில் வேலை பார்க்கிறான். இல்லாவிட்டால் கடை கண்ணி வைத்து நாலு காசு சம்பாதிக்கிறான், அப்பா என்ன செய்கிறார்? எவனாவது பணக்காரன் வாலைப் பிடித்துக் கொண்டு ஊர் சுற்றுகிறார். அவர் வரைக்கும் எல்லாம் சரியாக இருந்து விட்டால் அவருக்குப் போதும். குடும்பத்தைப்பற்றி என்ன கவலை?" என்று சொல்லிக்கொண்டே வந்தவன், "அம்மா!" என்று அலறி விட்டான் பட்டையான தோசைக் கரண்டி அவன் முதுகில் பளாரென்று அறைந்தவுடன்.

மங்களம் நிறுத்தவில்லை. பையன் நெளிந்து வளைந்து கடைசியாக அடி வாங்கிய இடத்தைத் தொட்டுத் தடவிய வண்ணம் இருக்க அவள் கை ஓயுமட்டும் நையப் புடைத்து விட்டாள்.

மேலுதட்டில் முளைக்கும் பூனை மயிரைக் கண்டு புதுப்பலம் பெற்று விட்டதாக நினைத்துக் கிளர்ச்சி செய்த ராஜாபாதர் பச்சைக் குழந்தைபோல் தேம்பித் தேம்பி அழுதான்.

ஆனால் மங்களத்தின் விழிகளில் கொழுந்துவிட்டு எரிந்த கோபம் இன்னும் அடங்கவில்லை.

"நன்றிகெட்ட நாயே! உங்கள் அப்பாவைப்பற்றிக் கேவலமாக என்னிடத்திலேயே பேசுகிறாயே? எத்தனை வாய்க் கொழுப்பு!"

விம்மல்களுக்கிடையே, "அதற்கு இப்படித்தான் அடிப்பதாக்கும்?" என்றான் பிள்ளை, சட்டைக் கையால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு.

"முதல் தடவையானதால் அடிப்பதோடு விட்டேன். தடிக் கழுதை! இன்னொரு தரம் அவரைப்பற்றிப் பேச்செடுத்தாய், தலை வேறு முண்டம் வேறாய் ஆக்கிவிடுவேன்! ஜாக்கிரதை"

ராஜாபாதர் எழுந்துபோய் விட்டான். எஞ்சியிருந்த மாவைத் தோசையாக வார்த்தெடுத்து வைத்துவிட்டு மங்களம் கையைக் கழுவினாள். கடைக்குட்டி மாணிக்கம், தன் அண்ணாவுக்குக் கிடைத்த விருந்தைக் கண்டு நடுங்கியவனாய், தட்டை ஒரு மூலையில் வைத்துவிட்டு எங்கோ ஓடிவிட்டான்.

ராஜாபாதரைப் பற்றி நினைக்கும் பொழுது மங்களத்துக்குப் புகு புகு வென்று வந்தது. சோதா! மூன்று வருடமாக எட்டாம் வகுப்பிலேயே டேரா போட்டிருக்கிறான். அதற்கு இதற்கு என்று வாங்கும் சில்லறையெல்லாம் மூன்றுந்தர சிகரெட்டிலும் இரவு சினிமாவிலும் சிரழிகின்றன. துரைக்கு ஸ்லாக் வேண்டுமாம் ஸ்லாக்! ஸ்லாக்கோ, சாக்கோ என்ன இழவோ!

மங்களம் சாப்பிட உட்கார்ந்தாள். ஆனால் பாதி தோசைக்குமேல் செல்ல மறுத்து விட்டது. பிள்ளைக்கு எதிராகக் கனன்றெழுந்த நினைவுச் சரங்கள் தீர்ந்ததும் அவள் சினம் கணவன் பக்கம் திரும்பிவிட்டது. அவளைக் காட்டிலும் பன்மடங்கு காரமாகவும் எரிச்சலோடும் சுடு சொற்கள் தாமாகவே நிமிர்ந்தெழுந்து தாமோதரத்தின் குணத்தையும் சரித்திரத்தையும் சின்னா பின்னப்படுத்தி விட்டன. அப்போது அவர் அவள் எதிரே தோன்றியிருந்தாரானால், அவள் பேச்சைக் கேட்டு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு இறந்திருப்பார்.

இப்போது அவர் தோன்றவில்லை. அவரைப்பற்றிய செய்தியைத் தாங்கிக்கொண்டு தந்திச் சேவகன்தான் தோன்றினான்.

"தந்தியா? எனக்கா?" அவளால் நம்ப முடியவில்லை. "நீயே படித்துச் சொல்லேன்."

"கூத்தனூரிலிருந்து ரத்தினம் என்பவர் அடித்திருக்கிறார்."

தந்தியின் வாசகம் மொழிபெயர்த்துச் சொல்லப்பட்டது.

"அட பாவி!" என்று கூச்சலிட்டாள் மங்களம்.

"நான் என்னம்மா செய்யட்டும்!" என்று ஆட்சேபித்தான் தந்திக்காரன். "எழுதியிருப்பதைப் படிக்கச் சொன்னீர்கள். படித்தேன். இதற்குத்தான் இந்த வம்பிலெல்லாம் மாட்டிக்கொள்ளக் கூடாது என்கிறது."

அவள் எதிரே நின்ற கற்பனை உருவத்திடம் கலங்கிய கண்களுடன் பேசினாள் மங்களம். "இதற்குத்தானா இரவோடு இரவாகப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு ஓடினீர்கள்? பரம்பரை பரம்பரையாக வீட்டில் உட்கார்ந்து சாப்பிடும் அளவுக்குப் பணம் சேர்த்து வருவதாகச் சொல்லிப் போய் ஆஸ்பத்திரியிலா கிடக்கிறீர்கள்? என் தலையில் கல்லைப்போட்டு விடவா பார்க்கிறீர்கள்? முடியாது. ஒரு நாளும் முடியாது."

தந்தியைப் பறித்துக் கொண்டு மங்களம் அண்டை வீட்டுக்கு ஓடினாள்.

அவள் குறிப்பிடுவது தன்னையல்ல என்று புரிந்து கொண்ட தந்திச் சேவகன் மெல்ல நழுவினான்.

கன்னிச் சுமையைத் தூக்கிக் கொண்டு செந்தில் நடந்தான். அதே நிறைக்குக் கரன்ஸி நோட்டுக்கள் கிடைத்திருந்தாலும் அவன் அத்தனை ஆர்வத்துடன் ஏந்தியிருக்கமாட்டான்.

முதல் அனுபவம் அவனுக்கு.

துளசி நினைவிழந்து விட்டாள் என்பது உண்மைதான். உணர்ச்சியற்ற வெறும் ஜடமாகி விட்டாள் என்பது மெய்தான். அவள் கைகள் தொய்ந்து ஊசலாடலாம். கண்களை இமைகள் முழுக்க முழுக்க மூடியிருக்கலாம். எங்கிருக்கிறோம், எப்படி இருக்கிறோம் என்பதை அறியும் சக்தி அவளிடமிருந்து பறிபோயிருக்கலாம். ஆனால் அவன் தோளைத் தொட்டுக் கொண்டிருக்கும் கன்னம் துளசியின் கன்னம் தானே! அவன் மார்பின்மீது படும் மூச்சு துளசியின் மூச்சுத்தானே!

எல்லாவற்றுக்கும் மேலாக அந்தப் போலி மகாத்மா ரத்தினத்தின்மீது சரியாக வஞ்சம் தீர்த்துக் கொள்கிறோம் என்ற வெப்ப நினைவே அவன் நெஞ்சில் தண்ணென்று பூத்தது. இந்தக் காட்சியை ரத்தினம் கண்டால்? செந்தில் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்.

அவள் உடல் கனத்தது. ஆனால் மொட்டவிழ்ந்தமலரைத் தாங்கிச் செல்வதுபோல் நினைத்துக் கொண்டான் செந்தில். ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் துளசியைப் பற்றி மெத்தென்ற எண்ணங்கள் அவன் மனத்தில் படர்ந்தன. துளசி குறித்து எழும் ஒவ்வொரு மென்மையான எண்ணமும் ரத்தினத்தின் இதயத்தில்

ஏற்றப்படும் கோணிஊசியாகும் என்று உணர்ந்தவன் கனிவுப் பார்வையை அவள்மீது பொழிந்து, கடுமையின் விளைவாகப் பெருக்கெடுத்த பரிவிலே திளைத்தான்.

காலில் ஏதோ தட்டுப்பட்டது. வேறொன்றுமில்லை. காகிதப் பந்து. யாராலோ கசக்கி உருட்டி எறியப்பட்டு வழியில் கிடந்த அந்தக் காகிதம் செந்திலின் காலால் தற்செயலாக உதையுண்டு, வராந்தா ஓரத்தில் தேங்கிக் கிடந்த மழை நீரில் விழுந்து நனைந்தது. அவன் அதைக் கவனிக்கவில்லை.

துளசியின் அறையை அடைந்ததும் அவளைக் கட்டில் மீது கிடத்தினான். போட்டபடியே கிடந்தாள் அவள். அவளையே பார்த்துக் கொண்டு நின்றவன், அவள் கழுத்தில் துளித்திருந்த வியர்வையைக் கண்டு மின்சார விசிறியின் விசையைத் திருப்பி விட்டான். மேஜை மேலிருந்த கண்ணாடி டம்ளரை எடுத்து அதிலிருந்த தண்ணீரைக் கையில் ஊற்றி அவள் முகத்தில் தெளிக்கப் போனவன் தயங்கினான். மூர்ச்சை நீங்கினால் முரண்டுதான் பண்ணுவாள் என்று ஊகித்தானோ என்னவோ, பேசாமல் டம்ளரை அது இருந்த இடத்திலேயே வைத்து விட்டான்.

புதிதாகக் கிளம்பிய கள்ள மார்கெட் லாபத்தைப் பெட்டகத்தில் வைத்துப் பூட்டிவிட்டுத் திரும்புகிறவனின் திருப்தியுடன் அறைக் கதவைச் சாத்திவிட்டு அவன் வெளியே வந்து நின்றான். மழை ஓய்ந்து விட்ட போதிலும் வானம் இன்னும் வெளுக்கக் காணோம். மழையைத் தொடர்ந்த புழுக்கம் உடலெங்கும் கசகசப்பை உண்டாக்கிற்று. மூக்குக் கண்ணாடியின் மீது மூடுபனி போல் படர்ந்த வியர்வையின் ஆவியை அவன் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டிருந்தபோதுதான், நீரில் ஊறி எழுத்துக்கள் கலந்து விட்டிருந்த அந்தக் கசங்கிய காகிதத்தை அவன் கண்டான்.

ஏதோ ஓர் ஐயம் உண்டாகவே, குனிந்து, விரல் நகம் அழுக்குப் படாதபடி காகிதத்தை எடுத்துப் பிரித்தான்.

திடுக்கிட்டான். முகம் கறுத்துச் சுருங்க, மறுபடியும் பார்த்தான்.

பின்னால் சந்தடி கேட்டது.

"உங்களைப் போனில் கூப்பிடுகிறார்கள். பட்டணத்திலிருந்து பேசுகிறார்களாம்" என்றான் ஒரு வேலைக்காரன்.

செந்தில் விரைந்தான்.

"ஹலோ..."

அக்கௌண்டண்ட் ஜம்பு பேசினார். அவர் குரலில் மிரட்சியும் கிலியும் கரகரத்தன.

ரிசீவரைப் பற்றியிருந்த செந்திலின் விரல்கள் பிடியை இறுக்க, நகங்களில் வெளுப்புக் கண்டது.

செந்தில் தாழ்ந்த குரலில் கர்ஜித்தான். "ஐம்பது வருட சர்வீஸ், அறுபது வருட அனுபவம் என்று பீற்றிக் கொள்வீரே? இவ்வளவுதானா உமது சாமர்த்தியம்? இரண்டு நாள் நான் ஊரில் இல்லையென்றால் இத்தனை கலாட்டாவா? சே!"

"சார், கோபித்துக் கொள்ளக் கூடாது..."

"உம்மைப் போல் ஒரு பொறுப்பற்ற கிழத்தை அங்கே உட்கார்த்தி வைத்து விட்டு வந்தேனே, என்னைச் சொல்ல வேண்டும்."

"அப்படி சொல்லக்கூடாது சார். என்னால் முடிந்தவரை சொல்லிப் பார்த்து விட்டேன், ஒன்றும் நடக்கவில்லை. இவ்வளவு நெருக்கடி இதற்கு முன் ஒரு தடவை கூட ஏற்பட்டது கிடையாது சார்."



போலீஸ்காரர்: - டேய் பழம்! நான் வாங்கத்தான் கூப்பிடறேன்! சத்தியமா 'சார்ஜ்' பண்ண மாட்டேன்!

செந்தில் யோசித்தான். "நான் நாளை புறப்பட முயற்சி செய்கிறேன். அதுவரை..."

"ஐயையோ...சார்! நீங்கள் உடனடியாகப் புறப்பட்டு வரவேண்டும். இன்றிரவே நீங்கள் இங்கு வந்து சேர்ந்துவிடவேண்டும். தயவு பண்ணிக் கேட்டுக் கொள்கிறேன். அதற்கு மேல் தாங்காது!"

"பார்ப்போம். அது வரை சமாளித்துக் கொள்ளும்."

"சார்..."

"இன்னொன்று..."

"சார்!"

"இந்த விஷயம் வெளியில் யாருக்கும் தெரியக்கூடாது. ஆபீசில் இருக்கிறவர்களுக்குக் கூடத் தெரியக் கூடாது. இல்லாவிட்டால் உமது சீட்டைத்தான் கிழிக்க நேரிடும். புரிந்ததா!"

செந்தில் ரிஸீவரைக் கீழே வைத்தான்.

டெலிபோன் அறையைவிட்டு வெளியே [illegible] "எங்கே கனகசபை?" என்றான் அங்கிருந்த வேலையாளிடம்.

"எசமானா! முகப்பு ஹாலில் இருக்கிறார்."

பணியாள் சுட்டிக் காட்டிய திசையிலிருந்து வந்து கொண்டிருந்த ஆரவாரம் அவன் கூற்றை மெய்ப்பித்தது.

விடுவிடென்று நடந்து ஹாலுக்குள் நுழைந்து, பாப்பாவை இம்சித்துக் கொண்டிருக்கும் கனகசபையின் தோளைத் தட்டி, அவன் முகத்துக்கு நேரே அந்தக் கசங்கிய காகிதத்தைக் காட்டி, 'இரவு நீ எனக்கு எழுதித் தந்த செக் இதுதானே! ஒரு கையால் கொட்டை எழுத்தில் ஐம்பதினாயிரம் என்று எழுதிவிட்டு, நான் அந்தண்டை போனதும் மறு கையால் சுருட்டி எறிவதற்குத்தான் இதை எழுதினாயா! உடனடியாகத் தபாலில் சேர்ப்பிப்பதாக உறுதி சொல்லிவிட்டு, நான் உன்னை நம்பிக் கவலையற்றிருக்



கும்போது அந்தக் குப்பைத் தோட்டியில் சேர்ப்பதுதான் நட்பின் லட்சணமா! இதோ பிடி. நோக்கமாக எண்ணி வை ஐம்பதினாயிரத்தை. அது மட்டுமல்ல. பாப்பாவை உன்னிடம் சேர்ப்பித்ததற்காக எனக்கு வரவேண்டிய பணத்தையும் எடு உடனே'' என்று அதட்டிக் கேட்கச் செந்தில் உள்ளம் துடித்தாலும் அவன் புத்தி வேறொரு தந்திரத்தைச் சொல்லித் தந்தது போலும்.

செந்தில் ஓசைப்படாமல் மாடிக்கு விரைந்தான்.

கடகடவென்று சிரித்தாள் பாப்பா. மயிர்க்கால் ஒவ்வொன்றும் கிலியால் தடித்தது. ஆனால் அவள் நகைப்பில் தான் எத்தனை எகத்தாளம்!

அந்தப் பெரிய ஹாலின் மத்தியில், சூரிய வெளிச்சத்தை நிகர்க்கும் விளக்கொளியில், மது புட்டி வைக்கப்பட்டிருந்த மேஜையைப் பிடித்துக் கொண்டு நின்ற கனகசபை, உதட்டை அசைக்காமல் உறுமினான்

''சரிதது முடித்தவுடன் கொஞ்சம் சொல்கிறாயா அம்மா?''

''நீங்கள் போங்கள். நான் சொல்லி அனுப்புகிறேன்,'' என்றாள் அவள்.

''அவ்வளவு ரகசியம் உனக்கு எதற்கு? முடித்ததும் சொல்லு. நான் இங்கேதான் இருக்கப் போகிறேன். இப்போதைக்கு எனக்கு வேறொன்றும் வேலையில்லை.''

அவன் அமைதி அவளை என்னவோ செய்தது. தப்பிக்க வழியுண்டா என்று அவள் மூளை வௌவால்போல் இங்கும் அங்குமாக அலை பாய்ந்தது.

''ஏன் அதற்குள் நிறுத்திவிட்டாய்?'' கனகசபை பரிகசித்தான்.



"மனத்துக்குள்ளேயே சிரித்துக் கொண்டிருக்கிறேன்," என்றாள் பாப்பா, விட்டுக் கொடுக்காமல்.

அவன் நாற்காலியை விட்டு எழுந்தான்.

"எங்கே வைத்திருக்கிறீர்கள் அதை?"

கனகசபைக்கு விளங்கவில்லை. "எதைச் சொல்கிறாய் நீ?"

முகத்தைக் குவித்துக்கொண்டு, "நிஜமாகத்தான் கேட்கிறீர்களா!" என்று சிணுங்கினாள் அவள். அவளது நம்பிக்கை இப்போது மாடிப் படிக் கட்டைத் தொத்திக்கொண்டிருந்தது. மாடிக்குமட்டும் போக முடிந்துவிட்டால்? அப்புறம் கவலையே இல்லை. கோட்டைபோன்ற கட்டிடத்துக்குள் எத்தனையோ அறைகள், வராந்தாக்கள், சந்து பொந்துகள்.

கனகசபை ஒரு முறை பலமாகத் தொண்டையைக் கனைத்துக்கொண்டான். அவள் நம்பிக்கை கருகிற்று.

பாப்பாவின் மனப்போக்கை அவன் எப்படிப் புரிந்து கொண்டானோ, அவன் குறிப்பை அவர்கள் எப்படி அறிந்துகொண்டார்களோ, இரண்டு பேர் விரைந்துவந்து, முதல்படியில் நின்றுகொண்டார்கள்.

பாப்பா அப்பாவிபோல் அடுக்கினாள். "புடவை எத்தனை முழம் என்று கேட்டதும், எனக்கு என்று வாங்கி வைத்திருக்கிறீர்களாக்கும் என்று நினைத்து ஏமாந்து விட்டேன். போகட்டும்," என்று பெருந்தன்மையோடு மன்னித்தவள், "ஏன், மிராசுதார் சார், உங்கள் ஆட்களுடைய மீசைகளைப் பார்க்கும்போது எனக்கொரு யோசனை தோன்றுகிறது. நீங்கள் ஏன் ஒரு பார்பர் ஷாப் ஆரம்பிக்கக் கூடாது! வருமானத்துக்கு வருமானம். பொழுதுபோக்குக்குப் பொழுதுபோக்கு. உங்கள் பரிவாரங்களின் முகமும் பார்க்கச் சகிக்கிறாற் போல் ஆகிவிடும்."

பாப்பா எல்லையைக் கடந்து விட்டாள் என்பதைக் கனகசபையின் சிவந்த கண்களில் ஏற்பட்ட மாறுதல் காட்டிற்று.

படிக்கட்டில் நின்றிருந்த இருவரையும் அவன் பொருட்செறிவோடு நோக்கினான். அவர்கள் பாய்ந்தனர்.

ஆனால் அதற்குள் படீரென்று கண்ணாடி உடையும் ஓசை எழுந்தது. கனகசபை பாப்பாவின் பக்கம் திரும்பிய போது, பாப்பா மது புட்டியின் அடிப் பகுதியை மேஜை மீது ஓங்கித் தட்டி உடைத்துவிட்டு, சிறு சிறு ஈட்டிகள் போல் நீட்டிக்கொண்டிருக்கும் எஞ்சிய பகுதியை ஓர் ஆயுதமாக வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

"இப்படிக் கொடு அதை!"

"வெறும் பாட்டில் ஓடு உங்களுக்கு எதற்கு, மிராசுதார் சார்!"

அவன் மிரட்டினான். "தரப்போகிறாயா இல்லையா?"

"ஏன்! நீங்களே வந்து வாங்கிக் கொள்ளுங்களேன்?"

கனகசபை உக்கிரமடைந்தான். ஆனால் உடைந்த புட்டியைக் கையில் லாகவமாகச் சுழற்றிக் கொண்டிருக்கும் பாப்பாவை நெருங்க அவனுக்குத் துணிச்சல் இல்லை.

அவன் குனிந்தான், கண்ணாடிச் சில்லைப்பொறுக்குபவன்போல. அடுத்த விநாடி என்ன நடந்ததென்று பாப்பாவுக்கே தெரியாது.

பாப்பா நின்றுகொண்டிருந்த ஜமுக்காளம் இழுக்கப்பட்ட வேகத்தில் அவள் நிதானமிழந்து தடாலென்று விழ, தற்காப்புக்காக வைத்திருந்த உடைந்தபுட்டி மூலையில் போய் மோதி நொறுங்க, குபீரென்று நாலைந்து பேர் தாவி வந்து அவள் கைகளை மடக்கி முதுகுக்குப் பின்னால் வைத்து முறுக்கினர்.

பாப்பாவுக்கு மூச்சுத் திணறி, தோள் பூட்டுக் கழன்று விடும் அளவுக்குக் கனகசபையின் ஆட்கள் திருகினர். அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு வேதனையை விழுங்க முயன்றாள்.

"புதுப் புடவை வாங்கி வைத்திருப்பேன் என்று நினைத்தாய்! ஆமாம், வாங்கி வைத்திருக்கிறேன். எடுத்துத் தருகிறேன். கட்டிக் கொள்." அவன் கண்கள் நஞ்சைக் கக்கின. "ஆனால், பழையதைக் களைந்து விட்டல்லவா, புதியதை உடுத்திக் கொள்ளவேண்டும்? இல்லையா?"

கனகசபை அவள் எதிரே உட்கார்ந்தான். "ஆனால், நீ தனியறை எதற்கும் போக வேண்டாம். இங்கேயே உடை மாற்றிக் கொள்ளலாம்."

பாப்பாவின் இதயம் படபடவென்று அடித்துக்கொண்டது. அவள் உடலெல்லாம் வியர்த்துக் கொட்டிற்று.




எஸ்.ஏ.பி.

## முப்பத்தொன்பது

நான்கு முறை விக்கிவிட்டு உயிரை விட்டது, டிரங்க் ரோடில் சென்று கொண்டிருந்த பஸ்.

“ஏன் இங்கே நிறுத்தி விட்டார்கள்!” என்று பதறினுள் மங்களம், னொண னொணவென்ற குரலில்.

வழுக்கைத் தலையும் தொங்கு மீசையுமாக அவள் எதிரில் உட்கார்ந்திருந்த ஒரு கிழவர், “அவர்கள் நிறுத்தவில்லை அம்மா. அதுவாகவே நின்றுவிட்டது,” என்ருர்.

ஒரு செச்சலான ஆசாமி, “பார்க்கத்தான் பளபளவென்று கண்ணைப் பறிக்கிறது. உள்ளே எல்லாம் ஓட்டை. இந்தக் காலத்து கடவடிக்கை எல்லாமே இப்படித்தான்,” என்ருர், ஜரிகை அங்கவஸ்திரத்துடன் தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவரைக் கடைக் கண்ணுல் நோக்கியபடி.

இதற்குள் டிரைவர் தன் இடத்தை விட்டு இறங்கி, கதவைப் படாரென்று சாத்திவிட்டு முணு முணுத்துக் கொண்டே இஞ்ஜினின் மூடியைத் திறந்தார்.

மங்களத்தால் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. “ஐயையோ! நான் சீக்கிரம் ஊர் போய்ச் சேர்ந்தாக வேண்டுமே! பாழாய்ப் போன ரயில் கிடைக்கவில்லை என்பதற்காகப் பஸ்ஸில் ஏறினேன். அதுவும் இப்படி மக்கர் பண்ணுகிறதே!”

வண்டியை விட்டு இறங்கப்போன ஒரு நவநாகரிக இளைஞனிடம், “மணி என்ன ஆவுது சாமி!” என்று கேட்ட ஒரு வெற்றுடம்புப் பேர்வழி. “ஏன், ஐந்து நிமிடம் லேட்டாகப் போனல் ஆபீஸர் கோபித்துக் கொள்வாரோ!” என்ற பதிலைச் சுடச்சுட வாங்கிக் கட்டிக் கொண்டான்.

சிலர் காலார உலவ, சிலர் கைக் கெட்டிய தூரத்திலுள்ள புளியம் பழத்தைப் பறித்து ருசிபார்க்க, மங்களம் மட்டும் பொறுமை இழந்து விட்ட பெரும்பான்மையினருக்குத் தலைமை வகித்தவளாய், டிரைவரையும் கண்டக்டரையும் துளைத்துக் கொண்டிருந்தாள்.

தனது ஆசனத்திலிருந்த மெத்தையை மரத்து நிழலில் போட்டு டிரைவர் கால்களை நீட்டித் துயிலில் ஆழத் தொடங்கியபோதுதான் பஸ் பிரயாணிகள் கண்டக்டரின் மூலம் உண்மையை ஒருவாறு அறிந்து கொள்ள முடிந்தது. அதிருப்தி எரிச்சலாக மாறி, பெரிய கிளர்ச்சியாக உருவாகிக் கொண்டிருந்தது.

“என்னய்யா இது அக்கிரமமாக இருக்கிறது! எந்தக் காலத்தில் உங்கள் கம்பெனி வண்டி எதிரே வரப் போகிறது! ஸ்பேர் பஸ் எப்போது வந்து நாங்கள் ஊர் போய்ச் சேர்கிறது!” என்ருர் தொங்கு மீசைக்காரர்.

“இந்த மாதிரிக் குப்பை வண்டியை எல்லாம் ஓட்டுவதற்கு எவன் பர்மிட் கொடுத்தான்! நான் ஊருக்குப் போனதும் முதல் வேலையாக லெட்டர்ஸ் டு தி எடிடர், காலத்தில் ஒரு திட்டு திட்டப் போகிறேனு இல்லையா பார்,” என்று வஞ்சினம் கூறினுன் நவநாகரிக இளைஞன்.

கண்டக்டருக்குக் கோபம் வந்து விட்டது. “திட்டுவதானுலும் திட்டுங்கள். சீவுவதானுலும் சீவுங்கள். எனக்கென்ன! என் கடமையை நான் செய்கிறேன். ஸ்பேர் பஸ் வருவதற்குள் எங்கள் அடுத்த வண்டி வந்தால் அதில் தாராளமாய் ஏறிக்கொண்டு போங்கள். அதில் இடமிருக்குமா என்பதுதான் சந்தேகம்.”

“அடுத்த பஸ் எப்போது!” என்ருள் மங்களம் ஆவலோடு.

“இன்னும் ஒன்றரை மணி நேரத்துக்குள்ளே வந்து விடும்,” என்று மூடியை இறக்கினுன் கண்டக்டர்.

இளைஞன் ஆங்கிலத்தில் சரமாரியாகப் பொழிந்தான் மற்றவர்கள், தற்

செயலாக அந்த இடத்தை அடைந்த ஓர் இளநீர்க் கூடைக்காரனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

தூரத்தில் ஒரு பலத்த நீண்ட ஹாரன் சப்தம் கேட்டது.

கால் மேல் கால் போட்டபடி, அந்தப் பெரிய காருக்குள் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்திருந்த வைர மோதிரக்காரர், "காப்பி!" என்று அழைத்தார்.

"இதோ," பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பெண் தர்மாஸ் பிளாஸ்க்கை எடுத்தாள்.

"டிரைவர், வேகத்தைக் குறைத்துக் கொள்."

அவள் ஊற்றிக் கொடுத்த காப்பியைப் பெரியவர் உறிஞ்சிக் கொண்டிருந்தபோது, "அதென்ன கூட்டம்!" என்று கேட்டாள் அவள்.

"பஸ் பழுதாய்ப் போய் விட்டது போலிருக்கிறது," என்று விளக்கியவர் படபடப்புடன், "அதோ ஒருத்தி நடுச்சாலையில் வந்து நிற்கிறாள் பார். ஜாக்கிரதை!" என்று எச்சரித்தார் டிரைவரிடம்.

வண்டியோட்டி அனுபவசாலிதான். லாகவமாகப் பிரேக் போட்டு, வழியை அடைத்துக் கொண்டிருந்தவளின் முழங்கால்களை உரசுமுன் காரை நிறுத்தி விட்டான்.

தனது லைசன்ஸில் கரும்புள்ளி குத்துவதற்கு இருந்தவளைக் காட்டத்துடன் நோக்கி, "போம்மே அந்தண்டை! சாவதற்குக் காத்துக் கொண்டிருந்தாயா!" என்றான் டிரைவர்.

"சாகவிருக்கும் என் வீட்டுக்காரரைக் காப்பாற்றுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன்." வண்டிக்குள் இருந்த பெரியவர் பக்கம் அவள் திரும்பினாள். "ஐயா, என்னைத் தயவு செய்து உங்கள் காரில் ஏற்றிக் கொள்ளுங்கள். நான் உடனே கூத்தனூருக்குப் போயாக வேண்டும். அங்கே ஒவ்வொரு வினாடியும் அவர் என்னை எதிர் பார்த்துத் துடித்துக் கொண்டிருப்பார்."

"போ போ!" என்றார், காருக்கு உரியவர். "டிரைவர், விடு வண்டியை." கியர் மாற்றப் படுமுன் அவள் குடுகுடுவென்று காரை வலம் வந்து பின்புறக் கதவைத்திறந்து அப்பெண்ணின் கால்களைப் பிடித்துக் கொண்டு விட்டாள்.

"தாயே, நீதான் எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடுக்க வேண்டும்."

மற்றவள் நெஞ்சு நெகிழ்ந்தது. பெரியவரிடம் கெஞ்சினாள்.

"இதெல்லாம் என்ன? ஊர் பேர் தெரியாத உதவாக்கரை எல்லாம் சவாரி செய்வதற்கா இருபத்தையாயிரம் ரூபாய் போட்டு..." என்று அதட்ட ஆரம்பித்தவர். அவள் முகம் நீண்டு விட்டதைக் கவனித்து விட்டு "சரி. சரி, முன் ஸீட்டில் ஏறிக் கொள்ளச்சொல்," என்றார்.

தாசில் ஐயாவுக்கு ஒரே தூக்கக் கலக்கம். தலையைச் சொறிவதற்காகக் குல்லாவைத் தூக்க முயன்றவர் அது அங்கு இல்லாதது கண்டு ஏமாந்தார். சொறிவதில் திருப்தி ஏற்படாமல் போகவே, கண்களைச் சுழற்றி, சுவரிலிருந்த ஆணியில் மாட்டியிருந்த குல்லாவை எடுத்து அணிந்து கொண்டு "நீ என்னதானடா சொல்கிறாய்? ஒரு இழவும் விளங்கவில்லையே?" என்று அலுத்துக் கொண்டார்.

அவருக்கு அலுப்பு உண்டானது இயற்கையே. ஏனெனில் அவரிடம் ஓர் அவசரச்செய்தியை அறிவிக்க முயன்று கொண்டிருந்தவன் ஓர் ஊமை.

"உங்கள் வயலில் எவனுவது மாட்டை ஓட்டி மேய விட்டு விட்டானு!"

தனக்கே உரிய ஓசைக் குறிப்பால், தான் வந்தது அவர் சொன்ன காரணத்துக்காக அல்ல என்று கண்டிப்பாக மறுத்துவிட்டான் மற்றவன்.

"திருட்டுப் போய் விட்டதா?" என்று கேட்டுப் பார்த்தார் தாசில் ஐயா.

இரட்டிப்பு உறுதியுடன், இல்லை என்று தெரிவித்தான் அவன்.

தாசில் ஐயாவுக்கு நெற்றியில் அடித்துக்கொள்வதைத் தவிர வேறொன்றும் செய்யத் தோன்றவில்லை.

தாமோதரத்தை ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டுக் காலையில் கூத்தனூர் திரும்பியவர் அவர். நாலு மணி நேர உறக்கம் அவருக்குப் போதவில்லை. சாயங்காலம் மூன்று அல்லது நான்கு மணிவரையிலாவது அயர்ந்து உறங்கி உடல் அசதியை எல்லாம் போக்கடித்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் படுக்கச் சென்றவரை உச்சிப் பொழுதில் வந்து எழுப்பி விட்டுவிட்டான் ஊமை.

''ஊமையை அனுப்பியிருக்கிறீர்களே. அந்த வண்டிக்கார வேலு எங்கே போனானாம்?'' என்று கேட்டுக்கொண்டே காப்பி டம்ளரைத் தாசில் ஐயாவின் கையில் கொடுத்தாள் அவரது சகோதரி.

''அந்தப் பயலைத்தான் கண்ணிலேயே காணோமே! நேற்று சாயங்காலம் ரத்தினத்தை ஏற்றிக்கொண்டு மிராசுதாரின் வீட்டுக்குப் போனவன். அப்புறம் வண்டிதான் வந்தது. அவனைச் சொல்லிக்குற்றமில்லை. தொப்புளுக்கு மேலே கஞ்சி பண்ணையிலே. மேல் செலவுக்கு மிராசுதார் வீட்டிலே அவன் பெண்டாட்டி வேலை செய்கிறாள்! பின்னே கொழுப்புக்குக் கேட்கவா வேண்டும்!''

ஊமை கையையும் காலையும் ஆட்டி, திட்டவட்டமாக ஏதோ கூறினான்.

''இவன் ஒருத்தன்!'' என்றார் தாசில் ஐயா.

''இவர்கள் வீட்டில் பாட்டி ஒருத்தி இருப்பாளே! அவளைக் கூட்டிவரச் சொல்லுங்களேன்.''

''நன்றாகச் சொன்னாய். அவளுக்குக் கண்ணும் தெரியாது. காதும் வழங்காது,'' என்று முணுமுணுத்தவர், 'எல்லோரும் வயலுக்குப் போய் விட்டார்கள் போலிருக்கிறது. அந்தக் கணக்கனையும் காணோம். சரி, நானே போய் அந்தக் கிழவியோடு மாரடித்து விட்டு வருகிறேன்,'' என்று முடிவு செய்ததும் ஊமை அவருக்கு உற்சாகத்துடன் வழிகாட்டினான்.

குடிசை வாசலிலேயே உட்கார்ந்திருந்தாள் கிழவி. எண்பது பிறந்த நாட்களைக் கண்ட அனுபவம் அவள் முகத்திலிருந்த சுருக்கங்களில் அடங்கியிருந்தது.

''சாமி, நீங்களே வந்துட்டீங்களா! நல்லா இருக்கணும்'' என்று பொக்கை வாயினாலே பல்லாண்டு பாடியவள்,



"சாமி, என்னாலே எழுந்திருக்க முடியலே. கோபிச்சிக்காதிங்க," என்றாள்.

"நான் கோபித்துக் கொள்வதற்காக வரவில்லை. சேதியைச் சொல்லு," என்றார் தாசில் ஐயா.

இதற்குள் ஊமை ஒரு கிழிந்த பாயைக் கொண்டுவந்து விரித்தான்.

"சாமி, என் பேரன் வந்தானுங்களா?" என்று வினவினாள் பாட்டி.

"என்னைக் கேட்கிறாயா! இன்றைக்குத்தான் அவன் தலை காட்டவே இல்லையே! எஜமானர்கள் எல்லோரும் வந்திருக்கிறார்கள். எசகுபிசகாக ஏதேதோ நடந்து எல்லாம் ஒரே கலவரமாகக் கிடக்கிறது. இந்தச் சமயத்தில் இப்படிப் பண்ணுகிறானே! எப்படியும் பெண்டாட்டி சம்பாதித்துப் போட்டுவிடுவாள் என்ற தைரியம் போலிருக்கிறது."

"ஐயோ சாமி. அப்படியெல்லாம் சொல்லாதிங்க. எசமான் வீட்டுக்காக உசிரையும் கொடுப்பான் எங்க வேலு." கிழவி கண் கலங்கினாள்.

"அது சரி. இவனை எதற்காக என்னிடம் அனுப்பிவைத்தாய்? என்ன நடந்தது?"

மூக்கைச் சிந்தியெறிந்த பாட்டி ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். "நான் என்னத்தைன்னு சொல்லுவேன் சாமி! எப்பவே பாடையிலே போயிருக்க வேண்டியவள். இன்னும் கல்லாட்டம் உட்கார்ந்து இதையெல்லாம் பார்த்திட்டிருக்கறேன் பாருங்க! பாவிங்க! பட்டுக்கிடப்பானுங்க. திமுதிமுன்னு நுழைஞ்சி எலும்பு முறிய அடிச்சுப் போட்டுட்டுப் போயிட்டானுங்களே!"

தாசில் ஐயா திடுக்கிட்டார். "யாரு? யாரை?"

"இருளாயியைத்தானுங்க."

"யார்? வேலன் பெண்சாதியையா?"

"ஆமாங்க. அந்த அக்கிரமத்தை ஏன் கேட்கறீங்க!"

"இப்போது அவள் எங்கே?" அவர் குடிசைக்குள் எட்டிப் பார்த்தார்.

"சந்தைக்குப் போனவங்க நாலு பேரு அவளை வண்டியிலே போட்டு ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போயிட்டாங்க."

"வேலன்?"

"அவன் அப்போ இங்கே இல்லீங்க. நானும்,"—கிழவி ஊமையைச் சுட்டிக் காட்டினாள் — "ஆண்டியும் மட்டும்தான் இருந்தோம். அந்தப் போக்கிரிங்ககிட்டே நாங்க என்ன செய்துக்க முடியும்!"

தனது வீரப் பிரதாபங்களை ஆண்டி கை ஜாடை மூலம் விளக்கிக் கொண்டிருந்தான். தான் எதிர்த்துப் போராடிய விதத்தையும், எண்ணிக்கை வலுவினால் எதிரிகள் தன்னை முறியடித்த கதையையும் அவன் நடித்துக் காட்டினான்.

"யார் அந்தப் போக்கிரிகள்! எதற்காக இருளாயியை அவர்கள் அடிக்க வேண்டும்?" என்று கேட்கும்போதே தாசில் ஐயாவின் குரல் கம்மிற்று. ஊர் இப்படித் திடீரென்று ஒரேயடியாய்க் கெட்டுவிட்டதே என்ற கவலை அதில் தொனித்தது. ஒரு பக்கம் வயதுப் பெண்ணைக் கடத்திக் கொண்டு போகிறார்கள்; இன்னொரு பக்கம் பட்டணத்திலிருந்து வந்தவரின் மண்டையைப் பெயர்த்து நினைவிழக்கச் செய்து விடுகிறார்கள்; இங்கே என்னடாவென்றால் ஊரான் பெண்டாட்டியைப் புரட்டி எடுத்திருக்கிறார்கள்.

கிழவி ஆத்திரத்துடன் சொன்னாள். "பட்டப் பகலில் இப்படிச் செய்ய வேறு யாருக்குச்சாமி துணிச்சல் வரும்? எல்லாம் நம்ம மிராசுதாருடைய வேலை தான்!"

"என்ன!" தாசில் ஐயாவால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. "நீ சரியாகப் பார்த்தாயா?"

"கண்ணு மங்கிட்டாலும் எனக்குக் காது நல்லாத்தான் இருக்கு சாமி."

"இவள் என்ன தப்பு செய்தாளாம்?"

"வேலுவுக்காக இவள் செய்தாள். பாப்பா அம்மாவுக்காக—எசமான விசுவாசத்துக்காக—வேலு செய்யச்சொன்னான். இப்படி வந்து முடிஞ்சு போச்சு."

குழப்பத்தால் தாசில் ஐயாவுக்குத் தலை சுற்றிற்று.

"பாப்பாவா? அது எப்போது வந்தது! அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"இருளாயி மிராசுதார் வீட்டிலே வேலை செய்யறாண்ணு வேலு சொல்லியிருக்கான். 'அப்படீன்னா அவ ரெண்டு நாளைக்கு வேலைக்குப் போக வேண்டாம். வீட்டுக்கு விலக்குன்னு சொல்லிவிட்டும். அவ ரவிக்கை சேலையை என்கிட்டே குடு' அப்படீன்னு கேட்டு தாம்."



### சிசு வலை

குழந்தைகள் உணவு பற்றாக் குறையா? கவலையை விடுங்கள். இன்றே எழுதுங்கள்-

எம்மிடம் நயமான கரித்துண்டுகள், பல்பத் துண்டுகள், பாதிப் புளியங் கொட்டை, சிறு பொடி மணல், சிறு தகர மூடிகள் ஆகியவை நிறைய 'ஸ்டாக்' உள்ளன.

குல்லாவை எடுத்த தாசில் ஐயா இம் முறை சொறிய வில்லை; பிறாண்டிக் கொண்டார்.

"பாப்பா வா! மிராசுதாரின் வீட்டில் வேலை செய்வதா! ஏன்!"

"கடவுளுக்குத் தான் வெளிச்சம். எல்லா வினையும் அதிலே இருந்து தான் வந்தது. பெரிய இடத்து விசயம்னு பேசாதிருக்காமே வேலுவும் அவன் பெண் சாதியும் தலையைக் கொடுத்தாங்க. இப்போ இந்தக் கதியாச்சு. அந்தோட போனாத் தேவலையே சாமி. வேலு வந்தான். சேதியைத் தெரிஞ்சிக்கிட்டான். கச்சையை வரிஞ்சி கட்டிக்கிட்டு, அப்படியா நடக்கப் போச்சுண்ணு பாய்ஞ்சு ஓடிட்டான். எங்கே போனானோ, என்ன பண்ணினானோ தெரியலே. ஆத்திரத்திலே ஏதும் செய்துட்டு அவன் மேற்கொண்டு வம்பிலே மாட்டிக்காமே இருக்கணும். உங்களைத்தான் மலையாட்டமா நம்பிக்கிட்டிருக்கேன். நீங்கதான் அவனைக் காப்பாத்தணும்."

தாசில் ஐயாவின் காதில் அவள் சொற்கள் விழுந்தனவோ என்னவோ, வேட்டை நாயைப் போல மோப்பம் பிடித்துக் கொண்டே அவர் மூளை வெகு தூரம் சென்று விட்டிருந்தது.

கனகசபை ஒரு நிமிடத்துக்கு அலட்சியமாக இருந்தான். இல்லை, அலட்சியமாக இருக்கவில்லை. பாப்பாவின் நெஞ்சு நடுங்குவதையும், அந்த நடுக்கம் அவளது உடலின் ஒவ்வொரு உறுப்பிலும் கொந்தளித்துப் பீரிடுவதையும் கவனித்தபடி இருந்தான்.

பிறகு, "உன் கைகள் சோர்ந்து விட்டன போலிருக்கிறது. பரவாயில்லை. ஆடைகளைக் களையும் கஷ்டம் உனக்கு எதற்கு? என் ஆட்களை விட்டே அவிழ்க்கச் செய்கிறேன். என்ன சொல்கிறாய்!"

பாப்பாவின் உள்ளத்தில் ஒரு சிறு நம்பிக்கையைத் துளிர்க்க வைத்தது அவனது கடைசிக் கேள்வி. சட்டென்று அவன் முகத்தை நோக்கினாள். ஆம். அப்படித்தான் இருக்க வேண்டும், கனகசபை சும்மா மிரட்டுகிறான். நினைக்கவும் முடியாத ஒரு புயங்கரத்தை அவள் கண்முன் நிறுத்தி, அச்சத்தாலும் அவமானத்தாலும் அவள் குன்றிக் குறுகித் துடிப்பதைக் கண்டு, அந்தக் காட்சியில் தன் ஏமாற்றங்களையும் தோல்விகளையும் மூழ்கடிக்க முயல்கிறான். பாப்பா ஒரு முடிவுக்கு வந்தாள். திகிலையும் அச்சத்தையும் உள்ளே புதைத்துக் கொண்டு, துணிச்சல்காரி போல் தோற்றமளிப்பது ஆபத்தில் முடியலாம். வெறும் மிரட்டலைக் கொண்டு அவளைத் தோற்கடிக்க முடியவில்லையென்றால், ஆத்திரத்தில் அவன் மிரட்டலைச் செயலாற்றத் தொடங்கினாலும் தொடங்கி விடுவான். ஆகவே துகிலுரியப்பட்டால் அவள் எவ்வளவு துடிப்பாளோ, அதை முன் கூட்டியே நடித்துக் காட்டி அவனது புண்பட்ட அகந்தையைத் திருப்திப் படுத்துவதே மேல்.

"நீ நினைப்பது தவறு."

தன் சிந்தனையிலேயே ஆழ்ந்து விட்டிருந்த பாப்பாவைக் கனகசபையின் குரல் திடீரென்று தூக்கி வாரிப் போட்டது.

அவன் அவளை நெருங்கினான். அவன் முகம் அவள் முகத்துக்கு நேராக வந்த போது, அவள் தலையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள். மது நெடி கடுமையாக இருந்தது.

"ஏமாறாதே. உன் மீது எனக்கு இன்னும் ஆசை இருக்கிறதென்று நினைத்து ஏமாறாதே!" அருவருப்பால் அவன் உதடுகள் வளைந்தன. மூக்கின் இரண்டு பக்கத்திலும் இறங்கிய பள்ளங்கள் மேலும் ஆழமாயின.

"உன்னைச் சேற்றிலும் கீழாக, சாக்கடைப் புழுவிலும், அழுகிப்போன பிணத்திலும் மட்டமாகக் கருதுகிறேன். நீ எனக்கு வேண்டாம். உன் வெள்ளைத் தோல் வேண்டாம். அதற்குள்ளிருக்கும் கறுப்பு உள்ளமும்வேண்டாம். உன்னை அடைய வேண்டும் என்ற ஆசை, உன்னை அவமானப் படுத்த வேண்டும் என்ற வேகத்தைத்

துணிந்துவிடும் என்று நொட்டை விட்டுக் கொண்டிருக்காதே. இது நிச்சயம். அழகி என்ற கர்வத்தால், புத்திசாலி என்ற தன்னம்பிக்கையால் எந்த உடலை என்னிடமிருந்து மறைக்கப் பார்த்தாயோ, அது கேவலம் எனது வேலைக்காரர்களின் முன்னிலையில், வேலைக்காரர்களின் கையால் பகிரங்கப் படுத்தப் பட்டுப் பாழாகப் போகிறது.''

கனகசபையின் சொற்கள் ஒவ்வொன்றும் தாவி வந்து சூட்டுக் கோலாய்ப் பொசுக்கின பாப்பாவை.

'டேய்!'' என்று அழைத்தான் கனகசபை. ''கோவிந்தனைக் கூட்டி வா.''

கோவிந்தனையா! பாப்பாவின் இதயம் படபடத்தது. மகிழ்ச்சியும் துணிச்சலும் அவளுக்குள் போட்டி போட்டுக் கொண்டு பொங்கின. கோவிந்தன் பக்கத்தில் இருக்கும் பட்சத்தில், தேவைப் பட்டால் இமய மலையைக் கூடத் தவிடு பொடியாக்கி விடலாம் என்று தோன்றிற்று அவளுக்கு.

கனகசபை சிரித்துக் கொண்டான். ''அவன் தான் இன்றைக்கு முக்கிய விருந்தாளி. மேடைக்குப் பக்கத்தில் அவனுக்கு இடம் கொடுங்கள். நடக்கப்போகும்நாடகத்தை நன்றாகப்பார்க்கட்டும். அவன் பார்க்கும் விதத்தைக் கண்டு நாம் ரசிப்போம்.''

பாப்பா பல்லைக் கடித்தாள். கனக சபை சிரிக்கிறான். சிரிக்கட்டும். இன்னும் எவ்வளவு நேரத்துக்குச் சிரிக்கப் போகிறான்? கோவிந்தன் வரும்வரைக் கும்தானே? நன்றாகச் சிரிக்கட்டும். கோவிந்தன் வந்தமாத்திரத்தில், தனது நிலைமையை அவன் புரிந்து கொண்ட மாத்திரத்தில்,குடிபோதையால்மிருகத் தன்மையின் படு பாதாளத்தைத் தொட்டுவிட்ட கனகசபையின் திர்மானத்தைத் தெரிந்து கொண்ட மாத்திரத்தில், சிங்கமாக மாறிவிடமாட்டானு கோவிந்தன்! அதை நினைக்கும்போது குதூகலத்தால் சிலிர்த்தது பாப்பாவின் மேனி. சிங்கமாக மாறி, ஒரே அறையில் அத்தனை பேரையும் வீழ்த்தி...

அதோ கோவிந்தன்!

பாப்பா ஆவலுடன் பார்த்தாள்.

கோவிந்தனு அது! அவனை ஏன் நாலு பேர் தரதரவென்று இழுத்து வர வேண்டும்! அவன் முகம் ஏன் வெளுத்து, மிரட்சியுடன் காணப்படுகிறது! தன் முன்னால் நிற்க அவனுக்கு ஏன் இவ்வளவு கூச்சம்?

குழப்பமும் கவலையும் பாப்பாவை நிரப்பின.

கோவிந்தன் அவளை ஒரு முறை ஏறெடுத்துப் பார்த்தான். அடுத்த விநாடி முகத்தை மூடிக் கொண்டு வந்த வழியே ஓடி விட்டான்.

பாப்பா சிலையாய் நின்றாள்.

''பிடித்து வாருங்கள் அவனை!'' என்று கட்டளையிட்டான் கனகசபை. ''அவன் இல்லாவிட்டால் இந்தக் காட்சிக்குக் களை கட்டாது.''




## நாற்பது

"ஏன் சார் சும்மா எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டே இருக்கிறீர்கள்! பேசாமல் அப்படிப் போய் உட்கார்ந்திருங்களேன். அவர் கூப்பிடும்போது சொல்கிறேன்."

பாங்குக் காரியதரிசியின் அறைக்கு வெளியே முக்காலி போட்டு உட்கார்ந்திருந்த காக்கிச் சட்டை சேவகனின் குரல் கொஞ்சம் கடுமையாகவே இருந்தது.

கதவின் நடுவே தோளுயரத்தில் பதிக்கப்பட்டிருந்த வட்டமான கண்ணாடியில் கண்களைப் பொருத்தியிருந்த அக்கௌண்டண்ட் ஜம்பு கெஞ்சினார்:

"தனியாகத்தானே அப்பா இருக்கிறார்! இரண்டே நிமிஷம். தலையைக் காட்டிவிட்டு வந்துவிடுகிறேன்."

"சரிதான் உட்காருங்கள் சார்," என்று மற்றவன் எழுந்ததும், கைகலப்புக்குத் தயாராய் இல்லாத ஜம்பு, அண்மையில் கிடந்த பெஞ்சைச் சரணடைந்தார்.

ஆனால் அவர் எதிரியின் கோபம் முற்றுப் பெறவில்லை. அவன் முணுமுணுத்தான். "சீட்டைத்தான் கொடுத்துவிட்டு வந்திருக்கிறேனே! அவராகவே கூப்பிடுவாரல்லவா? ஒவ்வொருவருக்கும் மனசிலே தான் பெரிய கவர்னர் என்று எண்ணம்."

தன் பங்குக்கு ஒரு தடவை உள்ளே எட்டிப் பார்த்தவன், தோள்மீது கிடந்த நீலத்துணியை எடுத்து, உட்கார்ந்து, உட்கார்ந்து மெருகேற்றப்பட்டிருந்த முக்காலியை ஒருமுறை அனாவசியமாகத் தட்டினான்.

'இர்ஸ்ஸ்ஸ்'

அவன் தலைக்கு மேலிருந்த அறிவிப்புக் கருவி ரீங்காரம் செய்தது. அவன் துள்ளி எழுந்து ஒரு கையால் கதவைத் திறந்தபடி மறு கையால் ஜம்புவின் தோளைக் கிறவும், அவகாசம் இருக்கிறதென்ற எண்ணத்திலும் பதட்டத்தை மட்டுப்படுத்தும் நோக்கத்திலும் ஒரு சிட்டிகைப் பொடியை எடுத்துவைத்திருந்த ஜம்பு, கையை ஓர் உதறு உதறிவிட்டு உள்ளே பாய, சூரணத்தின் நெடியைத் தாங்க முடியாமல் கட்டடத்தின் அஸ்திவாரத்தையே அசைக்கக்கூடிய ஒரு பிரம்மாண்டமான தும்மல் தொடரைச் சேவகன் துவக்கி வைத்தான்.

உள்ளே ஏர்கண்டிஷன்ட் அறையின் குளுகுளுப்பில் திக்குமுக்காடினார் ஜம்பு.

இரண்டு கைகளை அகல விரித்தாலும் விளிம்புகளைத் தொட முடியாத அளவுக்கு அகன்றிருந்த மேசைக்குப் பின்னால் செக்கச் சிவந்த பழமாக அமர்ந்திருந்த காரியதரிசி, பைலில்



Exide






மற்ரெரு காகிதத்தைப் புரட்டியபடி தலை நிமிர்ந்தார்.

"யார், ஜம்புவா?"

"ஆமாம்," என்ருர் ஜம்பு அசட்டுச் சிரிப்புச் சிரித்தபடி. "உங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதற்காக ரொம்பவும் மன்னிக்க வேண்டும். வேறு வழியில்லை, அதனுல் உங்களிடம் வந்திருக்கிறேன்..."

"தெரியும்." பைலை மூடி வைத்தார் காரியதரிசி.

ஜம்பு தொடர்ந்தார். "பின் தேதியிட்ட செக் ஒன்று..."

"உங்கள் செந்திலுக்கு என்ன வந்தது! ஏன் இப்படியெல்லாம் செய்கிருன்!"

தான் மேற்கொண்டு, விஷயத்தை விளக்குவதற்கு அவசியமில்லாதபடி அவர் எல்லாவற்றையும் முன கூட்டியே தெரிந்துவைத்திருக்கிருர் என்று ஊகித்த போதிலும் ஜம்புவால் சும்மா இருக்க முடியவில்லை. "முப்பத்தையாயிரம் ரூபாய்க்குச் செக். இன்றைக்குக் கிளியரிங்குக்கு வருமென்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. செந்திலும் ஊரில் இல்லை. உங்கள்கிளை ஏஜண்டோ கையை விரிக்கிருர். நீங்கள்தான் பெரியமனது பண்ணி, செக்கைப் பாஸ் பண்ண வேண்டும்."

காரியதரிசி புருவங்களை நெறித்தபடி யோசனையில் ஆழ்ந்தார். அவர் கை விரல்கள், உறை கிழிக்கும் கத்தியுடன் விஷமம் செய்தன.

"அகலக் கால் வைக்காதே என்று அப்பொழுதே எச்சரித்தேன். கேட்டானு? வேண்டுமென்கிற அளவு பணம் சேர்க்கட்டும். ஆட்சேபமில்லை. ஆனல் ஒரே நாளில் உலகத்தை வளைத்துப் பிடிக்கிறேன் என்ருல் முடிகிற காரியமா? பெரிய காண்டிராக்ட் ஒன்றில் டைப் அடிக்கும் பொழுது பிழை ஏற்பட்டு அதன் விளைவாக ஏராளமான நஷ்டம் ஏற்பட்டு விட்டதாமே!"

"ஆமாம் சார்," என்று ஒத்துதினுர் ஜம்பு. "ஆள் கெட்டிக்காரர்தான். ஆனல் எல்லாவற்றையும் அவரே பார்ப்பதென்பது நடக்குமா? நீங்கள் சொல்கிற காண்டிராக்டு பாரத்தை இரவோடிரவாக அவர்தான் டைப் செய்து கையெழுத்திட்டு அனுப்பினுர். ஒரு சைபர் விடடுப் போனதில் அரை 'ல'கரத்துக்கு மேல் கையைக் கடித்து விட்டது. எதிர்பாராமல் நேரும் துரதிர்ஷ்டங்கள் வேறே. நெய்யாறு பாலம் காண்ட்ராக்டிலே கல்லடிப்பதுமட்டும் கணக்கிட்டதைக் காட்டிலும் நான்கு மடங்கு சாப்பிட்டு விட்டது என்ருல் பாரத்துக் கொள்ளுங்களேன். 'இது கல்லா, இரும்பா! நாள் முழுதும் உடைத்தாலும் ஆளுக்கு இரண்டு கூடை தேருது போலிருக்கிறதே' என்று கல்லுடைப்பவர்களெல்லாம் ஓடி விட்டார்கள். அது மட்டுமா! சமீபத்தில் வெள்ளம் வந்ததல்லவா? அப்போது ஆந்திர தேசத்தில் மேற்கொண்ட அணைக்கட்டு வேலை அத்தனையும் பாழாகிவிட்டது. சரி; நாம் நினைத்தபடிதான் நடக்கவில்லையே, சூடு கண்ட பயம் இருக்க வேண்டாம்! கையிலிருக்கும் வேலை எல்லாம் அரையும் குறையுமாக நிற்கும்பொழுது புதிது புதிதாகக் காண்டிராக்ட் வாங்குவதில் அர்த்தமென்ன?"

எந்த இடத்தில் யார் முன் பேசுகிருேம் என்ற ஞாபகமே இல்லாமல், செந்திலிடம் தெரிவிப்பதற்குத் துணிச்சலில்லாத கருத்துக்களை எல்லாம் பாங்க் காரியதரிசியிடம் அடுக்கிவிட்டதை எண்ணி, கூச்சமும் அச்சமும் ஒருங்கே அடைந்தார் ஜம்பு.

"ஏதோ வாய்க்கு வந்ததை உளறி விட்டேன். மன்னித்துக் கொள்ள வேண்டும்," என்று வினயத்துடன் கையைப் பிசைந்தார்.

காரியதரிசி அவரைக் கவனித்ததாகத் தெரியவில்லை. "மூத்தவன் என்ன பண்ணுகிருன்! அப்பாவும் தானும் பாடுபட்டு வளர்த்த தொழில் சின்னவன் கையில் சிக்கிச் சின்னபின்னமாவதை அவனுல் எப்படிப் பார்த்துக் கொண்டிருக்க முடிகிறது!"

காரிருளில் மின்னலென ஜம்புவின் மனத்தில் பளிச்சிட்டது அந்த யோசனை. ஆவலுடன், "ரத்தினத்தைத்தானே சொல்லுகிறீர்கள்! அவரிடம் நேரிடையாக நீங்கள் ஒரு வார்த்தை சொன்னல் அவர் நிச்சயம் கேட்பார் என்று நினைக்கிறேன்," என்ருர்.

"சொல்லிப் பார்ப்போம்." என்ருர் காரியதரிசி, ஜம்புவின் மனம் குளிர. "அவன் எங்கே இப்பொழுது!"

"சே! இந்த நாற்றம் பிடித்த உத்தியோகத்தில் நான்கு நாளைக்குமேல் எவளாலும் இருக்க முடியுமா!".

முகத்தில் அருவருப்புப் படர, சோப்

புப் போட்டுக் கை கழுவிக்கொண்டிருந்த தன் தோழியைப் பார்த்து அடக்கமாகச் சிரித்தாள் ஒல்லியான நர்ஸ்.

"இப்படியே சொல்லிக்கொண்டு நாலு வருஷத்தை ஓட்டி விட்டாய், எல்லாம் வேஷம்."

கோபமாகப் .பேசியவள் வெள்ளைத் துண்டு ஒன்றால் கைகளைத் துடைத்துக்கொண்டே, "நீ வேண்டுமானால் பார்த்துக்கொண்டே இரேன். இருந்தாற்போலிருந்து ஒரு நாள் காணாமல் போய் விடப் போகிறேன்," என்று பயமுறுத்தினாள்.

குமாரி ஒல்லி கிண்டல் செய்தாள். "வேறே எங்கே போகப் போகிறாய்? காரியவர்த்தி எவனாவது வந்து கண்ணே, மூக்கே என்று பேசி உன்னைக் கடத்திக் கொண்டு போகப் போகிறான். அப்புறம் அடுப்பங்கரைக்கும் பிரசவ விடுதிக்குமாக லோல்படப் போகிறாய்.".

"சீ போ! உனக்கு இதைவிட்டால் வேறே நினைப்பில்லை. இந்த டாக்டர் இருக்கிறாரே, அவருக்குத்தான் ஓய்வு வேண்டாம், தூக்கம் வேண்டாம் என்றால் எல்லோரும் அவர் மாதிரி இருந்து விட முடியுமா? நம்பினால் நம்பு. இரண்டு ராத்திரி ஆகிறது, நான் கண்ணை மூடி."

அவள் பேசிக்கொண்டே நோயாளிகளுக்கு உணவு பரிமாறுவதற்கான தட்டுக்களை அலமாரியினின்று எடுத்து வைத்தாள். "நர்ஸ் என்று பேர்தான். இந்தப் பட்டிக்காட்டு ஆஸ்பத்திரியில் அத்தனை வேலையையும் நாம்இரண்டு பேருமே செய்ய வேண்டியிருக்கிறது. இன்னொருத்தியாய் இருந்தால்ஒரு ஷிப்டு பார்க்கிறதற்குள்ளே இரண்டு தரம் மயக்கம் போட்டு விழுந்துவிட மாட்டாளா?"

"அது சரி..." என்று இழுத்தாள் மற்றவள், ரொட்டியை நறுக்கிக்கொண்டே. "இரவு மண்டையை உடைத்துக்கொண்டு நின்றதே அந்தத் தனியறைக் கேஸ். அது என்னவாயிற்று? ஞாபக சக்தி வந்துவிட்டதா?"

"அந்த வேடிக்கையை ஏன் கேட்கிறாய்? தர்மா மீட்டரை வாயண்டை கொண்டு போனால் உம்மென்று உட்கார்ந்திருக்கிறது. வாயைத் திற என்று ஒரு தரம் சொல்லவேண்டும். நாக்கைத் தூக்கு என்று விளக்க வேண்டும். அப்போதாவது அதற்குப் புரிகிறதா? நம் வாயைத் திறந்து நாக்கு நுனியை



மடக்கிக் காட்டினால்தான் அதற்குப் புரிகிறது. இப்படியே ஒவ்வொன்றுக்கும். அபபப்பா! ஒவ்வொரு நிமிஷமும் உயிர் போய உயிர் வரவேண்டி இருக்கிறது.''

''ஆனால் டெம்பரேச்சரே இல்லை போலிருக்கிறதே! வார்டு-பாய் சொன்னான். அவன் வென்னீர் எடுத்துககொண்டு போன போது, அது கட்டிலை விட்டு இறங்கித் தன் பாட்டுககு உலவிக் கொண்டிருநததாமே!''

மற்றவள் பதறினாள். ''அப்படியா? அவன என்னண்டை சொல்லவே இல்லையே? தெருவைப் பார்த்த கதவொன்று அந்த அறையில் இருககிறது. கதவைத திறநது கொண்டு அது வாககிங கிளமபி விடபபோகிறது!'' என்று அவள சொல்லி வாய மூடியதும் அந்தக் காட்சியை மனத்துக்குள் கற்பனைசெயது பார்தத நர்சுகள் இருவருமே கலகலவென்று நகைததுக் கொணடார்கள்.

ஆனால் பகல் உணவையும் பால் டம்ளரையும எடுத்துக்கொணடு மூதலாவது நர்ஸ் தாமோதரத்தின் அறையை அடைநதபோது அவள் பயந்ததுபோல் எநத அதிசசயும் அவளை எதிர் பார்த்திருக்கவில்லை. மூகட்டுவளையைப் பாரத்தபடி தாமோதரம் அமைதியாகப படுத்திருந்தார்.

தாவி ஓடினான் கோவிநதன். அவன மனததில் ஓரே குழப்பம். ஆககலடசியில் கனக



சபை தனக்குத் துரோகம் செய்யத் துணிந்துவிட்டானே? மூன்றும் பேர் அறியாதபடி தனக்கு அடைக்கலம் தந்து, மறைத்து வைக்க வேண்டும் என்று அவன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதற்குக் கனகசபை சம்மதித்து 'சரி' என்றானே, அந்த உறுதி மொழியைக் காற்றில் பறக்க விட்டு விட்டானே? தான் அங்கு இருப்பது ஒரு பிராணிக்குத் தெரியக்கூடாது என்று வேண்டிக்கொண்டது போக முப்பது பேர் முன்னிலையில் பகிரங்கமாகக் கொண்டுவந்து நிறுத்திவிட்டானே! கோவிந்தனைக் கிலி பிடித்தது. யாராவது ஒருவன் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று வத்தி வைத்தானானால் அரை மணி நேரத்துக்குள் தன் ஜாகை லாக்கப்பிற்கு மாறிவிடமாட்டாதா?

கனகசபையின் புத்தி ஏன் இப்படி மாறவேண்டுமென்று கோவிந்தனுக்குக் கொஞ்சம்கூடப் புரியவில்லை. மற்றவர்கள்தான் வேலையாட்கள், மிராசுதாரின் உப்பைத்தின்று வயிறு வளர்ப்பவர்கள். அவனுக்குக் கட்டுப்பட்டவர்கள். தான் அங்கிருப்பது அவர்களுக்குத் தெரிந்தபோதிலும் அதனால் ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது என்றே வைத்துக் கொள்ளலாம். பாப்பா! அவளை வைத்துக்கொண்டா கனகசபை தனக்கு ஆள் அனுப்ப வேண்டும்? அவள் முகத்தில் விழிப்பதற்குத் தனக்குத் தகுதி ஏது, துணிச்சல் ஏது?

யாரோ துரத்துவது போலிருந்தது கோவிந்தனை. திரும்பினான்; பிடிபட்டுப் போனான்.

"எங்கே சாமி ஓடறீங்க? வாங்க."

அந்த இரும்புப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்து தோல்வியுற்ற கோவிந்தன், "என்னை விட்டுவிடு. நான் எங்காவது போய்விடுகிறேன், ப்ளீஸ்...ப்ளீஸ்," என்று மன்றாடுவதற்குள் இன்னும் நாலைந்து பேர் வந்துவிட்டார்கள்.

"சரிதான் வாய்யா."

"இப்போ வரப் போறியா? இல்லேன்னா..."

கோவிந்தனின் முரண்டுக்கு ஒரு முடிவு ஏற்படாமல் போகவே, இரண்டு பேர் அவனைச் செந்தூக்காகத் தூக்கி வந்து கனகசபையின் முன் நிறுத்தினார்,

முகம் சுளித்து நிற்கும் பாப்பாவை நிமிர்ந்து பார்க்கவே கோவிந்தனுக்கு இயலவில்லை.

தடால் என்று நெடுஞ்சாண் கிடையாக அவள் முன் விழுந்தான். அவன் கண்களினின்று தாரை தாரையாகப் பெருகிய நீர் தரையை நனைத்தது.

"பாப்பா! எனக்கு மன்னிப்பு உண்டா? உன் அப்பாவைக் கொலை செய்த இந்த அயோக்கியனுக்கு மன்னிப்பு உண்டா?"

பாப்பாவின் நெற்றியில் மேலும் இரண்டு சுருக்கங்கள் விழுந்தன. எதிர்பாராதவிதமாக, மூளையைக் குழப்பும் வண்ணம் சென்று கொண்டிருக்கும் கோவிந்தனின் போக்கைப் புரிந்து கொள்ள முடியாமல் கனகசபையின் பக்கம் திரும்பினாள்.

அவள் முகபாவங்களை அதுவரை கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த கனகசபை, சட்டென்று தன் கண்களை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். ஆனால் உதடுகளில் மட்டும் புன்னகையின் சாயல் தேங்கியிருந்தது.

புதிய மதுப் புட்டி ஒன்றை வரவழைத்தவன், கிட்டத்தட்ட எழுபது கண்கள்—அடிமைத் தனத்திலிருந்து ஆவேசம் வரை பல திறப்பட்ட உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் கண்கள்—தன் மீது குவிந்திருப்பதைச் சற்றும் பொருட்படுத்தாமல் புட்டியைத் திறந்து கிண்ணத்திலே ஊற்றும் வேலையில் முழுமனத்துடன் ஈடுபட்டவன் போல் காணப்பட்டான்.

கோவிந்தன் அப்படியே கிடந்தான்; எழுந்திருக்கவில்லை. ஆனால் விம்மல்களால் உடல் குலுங்குவது மட்டும் தெரிந்தது.

"நீங்களா! என் அப்பாவைக் கொலை செய்தீர்களா?" என்ற கேள்வி அவளை அறியாமலே அவள் சிந்தனையினின்று ஓசையாக உருவெடுத்தது.

"ஆம்." என்றான் கோவிந்தன். "அந்தப் பாவி நான்தான், நான்தான் நான்தான்." அவன் தலையைத் தரையில் மோதிக் கொண்ட விதம் பரிதாபமாய் இருந்தது. "உண்மையை மறைப்பதற்காக ஓடினேன், ஒளிந்தேன். பொந்திலும் வளையிலும் புகுந்து கொள்ள முயற்சி செய்தேன். ஆனால் மனச்சாட்சியினின்று தப்ப முடியவில்லையே! தூக்குக் கயிற்றைக் காட்டிலும், ஊராரின் பழிச் சொல்லைக் காட்டிலும் உன்னை நினைக்கும்போதுதான் எனக்கு அவமானமும் நடுக்கமும் அளவு



''என்னப்பா! புதுசா 'வாயில்' 'கிரேப்' ஏதாவது நல்ல ரகம் வந்திருந்தால் எடுத்துப் போடேன் பார்க்கலாம்!''

''சரிதாங்க. எல்லாம் எடுத்துப் போடறேன். நீங்க நெசமாகவே ஜவுளி வாங்கத்தான் வந்திருக்கீங்களா, அல்லது மழைக்கு ஓதுங்கலாம்னு இப்படி உள்ளே நுழைந்திருக்கீங்களா? சொன்னால் தேவலை!''

மீறி ஏற்பட்டன. 'என் அப்பாவைக் கொன்றுவிட்டீர்களே, இது நியாயமா?' என்று நீ கேட்டால் 'என்ன பதில் சொல்வதென்று நினைத்து நினைத்துப் புழுங்கிப் புழுங்கித் தற்கொலையின் எல்லைக்கே வந்துவிட்டேன். இப்போது நான் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் உனக்கு முன்னால் இழுத்து வரப்பட்டிருக்கிறேன். பாப்பா! நீ வேறு யார் மீதும் சந்தேகப்படவேண்டிய அவசியமில்லை. அப்பாவி யாரையும் கூண்டிலேற்றக் குடையவேண்டியதில்லை!...''

அவன் தலையைத் தூக்கினான். இதுவரை மசமசவென்று கேட்ட குரல் இப்போது தெளிவாகஒலித்தது. ''பாப்பா! மறைத்து மறைத்து வைக்கத்தான் அந்த உண்மை என் உள்ளத்தைப் புண்ணாக்கி, துணிச்சலுக்குத் தடை போட்டிருந்தது. குட்டு உடைந்துவிட்டது என்றதும் என்னிடத்தில் புதுத் தைரியம் ஊறுவதைக் காண்கிறேன். பாப்பா! கனகசபை! இங்கு இருக்கிறவர்கள் எல்லோருமே கேளுங்கள். தாமோதரத்தைக் கொலை செய்தவன் நான்தான். கழி கொண்டு அவர் மண்டையில் ஓங்கி அடித்தது இந்த கைதான். நான் கொலையாளி, நான் குற்றவாளி. நான் கொலையாளி!'

அவன் சொற்களைப் பொழியப் பாப்பாவின் முகத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டுக் கொண்டே வந்தது. குழப்பத்துக்கு ஒரு தீர்வு கண்டுவிட்ட தெளிவு நெற்றிச் சுருக்கங்களை நீக்க, கோவிந்தனை நோக்கிக் குனிந்து, அவன் தோளைத் தொட்டாள். 'அப்பா இறந்துவிட்டதாக யார் சொன்னது?''

தீயில் வெந்து போன ஓர் இடத்தை அவள் கிள்ளிவிட்டாற்போல் அவன் பின் வாங்கினான். முகத்தில் தான் எவ்வளவு வேதனை!

''பாப்பா, உன்னால் தொடப்படுவதற்கு எனக்கு அருகதை இல்லை. உன் விரல்களை அழுக்குப் பண்ணிக் கொள்ளாதே!''

''அழுக்குப் பட்டால் என்ன! கழுவினால் போய்விடும்,'' என்றாள் பாப்பா.

''நான் கேட்டதற்குப் பதில் சொல்லுங்கள், அப்பா இறந்து விட்டார் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?''

கோவிந்தன் ஒரு வரட்டுச் சிரிப்புச் சிரித்தான். ''இதென்ன அசட்டுக் கேள்வி?''

''உயிரோடு கல்லுக் குண்டாட்டம் இருப்பவர்களைச் செத்தவர்கள் என்று சொல்லும் அசட்டு மனிதரிடம் அசட்டுத்தனமாகத்தானே கேள்வி கேட்க வேண்டும்!''

''நீ என்ன சொல்கிறாய்?'' என்று தடுமாறினான் கோவிந்தன்.

''டாக்டர் குருநாதனுடைய ஆஸ்பத்திரியில் ஜம்மென்று காலை நீட்டிப் படுத்துக் கொண்டு பாலும் ரொட்டியும் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறாரே தாமோதரம், அவரைக் கேட்டுப் பாருங்கள், தெரியும்.''

இருட்டறையில் அடைபட்டவனுடைய கண்கள் ஒளியைக் காணக் கூசுவதுபோல் கோவிந்தனுடைய அறிவு உண்மையை எதிர்நோக்க முடியாமல் திண

"அப்படியானால்?"

அவள் குரலை உற்சாகம் உயர்த்திற்று. "அப்படியானால் தாமோதரம் சாகவில்லை என்று அர்த்தம். அவர் அடிபட்டது உண்மை, ஆனால் பிழைத்துக் கொண்டு விட்டார் என்று அர்த்தம். கொலையே நடக்காதபொழுது நீங்கள் எப்படிக் கொலையாளியாக இருக்க முடியும்?"

மார்பு படபடக்க, இதயத்தில் குன்றுபோல் வளர்ந்திருந்த துயரத்தையும் கவலையையும் பாப்பாவின் சொற்சரம் தவிடு பொடியாக்க, துள்ளியெழப்போன கோவிந்தன் திரும்பவும் சரிந்து விழுந்தான்.

இரண்டு கைகளாலும் தலையைப் பிய்த்துக் கொண்டு, "பாப்பா, என் மீதிருக்கும் அன்பினால் நீ இப்படிப் பேசுகிறாய். தந்தை மறைந்த துயரத்தையும் பொருட்படுத்தாமல், அவரைக் கொலை செய்தவன் நான் என்பதையும் மறந்து, உற்சாக மூட்டுவதற்காக ஏதேதோ சொல்லுகிறாய். இந்தப் போலி உற்சாகத்தினால் எனக்கு என்ன பயன்? நடக்கிறபடி நடக்கட்டும்."

பாப்பாவுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

தோல்வியின் அடித்தளத்தில் விழுந்து கிடக்கும் கோவிந்தனை மோவாயின் கீழ் கை கொடுத்து முகத்தை நிமிர்த்தினாள். "இதோ பாருங்கள், அப்பா செத்துப்போகவில்லை. அவர் அடிபட்ட அதிர்ச்சியில் மயக்கம் போட்டு விழுந்திருக்கிறார். பேச்சு மூச்சில்லாமல் அவர் கிடந்த கோலத்தைப் பார்த்து, உயிர் போய்விட்டதென்று நீங்கள் முடிவு கட்டியிருக்கிறீர்கள். அவர் சாகவில்லை. நீங்கள் கொலையாளி அல்ல. நான் பொய் சொல்வேனா? என்னை நம்புங்கள்."

அவள் குரலில் ஒலித்த உண்மையின் தொனி கோவிந்தனை அசைக்கத்தான் செய்தது.

மகிழ்ச்சியுற பாப்பா, ஆவலுடன் கேட்டாள். "அப்பா இறந்துவிட்டதாகச் சொல்கிறீர்களே! அவர் உடலை மயானத்துக்கு எடுத்துக்கொண்டு போனார்களா? அதைப் பார்த்தீர்களா?"

நமுட்டுச் சிரிப்பு சிரித்தபடி குறுக்கிட்டான் கனகசபை.

"அதெப்படி முடியும்? 'போஸ்ட் மார்டம்' எல்லாம் ஆக வேண்டாம்? அரசாங்க டாக்டர்கள் பிணத்தை அறுத்துத் தைத்து நாளைக்குக்கொடுத்தாலே பெரிது!"

அவள் அவனைப் பொருட்படுத்தவில்லை. "கொலை என்றால் பத்திரிகையிலாவது செய்தி வந்திருக்காதா?" என்றாள் கோவிந்தனிடம்.

"சாயங்காலம் வரும்!" என்று மறுத்தான் கனகசபை. "நேற்று ராத்திரிதானே கொலை நடந்தது!"

கனகசபை மீது பாய்ந்தாள் பாப்பா. "இதுவும் உன் வேலைதானா? பொய்யையும் புளுகையும் சொல்லி அவரைப் பயமுறுத்தி, முதுகெலும்பை முறித்து, பெட்டிப் பாம்பாக ஆக்கி வைத்திருக்கிறாயா? குடிகார நாய். குள்ளநரித் தந்திரமாக பண்ணுகிறாய்? உன்னை..."

"பாப்பா!" என்று கேட்டுக்கொண்டான் கோவிந்தன். "கனகசபையை ஒன்றும் திட்டாதே. அவன்தான் என்னைக் காப்பாற்றினான். தயவு செய்து அவனை வையாதே!"

"அட சே!" என்று கனன்றெழுந்தாள் பாப்பா, ஆத்திரமெல்லாம் கோவிந்தன் பக்கம் திரும்ப. "உங்களுக்கு மானம் ஏது? ரோஷம் ஏது? வெட்கம் ஏது? நீங்கள் கட்டிக் கொள்ளப் போவதாக நினைத்திருக்கும் பெண்ணைச் சந்தியிலே நிறுத்திச் சேலையை உரிகிறேன் என்று ஒரு கொரில்லா நின்று கொண்டிருக்கிறானே, கண் தெரியவில்லை? 'ஏண்டா!' என்று அவனை ஒரு வார்த்தை கேட்டீர்களா? நானென்று இல்லை; யாராக இருந்தாலும் சரி. 'வயதுப் பெண் கையை இரண்டு பேர் பிடித்துக் கொண்டு கலாட்டா பண்ணுகிறீர்களே, என்ன அக்கிரமம்!' என்று ஒரு நிமிஷம் தயங்கினீர்களா? ஆண்பிள்ளை என்று சொல்லிக்கொள்ள உங்களுக்கு அவமானமாக இல்லை?"

அவள் முடிக்கவில்லை.

"ஐயையோ! எஜமான்! நான் என்ன செய்வேன்! பெட்டகமெல்லாம் திறந்து கிடக்கிறது! ரொக்கம், நகை ஒன்றையும் காணோமே! ஐயையோ!" என்று வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு மாடியிலிருந்து ஓடி வந்தான் வேலைக்காரன்.

"என்ன!" திடுக்கிட்டு மாடியை நோக்கி விரைந்தான் கனகசபை.

படியில் கால் வைத்தவன், திரும்பி, "ஜாக்கிரதை! தப்பிவிடப் போகிறார்கள்!" என்று எச்சரித்துவிட்டு மறைந்தான்.

## நாற்பத்தொன்று

தடாலென்று ஓர் ஓசை உள்ளேயிருந்து கிளம்பிற்று.

"என்னண்ணே அது!" பொட்டு வடிவத்தில் புருவங்களுக்கிடையே பச்சை குத்திக்கொண்டிருந்த ஒரு இளையவன், கதவருகே நின்றிருந்த சாய வேட்டிக்காரனின் காதிற்குள் வினவினான்.

"உஸ்ஸ்!" என்று அடக்கினான், வயதில் மூத்தவனான சாயவேட்டிக்காரன். மாடியில், கனகசபையின் கணக்கு அறைக்கு வெளியே. இருவரும் நின்று கொண்டிருந்தார்கள்.

"எசமான் என்னண்ணே பண்ணிட்டிருக்கார்?"

சாய வேட்டிக்காரன் எடுத்துச் சொன்னான். "பொம்மை மாதிரி நிலை குத்தி நிக்கிறார். வெறுச்சு வெறிச்சுப் பாக்கிறார். அறை பூரா ஒரே காயிதம், கணக்குப் பொஸ்தகம்! முதல்லே, பெட்டகத்துக்கிட்டே போறார். அது 'ஆவ்'னு திறந்து கிடக்கு. உள்ளுக்குள்ளே ஒரு ரகசியப் பெட்டி இருக்கும் போலிருக்கு. மூடியைத் தூக்குறார்."

அவன் நிறுத்திவிட்டான்.

"அப்புறம்!" என்று ஊக்கினான் பொட்டுக்காரன். அவன் நின்றிருந்த இடத்திலிருந்து ஒன்றுமே தெரியவில்லை. "அதிலே ஏதாவது இருக்கா?"

"ஒரு மண்ணும் இல்லை. இஸ்டீல் அலமாரிக்கிட்டே ஓடுறார். அதுவும் துடைச்சு வச்சிருக்கு. எசமான் முகத்தைப் பார்க்கச் சகிக்கலே. பாவி எங்கிருந்து வந்தானோ, அத்தனையும் சுருட்டிட்டுப் போயிட்டான். அடடே, எசமான் அப்படியே பெஞ்சியில் சாஞ்சுட்டாரே!"

"த்சொ, த்சொ," என்று இரக்கப்பட்டான் இளையவன். பிறகு, கற்பனை விர்ரென்று எழும்பி வானத்தைமுட்ட, "ஏண்ணே, அஞ்சாயிரம் ஆறாயிரம் போயிருக்குமோ?" என்று தன் ஊகத்தை வெளியிட்டான்.

மற்றவனுக்கு, அவனை அடிப்பதா அழுது காட்டுவதா என்று தெரியவில்லை. "அட தரித்திரம் பிடிச்ச பய மகனே! நகை, நட்டு, ரொக்கம் எல்லாமாச் சேர்ந்து லெச்சக் கணக்கிலே போயிருக்குமடா!"

"இருக்கும், இருக்கும்," என்று தலையாட்டினான் பொட்டுக்காரன். "அண்ணே, மடியிலே புகையிலைக் காம்பா வச்சிருக்கே?"




"அந்த இழவைச் சொல்லு! விசம் தின்னடினமாதிரி அங்கே எசமானுக்கு உடம்பெல்லாம் நீலம் பூத்துப் போச்சு, துரைக்கு இங்கே புகையிலை கேக்குது. மூகரையைப் பார், மூகரையை!"

"அதுக்கில்லேண்ணே," என்று தலையைச் சொறிந்த அவன் தோழன், "இனி என்ன நடக்குமோண்ணு நினைச்சா வயித்தை ஒரே கலக்காக் கலக்குதண்ணே," என்றான்.

இதற்குள் கீழேயிருந்த ஆட்களில் சிலர், மாடிக்கு வரத் துணிச்சலில்லாதவர்களாய்த் தோட்டத்தை அடைந்து, அங்கிருந்தவாறே அபினயம் பிடித்துச் சாய வேட்டிக்காரனிடம், 'என்ன நடக்கிறது?' என்று விசாரித்தார்கள்.

கைப்பிடிச் சுவரை நெருங்கிய சாய வேட்டிக்காரன், முன்னெச்சரிக்கையுடன் அறைப்பக்கம் ஒருமுறை பார்த்துவிட்டுப் பிறகு கீழே இருந்தவர்களை நோக்கி உதட்டைப் பிதுக்கி, விரல்களை அகலவிரித்துக் கைகளையும் தலையையும் இப்படியும் அப்படியுமாக ஆட்டிவிட்டுத் தன் பழைய இடத்துக்குத் திரும்பினான்.

"ஏன்னே!" என்று புதுப் பிரச்னையைக் கிளப்பினான் பொட்டுக்காரன். "ஒன்னு கேக்கிறேன். 'பட்டப் பகல்லே இந்தக் கோட்டைக்குள்ளே எந்தத் திருடண்டா நுழைய முடியும்? உங்களுக்குள்ளே ஒருத்தன்தான் இப்படிச் செய்திருக்கணும்!' அப்படீன்னு எசமான் நம்ம பேரிலேயே திரும்பிடுறதா வச்சுக்குவோம். அப்போ என்னண்ணே செய்றது?"

மற்றவன் சற்று விலகி நின்று தன்னை மேலும் கீழும் பார்த்த விதம் பொட்டுக்காரனை வெலவெலக்கச் செய்து விட்டது. ஆனால், நெற்றியில் குப்பென்று அரும்பி நின்ற வியர்வைத் துளிகளைத் துடைத்தபடி, "என்னண்ணே அப்படிப் பார்க்கிறே! உனக்கு என்மேலேயே சந்தேகம் வந்திட்டுதா! சாமி அப்பராணையா..." என்று ஆரம்பித்தவன் முடிப்பதற்குள், "டேய்!" என்ற உறுமல் குறுக்கிட்டது.

உள்ளே எட்டிப் பார்த்த சாயவேட்டிக்காரன், "எசமான் எழுந்திருச்சிட்டார். கையிலே ஒரு சீட்டை வச்சுப் படிச்சிட்டிருக்கார்," என்று அறிவித்தான்.

ஏதோ கட்டளை தெறித்தது, கனகசபையிடமிருந்து. உள்ளே அவனுடனிருந்த ஆட்கள் இருவர், துளசியின் அறையை நோக்கிப் பறந்து சென்று பத்தே விநாடிகளில் திரும்பி வந்து எஜமானிடம் தகவல் தெரிவித்தார்கள்.

"என்னண்ணே சத்தத்தையே காணோம்!" என்று பக்கத்திலிருந்தவனுடைய காதைக் கடித்தான் பொட்டுக்காரன்.

"போன் பண்ணுறார் போலிருக்கு."

"எங்கே?"

கனகசபையின் குரலே பதில் தந்தது: "ஹலோ! போலீஸ் ஸ்டேஷனா அது? சப்-இன்ஸ்பெக்டரா பேசுவது!"

ஊமையன் பின்தொடர ஏதோ ஞாபகமாகக் கால்களை எட்டி நடைபோட்ட தாசில் ஐயாவின் கண்களில் அந்த மாட்டு வண்டி தொலை தூரத்தில் வரும்பொழுதே தென்பட்டு விட்டது. அந்த 'ஜல் ஜல்' ஓசையையும் அவர் செவிகள் வாங்கிக்கொண்டுதான் இருந்தன. ஆனால் வண்டி வெகு அண்மையில் வரும்வரை அவர் அதைப் பார்த்தும் பார்க்காதவராய், கேட்டும் கேட்காதவராய் நடந்து கொண்டிருந்தார்.



சட்டென்று நிமிர்ந்து பார்த்ததும் அவரைத் தூக்கி வாரிப் போட்டது.

"எங்கே கிளம்பி விட்டீர்கள், நீங்களாக? இன்றைக்குப் பள்ளிக்கூடம் இல்லை!"

மூக்கணாங் கயிற்றைப் பிடித்திழுத்து நிறுத்தினான், தார்க்குச்சியும் கையுமாக உட்கார்ந்திருந்த சம்பந்தம்.

அவனுக்குப் பின்னால் உட்கார்ந்தபடி தலையை நீட்டிக் கொண்டிருந்த கோவி, "நாங்கள் எல்லோரும் ஆஸ்பத்திரிக்குப் போறோம். அப்பாவைப் பார்க்கப் போறோம்," என்று அறிவித்தான்.

"அங்கெல்லாம் நீங்கள் போகக் கூடாது. சம்பந்தம், வண்டியைத் திருப்பு. பள்ளிக்கூடத்துக்குத்தான் போகவில்லை என்றால் பங்களாவிலாவது பேசாமல் விளையாடிக் கொண்டிருப்பதற்கென்ன? திருப்பு வண்டியை, சொல்கிறேன்."

நுகத்தடியைப் பிடித்தபடி அவர் அதட்டியபோது குரலில் அதிகாரம் தொனித்தது.

சம்பந்தமும் கோவியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அதற்குள் வண்டிக்குள்ளிருந்து ஒரு குழந்தையின் விசும்பல் ஓசை எழுந்தது. "நான் அப்பவே சொன்னேனே, கேட்டிங்களா?" என்றது சச்சுவின் தொண்டை, ஆத்திரமும் அழுகையும் பொத்துக்கொண்டு வர.

"சச்சுதான் சமர்த்து. தனியே கிளம்பக் கூடாதென்று அவள் தடுத்திருக்கிறாள். ஏன் சம்பந்தம், நீதான் வயதில் பெரியவன் ஆயிற்றே, கோவி அடம் பிடித்தால் சமாதானம் செய்யாமல் இப்படியா பொறுப்புத் தெரியாமல் புறப்படுவது!" என்றார் தாசில் ஐயா.

"அவள் ஒன்றும் அப்படிச் சொல்லவில்லை."

"பின்னே?"

கோவி சொன்னான்: "அப்பா ஆஸ்பத்திரியிலே செத்துப் போயிட்டார். அதனாலேதான் நாம்ப போய்ப் பார்க்கக் கூடாதுண்ணு தடுக்கிறாங்க அப்படிண்ணு சொன்னாள்."

தாசில் ஐயா, "யார் சொன்னது அவளுக்கு?" என்றார் சூடாக. "அப்பா சௌக்கியமாக இருக்கிறார். சந்தோஷமாக இருக்கிறார். அவருக்கு ஒரு குறைவுமில்லை. நீங்கள் பேசாமல் திரும்பிப் போங்கள்."

குழந்தைகள் கற்சிலைகளாய் உட்கார்ந்திருந்தார்கள். மாடுகள் மட்டும் வாலைச் சுழற்றி ஈக்களை ஓட்டின.

தனது சொற்களில் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை என்று உணர்ந்ததும் தாசில் ஐயா மனத்தை மாற்றிக் கொண்டார்.

"ஆஸ்பத்திரிக்கு வழி தெரியுமா?" என்று வினவினார் சம்பந்தத்திடம்.

இதற்குள் ஊமையன் குறுக்கிட்டு, தான் அவர்களை அழைத்துச் செல்வதாக முன் வந்ததும், "பத்திரமாகப் போய்விட்டு வாருங்கள்," என்று இரண்டுக்கு மூன்றுதரமாக எச்சரித்து விட்டு அவர் விலகிக் கொண்டார்.

புதிய சாரதியின் அதிகாரத்தின் கீழ் வந்த காளைகள் உற்சாகத்துடன் பறக்க, தாசில் ஐயா ஓட்டு பங்களாவுக்கு விரைந்தார்.

"கிணிங், கிணிங்—"

ஓட்டு பங்களாவின் திண்ணையில் உட்கார்ந்தபடி தமது குல்லாயைக் கழற்றிப் பரிசோதித்துக் கொண்டிருந்த தாசில் ஐயா, மணியோசையைக் கேட்டதும் கவனத்தை வாசலுக்குத் திருப்பினார்.

தந்தி!

சிவப்பு சைக்கிள்காரர் நீட்டிய காகிதத்தில் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கும் பொழுதே தாசில் ஐயாவின் மனம் அலைபாய்ந்தது.

'ரத்தினம், கூத்தனூர்' என்று பென்சிலில் எழுதப்பட்டிருந்த உறையைக் கையில் வைத்தபடி அறைக்குள் எட்டிப் பார்த்தார்.

அவன் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தான்.

தாசில் ஐயா திண்ணைக்கு வந்து அங்குமிங்கும் உலவினார். வேலைக்காரி வேடத்தில் பாப்பா மிராசுதாரின் அரண்மனைக்குச் சென்றதாக வண்டிக்காரனுடைய தாய் சொன்ன தகவலை உடனடியாக ரத்தினத்திடம் தெரிவிக்கும் பொருட்டு ஓடிவந்திருந்தார் அவர். மேற்கொண்டு, இந்தத் தந்தி வேறே.

அவர் மறுபடியும் ஜன்னலண்டை சென்றார்.

"சார்!"

ரத்தினத்தின் தூக்கம் கலைவதாகத் தெரியவில்லை.

"இன்னுமா இங்கே குந்திக் கொண்டு ஒப்பாரி வைத்துக் கொண்டிருக்கிறாய்! போ பின்னே, போய் வேலையைப் பார்."

போலீஸ் ஸ்டேஷன் வாசலிலேயே தனது அதிகாரம் செல்லுபடியாகாமல் இருப்பது கண்டு, சட்டத்தின் பிரதிநிதிக்கு மீசை துடித்தது.

தொடர்ந்து, "ஆமா, நீங்கள் எல்லோரும் எதற்குக் கூட்டம் போட்டுக் கொண்டு நிற்கிறீர்கள்?" என்று, சூழ்ந்திருந்த கும்பலின்மீது எரிந்து விழுந்தான். "போங்கள், போங்கள்."

"ஏய் 403!"

உள்ளேயிருந்த மேலதிகாரியின் அழைப்பு 403ஐச் சுண்டி இழுத்தது.

ஓடி அவர் முன் 'ஸல்யூட்' அடித்து நின்றது அது.

"என்ன அங்கே கலாட்டா?"

கறுத்த முகமும் நரைத்த மீசையுமாகக் காட்சியளித்த ஸப்—இன்ஸ்பெக்டர், கீழ் உத்தியோகத்திலிருந்து படிப்படியாக முன்னேறி மேலுக்கு வந்தவராதலால், அவரிடம் மிடுக்கு சற்று அதிகமாகவே உண்டு. விஷயம் சிறியதாய் இருக்கும் அளவுக்கு அவரது தர்பார் தடபுடலாக நடக்கும்.

புதிதாக நியமிக்கப் பட்டிருந்த 403-க்கு அவரைக் கண்டாலே சிம்ம சொப்பனம்.

"ஒன்றுமில்லை சார்...ஆடு சார்... குட்டி சார்..." என்று தட்டித் தடுமாறிற்று 403.

"ஏனய்யா! ஆடு குட்டி போடுவதை வேடிக்கை பார்ப்பதுதான் உன் டியூட்டியா?"

403 நடுங்கிவிட்டது. "இல்லே சார், ஒரு குட்டியை வைத்துக்கொண்டு ஆடு அழுது கொண்டிருக்கிறது சார்!"

"ஏனய்யா! சொல்கிற செய்தியைத் தெளிவாக, புரியும்படியாகச் சொல்வதற்கு நீ எப்போதுதான் கற்றுக் கொள்ளப் போகிறாயோ? ஆடாவது, குட்டியை வைத்துக்கொண்டு அழுவதாவது!"

பூண்போட்ட கைப்பிரம்பை எடுத்துக்கொண்டு அவர் வெளியே வந்து பார்த்தபோதுதான், 403-இன் நாக்குக் குழறிய விதம் புரிந்தது.

தலையில் வேப்பெண்ணெய் வழிய, கிழிந்த சிற்றாடை ஒன்றை உடுத்தியிருந்த ஒரு பத்து வயதுச் சிறுமி, அசையாமல் கிடந்த ஒரு வெள்ளாட்டின் உடலைப் போட்டுக்கொண்டு கண்களைக் கசக்கியபடி உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

ஸப்-இன்ஸ்பெக்டரைக் கண்டதும் அவள் தன் அழுகையை நிறுத்திவிட்டு, மிரட்சியுடன் நோக்கினாள்.

"ஏய்! என்ன இது?" என்று அதட்டினார் அவர்.

கையில் பெரிய வாழைப் பூவுடன் நின்று கொண்டிருந்த ஒரு பெரியவர் முன் வந்து, "பாவம், கார்க்காரன் யாரோ நசுக்கிட்டுப் போயிட்டானாம். நல்ல ஆடுங்க-முப்பது ரூபா பெறும்," என்று எடுத்துச் சொன்னார்.

தனது பாகம் நினைவுக்கு வரவும், இரட்டிப்பு சக்தியுடன் அலறத் தொடங்கினாள் சிறுமி.

"ஏய்! மந்தையைப் பார்க்காமல் மரத்தடியிலே படுத்துறங்கிவிட்டு ஊளையிடுகிறாயா!" என்று அவர் மிரட்டியதும், "இல்லீங்க, நான் பார்த்திட்டுத்தானே இருந்தேன்! ஆடெல்லாம் ஓரமாத்தான் போயிட்டிருந்தது. கார்க்காரர் கண்ணை மூடிட்டு வேகமா வந்து ஏத்திட்டாருங்க. இதிலே மூக்குக்கண்ணாடி வேறே! பின்னாடி ஒரு பொண்ணு கூடப் படுத்திருந்த மாதிரி இருந்தது. பச்சைக் காருங்க," என்று உறுதி சொன்னார், மற்றொருவர்.

"வண்டி அவ்வளவு வேகமாக வந்தபோது, உம்மாலே இதையெல்லாம் கவனிக்க முடிந்ததாக்கும்?" என்று குறுக்கு விசாரணை செய்தார் அதிகாரி.

"இல்லீங்க. பிரேக் போட்டு வண்டியை நிறுத்தினார். ஆனால் அதுக்குள்ளே ஆட்டை அடிச்சிடுச்சு. மனுஷன் இறங்கி, என்ன ஏதுன்னு கேட்கமாட்டாரோ? தூசியைக் கிளப்பிட்டு விர்ருன்னு போயிட்டார்."

"சார்!" என்று இன்ஸ்பெக்டரை அழைத்தார் ஒரு கான்ஸ்டபிள். "போன் வந்திருக்கிறது. கூத்தனூர் மிராசுதார் கூப்பிடுகிறார்."

இன்ஸ்பெக்டர் விரைந்து சென்று ரிஸீவரைக் கையிலெடுத்தார். செய்தியைக் கேட்டதும் அவர் முகம் மாறிற்று.

"இதோ, உடனே புறப்பட்டு வருகிறேன்...வேண்டாம் என்கிறீர்களா? ...சரி...சரி...கொஞ்சம் இருங்கள், கார் நம்பரைக் குறித்துக்கொள்கிறேன்...ஆமாம்...அதிகம் போனால்

ஐம்பது மைல் போயிருக்கலாம். போனிலேயே செய்தி அனுப்பி விடுகிறேன்...எதற்குக் கவலை? எப்படியும் மடக்கி விடலாம்..."

"விட்டுவிடு அவனை. என்னதான் செய்கிறான் பார்ப்போம்."

கனகசபையின் கட்டளை நிறைவேற்றப்படவில்லை. அவனுடைய ஆட்கள் கோவிந்தனை இன்னும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள். "வெறிநாய் போல வாயில் நுரை கக்குகிறான். சாக்கிரதை!" என்று ஒருவரை ஒருவர் எச்சரிக்கையும் செய்து கொண்டார்கள்.

கனகசபையும் அந்த மாறுதலைக் கவனிக்காமலில்லை.

கனகசபை மாடிக்குச் சென்றிருந்த பொழுது கோவிந்தனிடம் பாப்பா ஏதோ சொல்லியிருக்க வேண்டும்; நிலைமையை விளக்கியிருப்பாளோ?

இல்லாவிடில், தோல்வியின் சின்னமாய், தாழ்வு மனப்பான்மைக்கு ஓர் உதாரணமாய், கோழைத்தனத்தின் இலக்கணமாய்க் கூனிக் குறுகி வளைந்து குழைந்து, பிறரை ஏறெடுத்துப் பார்க்கவும் துணிச்சலில்லாமல் தரையில் நெளிந்த ஒரு பூச்சி, கனல் உமிழ்ந்து கர்ஜிக்கும் சிங்கமாக மாறியிருக்க முடியுமா?

"விடுங்கள் சொல்கிறேன்," என்று திமிறிக் கொண்டிருந்தான் கோவிந்தன், தன் கைகளையும் தோள்களையும் கால்களையும் இரும்புச் சங்கிலிகள்போல் பிணைத்துப் இழுத்த ஆட்களிடம். ஆனால் சொற்கள் தெளிவாக வெளிவரவில்லை. உடலைக் குலுக்கும் உணர்ச்சிப் பொருமலிலே சொற்கள் உருவாவதற்கு அவகாசம் இருந்தால்தானே!

ஒன்றே ஒன்றுமட்டும் தெரிந்தது. கோவிந்தனுக்கு அப்போது வேறு எதுவும் வேண்டியிருக்கவில்லை. பணம், காசு, கார், பங்களா, ரத்தினம், பாப்பா எல்லாமே, கடும் சினத்தின் வெப்பத்தால் உருகிக் காணமல் போய் விட்டன. அவன் கண்களுக்குப் புலப்பட்டது கனகசபையின் உருவம் மட்டுமே. அவன் விரல்கள் தழுவத் துடித்தது, பொற்சங்கிலி அணிந்த அந்தக் கொழுத்த கழுத்தை மட்டுமே.

"விட்டு விடுங்கள்," என்றான் கனகசபை.

விட்டார்கள்.

பாய்ந்தான் கோவிந்தன், துப்பாக்கியினின்று புறப்படும் தோட்டாவைப் போல்.

அடுத்த விநாடி, "ஆ!" என்று கூச்சலிட்டாள் பாப்பா. அவள் எதிர்பாராதது நடந்துவிட்டது.

கனகசபை சிரித்தான். வயிறு குலுங்கச் சிரித்தான்.

ஜோடணிந்த காலை நீட்டி, கோவிந்தனின் முகத்துக்குக் கீழே கொடுத்து, அவன் மோவாயைத் தூக்கினான்.

மூச்சுத் தீர்ந்த காரணத்தால் எழுந்திருக்கவும் சக்தியற்று அப்படியே கிடந்தான் கோவிந்தன். 'விட்டுவிடுங்கள்' என்று உத்தரவிட்ட அதே சமயம், பணியாள் ஒருவனுக்குக் கனகசபை காட்டிய சைகை, கோபத் திரையால் மறைக்கப்பட்டிருந்த கோவிந்தனின் கண்களுக்குத் தென்படாததில் ஆச்சரியமில்லை. கனகசபையின் சூழ்ச்சியை அவன் கண்டானா? குறிப்பிட்ட ஆள் அத்தனை லாகவமாகத் தனது பாதையில் காலை நீட்டுவான் என்று எதிர்பார்த்தானா? எவனுடைய கழுத்தை நெறிக்க வேண்டுமென்று கோவிந்தன் தாவினானோ அவன் பாதத்தையே பணிய நேரிடும் என்று அவன் சற்றேனும் நினைத்தானா?

கனகசபை மறுபடியும் சிரிக்க ஆரம்பித்தான்.

ஆனால் சிரித்துக் கொண்டிருக்கும் பொழுது, தன்னுடன் சேர்ந்து வேறு யாரோ நகைப்பது போன்ற எண்ணம் உண்டாகவே, சட்டென்று நிறுத்தி விட்டுத் திரும்பினான்.

"வேலு!" என்று மௌனமாக அசைந்தன அவன் உதடுகள்.

வண்டிக்கார வேலுவின் தோற்றம் எரிமலையைப் போலிருந்தது. அவனது எதிர்பாராத வருகையைக் கண்டு திடுக்கிட்டு அத்தனைபேரும் தம்பித்து நிற்க, "எசமான்! நீங்க மட்டும் எப்போதும் சிரிக்கணும், மத்தவங்க கண்ணீர் வடிக்கணும்னு சட்டமா? காலம் மாறிப் போச்சு எசமான், காலம் மாறிப் போச்சு!" என்று சட்டெனக் கையை உயர்த்தினான்.

"பிடியுங்கள்!" என்று யாரோ கூவினார்கள்.

அதற்குள் வேலு தன் கைவரிசையைக் காண்பித்து விட்டான்.

"ஐயோ!" என்று அலறிற்று ஒரு குரல்.




## நாற்பத்திரண்டு

"ஐயோ!" என்ற அலறலைத் தொடர்ந்த அடுத்த இரண்டு விநாடிக்கு அந்த மாளிகையே மௌனத்தில் புதைந்து கிடந்தது.

துளி ஓசை? சிறு அசைவு? கிடையாது.

அதிர்ச்சியால் மூளையே மரத்துவிட்டபோது, திகைப்பால் மூச்சே முடங்கிவிட்ட பிறகு, கல்லுக்கும் சதைக்கும் வேற்றுமையில்லாதபடி கனகசபையின் ஆட்கள் கம்பங்களாக நின்றதில் வியப்பென்ன? தங்கள் எசமானர் கண்சாடை காட்டிய நயத்தையும், தங்கள் கூட்டாளி காலை நீட்டிய லாகவத்தையும், தாவி வந்த கோவிந்தன் இடறி விழுந்த வேடிக்கையையும் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்த அவர்கள், புது வைரி ஒருவனின் புயலொத்த வருகையைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. இகழ்ச்சிக்கு இலக்காகித் தரையில் கிடக்கும் கோவிந்தனிடமிருந்து,சீற்றமே உருவாகத் துள்ளும் வேலுவுக்குத் தங்கள் பார்வையை அவர்கள் திருப்புமுன்; வேலு முழங்கும் வெறிப் பேச்சின் பொருளைச் சரியாகப் புரிந்துகொள்ளுமுன் ; பாராளும் கூத்தனூர் மிராசுதாரைக் கேவலம் ஒரு வண்டிக்காரன், அதுவும் அவர் மாளிகையில், அவருடைய மெய்க்காப்பாளரின் முன்னிலையிலேயே, எதிர்த்துப் பேசுவதா? என்ற எண்ணம் குதூகலத்தைக் கோபமாக மாற்றுமுன்—

காரியம் மிஞ்சிவிட்டது, கை எறிந்துவிட்டது, கத்தியும் பாய்ந்துவிட்டது.

கனகசபை இரு கைகளாலும் தனது இடது விலாவை அழுத்திக் கொண்டான். பற்கள் உதட்டின் மீது ஆழப் பதிய, மூக்கு விடைக்க, நெற்றியில் வியர்வை துளிக்க, அவன் தள்ளாடியபடி பின்னேக்கி நடப்பதையும் விழிகளில் திரை படர்வதையும் கவனித்த வேலையாட்களை அச்சம் கவ்விற்று.

அங்கிருந்த நாற்காலியில் அவன் தொப்பென்று விழுந்து சரிந்தபோது, விரல் இடுக்குகளின் வழியே ரத்தம் கசிவது தெரிந்தது.

"எசமான்!"

பதறியபடி சிலர் கனகசபையிடம் ஓட, ஆத்திரத்துடன் பலர் வண்டிக்காரனைச் சூழ்ந்து கொண்டார்கள். ஒருவன் அவன் கன்னத்திலே அறைய, மற்றொருவன் மூக்கிலே குத்த, இன்னொருவன் வயிற்றிலே உதைக்க, சரமாரியான தாக்குதல்களுக்கு இலக்கான போதிலும் வேலுவின் முகத்திலிருந்த மலர்ச்சி மட்டும் வாடவில்லை; அவன் சொற்களில் தொனித்த வெறி அடங்கவில்லை.

"என்னை அடியுங்க.கொல்லுங்க. அக்கறை இல்லை. இந்த ராட்சசன் ஒழிஞ்சாண்ணா, அதுவே போதும்."

உத்தரத்தை நோக்கிக் கைகள் இரண்டையும் நீட்டி அவன் ஆவேசமாகக் கூவினான்- "இருளாயி! வஞ்சம் தீர்த்துக்கிட்டேன். ஒரு குற்றமும் பண்ணாத உன்னை அடிச்சு நொறுக்கிய பாவிக்குச் சரியான பாடம் சொல்லிக் கொடுத்திட்டேன். இருளாயி, இருள.."

பக்கத்திலிருந்தவன் வைத்தான் ஓர் அறை, பல் உதிரும்படியாக.

"வண்டிக்கார . நாய்க்கு வாயைப் பார்த்திங்களா? மொத்துங்கடா நல்லா."

"அண்ணே!" என்று அழைத்தான் வேலு. நாவுக்கும் உதட்டுக்கும் ஏற்பட்ட சிதைவினால் சொற்கள் தெளிவாக வெளிவரவில்லை. "அண்ணே! என்னைப் போலத்தான் நீங்களும். நீங்க சொல்லுங்க நியாயத்தை. என் பெண்டாட்டி என்ன செய்தா? அவ பண்ணின தப்பு என்ன? பதினொரு

வருச காலமா உடம்பை ஓடாத் தேய்ச்சு உழைச்ச அவனே, ஒரு எலும்பு விடாமே முறிச்சுப் போடச் செய் தாரே உங்க எசமான் இது அவருக்கு அடுக்குமா?''

''டேய், நிறுத்துகிறுயா, இல்லையா?'' அவன் தலை மயிரைச் சேர்த்துப் பிடித்து ஒருவன் உலுக்கினுன்.

வேலு நிறுத்தத் தயாராக இல்லே.

''பாப்பம்மா என்ன சொல்லுச்சு? 'நீ வீட்டுக்கு விலக்குண்ணு சாக்கிட்டு இங்கேயே இரு. மிராசுதார் அரமனேக் குப் போய் நான் வேலே செய்துட்டு வாறேன்' அப் படீண்ணு சொல்லுச்சு. இருளாயி சரியிண்ணு. இது தப்பா? அதுவும் பாப்பம்மா எப்பேர்ப்பட் டது? தங்கம்ணு தங்கம். நேத்து ராத்திரி நான் செய்த ஒரு காரியத்தை நினேச்சு நினேச்சு நான் பயந்து மிரண்டு தலே காட்டாமப் பதுங்கியிருந்தப்போ அதுதான் எனக்குத் தைரியம் சொல் லுச்சு. கேளுங்கண்ணே நடந்ததை!''

''கொண்டாடா சூட்டுக் கோலே!'' என்றுன் அவன் எதிரில் நின்றவன்- ''கதை சொல்ற நாக்கிலேயே சூடு போடுவோம்.''

''நல்லாப் போடுங்க,'' என்றுன் வண் டிக்காரன். ''ஆனு நான் சொல்றதைக் கேட்டுட்டுப் போடுங்க. நேத்து ராத்திரி எங்க நடு எசமானும், பட்டணத்திலேருந்து வந்திருக் காரே அந்தத் தாமோதர ஐயா, அவரும், இருட்டிலே ஒருத்தர் பின்னுடை ஒருத்த ராப் போனுங்க- 'வண்டி கட்டியா ரட்டுங்களா'ண்ணு கேட்டேன். ஒருத் தரும் பதில் பேசலே. கேட்டது காதிலே விழலே போலிருக் குண்ணு நினேச் சிட்டு வண்டியைப் பூட்டிட்டுப் பின்னு லேயே போனேன். கூப்பிடு தொலே போயிருப்பேன். தோப்புப் பக்கத்தி லிருந்து ஏதோ அலறல் சத்தம் கேட்டது. வண்டி யை அங்கேயே விட்டுட்டுத் தோப் புக்குள்ளே பாய்ந் தேன். தாமோத ரம் ஐயா, அடிபட் டுக்கிழே நிலத்திலே



கிடக்கிறதையும் அவரை மறுபடியும் அடிக்கிறதுக்கு யாரோ கையை ஓங்கிட்டு நிற்கிறதையும் பார்த்தேன். அவன் முதுகு மட்டுமே எனக்குத் தெரிஞ்சுது. பின்னடியே போய், அவன் கையிலிருந்த கம்பையே உருவி, அவன் மண்டையில் ஒண்ணு போட்ட பிறவுதான் அது எங்க நடுஎசமான்னு தெரிஞ்சுது. நான் என்ன பண்ணுவேன். எனக்கு அடி வயித்தைக் கலக்க ஆரம்பிச்சிடுச்சு. ஒண்ணுமே புரியாம, அடிபட்டவங்களை அப்படியே போட்டுட்டுத் தோப்புக்குள்ளேயே ஓடி ஓர் இடத்திலே ஒளிஞ்சிக்கிட்டேன். அப்போதான் உங்களைச் சேர்ந்தவங்க துளசி அம்மாளைத் தூக்கிட்டுப் போறதைப் பார்த்தேன். தாமோதரம் ஐயாவையும் பெரிய எசமான் வந்து ஆஸ்பத்திரிக்கு எடுத்திட்டுப் போயிட்டார். நடு எசமானைத் தோப்பிலே தேடிக்கிட்டிருந்த பாப்பம்மா தற்செயலா என்னைக் கண்டுபிடிச்சிடுச்சு. உண்மை தெரிந்ததும் எனக்குத் தேறுதல் சொல்லி, பயத்தைப் போக்கி, அழைச்சிட்டுப் போச்சு. அந்தச் சமயம் அது வரலேன்னா—நிசமாச் சொல்றேன்—எனக்குப் பைத்தியமே புடிச்சிருக்கும். அதுகிட்டே துளசியம்மா விசயத்தைச் சொன்னேன். இருளாயி இங்கே வேலை செய்றான்னு தெரிஞ்சதும், பாப்பம்மாவுக்கு வேசம் போடற யோசனை தோணியிருக்கு. அதுக்கு என் பெண்டாட்டி உடந்தையா இருந்தது உண்மைதான். ஏண்ணே, துளசியம்மாளை நீங்க தூக்கிட்டு வந்தது உங்களுக்குக் குத்தமாப் படலையாக்கும்? இருளாயி செஞ்சது பெரிய பிசகாப் போயிட்டுதா? உடன்பிறந்தவங்க மாதிரி நினைச்சு—"



வேலு வாயடைத்து நின்றான். துண்டிக்கப்பட்ட வாக்கியம் 'தொண்டைக்குள்ளேயே திரும்பி விழ அவன் வெறித்து நோக்கினான்.

"ஏண்டா வேலு, விழி பிதுங்குகிறது? நான் கூத்தனூர் மிராசுதாரின் ஆவியல்ல. மிராசுதாரேதான்."

வண்டிக்காரனின் பார்வை கனகசபையின் விலாவுக்கு மாறிற்று. கனகசபை இப்போது புது ஜிப்பா அணிந்திருந்தான். வயிற்றைச் சுற்றிப் போடப்பட்ட கட்டினால் அவன் இன்னும் சற்றுப் பருத்துக் காணப்பட்டான். அவ்வளவுதான். முகத்தில் மறுபடியும் ரத்தம் ஏறி இருந்தது. ஒரு கையில் பிடித்திருந்த கண்ணாடி டம்ளரிலிருந்த பிராந்தியை அடிக்கொருதரம் உறிஞ்சினான்.

நா உலர, "நீங்கள்...!" என்று இழுத்தான் வேலு.

"இன்னும் சாகவில்லை," என்றான் கனகசபை, நாற்காலி மீது கையை ஊன்றிக்கொண்டே. "சாகப் போகிறவன் வேறு ஆள்."

கூத்தனூர் சாலை, டிரங்க்ரோடில் கலப்பதற்கு இன்னும் மூன்று மைல்கள் இருந்தன. செந்தில்

# சிறந்தோர் அணியும் மாலு

பாத அணிகள்



- சௌகரியத்தன்மை
- இயற்கையான மிதி அடி
- அழகு
- நீடித்த உழைப்பு

ஆகிய காரணங்களுக்காக






அரசினர் பாத அணி நிலையம்,

பெரம்பூர், மதராஸ்

கிடைக்குமிடம்:

தொழில் இலாகா விற்பனை நிலையம்

166-A, மவுண்ட் ரோடு, சென்னை-2.

ஆக்ஸிலரேட்டரை மிதித்தான். வேகத்தைச் சுட்டிக் காண்பிக்கும் முள்ளைக் காட்டிலும் காரின் சக்கரங்கள் கிளப்பிவிட்ட புழுதிப் படலமே அவன் சென்றுகொண்டிருந்த விரைவுக்குச் சான்று பகர்ந்தது.

இரு மருங்கிலும் ஓங்கி வளர்ந்திருந்த மரங்களினூடே வண்டி பறந்து கொண்டிருந்தது. ஆள் நடமாட்டம் அதிகமில்லை. வானத்தில் சூரியனின் ஒளி மசமசவென்று இருந்தது.

செந்தில் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். அந்தச் சிரிப்பில் உற்சாகம் கரை புரண்டு ஓடிற்று. எதிரிகளின் மூக்கை அறுத்துவிட்டோம் என்ற பெருமிதம் அதில் இழையோடிற்று. கனகசபை—கனகசபை மட்டுமென்ன, ரத்தினம், கோவிந்தன் எல்லோரும் செந்தில் எப்பேர்ப்பட்டவன் என்பதை இனிமேல்தான் தெரிந்துகொள்ளப் போகிறார்கள், அல்லது இந்நேரம் தங்கள் முகத்தில் பூசப்பட்டுவிட்ட கரியைக் கண்ணாடி முன் நின்று பார்த்துக்கொண்டிருந்தாலும் இருப்பார்கள்.

வழவழப்பான ஸ்டீயரிங்கை அவன் ஒரு முறை தடவி விட்டான். அதன் மீது பொருத்தப் பட்டிருந்த வட்டமான ஹாரன் கம்பியை ஒரு தடவை அழுத்தினான். இரண்டு பர்லாங்குக்கு அப்பால் சென்றுகொண்டிருந்த ஒரு வண்டி சாலை ஓரத்துக்கு ஒதுங்குவது தெரிந்தது. "அருமையான ஹாரன்!" என்று செந்தில் மெச்சிக் கொண்டான். நல்ல ஹாரன், நல்ல கார், ஆறு சிலிண்டர், அழகான நிறம், தேயாத டயர்கள், இரண்டு ஸ்டெப்னி வேறே.

கனகசபையின் காரைமட்டுமா அவன் கவர்ந்துகொண்டு வந்துவிட்டான்! பின்புறத்தில் காரின் பெட்டிக்குள் ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் தோல் பெட்டியென்ன, அதற்குள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் கரன்ஸி நோட்டுக்கள் என்ன!

செந்தில் கடியாரத்தைப் பார்த்தான். 12-20. அவன் சிந்தனை அசைபோட்டது.

'கனகசபை இப்போது என்ன செய்து கொண்டிருப்பான்? பாப்பாவுடன் விளையாடும் கட்டம் முடிந்து போயிருக்குமா? இன்னும் முடிந்திருக்காது. கனகசபை அதில் ஆழ்ந்திருந்த விதத்தை நினைக்கும்போது, இன்னும் பல மணி நேரத்துக்கு அவன் அதனின்று விடுபட மாட்டான் என்றுதான் தோன்றியது. பெட்டக அறை சூறையிடப்பட்ட விஷயத்தை அவன் நேரிடையாகப் பார்த்துத் தெரிந்து கொள்கிறானோ, அல்லது யாரேனும் தற்செயலாகக் கண்டுவந்து சொல்கிறார்களோ! அப்போது கனகசபையின் மனம் எப்படித் துடிக்கும்? அவன் முகம் எப்படி வெளிறும்? அதைப்பற்றிக் கற்பனை செய்யச் செய்யச் செந்திலுக்குத் தண்ணென்றிருந்தது.

கனகசபைக்கு வேண்டும்; நன்றாக வேண்டும். தன்னை ஏமாற்ற முயன்றதற்கு அவனுக்கு இதுவும் வேண்டும்; இதற்கு மேலும் வேண்டும். "நாடகமல்லவா ஆடியிருக்கிறான் நாடகம்! இவ்வளவு நெருக்கடியான கட்டத்தில், தனது தொழில் திட்டங்கள் உயிருக்கு மன்றாடிக்கொண்டிருக்கும் ஆபத்தான வேளையில், அரை லட்ச ரூபாய்க்குப் பெருந்தன்மையுடன் செக் எழுதுவதுபோல் எழுதி, பின்னர் அதைக் கசக்கி எறிந்துவிட்டானே. 'பாப்பாவைப் பிடித்துக் கொடுத்தால் இரண்டு லட்சம் கடன்கொடுக்கிறேன்' என்றான். காரியம் கைகூடியதும் நாமம் சாத்தப் பார்க்கிறான். இப்போது இரண்டு லட்சத்துக்கு மேலேயே இழந்துவிட்டான்.

அந்தக் கொத்துச் சாவி மட்டும் செந்திலின் கண்களிற் தற்செயலாகப் படாமலிருந்திருந்தால்—? மாடிப் படி வழியே பாப்பாவும் துளசியும் யாருமறியாமல்நழுவி வரும்பொழுது, கனகசபை பெட்டக அறைக்குள் இருந்திருக்க வேண்டும். வேலைக்காரி வேடத்தில் ஒரு கள்ளி ஒளிந்திருக்கிறாள் என்பதையோ, சூது வாதறியாத ஒரு பெண்ணைக் கடத்திச் சென்று கொண்டிருக்கிறாள் என்பதையோ அறியாமல், அவன் இரும்புப் பெட்டிகள் சூழ ஏதோ வேலையில் • ஈடுபட்டிருந்தான் போலும். அப்போதுதான் அதிர்ஷ்டவசமாகச் செந்தில் மாளிகைக்குள் நுழைந்திருக்கிறான். அவனும், துளசியும், பிடித்தவனும் பிடிபட்டவளும் நிகழ்த்திய வாக்குவாதம், மாடியிலிருந்த கனகசபைக்கு எட்டியிருக்க வேண்டும். அவசரம் அவசரமாகக் கதவைச் சாத்திப் பூட்டிவிட்டு இடுப்பில் சாவிக் கொத்தைச் செருகியதும் செருகாததுமாக ஓடிவந்திருக்கிறான். அது வழியில்

நழுவிக் கீழே விழுந்திருக்கிறது. தரையில் கயிற்றுப் பாய் விரித்திருந்த படியால், அது விழுந்தது அவனுக்குத் தெரிய நியாயமில்லை. துளசியைக் கண்டு ஊராலுக்கு வந்தவன், பாப்பாவை அடையாளம் தெரிந்து கொண்டதும் மற்றெல்லாவற்றையும் மறந்து விட்டான். இடுப்பில் சாவிக் கொத்து இல்லாதது அவன் நினைவுக்கு வரவே இல்லை. ஆனால் மாடி அறைக்குச் சென்று துளசியைப் படுக்க வைத்து விட்டு வெளியே வந்த செந்தில், கசங்கிய செக்கைக் கண்டெடுத்த ஆத்திரத்தில் கனகசபையுடன் மோதப் புறப்பட்டபோது, சாவிக் கொத்து பளிச் சென்று கண்களில் பட்டுவிட்டது. தன்னை ஏமாற்றத் துணிந்த கனகசபை மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதுடன், சென்னையில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைச் சமாளிக்க நல்ல வழி பிறந்து விட்டதென்று அவன் சாவிக் கொத்தைச் சரியாகப் பயன்படுத்துக்கொண்டான்.

'நன்றி' என்று சீட்டெழுதி அதில் கையெழுத்தும் போட்டுவர அவனுக்குத் தைரியம் இருந்தது. தனக்குச் சேரவேண்டிய பொருள்களை உரிமையுடன் எடுத்துக்கொண்ட பாவம் அவனுக்குள் இருந்ததே தவிர, திருட்டுத்தனமாக மற்றொருவன் சொத்தைக் களவாடும் உணர்ச்சி அவனிடம் இல்லை.

செந்தில் பெட்ரோல் 'கேஜைப்' பார்த்தான். நாலைந்து காலன் தான் வண்டியில் இருக்கும். உளுந்தூர்ப் பேட்டையில் 'டாங்க்'கை நிரப்பிக் கொள்ளலாம் என்று முடிவு செய்து கொண்டவனாய், ஒரு கையால் ஸ்டீரிங்கைப் பிடித்தவாறு மறு கையால் மூக்குக் கண்ணாடியைக் கழற்றித் துடைத்து மறுபடியும் அணிந்து கொண்டான். காக்கி உடுப்பணிந்த தபாற்காரர் ஒருவர் எதிர்ப்பட்டார். அதே சமயம், 'ஒருகால் கனகசபை போலீஸில் புகார் செய்வானோ!' என்ற கவலை செந்திலின் இதயத்தில் நெளிந்தது. 'ஒருகாலும் மாட்டான்,' என்று அதைக் கிள்ளியெறிந்தது அவன் மூளை. கனகசபையைப் போன்ற அயோக்கியனின் பெட்டகங்களில், வெளிச்சத்தில் தலைகாட்டத் துணியாத கள்ளச் சந்தைப் பணத்தைத் தவிர வேறு என்ன இருந்திருக்க முடியும்? வருமான வரிக்காரனை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கவோ, கையில்வெள்ளிக் காப்பு மாட்டிக் கொள்ளவோ தயாராக இருந்தாலொழிய, கனகசபை போலீஸ் பக்கம் தலை வைத்துப் படுக்க மாட்டான் என்பது செந்திலின் உறுதியான நம்பிக்கை.

பாப்பாவைக் கனகசபையிடம் பிடித்துக் கொடுத்ததோடு, கோவிந்தன்மீது பழி வாங்கியாயிற்று. பெட்டக அறையைச் சூறையாடியதன் மூலம், மிராசுதாரின் கொட்டத்தை அடக்கியாயிற்று. ரத்தினம்? அவனையும் தண்டித்தாயிற்று. பாம்பின் பல்லைப் பிடுங்குவதுபோல், தேளின் கொடுக்கை நறுக்குவதுபோல், ரத்தினத்தின் உயிர் நிலையை—அல்லது உயிர் நிலைகளை—பறித்து வந்தாயிற்று. செயலற்றிருக்கும் தனது சக பிரயாணிகளைச் செந்தில் பெருமையுடன் பார்த்தான். அதற்குள் அந்த விபத்து நிகழ்ந்து விட்டது.

சுமார் நூறு கஜம் சென்ற பின்னரே கார் நின்றது. உட்கார்ந்தபடியே திரும்பிப் பார்த்தான் செந்தில். ரத்த வெள்ளத்தில் துடித்துக்கொண்டிருந்தது ஒரு மனித உருவம். வயற் காட்டிலிருந்து இரண்டு பேர் ஓடிவருவதைச் செந்தில் கவனித்தான். ஆபத்திற்குப் பாவமில்லை என்று தன்னையே தேற்றிக் கொண்டு, சற்று நேரத்துக்கு முன்பு இதே சக்கரங்களுக்குப் பலியான வெள்ளாட்டைப்போல் இந்த 'ஆன்மாவும் சாந்தியடையட்டும்' என்று நினைத்தானோ என்னவோ, கியரை மாற்றிக் கிளட்சை விடுவித்தான்.

கார் தாவிப் பறந்தது.

அதற்குமேல் கோவிந்தனை இழுக்க முடியவில்லை பாப்பாவால். அவளுக்குக் கை கடுத்தது. மூச்சு வாங்கிற்று.

''வாருங்கள். சீக்கிரம்,'' என்று அவசரப்படுத்தினாள்.

அவள் சொற்கள் அவன் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. முகத்தில் களையின்றி, எங்கோ நினைவாகப் பிரமை பிடித்தாற்போல் காணப்பட்டான்.

பாப்பா மிரட்சியுடன் எட்டிப் பார்த்தாள், ஒரு மரத்துக்குப் பின்னால் ஒளிந்தபடி. நல்ல காலம், யாரும் அவர்களைப் பின்தொடரக் காணோம். வண்டிக்கார வேலு புகுந்ததால் ஏற்பட்ட சந்தடியில், பாப்பாவையும் கோவிந்தனையும் யாரும் கவனிக்கவில்லை.

முரடர்களின் காலடியில் மிதி படவிருந்த கோவிந்தனைச் சாமர்த்தியமாக வெளியே இழுத்து, அங்குலம் அங்குலமாய் நகர்ந்து தோட்டத்துக்கு அழைத்து வந்து விட்டாள்.

மின்சார விளக்கொளி நிறைந்த ஹாலின் செயற்கையான சூழ்நிலைக்கும் நீல வானத்தின் கீழ் பச்சைப் பசேலெனப் பரந்து கிடக்கும் இந்தத் தோட்டத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்!

கோவிந்தன் வாய் திறவாமல், பூந்தொட்டி வைப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த சதுரமான சிறு மேடை ஒன்றின் மீது உட்கார்ந்திருந்தான். பாப்பாவின் விழிகளில் பரிவு நிறைந்தது.

அவன் எதிரில் மண்டியிட்டு அமர்ந்தாள். இரண்டு கைகளாலும் அவன் கன்னங்களை அணைத்துக் கொண்டு, "இதோ பாருங்கள்! என்னைப் பாருங்கள்!" என்று அவன் முகத்தை இப்படியும் அப்படியும் செல்லமாக அசைத்தாள். அவள் குரலில் தொனித்த ஆர்வம் முற்றிலும் வீண்போகவில்லை. இருண்ட குகைக்குள் மின்மினிப் பூச்சி பறந்தாற்போல் அவன் கண்களின் ஆழத்தில் சிறிது ஒளி பளிச்சிட்டது.

"பாப்பா." அவன் உதடுகள் மட்டும் அசைந்தன.

அவள் புன்னகை செய்தாள். விழிகளில் நீர் கோத்து நின்றது. 'ஆமாம்' என்று பொருள் படத் தலையை ஆட்டினாள்.

பிறகு, அன்பு பொங்க, குரல் நொண நொணக்க, "ராத்திரி பலமாக அடிபட்டிருந்ததே! இப்போது எப்படி இருக்கிறது?" என்று வினவியபடி அவன் தலையைத் தொட்டபோது அவன், "ஸ்-ஸ்-ஸ்," என்று மூடிய பற்களிடையே காற்றை விருட்டென உறிஞ்சினான்.

அவள் கைகளை எடுத்து விட்டாள். "வலிக்கிறதா?" என்றாள். அவள் வதனம் வேதனையால் சுருங்கிற்று. "உடனே ஏதாவது வைத்தியம் செய்து கொள்ள வேண்டும். இஞ்ஜெக்ஷன் போட்டுக் கொண்டால்கூட நல்லதுதான். வாருங்கள். அந்த ரௌடிப் பசங்களில் யாராவது நம்மைத் துரத்திக் கொண்டு வரப் போகிறான். இந்த இடத்தை விட்டு ஓடியே போய் விடுவோம்."



"நேற்று ஒரு திருடன் என்னை வழி மறித்து இருந்த பணத்தையெல்லாம் அபகரித்துப் போய் விட்டான்."

"நீ எப்பொழுதும் ஒரு ரூபாய்க்கும குறைவாகத்தானே வைத்திருப்பாய்?"

"அன்றைக்குத் துரதிர்ஷ்டமாய் ஒன்றேகால் ரூபாய் வைத்திருந்தேன்!"

அவர்கள் சாலையை அடைந்தவுடன், ஓட்டு பங்களா இருந்த திசையில் திரும்பிய போது, "அக்கா! அக்கா!" என்ற பல கீச்சுக் குரல்கள் அவர்கள் கவனத்தைப் பின்னாலிருந்து சுண்டி இழுத்தன.

பாப்பா திரும்பினாள். அவள் உள்ளம் பூரித்தது.

இரட்டை மாட்டு வண்டியிலிருந்து கோலியும், சச்சுவும், சம்பந்தமும் தொப் தொப்பென்று குதித்து ஆவலுடன் ஓடி வரும் காட்சி அவளை வரவேற்றது. முந்தின நாள் மாலைதான் அவர்களை அவள் வம்புக்கிழுத்துச் சண்டை போட்டிருந்தாள். ஆனால் அவர்களைச் சந்தித்துப் பல ஆண்டுகள் கழிந்து விட்டாற்போன்ற உணர்ச்சி, வழக்கத்தை மீறிய அன்பை அவர்கள் மீது பொழியச் செய்தது.

கோலியின் கன்னத்தில் முத்தமிட்டபடி, "எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்? பள்ளிக்கூடத்துக்கா?" என்று கேட்டாள் பாப்பா.

பார்வைகளைப் பரிமாறிக் கொண்டனர் குழந்தைகள்.

"அப்போ உனக்கு ஒன்றுமே தெரியாதா?" என்றான், சம்பந்தம்.

கோவி விசித்து அழத் தொடங்கி விட்டான்.

மலர விழித்தபடி சரசுதான் விளக்கினாள். "அக்கா! அப்பாவை யாரோ அடிச்சுட்டாங்க! மண்டை பிளந்து போச்சு! ஆஸ்பத்திரியிலே இருக்கார். அவரைப் பார்க்கத்தான் போறோம்."

கோவியையும், சச்சுவையும் அணைத்துக் கொண்டு, "மண்டை பிளந்தால் என்ன? டாக்டர் சொஸ்தப் படுத்தி விடுவார். ஐயே, கோவி! பெட்டை மாதிரி அழுகிறாயா? கண்ணைத் துடைத்துக் கொள். வாருங்கள். எல்லோருமாக ஆஸ்பத்திரிக்குப் போவோம்," என்று புறப்பட்ட பாப்பாவுக்கு, கோவிந்தனைக் கண்டதும் துணுக்கென்றது.

அவன் கண்கள் கலங்கியிருந்தன.

மனச்சாட்சியின் உறுத்தல் அது என்பதை அவள் உடனே புரிந்து கொண்டு விட்டாள். தான் செய்த ஒரு குற்றத்தின் விளைவாக அல்லவோ இந்தக் குழந்தைகள் இப்படித் தவிக்க நேர்ந்தது என்ற குறுகுறுப்பு கோவிந்தனின் நெஞ்சைக் குடைகிறது என்பதைப் பாப்பா தெரிந்து கொண்டாள்.

"இவர்களைக் கூடத் தேற்றி விடலாம். இந்தப் பெரிய குழந்தையைத் தேற்ற முடியாது போலிருக்கிறதே!" என்று அவன் காதிற்குள் கிசுகிசுத்த போது, அவன் சிரிக்கவில்லை. ஆனால் அவனுடைய பிரமை நீங்கிவிட்டதை அறிந்து பாப்பா திருப்தி யடைந்தாள்.

பாப்பாவைக் கண்டதும், வேலுவின் தம்பியான ஊமைக்கு ஆனந்தம் பிடிபடவில்லை. தனது தனி மொழியில் ஏதேதோ பிரசங்கம் செய்தபடி, மாடுகளின் வாலை முறுக்கி விட்டான்.

பின்னாலிருந்து ஹாரன் ஓசை கேட்கவே, வண்டியை ஒதுக்கி ஓட்டினான்.

தூரத்தில் வரும்போதே அது செந்திலின் கார் என்பது விளங்கி விட்டது. பாப்பாவின் யோசனையின் பேரில், அவள் செய்தது போலவே கோவிந்தனும் முகம் வெளியே தெரியாதபடி திருப்பிக் கொண்டான்.

கார் அவர்களைத் தாண்டிச் சென்றதும், ஊமை ஏதோ சொன்னான்.

"செந்திலுடைய காரில் கனகசபை போகிறானே!" என்றாள் பாப்பா.

அதே சமயம், "விரட்டு விரட்டு!" என்று ஊமையை ஊக்கினாள். அவளுக்குத் துளசியின் நினைவு வந்து விட்டது. அந்தக் கோட்டைக்குள் மறுபடியும் நுழைந்து துளசியை மீட்பதென்பது அசாத்தியம். ஆஸ்பத்திரிக்குச் சென்று அப்பாவைப் பார்த்து விட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் புகார் செய்து, போலீஸ் படையுடன் மிராசுதாரின் மாளிகைக்குத் திரும்புவதென முடிவு செய்தாள்,

ஆனால் அவர்கள் அங்கு சென்ற போது ஆஸ்பத்திரியே அல்லோலகல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது.

தாமோதரத்தைக் காணோம்!

அவரது அறையில், தெருப் பக்கமாக இருந்த கதவு திறந்து கிடந்தது.

மூக்குக் கண்ணாடியணிந்த ஒரு வாலிபர் சில நிமிட நேரத்துக்கு அதற்கருகே தெருவில் காரை நிறுத்தி வைத்திருந்ததாக யாரோ சொன்னார்கள்.



எஸ்.ஏ.பி.

## நாற்பத்தி மூன்று

கனகசபை இருமினான்.

அந்த இருமலின் தொனி, வண்டியைச் செலுத்திக் கொண்டிருந்த காரோட்டியையும், அவனுக்குப் பக்கத்திலிருந்த முண்டாசுக்காரனையும் என்னவோ செய்தது. முதுகு படாமல் சற்றுக் குனிந்தபடி மரியாதையுடன் உட்கார்ந்திருந்த முண்டாசுக்காரன், கவலை கப்பிய கண்களைத் திருப்பிப் பின் ஆசனத்தில் அமர்ந்திருந்த எஜமானரை நோக்கினான்.

கனகசபையின் உதட்டு விளிம்பில் தொத்திக் கொண்டிருந்தது ஒரு சிவப்புத் துளி.

'ரத்தம்!' என்று திகிலுடன் முணுமுணுத்தது முண்டாசுக்காரனின் மனம். மெள்ளக் கையை நீட்டி டிரைவரைச் சுரண்டினான்.

கரிய நாடாபோல் எதிரே நீண்டிருந்த சாலையில் கவனமாக இருந்த டிரைவர், 'தெரியும்,' என்று பொருள்படப் புருவங்களை ஒரு தடவை உயர்த்தி இறக்கினான். பின்புறக் காட்சியைப் பிரதிபலிக்கும் கண்ணாடியில் அவனுக்குக் கனகசபையின் முகம் தெரிந்தது போலும்.

யாரும் பேசவில்லை. உருளும் சக்கரங்கள் மைல்களைப் பிசாசுகள் போல் விழுங்கிக் கொண்டிருந்தன.

ஆள் நடமாட்ட அதிகரிப்பு, பட்டணம் ஒன்றின் வருகைக்கு முன்னறிவிப்புச் செய்தது. வேகத்தைச் சற்றே குறைத்த டிரைவர், "இந்த ஊரிலே ஒரு ஹோட்டல் இருக்கு," என்று நினைவூட்டினான் பணிவான குரலில்.

அவன் குறிப்பிட்ட உணவு விடுதியைக் கார் நெருங்கிவிட்டது. ஆனால் கனகசபையின் மௌனம் கலையவில்லை.

"இதை விட்டால் அப்புறம் எழுபத்தஞ்சு மைலுக்கு எதுவுமே கிடைக்காதுங்க."

ஓர் உறுமல் வெளிப்பட்டது பின்புறமிருந்து. அவ்வளவுதான்.

ஹோட்டலும், கடைத் தெருவும், ஊரும், மின்னல் வேகத்தில் பின்னடைந்தன.

நல்ல வெய்யில். கூத்தனூரை விட்டுப் புறப்பட்டபோது நாணிக் கண்புதைத்த சூரியன் இப்போது முக்காட்டைக் கிழித்தெறிந்துவிட்டு அனலைக் கக்கிற்று.

மணி இரண்டுக்கு மேலாகி விட்டதென்ற உண்மையோ, பசி வயிற்றைப் பிசைகிறதென்ற விஷயமோ வேலையாட்களுடைய சோர்வுக்குக் காரணமல்ல. கனகசபையின் உடல்நிலை அவர்களுக்கு அச்சத்தை மூட்டிற்று. நேரமாக ஆக, திகில் அதிகமாகிக்கொண்டே வந்தது. வண்டிக்கார வேலு ஏற்படுத்திய காயம் குறித்து அவர்களால் அசட்டையாக இருக்க முடியவில்லை.

கைக்குக் கிடைத்த மருந்தொன்றை உடனே அப்பிப் பஞ்சு வைத்துக் கட்டியதாலும், மதுவின் பலத்தாலுமே தங்கள் எஜமானரால் தாக்குப் பிடிக்க முடிகிறதென்பதை அவர்கள் அறிவார்கள். உடனடியாக ஒரு டாக்டரிடம் சென்றாலொழியக் காரியம் மிஞ்சிவிடும் என்று அவர்களுக்குத் தெரியும். முறைப்படி காயத்துக்குத் தையல் போடப்பட்ட பின், ஆடாமல் அசையாமல் சில மணி நேரம் ஆழ்ந்து உறங்க வேண்டியவர், இப்படிக் காரில் ஏறிக்கொண்டு தாகம் பசி பாராமல் நூற்றுக் கணக்கான மைல் பிரயாணம் செய்வது ஆபத்தில் முடியலாம் என்பதை அவர்கள் உணராதவர்களல்ல.

ஆனால் கனகசபையின் மனத்தை அவர்கள் உணரமாட்டார்கள். மாவு பூசினாற் போன்ற முகமும், ஒவ்வொரு முறை மூச்சு விடும்பொழுதும் நோவால் சுருங்கும் கண்களும் அவனது உடலின் வேதனையைப் படம் பிடித்துக் காட்டிய



போதிலும், அவன் அவற்றைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. கழுத்தின் மடிப்பிலே ஊறிய வியர்வைத் துளிகள், தங்களுக்கு எல்லை கட்டும் தங்கச் சங்கிலியைக் கடந்து மஸ்லின் ஜிப்பாவை நனைத்த போதிலும், ஓயாமல் ஓடிக் கொண்டிருக்கும் சாலையில் பதிந்திருந்த அவன் கண்கள் மட்டும் சளைக்கவில்லை. வெகு தூரத்தில், இரு புறத்திலும் அணி வகுத்து நிற்கும் மர வரிசைகள் ஒன்று சேரும் தொடுவானத்தை அவன் விழிகள் எதற்காகத் துருவிக் கொண்டிருந்தன? ஏதேனும் ஒரு காரின் சாயல் தெரிந்தால் அவன் பார்வை மேலும் கூர்மைபாகும். மற்ற நான்கு புலன்களும் ஒடுங்க, உன்னிப்பாகக் கவனிப்பான். தான் தேடும் கார் அதுவல்ல என்றதும், எரிச்சலுடன், டிரைவரை மேலும் ஊக்குவான்.

உண்மையில், அந்த வண்டியில் உட்கார்ந்திருந்தது கனகசபையல்ல; அது ஒரு மனிதனே அல்ல-அது ஒரு வெறி. ஆணவ விறகிலே மதுபானம் என்ற மண்ணெண்ணெய் ஊற்றப்பட்டு, அவமானம் என்ற நெருப்புக் குச்சியால் மூட்டப்பட்ட வெறி, காட்டுத் தீ போல் சென்னையை நோக்கி மணிக்கு அறுபது மைல் வேகத்தில் படையெடுத்துக் கொண்டிருந்தது. 'அவன் வேலுவை மறந்துவிட்டான். அவன் ஆட்கள்தான் எஜமானரின் ஆணையை எதிர்பாராமலே அந்த வண்டிக்காரனை விசாரித்து விட்டார்களே! கனகசபைக்குத் தன் விலாவில் உறுத்திக் கொண்டிருந்த புண்ணும் நினைவில்லை. பாப்பா, கோவிந்தன், ரத்தினம்—இவர்களும் அவன் வாழ்க்கையிலிருந்து மறைந்து விட்டார்கள் இப்போது. அவன் கருத்தை நிரப்பியது: 'செந்தில்' என்ற பெயர் ஒன்றே. அவன் சிந்தையில் உருவான



திட்டமெல்லாம், உள்ளத்தில் கொந்தளித்த உணர்ச்சியெல்லாம், 'நெஞ்சில் உயிர்த்த மூச்செல்லாம், மூன்று பிரிகளால் திரிக்கப்பட்ட வலுவுள்ள கயிறாகி, சென்னைக்குப் பறந்துகொண்டிருந்த மற்றொரு இளைஞன் கழுத்தைத் தேடி முன்னேறிக் கொண்டிருந்தன.

கூத்தனூர் மிராசுதாரின் வாழ்க்கையில் அவனை எத்தனையோ பேர் ஏமாற்றியதுண்டு. ஆனால் ஏமாற்றியவர்கள் எவரும் முழுமையாகத் தப்பிச் சென்றது கிடையாது. பாப்பா, கோவிந்தன் இவர்கள் விஷயத்தில் கூட, அவர்களை ஓரளவு அவமானப் படுத்திவிட்டதில் கனகசபைக்குத் திருப்தியே. ஆனால் செந்தில்! வேலு வீசிய கத்தியைக் காட்டிலும் செந்தில் வைத்துச் சென்ற சீட்டே கனகசபையின் சினத்தைச் செக்கச் சிவக்கச் சூடேற்றிவிட்டது. திரண்ட செல்வம் கொள்ளைபோனது கனகசபைக்கு ஒரு பொருட்டல்ல. எறும்பு கடி மாதிரி, அது. நடு நிசியில், யாருமறியாத சமயம் பார்த்து உள்ளே நுழைந்த சாதாரணத் திருடர்களால் பெட்டகங்கள் கொள்ளையடிக்கப்பட்டிருந்தால் பரவாயில்லை. சீட்டில் 'நன்றி' என்ற ஒரு சொல்; அதன் கீழ் செந்திலின் கையெழுத்து! 'என் காரை விட்டுவிட்டுத் தங்களுடையதை எடுத்துச் சொல்கிறேன். வேகத்துக்கு அதுதான் தகுந்தது.' என்ற பின்குறிப்பு வேறே! என்ன துணிச்சல் இருக்க வேண்டும் அவனுக்கு! செந்தில் தன்முன் நின்று பரிகாசமாகச் சிரிப்பது போலிருந்தது கனகசபைக்கு. அத்தனையும் கள்ளத்தனமாகச் சம்பாதித்த

பணமாக இருக்கும் என்ற ஊகம்தான் செந்திலுக்கு உரமளித்திருக்க வேண்டும் என்ற முடிவு கனகசபையின் ஆத்திரத்தை அதிகப்படுத்திற்று. செந்தில் ஊகித்தது சரிதானே? அதனால்தானே போலீஸுக்குப் புகார் செய்தபோது, கார் களவு போய்விட்டது என்பதோடு கனகசபை நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று?

டிரைவர் இழுத்தான்: "எசமான் கோபிச்சுக்கக் கூடாது. இந்த நிலைமையிலே பிரயாணம் பண்றது சரியில்லே. அப்புறம் எங்களை எல்லோரும் திட்டு வாங்க. ஊருக்கே திருப்பிடறேன்..."

"ஆமாங்க எசமான்." என்றான் மற்றவன். இருவரையும் நோக்கிக் கனகசபை விழிகளை ஓர் உருட்டு உருட்டி விழித்தானோ இல்லையோ, வேலையாட்கள் அடங்கிவிட்டனர்.

உறுதியால் மட்டுமே பிழைத்திருக்கிறோம் என்பதைக் கனகசபை அறிவான். மற்றொரு உயிரை வாங்கும்பொருட்டு அவன் பல்லைக் கடித்துக்கொண்டு தன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டிருந்தான்.

செந்திலின் கார் செந்திலையே துரத்திற்று.

ஓட்டு பங்களாவுக்குத் திரும்பி வந்த தாசில் ஐயாவுக்குத் திக்கென்றது. ரத்தினம் களைப்பு மிகுதியால் தன்னை மறந்து உறங்குவதைக் கண்ணுற்று, தந்திச் சேவகன் கொடுத்துச் சென்ற மஞ்சள் உறையை ஜன்னல் கம்பிகளூடே ரத்தினத்தின் அறைக்குள் போட்டுவிட்டு வெளியே சென்றவர் அவர். திரும்பி வந்து பார்த்தால் ரத்தினத்தைக் காணோம். ஏரிக்கரையோரமாக நடந்துசென்றபோது, பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த ஒருவன் திருட்டுத்தனமாக மரம் வெட்டுவதைக் கண்டு பிடிக்க நேர்ந்த காரணத்தால் அவர் திரும்பி வரத் தாமதமாகிவிட்டது.

கதவு பூட்டியிருக்கவே, ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தார். தந்தி உறை ஓரத்தில் சிழிபட்டுக் கிடப்பது தெரிந்தது. அந்த வரையில், ரத்தினம் தந்தியைப் படித்துவிட்டான் என்ற உண்மை புலப்பட்டது. அதன் விளைவாகத்தான் அவன் புறப்பட்டுப் போயிருக்கவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டார்.

ஆனால், பாப்பா விஷயம்? தாசில் ஐயா தம் மோவாயைச் சொறிந்துவிட்டுக் கொண்டார். வண்டிக்கார வேலுவின் தாய் அரையும் குறையுமாக உளறிய செய்தியைக் கேட்டதிலிருந்தே அவர் ஒரு நிலையில் இல்லை. ஏதோ இருளாயியாம், பாப்பாவாம், வேலைக்கார வேடமாம்! எதற்கும் ரத்தினத்திடம் கலந்துபேசி, இருவருமாகச் சேர்ந்து மிராசுதாரின் மாளிகைக்குப் போகலாமென்ற திட்டத்துடன் இரு முறை ஓட்டுப் பங்களாவுக்கு ஓடி வந்தவர், தான் தனியே கிளம்புவதைத் தவிர வேறு வழியில்லை என்று தெரிந்துகொண்டார்.

மிராசுதார் மாளிகை வெறிச்சென்றிருந்தது. ஈ காக்கையைக் காணோம். ஆளும் பேருமாக எப்போதும் ஜே ஜே என்றிருக்கும் அரண்மனையா இது! தாசில் ஐயா தமது குல்லாயைக் கழற்றிக் கையில் வைத்துக்கொண்டு,குரல் கொடுத்தார். பதிலில்லை.

என்ன காரணத்தாலோ, அவருக்கு உடல் சிலிர்த்தது.

அவர் ஒரு வழியாக வெளியே வந்தபோது, அவருக்குத் தெரிந்த ஒரு கிராமத்தானின் வண்டியொன்று தென்பட்டது.

"எங்கே போகிறாய்?" என்று கேட்டார் அவர்.

"டவுனுக்குங்க," என்றான் வண்டிக்காரன்.

"நானும் வருகிறேன்."

"இதிலேயுங்களா?" அவனுக்கு ஒரே வியப்பு. மண்ணும் புழுதியுமாக இருக்கும் பார வண்டியைச் சுட்டிக் காட்டிக் கேட்டான். அதற்குள் அவர் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

பத்து நிமிடத்திற்குள் வில்வண்டியொன்று கூத்தனூர் பக்கமிருந்து வரவே தாசில் ஐயா அதற்கு மாறி விரைவில் ஆஸ்பத்திரியை அடைந்துவிட்டார்.

கண்ணைக் கசக்கியபடி வராந்தாவில் நின்ற சச்சு, கோவி ஆகியவர்களுடைய காட்சிதான் அவரை வரவேற்றது. நொடிக்குள் ஆயிரம் எண்ணங்கள் அவரை உலுக்கிவிட்டன. தாமோதரம்! அவருக்கு ஏதாவது...இந்தச் செய்தி கேட்டுத்தான் ரத்தினம் இங்கு வந்திருப்பாரோ?

குனிந்து, கோவியை எடுத்துக்கொண்டவர். "சச்சு! ஏம்மா அழுகிறாய்?" என்றார். "அப்பா எங்கே?"

"அப்பா போய்ட்டார்," என்றான் கோவி. பகீரென்றது தாசில் ஐயாவுக்கு.

"ஆ! என்னடா சொல்றே நீ?"

சச்சு விளக்கினாள். "அப்பாவைக் காணோமாம் தாத்தா. எங்கே போனார்னு தெரியலே."

தாசில் ஐயா தடுமாறினார், அவள்

சொல்வதை அவர் சரியாகப் புரிந்து கொள்ளுமுன், கோவி. "ஏன் தாத்தா, அம்மாவும் செத்துப் போய்டுமா? சொல்லு தாத்தா!" என்று அவர் கையைப் பிடித்துக் கொண்டான்.

"அம்மாவா?" என்றார் தாசில் ஐயா.

"அமமாமேலே கார் ஏறிடுச்சே, உங்களுக்குத் தெரியாது?" என்று வினவினாள் சச்சு.

"அம்மாமேலே கார் ஏறிடுச்சா?" என்று அவள் சொன்னதையே திருப்பிச் சொன்னார் அவர்.

இதற்குள், மரத்தடியில் வண்டி மாடுகளுக்கு வைக்கோல் எடுத்துப் போட்டுக் கொண்டிருந்த வேலுவின் ஊமைத் தம்பி தாசில் ஐயாவைப் பார்த்து ஓடி வந்து, மேற்கொண்டு குட்டையைக் குழப்பினான்.

அவ்வழியாகச் சென்ற ஒரு நர்ஸ், "உஸ்! சத்தம் போடாதீர்கள்!" என்று எச்சரித்தாள்.

உள்ளேயிருந்து வந்த சம்பந்தம், "ஆபரேஷன் முடிந்து போய்விட்டது. டாக்டர் வெளியே வந்துவிட்டார். இங்கே நின்றுகொண்டு என்ன செய்கிறீர்கள்? அம்மாவைப் பார்க்க வேண்டாம்?" என்று தம்பி தங்கைகளைக் கூப்பிட்டவன், "தாத்தாவா! வாருங்கள் நீங்களும்," என்று தாசில் ஐயாவை அழைத்தான்.

வெள்ளை அங்கியைக் கழற்றியபடி டாக்டர் குருநாதன் பேசினார். ஒரு பக்கத்தில் பாப்பாவும் மறுபக்கத்தில் கோவிந்தனும் கவலையோடு நின்று கொண்டிருந்தார்கள்.

"காலை எடுக்க வேண்டிய அவசியமில்லை. ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்து விட்டது. கொஞ்சம் கெந்திக் கெந்தி நடப்பார்கள். அவ்வளவுதான். உயிருக்கு அபாயமில்லை," என்றார் டாக்டர்.

"அப்பாடா!" என்றான் கோவிந்தன், பாப்பா பக்கம் திரும்பியவனாய்.

கலங்கிய கண்களுடே பாப்பா சிரித்தாள்.

டாக்டர் தொடர்ந்தார். "செந்திலை மறந்து விட்டீர்களே! பார்த்தவர்கள் கொடுக்கும் வர்ணனையிலிருந்து, தாமோதரத்தைக் கடத்திச் சென்றவனும் அவன் தான், இந்த அம்மாள்மீது ஏற்றியவனும் அவன் தான் என்று நிச்சயமாகத் தெரிகிறது. பின் ஸீட்டில் ஒரு பெண் படுத்திருந்ததாகவும் சொல்கிறார்கள். அது காணாமற்போன அந்தப் பெண்ணைகத் தான் இருக்குமென்று தோன்றுகிறது. கண்ணை மூடிக்கொண்டு காரில் போய்க்












கொண்டிருக்கிறுனே, தாமோதரத்துக்கும் அந்தப் பெண்ணுக்கும், என்ன ஆபத்து நேருமோ? நீங்கள் என் காரை 'எடுத்துக்கொண்டு புறப்படுங்கள் சொல்கிறேன்!''

''ஆனால் அம்மா...'' என்று இழுத்தாள் பாப்பா.

அதற்குள் ஆபரேஷன் அறைக் கதவு திறந்தது.

ஸ்டிரெச்சரில் படுத்திருந்த உருவத்தைக் கண்டதும் தாசில் ஐயாவுக்கு மயிர்க்காலெல்லாம் குத்திட்டு நின்றன. விழி பிதுங்க, ''மங்களம்! நீயா? நியா தாமோதரத்தின் மணைவி!'' என்று அலறிவிட்டார்.

''இவர்களை உங்களுக்கு முன்பே தெரியுமா?'' என்று கேட்டான் கோவிந்தன்.

''என்ன கேள்வி கேட்டீர்கள் தம்பி?'' என்றார் தாசில் ஐயா, உணர்ச்சி வசப்பட்டவராய். ''இவள் என் உடன் பிறந்த தங்கை தம்பி, உடன் பிறந்த தங்கை!''

பாப்பாவின் கண்கள் மின்னின. ''என்னது! அப்படியானால் நீங்கள் எனக்கு மாமா ஆகவேண்டுமா!''

''தங்கமாய்ப் போய்விட்டது!'' என்ற கோவிந்தன், ''உங்கள் மாமா எங்கள் மாமியைக் கவனித்துக் கொள்வார்! நீ வா!'' என்று அவள் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக்கொண்டு டாக்டரின் காருக்கு ஓடினான்.

## நீங்கள் நீதிபதியாயிருந்தால்

### விடை

கணேசன் பக்கம்தான் நியாயமிருக்கிறது. ஒருவர் மற்றொருவர் சொத்தை அடமானமாகவோ, குத்தகையாகவோ அனுபவிக்கும்போது நிலத்தின் சொந்தக்காரரின் அனுமதியின்றி அந்நிலத்தை அபிவிருத்தி செய்யும் முயற்சியில் ஈடுபடக்கூடாது. அவர் சம்மதம் பெற்று அபிவிருத்தி செய்திருந்தால் அப்போது செலவுத் தொகையைச் சட்டப்படி நிலத்தின் சொந்தக்காரரிடமிருந்து பெறலாம். நிலத்தை ஒப்படைக்கும்போது அங்கு நட்ட மரங்களை நிலத்திற்கு எவ்விதக் கேடும் வராத வகையில் வெட்டி எடுத்துச் செல்ல சுந்தரத்திற்கு உரிமையுண்டு; வேறு எவ்விதப் பரிகாரமும் அவருக்குச் சட்டப்படிக் கிடைக்காது.

[ஆதாரம் : Transfer of Property Act, 22 All.583. y2 IC 262]

வை. ச. ரா.

பொழுது சாய்ந்துவிட்டது.

துளசி விழித்துக் கொண்டாள். ஆனால் சிதறிக் கிடந்த அவள் புத்தியும் மனமும் உடனடியாக ஒன்றுகூட இயலவில்லை. சுழலும் சக்கரங்களின் சுருதி ஓசைதான் அவளுக்கு முதலில் புலப்பட்டது. பாதி மூடிய கண்கள் கார் ஜன்னலையும், அதற்கப்பால் தெரியும் வானத்தின் ஒரு பகுதியையும், ஒன்றன்பின் ஒன்றாக எட்டிப் பார்த்துவிட்டு மறைந்துவிடும் மரங்களையும் அரைகுறையாகக் கவனித்தன. உடல் நோவும் மண்டை இடியும் போட்டியிட, உலர்ந்த அதரங்களை நாவினால் ஒருமுறை நனைத்துக் கொண்டு அவள் அப்படியே கிடந்தாள்.

மங்கலாக, சுயநினைவுக்கும் மயக்கத்துக்கும் இடையிலிருந்த அவளது மனநிலையில், 'ஸ்பிரிங்' வைத்துத் தைத்த காரின் ஆசனம் சுகமாக இருந்தது. பயங்கரமான கனவொன்றைக் கண்ட குழந்தை, தாயின் மடியில் சரண் புகுவதுபோல் துளசி நிம்மதியாகச் சாய்ந்து கொண்டிருந்தாள். ஏதோ பெரிய ஆபத்திலிருந்து தப்பிவிட்ட ஆனந்தமான அமைதி அவள் உள்ளத்தை நிரப்பிக் கொண்டிருந்தது. கனகசபையின் மாளிகையிலிருந்து பாப்பாவால் மீட்கப்பட்டபோது எழுந்த திகிலும் திடீரென்று செந்தில் எதிர்ப்பட்டதால் விளைந்த அதிர்ச்சியும் அவளுக்கு நன்றாக நினைவிருந்தன. செந்தில் தன்னை மாடிக்குத் தூக்கிச் சென்றபோது தனக்கு நினைவு தப்பிவிட்டது என்பதையும் ஊகித்துக்கொண்டாள். இப்போது, தான் அந்தச் சிறைச் சாலையில் இல்லை என்ற அளவில், விடுதலை பெற்றுவிட்டோம் என்ற முடிவும், அதையொட்டிய

மகிழ்ச்சியும் அவளை இயல்புடன் சுவாசிக்க அனுமதித்தன.

தன்னைக் காப்பாற்றியவர்கள் யாராயிருக்கக் கூடும் என்ற ஆவலால் உந்தப்பட்டவளாய் அவள் முன் பக்கம் திரும்பினாள். அவள் இதயம் நின்றுவிட்டது.

காரை ஓட்டிக் கொண்டிருந்தவனை வைத்த கண் வாங்காமல் பார்த்தாள். ஒட்ட வெட்டிய முடி; அந்தத் தலையின் அமைப்பு; விளிம்பில்லாத மூக்குக் கண்ணாடி; காதுகளின் மீது படிந்திருக்கும் கண்ணாடிச் சட்டத்தின் நுனி; மேல் நாட்டு உடை; சிவப்பு நிறம்—

செந்தில்!

கனகசபையின் மாளிகையில் செந்தில் தன்னைத் தூக்கிச் சென்றபோது உண்டான பயமும் ஆத்திரமும் அவமானமும் இப்போது அவளுக்குள் குமுறி எழுந்தன.

பளிச்சென்று எழுந்தாள். கதவுப் பிடியில் கை வைத்தாள்.

செந்தில் சிரித்தான். அவள் சட்டென்று எழுந்தசப்தம் அவன் கவனத்தை இழுத்துவிட்டது போலும்.

''இந்த மாதிரிச் சந்தர்ப்பத்துக்குப் பயன்பட வேண்டுமென்றுதான் பொருத்தமாகக் கார் வாங்கியிருக்கிறான் கனகசபை. இந்த வண்டிக்கு, பின் கதவில் தான் பூட்டு. வெளிப்பக்கம் பூட்டிச் சாவியைப் பத்திரமாக வைத்திருக்கிறேன்.'

ஏமாற்றம் சுள்ளென்று தைக்க துளசி அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

தலையைத் திருப்பாமலே செந்தில் பேசினான். ''அப்படியே நான் பூட்டவில்லை என்று வைத்துக்கொள்ளலாம். என்ன நடக்கும்? இது மாட்டு வண்டியல்ல, நினைத்தபோது கீழே குதிப்பதற்கு. கார் போகும் வேகத்தில் அப்புறம் ஒரு எலும்பைக் கூட உருப்படியாகப் பார்க்க முடியாது. அதுமட்டுமல்ல. கதவைத் திறக்க முற்பட்டால் நான் அதைத் தடுக்க முயல்வேன். கார் எந்த மரத்திலாவது மோதி, நாம் மட்டுமல்ல, ரத்தினத்தின் அப்பாவும் உயிர் துறக்க வேண்டியிருக்கும்.''

அப்போதுதான் துளசிக்குத் தலையில் கட்டுடன் இருப்பது யாரென்று விளங்கிற்று. கோவிந்தனால் தாக்கப்பட்டு இவர் நினைவிழந்து விட்டதாகப் பாப்பா சொன்னாளே! செந்தில் இவரை எங்கே எதற்காக அழைத்துக் கொண்டு போகவேண்டும்?

அவள் மனதில் உதித்த கேள்வியை ஊகித்துக் கொணடவன் போல் செந்தில் தாமோதரத்திடம் பேசும் தோரணையில் துளசியிடம் பதில் சொன்னான்.

''தாமோதரம்! நினைவிழந்துவிட்ட ஒரு சாட்சிக்குக்கோர்ட்டில் மதிப்பில்லை என்று ரத்தினம் முடிவு கட்டிவிட்டார் போலிருக்கிறது. ஆனால் உமக்கு ஞாபகசக்தி வரவழைக்கும் வழி எனக்குத் தெரியும் ரத்தினமும் டாக்டர் குருநாதனுமாகக் கூடி உம்மை நான் நெருங்க முடியாதபடி செய்யப் பார்த்தார்கள். ஆனால் ஏமாறுகிறவன் நானல்ல. ரத்தினம் மரியாதையாகத் தனக்குச் சொத்தில் பங்கில்லை என்று ஒப்புக்கொண்டால் சரி. இல்லாவிட்டால் உம்மைக் கொண்டு நீதி மன்றத்திலேயே, ரத்தினத்துக்கு எவ்வித உரிமையும் இல்லை என்பதை நிலை நாட்டுவேன். ஏனையா, என்ன சொல்கிறீர்?''

தாமோதரம் எப்போதும் போல் அர்த்தமில்லாத பார்வையுடன் பொம்மையாக உட்கார்ந்திருந்தார்.

செந்தில் அடுக்கினான்: ''ரத்தினம் என் சொத்தை அபகரிக்கப் பார்க்கிறார் என்பது மட்டுமல்ல. எனது முறைப் பெண்ணையும் பறிக்க முயல்கிறார். துளசி எனது மாமா பெண். அவளை மணக்க ரத்தினத்துக்கு என்ன உரிமை? சோற்றுக்குத் திண்டாடிய பரதேசிக் குடும்பத்தைச் சேர்ந்தவருக்குச் சொத்தாம், காதலாம்! எங்கேயிருந்து அவர் வந்தாரோ, அங்கேயே அவரை அனுப்பப் போகிறேன். அதுவரையில் எனக்கு உணவும் வேண்டாம்; உறக்கமும் வேண்டாம்.''

கார் மீனம்பாக்கத்தை அடைந்து விட்டது.

விமான நிலையத்திலிருந்து வந்து மவுண்ட் ரோடில் சேர்ந்து கோண்ட ஒரு காரைத் தற்செயலாகப் பார்த்தாள் துளசி. அவள் கண்கள் வியப்பால் விரிந்தன.



## மாறனார் துரிதம்

*மாற்றலாகிப் போகும் மானேஜர் :*

என்னை வழி அனுப்பிக் கொடுப்பதற்காக இவ்வளவு சிரமப்பட்டு வந்திருக்கிறீர்களே? உங்களைப் போன்ற நல்ல குமாஸ்தாக்களை நான் பார்த்ததே இல்லை...டாடா! சீரியோ.

(ரயில் கிளம்பி விட்டது) ஆ! அடபாவிகளா! என் டிக்கெட்டை எடுத்துக்கொண்டு பிளாட்பாரம் டிக்கெட்டையா என்னிடம் கொடுதத்துவிட்டீர்கள்!




எஸ்.ஏ.பி.

## நாற்பத்து நான்கு

வீடு இருள் வசப்பட்டுக் கிடந்தது.

கேட்டுக்குள் நுழையும்பொழுது, பழக்கம் காரணமாக ஹாரனை அழுத்த முன்வந்தது செந்திலின் பெருவிரல். ஆனால் ஏதோ நினைத்துக்கொண்டவன் போல் சட்டென்று விரலை இழுத்துக் கொண்டான் அவன். ஸ்டீயரிங்கை வலது பக்கமாகத் திருப்பினான். காரின் பிரகாசமான விளக்குகள் ஒளி பாய்ச்சின. போர்ட்டிகோ. முன் அறை ஜன்னலின் கீழ் அமைக்கப்பட்டிருந்த மலர்ப் பாத்திகள். மகிழ மரம். கட்டிடத்தின் பக்கவாட்டில் நிறுவப்பட்டிருந்த சிமெண்ட் பெஞ்ச். அனைத்தையும் அடுத்தடுத்துத் தொட்டுப் பின்னுக்குத் தள்ளிவிட்டு வெளிச்சம்ஷெட்டை நோக்கி விரைந்தது.

ஷெட்டுக் கதவு சாத்தப்பட்டிருந்தது. செந்தில் காரை நிறுத்தினான். விளக்குகளை அணைத்தபடி, "சென்னை வந்தாயிற்று. இனிமேல் புது அத்தியாயம் தொடங்குகிறது," என்றான் திருப்தியோடு.

தாமோதரத்துக்கு அது புரிந்ததோ என்னவோ, கொட்டு கொட்டென்று விழித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். செந்தில் பின்னால் திரும்பினான். இருட்டில் துளசியின் முகம் சரியாகத் தெரியவில்லை. மறுபடியும் தூங்கிவிட்டாளோ?

பையிலிருந்த சாவி ஒன்றை எடுத்து ஷெட்டு கதவைத் திறந்து காரை உள்ளே கொண்டுபோய் நிறுத்தினான்.

வீட்டுப் பக்கமிருந்து பேச்சுக் குரல் கேட்டது. வேலைக்காரர்களாய் இருக்க வேண்டும். அவன் பரபரப்புடன் ஷெட்டை விட்டு வெளியே வந்து கதவைப் பூட்டிச் சாவியைப் பைக்குள் போடுவதற்கும், "வந்துவிட்டீர்களா சார்? வந்துவிட்டீர்களா சார்?" என்று தூக்கு மேடையிலிருந்து மீட்கப்பட்ட மகிழ்ச்சியுடன் ஒருவர் அவனை வரவேற்பதற்கும் சரியாக இருந்தது.

அக்கௌண்டண்ட் ஜம்புவின் குரல்.

அந்த இடத்தில் நிற்க விரும்பாதவன் போல் செந்தில் நடந்தான்.

வினயத்துடன் கையைப் பிசைந்தபடி ஜம்பு ஏதேதோ சொல்லிக்கொண்டே வந்தார். செந்தில் ஒன்றுமே பேசவில்லை.

இப்போது வீடு மலர்ந்திருந்தது. விளக்குகள் எல்லாம் போடப்பட்டிருந்தன.

செந்தில் ஹாலுக்குள் நுழைந்ததும் பணியாள் ஒருவன் முன்னே ஓடி, தோள் மீதிருந்த நீலத் துணியொன்றை எடுத்து, சோபாவைத் தட்டிவிட்டான்.

கால் மேல் கால் போட்டபடி அமர்ந்த செந்தில் தலை மயிரை ஒழுங்குபடுத்தியவாறே, "ஏனய்யா, ஒரேயடியாகக் கலாட்டா பண்ணிவிட்டீரே. இரண்டு நாள் நான் ஊரில் இல்லாததற்கே இவ்வளவு பாடென்றால், வெளிநாடு எங்கேயாவது போக நேரிட்டால் கம்பெனியையே இழுத்து மூடிவிடுவீரோ? உம்?" என்று கடிந்து கொண்டான்.

எஜமானரின் தோரணையில் வழக்கத்தைக் காட்டிலும் கடுமை ஒரு துளி குறைவாக இருப்பதையும் அவர் முகத்தில் வெற்றிக் களை தாண்டவமாடுவதையும் கவனித்துத் தெம்படைந்த ஜம்பு, "என்ன சார் செய்யட்டும்! அத்தனை பேருமாகச் சேர்ந்து ஒரே சமயத்தில் கழுத்தில் கத்தி வைக்கப் பார்த்துவிட்டார்கள் சார்," என்று புகார் சொன்னார்,

வேலைக்காரன் ஒருவன் செந்திலின் பூட்சையும் பாதவுறைகளையும் கழற்றி எடுத்துச் செல்ல, "அப்புறம்?" என்றான் செந்தில் கணுக்காலையும், கால் விரல்களையும் பிடித்து விட்டுக்கொண்டே.

"துளைத்தெடுத்து விட்டார்கள் சார் துளைத்து! மணியடித்தால் போனைக்



கையால் தொடவே பயமாகப் போய்விட்டது. ஆபீசிலிருந்தால்தானே இந்தத் தொந்தரவென்று வீட்டில் போய்ப் பதுங்கினால் அங்கேயும் ஒருவன் வந்துவிட்டான். ஏன் சார், தந்தி கிடைத்துத் தான் புறப்பட்டீர்கள் போலிருக்கிறது?''

''எந்தத் தந்தியைச் சொல்கிறீர்! ட்ரங் கால் போட்டபிறகு தந்தி வேறு அடித்தீரா என்ன!''

''நான் கொடுக்கவில்லை சார். ப்ராங்க் காரியதரிசி...'' என்று ஆரம்பித்த ஜம்பு திணறினார். முகத்தில் அசடு வழியத் தொடங்கி விட்டது. ''அது வந்து... வந்து...''

'அது' என்று ஜம்பு குறிப்பிட்டதன் வருகையை எதிர்நோக்கிச் செந்தில் அவரையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அவனது கண்களின் கூர்மையினின்று தன்னைக் காத்துக்கொள்ள முடியாத அக்கௌண்டண்ட், ''நான் வேண்டாமென்றுதான் சொன்னேன் சார். அவர் பாட்டுக்குத் தந்தி கொடுத்துவிட்டார் சார்,'' என்று உண்மையை மறைக்க முயன்றார்.

செந்தில் நிமிர்ந்து உட்கார்ந்தான். ''யாருக்குக் கொடுத்தார்!''

ஜம்புவுக்கு உதறல் எடுத்தது. மென்று விழுங்கியபடியே, ''பெரியவருக்கு சார்,'' என்றார்.



மற்றுமொரு தவறை — முன்னதைக் காட்டிலும் பன்மடங்கு மோசமான ஒரு பிழையை—தான் செய்துவிட்டது செந்திலின் கண்களைப் பார்த்தபோது தான் ஜம்புவுக்கு விளங்கிற்று.

அவை கண்களா, நெருப்புத் துண்டங்களா? எல்லாம் 'பெரியவர்' என்ற அந்தச் சொல்லால் வந்த வினை!

செந்தில் எழுந்துவிட்டான். "என்னவென்று தந்தி கொடுத்தார்?"

ஜம்புவின் குரல் கிணற்றுக்குள்ளிருந்து வந்தது. "தெரியாது சார்."

"ஓகோ!" என்றான் செந்தில். "அவர் தந்தி கொடுத்தது மட்டும் உமக்கு எப்படித் தெரியும்?"

அக்கௌண்டண்டைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

"நான் சொல்லட்டுமா?" என்று கேட்டான் செந்தில். "விழி பிதுங்க நீர் அவரிடம் ஓடியிருப்பீர். குடிமுழுகிப் போய் விட்டதென்று கதறியிருப்பீர். 'பெரியவர்' வந்தாலொழிய காரியம் மிஞ்சிவிடும் என்று புலம்பியிருப்பீர். 'ஆதிமூலமே காப்பாற்று' என்று அவர் 'பெரியவ'ருக்குத் தந்தியடித்திருப்பார். அப்படித் தானே? ஏய் ஜம்பு, என்னைப் பாரும். என் ஊகம் சரிதானா?"

கீழுதடு தொய்ந்து நடுங்க, ஜம்பு கூனிக் குறுகினார்.

"நான் கேட்கிறேன்; பதில் சொல்லாமல் நிற்கிறீரா?" அவன் அவரை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தான்.

தலை நரைத்த ஜம்பு கையெடுத்துக் கும்பிட்டார். "சார், தெரியாமல் செய்து விட்டேன் சார். மன்னித்துக்கொள்ளுங்கள் சார்," என்று கூறியபோது தொண்டை அடைத்தது.

"அதை என்னிடம் ஏன் கேட்கிறீர்? 'பெரியவ'ரிடமே கேட்டுக்கொள்ளும்." செந்தில் பற்களினூடே பேசினான். "சிபாரிசுக்கு ஆள் வேண்டுமென்றால் இருக்கவே இருக்கிறார் பாங்க் காரியதரிசி."

"சார்," என்று கெஞ்சினார் அக்கௌண்டண்ட். "கம்பெனி நன்றாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் தான் காரியதரிசியிடம் போனேன் சார், திரண்ட செல்வமும் தொழில் திறமையும் வாய்ந்த உங்களுக்கு லட்சக் கணக்கில் கடன் வாங்குவதும் திருப்புவதும் பந்து விளையாட்டுப் போல் இருக்கலாம். இரண்டு நாள் தாக்குப் பிடிப்பதும் ஒரு பெரிய காரியமா என்று உங்களுக்குத் தோன்றலாம். உங்கள் சாமர்த்தியத்தில் நூற்றில் ஒரு பங்காவது, உங்கள் தன்னம்பிக்கையில் ஆயிரத்தில் ஒரு பங்காவது எனக்கு இருக்க முடியுமா சார்? நான் ஏழை. அதிலும் கிழவன். காரியாலயத்தில் எப்படியிருந்தாலும், வீட்டிலே பெட்டியில் நூறு ரூபாய் வைத்து என்றைக்குமே பார்த்தவனல்ல. கம்பெனிக்குக் கடன் கொடுத்திருக்கிறவர்களோ லட்சாதிபதிகள்; அல்லது பாங்குக்காரர்கள். என்னால் அவர்களுக்குப் பதில் சொல்ல முடியுமா? அல்லது என் வார்த்தையைத்தான் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்களா? நீங்களே சொல்லுங்கள்." ஜம்புவின் குரல் கம்மிற்று. "உங்களையோ காணோம். நெருக்கடியோ நிமிடத்துக்கு நிமிடம் மோசமாகிக் கொண்டே போகிறது. எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போல் ஆகிவிடவே, உங்கள் தந்தையின் நண்பரும் எனக்குத் தெரிந்த ஒரே பெரிய மனிதருமான அந்தப் பாங்க் காரியதரிசியிடம் ஓடினேன். அவர் ரத்தினத்தின் விலாசத்தை வாங்கிக்கொண்டு தந்தி கொடுப்பதாகச் சொன்னார். அவ்வளவுதான் நடந்தது."

"இனி நடக்கப்போவதை நான் சொல்லுகிறேன்." என்றான் செந்தில் பரிகாசமாக. "நாளைக் காலை பத்தரை மணிக்குக் காரியாலயத்துக்குவந்துபாரும். ஏன் ஜம்பு, அந்த சுந்தரம்தானே உதவி அக்கௌண்டண்ட்? அவனும் ரொம்ப நாளாகப் பிரமோஷன் வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறான்."

"சார்..."

"என்ன சார்?"

ஜம்புவின் கண்களில் நீர் ததும்பிற்று. "கம்பெனி ஆரம்பித்த காலத்திலிருந்து நான் இருந்து வருகிறேன் சார்."

"இனிமேலாவது அதற்கு நல்ல காலம் பிறக்கட்டும். போய் வாரும்."

அக்கௌண்ட்டண்டின் கன்னங்களில் நீர் வழிந்தது. "சார், என் வாழ்க்கை முழுவதையும் கம்பெனிக்காகத் தியாகம் செய்திருப்பதை நினைத்துப் பாருங்கள் சார்."

"மாதம் தவறாமல் வாங்கிக் கொண்ட சம்பளத்தை நீர் நினைத்துப் பாரும் சார். தியாகம் செய்தாராமே தியாகம்! உம்மைப் போலொரு வடிகட்டின உதவாக்கரையை இத்தனை காலம் கட்டிக் கொண்டு கம்பெனி அழுததே, அது தான் உண்மையான தியாகம் ஜம்பு."

அக்கௌண்டண்ட் தள்ளாடினார். தன் மானத்தை என்றோ கைவிட்டிருந்த அவருக்கு, தனது குடும்பத்தின் நிலை மட்டுமே நினைவில் இருக்கது. "குடும்பம் முழுவதுமே என்




"ராமச்சந்திரன் விட்டிலே இன்றைக்கு மத்தியானம் எனக்கு விருந்துச் சாப்பாடு. போகிறேன்!"

"அப்போ ராத்திரிச் சாப்பாட்டுக்கு உங்களுக்கு ஒன்றும் செய்ய வேண்டியதில்லையே?"

கையைத்தான் நம்பியிருக்கிறது சார். மூத்த பையன் மூனு மாசமாய்ப் படுக்கையிலே கிடக்கிறான். சின்னப்பெண் பிரசவத்துக்கு வந்திருக்கிறாள். எனக்கு வேலை போய் விட்டால் சிறியதும் பெரியதுமாக எட்டு வயிறு பட்டினி கிடக்க வேண்டியிருக்கும் சார்.'' குழந்தை போலத் தேம்பித் தேம்பி அழுதுவிட்டார் ஜம்பு.

''ஏய்!'' என்றான் செந்தில், வேலைக்காரனை நோக்கி. ''நமது மாஜி அக்கௌண்டண்டுக்கு உடம்பு சரியில்லை. அவரைப் பத்திரமாக அழைத்துப் போய் வீட்டில் விட்டுவிட்டு வா.''

வேலைக்காரன் தயங்கினான்,

''ஏன், உனக்கும் உடம்பு சரியாய் இல்லையோ?''

செந்திலின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்ட வேலைக்காரன் பாய்ந்து வந்து அக்கௌண்ட்டண்டை அடைந்தான்.

''கொஞ்சம் இரப்பா. சார், கடைசியாக ஒரு வேண்டுகோள்,'' என்று மன்றாடினார் ஜம்பு. அவருடைய கண்கள் ஹாலின் மறு புறத்தில் மாட்டப்பட்டிருந்த ஆளுயரப் புகைப் படத்தை நாடின. ''ஒரே வயதினரானாலும் என் தந்தைக்கு சமானமானவரும் உத்தமரும் என்னை ஒரு மனிதனாக்கிவிட்ட கருணைக் கடலுமான உங்கள் தந்தையின் பாதத்தை ஒருமுறை தொட்டு வணங்க எனக்கு அனுமதி தர வேண்டும்.''

''அட! தொட்டு வணங்கினால்தான் வணக்கமா என்ன? சும்மா இங்கிருந்தபடியே ஒரு கும்பிடு போட்டுவிட்டுப் போம்.''

''தயவு பண்ணுங்கள்,'' என்றார் ஜம்பு. ''ஒரு தரம்; ஒரே ஒரு தரம் தொட்டு வணங்க அனுமதி கொடுங்கள். நீங்கள் எனக்கு மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் கொடுத்து ஆயுட்காலம் வரை வேலையில் வைத்துக் கொண்டதாக நினைத்து நன்றி செலுத்துவேன்.''

முகத்தைச் சுளித்த செந்தில், ''சரி சரி, சீக்கிரம் ஆகட்டும்,'' என்றான்.

அக்கௌண்ட்டண்ட் படத்தை நோக்கி நடந்தார். பணிவோடு, அன்புடன், தூய்மை நிறைந்த ஒரு புனிதமான இடத்தை அணுகுபவர் போல் சென்று புன்னகையுடன் காட்சியளித்த அந்த முகத்தைப் பார்த்தபடி நின்றார். கண்களினின்று நீர் தாரை தாரையாகப் பெருகிற்று.

''ஆகா! என்ன விசுவாசம், என்ன பக்தி!'' என்றான் செந்தில் எட்ட நின்றபடி. ''எஜமானருக்கேற்ற அக்கௌண்டண்ட்; அக்கௌண்ட்டண்டுக்கேற்ற எஜமானர்! எல்லாம் போதுமப்பா, புறப்படும்.''

ஜம்பு சிரம் தாழ்த்தி, படத்திலிருந்த உருவத்தின் பாதத்தைக் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டார். அவரை அழைத்துக் கொண்டு வெளியேறிய வேலைக்காரன் செந்திலின் பார்வையினின்று மறைந்ததும் விழிக் கடையில் துளித்த நீரைச் சுண்டி எறிந்தான்.

உள்ளே டெலிபோன் மணி அடித்தது.

அதரங்களை நாக்கு நுனியால் ஒரு தடவை ஈரப்படுத்திக் கொண்டாள் துளசி.

மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்து புறப்பட்டுத் தங்கள் பின்னாலேயே வந்து கொண்டிருந்த கார் எங்கே போயிருக்கும்! ஆவலால் விம்மிய அவள் இதயம் திகிலால் வெடித்துவிடும் போலிருந்தது. அந்தக் காரைச் செந்தில் கவனிக்கவில்லை என்பது அவளுக்குத் தெரியும். அவன் கவனித்துவிடக் கூடாது என்றுதான் அவள் பலங் கொண்டமட்டும் வீடு வரும் வரை பிரார்த்தனை செய்தாள். தன்னை யாரோ பின் தொடருவது தெரிந்துவிட்டால், செந்தில் தான் செல்லும் பாதையில் ஏதேனும் திடீர் மாறுதல் செய்து, அந்தக் காரின் பார்வையிலிருந்து நழுவிவிடக் கூடுமல்லவா? தான் பின்பற்றப் படுவது கடைசிவரை செந்திலுக்குத் தெரியவில்லை என்ற அளவில் அவள் பல்லைக் கடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்ததற்குப் பலன் கிடைத்துவிட்டது. ஆனால் அவள் எதிர் பார்த்தபடி விடுதலை அவ்வளவு சீக்கிரம் கிடைத்துவிடவில்லை.

ஷெட்டில் அவர்களை வைத்துப் பூட்டி விட்டுச் செந்தில் போய் அரை மணி நேரமிருக்கலாம். துளசிக்கோ ஒவ்வொரு நிமிடமும் ஒரு யுகமாகத் தோன்றிற்று. உதவி கோரிக் கூச்சல் போடுவதற்கும் செந்தில் சுதந்திரம் கொடுத்துவிட்டுப் போயிருந்தான், ஆனால் ஒதுப்புறமான இடத்தில் அமைக்கப்பட்டிருந்த அந்த ஷெட்டுக்குள்ளிருந்து தொண்டை கிழியக் கத்தினாலும் ஒருவர் காதிலும் விழாது என்பதைத் துளசி அறிவாள். மேலும், அவசரப்பட்டு ஏதாவது செய்து செந்திலின் கோபத்துக்கு ஆளாவதைக் காட்டிலும் கொஞ்ச நேரத்துக்குப் பொறுமையாக இருப்பதே நல்லது என்று அவள் உள்ளுணர்வு வற்புறுத்திக்கொண்டே இருந்தது.

இருட்டில் கார் கடியாரத்தின் ஓசையும்

ரேடியம் தடவிய முட்களின் நிலையும் தெளிவாகப் புலப்பட்டன. 7—15. சாளரம் கிடையாது அந்த ஷெட்டில், காற்றோட்டம் இல்லாததால் எழுந்த வீச்சம் கனகசபையின் வீட்டில் அவள் அடைபட்டிருந்த நிகழ்ச்சியை நினைவுக்கு இழுத்து வந்து அவள் உடலைச் சிலிர்க்க வைத்தது. இந்நேரம் மறந்து போயிருந்த கால் காயமும், மருந்துப் பசி கொண்டு அவள் நரம்புகளைச் சுண்டி இழுத்தது.

முன் சீட்டில் அப்படியே அசையாமல் உட்கார்ந்திருந்த தாமோதரத்தின் நிலையை எண்ணிப் பார்க்கும்போது துளசிக்கு நெஞ்சை அடைத்தது. சுய நினைவு உள்ளவராக இருந்தால் இவ்வளவு நெருக்கடியான கட்டத்தில் அவர் செயலற்று உட்கார்ந்திருப்பாரா?

''மாமா!'' என்று அழைத்தாள் அவள்.

பலனில்லை. மேலும் இருமுறை அவள் அழைத்தது வீணாயிற்று. அவர் வாய் திறந்து பேசினால் எவ்வளவு ஆறுதலாய் இருக்கும்! ஒருவருக்கு மற்றவர் துணை நிற்க, இருவருக்கும் பொதுவான விரோதியை எத்தனை தன்னம்பிக்கையுடன் சமாளிக்கலாம்!

பெருமூச்சு விட்டவாறு அவள் பின்னால் சாய்ந்தபோதுதான் ஷெட்டு கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டது.

செந்தில் வந்தான். இருட்டில்காருக்குள் தலையை நீட்டியபடி, ''இரண்டுபேருமே சமர்த்தாக இருக்கிறீர்கள் போலிருக்கிறதே!''என்று மெச்சியவன், ''இன்னும் கொஞ்ச நேரத்துக்குத்தான். அப்புறம் நான் வந்து கூட்டிக்கொண்டு போகிறேன்,'' என்று அறிவித்தவனாய்த் திரும்பச் சென்றான்.

காரின் பின்புறப் பெட்டி கிரீச்சென்று திறந்துகொண்டது.

அடுத்த வினாடி, 'ஆ!' என்ற திகைப்பொலி செந்திலிடமிருந்து வெளிப்பட்டது.

பெட்டிக்குள் கையை விட்டு அவன் எதையோ பரபரப்புடன் தேடுகிறான் என்பதற்கடையாளமாகத் தகர டப்பாக்கள், பழுதுபார்க்கும் கருவிகள் ஆகியவை ஒன்றோடொன்று மோதிக்கொண்டன.

எங்கேயோ இருந்த ஒரு விசையை அவன் தட்டிவிட ஷெட்டிலிருந்த மின்சார விளக்கு எரியத்தொடங்கிற்று. அந்த வெளிச்சத்தில் மற்றுமொருமுறை பெட்டியைக் குடைந்தவன் படபடப்புடன் வந்து துளசியையும் தாமோதரத்தையும் மாறிமாறிப் பார்த்தபடி, ''தோல் பெட்டி வைத்திருந்தேனே, எங்கே? யார் எடுத்தார்கள்?'' என்று அதட்டினான்.

தூங்குபவள்போல் துளசி பாசாங்கு செய்தது இயல்பாக இருந்தது போலும்.

அவன் அவளைக் கடந்து தாமோதரத்திடம் சென்றான். அவர் தோள்களை உலுக்கினான். ''தாமோதரம்! என்னய்யா திருட்டு விழி விழிக்கிறாய்? எங்கே என் பெட்டி? என் பெட்டியை என்ன செய்தாய்?''

துளசி லேசாகக் கண்களைத் திறந்து பார்த்தாள். எதிர்பாராத அதிர்ச்சி காரணமாகச் செந்திலின் குரலைப் போலவே முகமும் விகாரமாக மாறியிருந்தது.

அப்பாவியான மாமாவைப் போட்டுச் செந்தில் துன்புறுத்துவது அவளுக்கு ஆத்திரமூட்டிற்று. அதே சமயம் தாமோதரத்தின் அரைக் கிறுக்குப் பார்வை செந்திலின் கோபக்கனலைப் பெருந் தீயாக மூட்டிவிட்டது.

''இப்படி வெளியில் வாய்யா,'' என்று உறுமியபடி அவன் அவர் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்தபொழுது கார் கதவு தாமோதரத்தின் தலையில் இடித்துவிட்டது.

பொறுமையிழந்த துளசி, ''எதற்காக அவரை இம்சிக்கிறீர்கள்? அவர் என்ன செய்தார்?'' என்று குறுக்கிட்டாள்.

செந்தில் துளசியின் பக்கம் பாய்ந்தான். ''உனக்கேன் கோபம் சீறிக்கொண்டு வருகிறது? இரண்டுபேரும் கூட்டாகச் செய்த வேலையா இது? எங்கே என் பெட்டி?''

## சிமிட்டாதார்



"இன்னும் ஒரு சிமிட்டா தாம்பா இருக்கு. அதையும் தீர்த்துவிடு. டப்பியை உன் கிட்டேயே கொடுத்து விடுகிறேன். கொஞ்சம், முந்தி இருந்த மாதிரி அது நிறையப் பொடி வாங்கி அடைத்துத் திருப்பிவிடு..."

"வைத்த இடத்தில் பாருங்கள்," என்றாள் துளசி.

"வைத்த இடத்தில் காணாததால்தான் கேட்கிறேன்."

"எங்கே வைத்தீர்கள்?"

"பின்புறப் பெட்டியில்."

"பெட்டியைத் திறந்துவைத்துப் போயிருந்தீர்களா?"

"இல்லை."

"சாவி?"

"என்னிடம்தான் இருக்கிறது."

சினத்தால் அவள் உதடுகள் துடித்தன. "அப்புறம் நாங்கள் எப்படி அதை எடுத்திருக்க முடியும்?"

மோவாயைப் பிசைந்துகொண்டு நின்ற செந்தில் திடீரென்று பின் கதவைத் திறந்துகொண்டு வண்டிக்குள் ஏறுவதைக் கண்டதும் துளசிக்குப் பகீரென்றது. ஆனால் அவன் அவளை ஒன்றும் செய்யவில்லை. பின் ஸீட்டைப் பலமாக அசைத்துப் பார்த்தான். அவன் சந்தேகப்பட்டபடி பின்புறப் பெட்டிக்கும் அதற்கும் எவ்விதத் தொடர்பும் இருக்கவில்லை.

செய்வதறியாமல் செந்தில் குழம்பிக் கொண்டிருந்த பொழுது ஷெட்டுக்கு வெளியே ஆளரவம் கேட்டது. உள்ளே நுழைந்தவுடன் செந்தில் கதவைச் சாத்தி விட்டிருந்தானாகையால், அதற்கப்பாலிருந்து வந்த, "சார்!" என்ற அழைப்பு மிக லேசாக வந்தது.

குபீரென்று காரைவிட்டு இறங்கியவன் சட்டென்று விளக்கை அணைத்தான். "உஸ்...சப்தம் போட்டாய், தீர்த்துவிடுவேன் தீர்த்து!" என்று துளசியை எச்சரித்துவிட்டுக் கதவைச் சற்றே திறந்து வெளியே சென்றான்.

வேறு யாருமல்ல, ஒரு பணியாள்தான்.

"என்ன இது? ஏன் இங்கு வந்தாய்?"

"நாலைந்து கார் வந்திருக்கிறது சார். நீங்கள் போன் பண்ணினீர்களாமே?"

செந்தில் உதட்டைக் கடித்துக் கொண்டான். பிறகு ஷெட்டைப் பூட்டிவிட்டு வேலைக்காரன் பின் தொடர வீட்டை நோக்கி நடந்தான்.

ஹாலில் உட்கார்ந்திருந்தவர்கள் தமக்குள் உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ஏதோ நிலாச் சாப்பாட்டுக்கு வந்தவர்கள்போல் காட்சியளித்தார்களே தவிர, கடன்காரர்கள்போல் தோற்றம் தரவில்லை. ஒருகால் செந்தில் போன் செய்வதற்கு முன்பு அவர்களாகவே அவனைத் தேடிக் கொண்டு வந்திருந்தால் பேச்சும் நடத்தையும் வேறு விதமாக இருந்திருக்குமோ என்னவோ! இப்போது உண்மையான குதூகலத்துடன் அவர்கள் அளவளாவிக் கொண்டிருந்தார்கள்.

"அதோ செந்தில்!" என்று யாரோ அவன் வருகையைச் சுட்டிக் காட்ட, அனைவரும் அவனை ஒருமுகமாக ஆரவாரத்துடன் வரவேற்றனர். அவனது நாணயத்தில் என்றைக்குமே எள்ளளவும் ஐயம் கொண்டிராதவர்கள் போலவும், அவன் நிறைக்கு நிறை தங்கம் பெறுமானமுள்ளவன் என்று கருதி வந்தவர்கள் போலவும் அவர்கள் பாராட்டுரை வழங்க, அவன் சிரித்த முகத்துடன் நுழைந்தான்.

கைகூப்பியவர்களை வணங்கினான். கை நீட்டியவர்களுக்குக் கரம் கொடுத்தான். புன்னகை செய்தவர்களை நோக்கி முறுவலித்தான். ஆனால் அந்த முறுவலுக்குப் பின் குழம்பிக்கொண்டிருக்கும் சிந்தையையும், நெருக்கடியை எவ்வாறு சமாளிப்பது என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கும் புத்தியையும் ஊகித்தவர் அங்கு யாருமில்லை.

உபசாரம் பலமாக நடந்தது. அரட்டைக்கும் சிரிப்புக்கும் ஓய்வு நேர அரை மணி ஆயிற்று. அப்போது செந்தில் ஒரு முறை கனைத்துவிட்டு ஆரம்பித்தான்.

"என்னுடைய திறமையிலும் என் கம்பெனியின் முன்னேற்றத்திலும் நீங்கள் இத்தனை நம்பிக்கை வைத்திருப்பதைப் பார்த்து எனக்கு ரொம்பத் திருப்தியாக இருக்கிறது. பத்துக் கோடி ரூபாயை மூலதனமாகப்போட்டு ஐந்து கோடியைப் புழக்கத்துக்கென்று ஒதுக்கிவைத்தாலும் கூட அந்தத் தொழிலிலும் ஒவ்வொரு சமயம் பண நெருக்கடி ஏற்படத்தான் செய்யும். ஆனைப்பட்ட பிர்லா, டால்மியாகூடச் சில நேரத்திலே திணறிப் போவதுண்டு. அவ்வளவு தூரம் போவானேன்? உங்களையே எடுத்துக்கொள்ளுங்கள். ஏதோ நெருக்கடி என்று ஏற்பட்டதால்தானே நீங்கள் எல்லாம் என்னை வந்து அமுக்குகிறீர்கள்? தனிப்பட்ட முறையிலே என்மேலே உங்களுக்கு ஏதாவது கோபமா, குரோதமா?"

"அதெல்லாம் இல்லை," என்று ஆமோதித்தார் ஜரிகை அங்கவஸ்திரக்காரர் ஒருவர்.

"உண்மையைச் சொல்லப் போனால் எந்தத் தொழிலிலே பண நெருக்கடி இல்லையோ அந்தத் தொழில் அழிந்து போய்விடும் என்று சொல்லலாம். நெருக்கடிதான் வளர்ச்சிக்கு அறிகுறி. ஐந்து ரூபாயை நான் கையில் வைத்துக்கொண்டு

ஒரு ரூபாயை மாத்திரம் பிஸினஸிலே போட்டேனானால் எனக்கு நெருக்கடி இல்லாமல் இருக்கலாம்—அதுவும் தற்போதைக்கு. ஆனால் அது நாட்டுக்குப் பெரிய நஷ்டம். இல்லையா?

"செந்தில் சொல்வதும் மெய்தான்," என்று ஒரு குரல் கேட்டது.

செந்தில் தொடர்ந்தான். "பணம் இல்லாத காரணத்தினாலே திறமை வீண் போகக் கூடாது. திறமை தவித்துக் கொண்டிருக்கும்போது பணம் தூங்கக் கூடாது. இரண்டும் மகாபாவம். திறமையும் பணமும் கைகோத்து வேலை செய்தால் நாட்டிலிருக்கும் செல்வத்தைப் பத்து மடங்காகப் பெருக்கிவிடலாம். இதெல்லாம் உங்களுக்குத் தெரியாததில்லை. தெரிந்ததனாலேதான் எனக்கு வேண்டிய உதவியும் செய்து தட்டிக் கொடுத்து ஊக்கம் தருகிறீர்கள்."

வெற்றிலை போட்டுக்கொண்டிருந்த தடித்த நபர் ஒருவர், "உங்கள் மாதிரித் திறமைசாலிக்கு உதவி செய்ய எங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததே. அதுவே பெரிது," என்று கூற, மற்றவர்கள் அவருக்கு ஒத்தூதினார்கள்.

"உங்களுக்கெல்லாம் எப்படி நன்றி சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை," என்றான் செந்தில். "அக்கௌண்டண்ட் ஐம்பு சொன்னதைக்கேட்டு நான் உங்களைப்பற்றி ரொம்பத் தப்பாக நினைக்கிறாற்போல் ஆகிவிட்டது. இப்போது நேரில் கண்டு பேசியதில் உங்கள் மனத்தை உள்ளபடியே புரிந்துகொண்டேன். உங்களுடைய ஆசீர்வாதத்தினாலே கம்பெனி மேன்மேலும் வளர்ச்சியடைந்து கூடிய சீக்கிரத்திலே உங்கள் கடனைத் திருப்பிக் கொடுக்கும் நிலையை அடையும் என்று நம்புகிறேன்." செந்தில் முடித்துவிட்டு, தம்ளரிலிருந்த காப்பியை எடுத்துச் சாவகாசமாக உறிஞ்சினான்.

மயான அமைதி.

ஜரிகை அங்கவஸ்திரக்காரரின் முகத்தில் ஈயாடவில்லை. வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தவர் காவிப் பற்கள் வெளியே தெரியத் திறந்த வாயுடன் உட்கார்ந்திருந்தார். தம் காதுகளை நம்ப முடியாமல் எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

திடீரென அந்த அறையில் மின்சாரம் பாய்ந்தது.

மீசை துடிக்க விருட்டென்று எழுந்தார் தலைப்பாகைக்காரர். பக்கத்திலிருந்த முக்காலி கவிழ்ந்து, தம்ளர் கீழே விழுந்தது. "என்ன சார், விளையாடுகிறீர்களா?"

"இல்லையே!" என்று மறுத்தான் செந்தில். "இன்னும் பத்து நாள் அவகாசம் வேண்டும். அவ்வளவுதான்."

கசமுசவென்று பல குரல்கள். ஒரே சமயத்தில் எழுந்தன. மயான அமைதி சந்தை இரைச்சலாக மாறிற்று.

"நீங்கள் என்னதான் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்?" என்று ஒரு கேள்வி.

"நீங்கள் போனிலே கூப்பிட்டுச் சொன்னதென்ன? இப்போது நடந்து கொள்ளும் மாதிரி என்ன?" என்று மற்றொன்று.

"உங்களுக்குக் கொடுக்கவேண்டியதையெல்லாம் சலவை நோட்டாய் எண்ணி வைக்கிறேன், உடனே புறப்பட்டு வாருங்கள் என்று கூப்பிட்டுவிட்டுக் கிண்டலா பண்ணுகிறீர்கள்?" இது இன்னொன்று.

செந்திலின் முகம் சிவந்தது. அவனது புற அமைதி கரைய உட்குமுறல் மேலெழும்பிக் கொண்டிருந்தது. "நான் போன் செய்தபோது என்னிடத்தில் பொருள் இருந்தது உண்மை. ஆனால் அதற்குள்ளே ஒரு துரதிர்ஷ்டம் நிகழ்ந்துவிட்டது. அதனாலேதான் இந்த ஒத்திவைப்பு."

"கேட்டீர்களா கதையை? அரை மணிக்கு முன்னடி நமக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கட்டுக் கட்டாய் எண்ணி வைத்திருந்தாராம். இப்போது திடீரென்று காணாமல் போய்விட்டதாம். மிஸ்டர் செந்தில், உங்களைப்போல எத்தனையோ பேரைப் பார்த்திருப்போம். இந்தப் பருப்பெல்லாம் எங்களிடம் வேகாது."

செந்தில் தம்ளரை முக்காலியில் வைத்தான். எழுந்தான். "பிறகு உங்கள் இஷ்டம். ஆனதைப் பார்த்துக்கொள்ளுங்கள். வணக்கம்," என்று கூறிவிட்டு மாடிக்குப் புறப்படத் திரும்பினான்.

"என்ன அகம்பாவம்!" என்று பல்லைக் கடித்தார் அங்கவஸ்திரக்காரர். பொறுமையிழந்த இருவர் முரட்டுத்தனமாக அவன் மீது கை வைத்து, "அவ்வளவு சுலபத்தில் நீ தப்பிவிட முடியாது," என்று இழுத்தபோதுதான், "கொஞ்சம் பொறுங்கள்," என்ற குரல் வாசல்புறமிருந்து கேட்டது.

எல்லோருடைய கவனமும் வாசல் பக்கம் திரும்பிற்று.

ரத்தினமும், பாங்க் காரியதரிசியும்!

"ரத்தினம்!" என்று திகைத்தார் தலைப்பாகைக்காரர். "இத்தனை நாளாக எங்கே அப்பா போயிருந்தாய்?"

அவரைத் தொடர்ந்து மற்றவர்களும் ரத்தினத்தைச் சூழ்ந்து கொண்டார்கள்,

"ஏன் நிற்கிறீர்கள்? உட்காருங்கள். உட்கார்ந்துகொண்டே பேசுவோம்," என்றான் ரத்தினம். "பாங்க் காரியதரிசி தந்தி கொடுத்திருந்தார். நல்ல வேளையாகப் பிளேன் புறப்படுவதற்குள் திருச்சி வந்து சேர்ந்துவிட்டேன். எல்லோரும் ஒரே படபடப்பாக இருக்கிறீர்களே, ஏன்?"

பலர் விளக்கம் சொல்ல முற்பட்டார்கள்.

"எல்லாம் உங்கள் தம்பி செய்கிற திருவிளையாடல்தான்."

"போகிறது போகிறது என்று பார்த்தால் இப்போது முதலுக்கே மோசம் வந்துவிடும் போலிருக்கிறது!"

"ஒரு மானமுள்ள மனிதன் செய்கிற வேலையா சார் இது? கடனைப் பைசல் பண்ணுகிறேன் என்று அழைத்துவிட்டு இப்போது கையை விரிக்கிறார். ஆனதைப் பாருங்கள் என்று சவால் வேறு விடுகிறார்."

"அவர் இன்னும் எங்களைச் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை. மனம் வைத்தோமானால் அவர் இருக்கும் இடத்தில் புல் முளைத்துப்போகும்படி செய்துவிடுவோம்! ஆமாம்!"

கையமர்த்தினான் ரத்தினம். "கோபமாக இருக்கிறீர்கள் எல்லோரும். என் தம்பி என்ன சொல்லியிருந்தாலும் அவன் சார்பில் நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். நான் கடந்த சில காலமாய் ஊரில் இல்லாததனால் கம்பெனி நிலவரம் தெரியாது. கொஞ்ச நாள் பொறுத்துக்கொள்ளுங்கள். பைசா குறையாமல் பாக்கி பூராவையும் தீர்ப்பதற்கு ஏற்பாடு செய்துவிடுகிறேன். என்னை நம்புங்கள்."

"அது சரிதான் ரத்தினம்," என்றார் ஜரிகை அங்கவஸ்திரக்காரர். "என்ன இருந்தாலும் உன் தம்பி..."

"கிடக்கிறது விடுங்கள்," என்று அவரைச் சமாதானம் செய்தார் மற்றொருவர். "ரத்தினமே உறுதி சொன்னபிறகு மறுத்துப் பேச நமக்கு வாய் ஏது?"

பருத்தவர் பேசினார். "கம்பெனி நன்றாக இருக்க வேண்டும், உங்கள் குடும்பம் சௌக்கியமாக இருக்க வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம். நீபாட்டுக்கு அங்கே இங்கே என்று போய்விடாமல் கம்பெனியைக் கவனித்துக்கொள். அப்பா பெயரைக் காப்பாற்று. வேறு சொல்வதற்கு என்ன இருக்கிறது! வாருங்கள் போவோம்."



சபா காரியதரிசி: சபையோர்களே! பாகவதருக்குப் போடுவதற்காக வாங்கிய மாலை தவறுதலாக ரொம்பச் சிறியதாக அமைந்துவிட்டது. ஆகையால் இதை அவர் கையிலேயே கொடுத்துவிடுகிறேன்!

சூழ்நிலை முற்றிலும் மாறிவிட்டது. ஒவ்வொருவரும் தத்தமக்குத் தோன்றிய விதத்தில் இதமாக ஒரு வார்த்தை ரத்தினத்திடம் பேசிவிட்டு விடைபெற்றுக் கொண்டார்கள்.

கடைசிக் கார் கிளம்பியதும், ரத்தினம் உள்ளே வந்தான். செந்திலைக் காணோம்.

"மாடிக்குப் போய்விட்டான் போலிருக்கிறது," என்றார் பாங்க் காரியதரிசி.

"பத்திரத்தை எடுத்து வைத்திருக்கிறேன். அதை அவனிடம் கொடுத்துவிட்டு வந்துவிடுகிறேன்," என்று ரத்தினம் மாடிப்படிகளை நோக்கி நடந்தான்.

பத்திரிகைக்காரப் பையன் வீசி எறிந்துவிட்டுச் சென்ற செய்தித்தாளை ஒரு வேலைக்காரன் எடுத்து வந்து தர, பாங்குக் காரியதரிசி சோபாவில் சாய்ந்தபடி தலைப்புக்கள்மீது நோட்டம் விட்டார்.

அவர் மூன்றாவது பக்கத்தைப் புரட்டியபோது,சடாரென்று பிரேக் போட்டுப் போர்ட்டிகோவில் ஒரு கார் நிறுத்தப்படுவது கேட்டது, கதவுகள் திறந்து ஓங்கிச்

சாத்தப்படும் ஓசை. தடதடவென்று யாரோ படியேறி வந்தார்கள்.

பத்திரிகையைச் சற்றே கீழே தாழ்த்தி விட்டுப் பாங்க் காரியதரிசி பார்த்தார்.

"எங்கே அவன்? அவன்எங்கே?" என்று கேட்டபடி வந்தான் கோவிந்தன். அவன் தலையெல்லாம் கலைந்திருந்தது. நெடுந் தூரம் பயணம் செய்த களைப்புக்கு மேலே பரபரப்பும் துடிப்பும் பொரிந்து கொண் டிருந்தன. அவனை அடையாளம் கண்டு கொண்டார் பாங்க் காரியதரிசி. "யாரைக் கேட்கிறாய், ரத்தினத்தையா? மாடியில் இருக்கிறான்."

"மாடியில் இருக்கிறாராவது? அண்ணா வையா சொல்கிறீர்கள்?" என்று திகைத்த கோவிந்தன், பின்னால் வந்த பாப்பாவைத் திரும்பிப் பார்த்தான்.

"அவர் எப்படி இங்கே வந்தார்?" என்று பிரதிபலித்தாள் பாப்பா.

நடந்ததை எல்லாம் பாங்க் காரியதரிசி விளக்கி முடிக்கும் வரை கோவிந்தன் காத் திருக்கவில்லை. புயல் போல் மாடிக்குத் தாவினான். செந்திலுக்கு எப்படி உதவி செய்யப் போயிற்றென்று அண்ணாவை உலுக்குவதற்காகவும், பத்திரம் கைமாறு வதைக் கடைசி நிமிடத்திலாவது தடுப் பதற்காகவும், பந்துபோல் குதித்துக் கொண்டு படியேறிய கோவிந்தன், பையில் பேனாவைச் செருகிக்கொண்டு தனியே வரும் ரத்தினத்தைப் பார்த்தான்.

"அண்ணா!" என்று கூவினான்.

"கோவிந்தா!"

மூத்தவன் கைகளைச் சற்றே விரிக்க, பசுவிடம் ஓடும் கன்றுக்குட்டிபோல் இளை யவன் துள்ளிச் செல்ல, இருவரும் மார் புறத் தழுவிக் கொண்டனர்

"நேற்று ராத்திரி முதல் உன்னைக் காணோமே!" என்று விசாரித்தான் ரத்தினம். "தலையில் பலத்த காயம் வேறு என்று பாப்பா சொன்னாள்!... அடே! அவளும்வந்திருக்கிறாளா! வாம்மா, இரண்டு பேரும் எங்கே மாயமாக மறைந்து விட்டீர்கள்?"

தான் வந்த நோக்கம்—ஒரு கண நேரத் திற்கு நினைவினின்று நழுவிய குறிக்கோள் —கோவிந்தனை உந்த, அவன் சகோதர னின் அணைப்பிலிருந்து தன்னை விடுவித் துக்கொண்டான்.

"அண்ணா, அந்தப் பாட்டி கதையை எல்லாம் கேட்பதற்கு இன்னும் பொழுது நிறைய இருக்கிறது. முதலில் இதற்குப் பதில் சொல்லுங்கள். பாங்க் காரியதரிசி சொல்லுவதெல்லாம் நிஜம்தானா?"

ரத்தினம் புன்னகை செய்தான். "பாங்க் காரியதரிசி பொய் சொல்லக் கூடியவர் அல்லவே!"

"விடுதலைப் பத்திரம்?"

"கையெழுத்துப் போட்டுக் கொடுத் தாயிற்று."

"இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட் டியுமாயிற்று," என்றான் செந்தில் உள்ளேயிருந்து வந்துகொண்டே. காற் சட்டைப்பைக்குள் அவன் கையை விட்ட போது சாவிக்கொத்தின் ஓசை கேட்டது.

"அண்ணா!" என்றான் கோவிந்தன் அதிர்ச்சி அடைந்தவனாய்.

பாப்பா, "என்ன அண்ணா இது? அவ சரப்பட்டுவிட்டீர்களே?" என்று கையைப் பிசைந்தாள்.

"ஓ!" என்றான் செந்தில், அப்போது தான் அவளைக் கண்டுகொண்டவன்போல. "ஏது, தம்பதி சமேதராகவே தப்பித்து வந்துவிட்டாற் போலிருக்கிறது!"

அவ்வளவுதான். மடை திறந்தாற் போல் அவள் அவன்மீது வசை வெள்ளம் பொழிய, "பாப்பா! என்ன இது? நிறுத்து!" என்றான் ரத்தினம்.

"இதென்ன பிரமாதம் அண்ணா! அக ராதியிலிருக்கும் ஏச்சு மொழி, வழக்கி லிருக்கும் வசை வார்த்தை அத்தனையை யும் கோத்துச் சொன்னாலும் இந்த ராஸ் கலின் அயோக்கியத்தனத்தை முழுமை யாக வர்ணிக்க முடியாதண்ணா!" என்று ஆவேசத்துடன் வாதாடினான் கோவிந் தன். "கடன்காரர்கள் பிடியிலிருந்து இவனை மீட்டீர்களாமே? பாங்க் காரிய தரிசி சொன்னார். என்ன காரியம் செய் தீர்கள் அண்ணா? இவன் மனிதன் என்று நினைக்கிறீர்களா? இல்லை அண்ணா, இல்லை. இவன் மிருகம். மூளை குழம்பி வெறி பிடித்தலையும் மிருகம். இவனை உயிரோடு விட்டு வைக்கக் கூடாது அண்ணா. கொல்ல வேண்டும்! கல்லால் அடித்தே கொல்ல வேண்டும்!"

பளீர்!

கண்மூடிக் கண் திறக்கு முன் அறை விழுந்துவிட்டது. ஒன்றும் புரியாமல் கன்னத்தைத் தடவிக்கொண்ட கோவிந் தன், 'நாமா அடித்தோம்!' என்று திகைத்தபடி கை விரல்களைப் பார்த்துக் கொண்டு நிற்கும் ரத்தினத்தைக் கண்ட தும் நடந்ததை ஊகித்துக்கொண்டான்.

பாப்பா விம்மினாள்.

"நான் அப்படிப் பேசியது தவறுதான் அண்ணா," என்று ஒப்புக்கொண்டான் கோவிந்தன். "நீங்கள் எனக்குத் தண் டனை கொடுத்ததும் நியாயம்தான். ஆனால் அண்ணா, செந்திலைக் கொல்லி

வேண்டுமென்று நான் சொன்னதற்கு ஆத்திரம் அதிகமாகப் போனதுதான் காரணமே தவிர மனதார அப்படிச் சொல்லவில்லை. வாய் வார்த்தையோடு நிற்காமல் நேற்றிரவு கூத்தனூரில் நான் கை நீட்டியதும் போதும், அப்புறம் நான் பட்ட பாடும் போதும். ஆனால் நூறு கொலைக்குச் சமமான கேட்டை நமது தம்பியப்பன் பண்ணியிருக்கிறானே, அது உங்கள் கண்ணிலே படவில்லையாண்ணா? தாமோதரம் கேட்ட பணத்தைக் கொடுக்கச் சொல்லி அம்மா சம்மதித்தார்கள் என்று தெரிந்ததும் அவர்கள் நடத்தையைப் பற்றியே அவதூறாகப் பேசினானே இந்தப் பாவி, அதை நினைக்கிறபோது உங்கள் ரத்தம் கொதிக்கவில்லையா? இவன் டில்லிக்குப் புறப்படுவதற்காக மீனம்பாக்கத்திலே காத்துக்கொண்டிருக்கும்பொழுது அம்மா காலமாகிவிட்ட செய்தியை யாரோ அவசரமாகப் போய்ச் சொல்ல, 'என்னாலே வரமுடியாது. நீ வருவதற்குள்ளே பிளேன் புறப்பட்டுப் போய்விட்டது என்று சொல்லு, போ,' என்று விமானத்திலே போய் ஏறிக் கொண்டானே, அதை நினைக்கிறபோது உங்கள் நெஞ்சு குமுறவில்லையா? ஏன் அண்ணா தலை குனிகிறீர்கள்? உடன் பிறந்தவன் காதலிக்கிற பெண்ணைப் பிடித்துத் தா என்று ஒரு குடிகாரன் ஆசை காட்டியபோது சலாம் போட்டுப் பிடித்துக் கொடுத்தானே இவனைப்போல ஒரு துரோகி நம் வம்சத்திலே பிறந்திருக்க முடியுமா? அது மாத்திரமில்லை அண்ணா. பாக்கியையும் கேட்டால் உங்கள் குலை நடுங்கும். தாமோதரத்தைப் பார்ப்பதற்காக இங்கிருந்து அவர் மனைவி புறப்பட்டு வர, கண்ணை மூடிக்கொண்டு காரை ஓட்டி வந்த இவன் அவர்கள்மீது வண்டியை ஏற்றிக் காலை ஒடித்ததோடு அல்லாமல் திரும்பிக்கூடப் பார்க்காமல் ஓடிவிட்டானென்பது உங்களுக்குத் தெரியுமா?''

ரத்தினம் கலவரமடைந்தான். ''அப்புறம் ?'' என்றான் பாப்பாவை நோக்கி.

''உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லையாம். டாக்டர் குருநாதனின் ஆஸ்பத்திரியில் தான் இருக்கிறார்,'' என்று பாப்பா பதிலிறுக்க, கோவிந்தன் அடுக்கினான்.

''அப்புறம் என்ன என்று கேட்கிறீர்களா? உங்களுக்குச் சொத்திலே பங்கில்லை என்று கோர்ட்டிலே வாதாட நேர்ந்தால் தாமோதரத்தின் சாட்சி முக்கியம் என்பதற்காக யாருக்கும் தெரியாமல் அவரை நம் தம்பி கடத்திக்கொண்டு வந்துவிட்டான். அது உங்களுக்குத் தெரியுமா?''

''அப்பாவை மட்டுமல்ல. துளசி அண்ணியையும் கூட்டிக்கொண்டு வந்துவிட்டார்,'' என்று அறிவித்தாள் பாப்பா.

கோவிந்தன், ''கூத்தனூரில் நடந்த நாடகத்துக்குக் கனகசபை புரொடியூசர். நம் தம்பிதான் டைரக்டர், அண்ணா,'' என்று செந்திலைச் சுட்டிக் காட்டினான்.

''நீங்கள் சொல்லுவது ஒன்றுமே புரியவில்லை. துளசி அகப்பட்டுவிட்டாளா? இப்போது எங்கிருக்கிறாள்?''

''அதுதான் பாயிண்ட்,'' என்றான் கோவிந்தன். ''உங்கள் கேள்விக்குப் பதில் சொல்லக்கூடியவன் செந்தில் ஒருவன் தான். அவனையே கேளுங்கள்.''

ரத்தினம் ஆவலோடு செந்திலை விசாரித்தான்.

அவனோ நெற்றியைச் சுளித்தான். ''எனக்கு எப்படித் தெரியும்?''

பாப்பாவின் விழிகளில் கனல் பறந்தது. ''உயிரோடுதான் வைத்துக்கொண்டிருக்கிறாரோ, இந்நேரம் ஒழித்தே கட்டி விட்டாரோ!''

''செந்தில்!'' என்று அவன் கைகளைப் பிடித்துக் கொண்டான் ரத்தினம். ''துளசி இருக்கிற இடம் உனக்குத் தெரியுமேயானால் தயவுசெய்து சொல்லிவிடப்பா. இந்த உதவியை என்றைக்கும் மறக்கமாட்டேன். துளசி இல்லாமல் என்னாலே வாழ முடியாது.''

செந்தில் விருட்டென்று கைகளை உருவிக்கொண்டான், ''தெரியாதென்று தான் சொல்லிவிட்டேனே, அப்புறம் ஏன் தொந்தரவு பண்ணுகிறீர்கள்?'' என்று எரிந்து விழுந்தான். பிறகு செயற்கையாக ஒரு கொட்டாவி விட்டுவிட்டுக் கைக்கடியாரத்தைப் பார்த்தபடி, ''ஓரே அசதியாக இருக்கிறது. சீக்கிரமாய்ச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொள்ள வேண்டும்,'' என்றான்.

''பார்த்தீர்களா அண்ணா!'' என்றான் கோவிந்தன். ''பணம்தான் அவனுக்குப் பெரிது. அண்ணன் தம்பி, மானம் மரியாதை, நாணயம், நேர்மை இவை எல்லாவற்றையும் என்றைக்கோ குழி தோண்டிப் புதைத்துவிட்டான்,'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பாப்பா அவன் காதுக்குள் ஏதோ கிசுகிசுத்தாள்.

கோவிந்தன் ஒரு கணம் அவள் சொன்ன யோசனையை மனத்துக்குள் சுழற்றிப் பார்த்தான், அவன் முகம் தெளிவு கண்டது. "அண்ணு, நீங்களும் பாப்பாவும் கிழே போயிருங்கள். செந்தி லோடு ஒரு வார்த்தை தனியாகப் பேசி விட்டு ஐந்து நிமிஷத்திலே வந்து விடு கிறேன். ஏன் தயங்குகிறீர்கள்? நீங்கள் நினைக்கிற மாதிரி தப்பாய் ஒன்றும் நான் செய்துவிடப் போவதில்லை. எல்லாம் நன்மைக்குத்தான். போங்கள் சொல்லு கிறேன்," என்ருன்.

ரேடியோவில் புல்லாங்குழல் கச்சேரி நடைபெற்றுக்கொண்டிருந்தது. மென்மையான பின்னணியாக அது ஒலிக்க, "என் யோசனை எப்படி!" என்ருள் பாப்பா பெருமையுடன்.

"பிரமாதமான ஐடியா!" என்று பாராட்டினுன் கோவிந்தன், அவள் மூக்கைச் செல்லமாகப் பிடித்து அசைத்துக் கொண்டே.

பாங்க் காரியதரிசியின் வீட்டின் முகப்பு ஹாலில், சோபாவின்மீது அவளும் அதன் கைப்பிடி மேல் அவனும் உட்கார்ந்திருந்தார்கள். காரியதரிசி சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்வதற்காக உள்ளே சென்றிருந்ததால், இருவரும் மனம் விட்டுப் பேச வசதியாக இருந்தது. ரத்தினமும் துளசியும் பின்புறமிருந்த விரிந்த தோட்டத்தில் உலவிக்கொண்டிருந்தனர்.

"உடனே ஒப்புக்கொண்டு விட்டாரா!" என்று கேட்டாள் பாப்பா.

"யார்?"

"வேறு யார், உங்கள் தம்பிதான்."

"பூ!" என்ருன் கோவிந்தன். "அந்தத் திருட்டுப் பயலை மரியாதையாக 'ர்' போட்டுப் பேச வேண்டுமா என்ன?"

"என்னமோ, கடைசியில் அவர் விரும்பியது அவருக்கும், நமக்கு வேண்டியது நமக்கும் கிடைத்தது," என்று மகிழ்ந்தாள் பாப்பா. "ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?"

கோவிந்தன் ஒரு பெருமூச்சு விட்டான். "நாம்கொஞ்சம்அவசரப்பட்டுவிட்டோம். நன்ருகத் தேடிப் பார்த்துவிட்டு அப்புறம் பேரம் பேசியிருக்கலாம். ஷெட்டுக்குள்ளே ஒளித்து வைத்திருப்பான் என்று தெரியாமல் போய்விட்டதே!"

அவள் அவன் கையை உதறிவிட்டு எழுந்தாள். "பார்த்தீர்களா, பார்த்தீர்களா? இப்போது வருத்தப்படுகிறீர்கள், இல்லையா?"

அவன் அவளைப் பிடித்திழுத்து உட்கார வைத்து, ஆள்காட்டி விரலால் அவள் கன்னத்தைக் குத்தினுன். "சுத்தக் கிறுக்காக இருக்கிருயே! எதற்காக வருத்தப்பட வேண்டும்? இல்லை, கேட்கிறேன்? தனக்குப் பாகம் வேண்டாமென்று அண்ணுவே எழுதிக் கொடுத்துவிட்ட பிறகு, நம் பங்கை வைத்துக்கொண்டு என்ன செய்யப்போகிருேம்? நாமே வைத்துக் கொண்டாலும், அதிலிருந்து ஒரு பைசா தொட அண்ணு சம்மதிக்க மாட்டார். அப்புறம் அது இருந்தென்ன, போயென்ன? துளசியையும் அண்ணுவையும் சேர்த்து வைக்கிற சந்தர்ப்பம் நமக்குக் கிடைத்ததே, அதைச் சொல்லு. நம் பங்கு மட்டுமல்ல இந்தியா பூராவையும் விலையாகக் கொடுத்தாலும் அண்ணிக்கு ஈடாகுமா, அல்லது அண்ணியைப் பார்த்தவுடனே அண்ணுவின் முகத்திலேற்பட்ட மலர்ச்சிக்கு ஈடாகுமா?"

பாப்பாவுக்குப் பரம திருப்தி. "ஆனுல், அண்ணுகிட்டே இப்போது மூச்சு விடக் கூடாது. செந்திலே மனம் மாறித் துளசி அண்ணியை விட்டுவிட்டதாக அவர் நினைத்துக் கொண்டிருக்கட்டும். அது தான் நல்லது."

"ஆமாம், உன் அப்பாவை எங்கே காணும்?"



"சாமி! நான் பெரிய குடும்பத்தை காப்பாத்த வேண்டி இருக்கு சாமி! உங்களாலான தருமம் செய்யுங்க சாமி!"

பாப்பா வாயைப் பொத்திக்கொண்டு, "இந்த அநியாயத்தைக் கேட்டீர்களா? ஆஸ்பத்திரியில் அவர் காயத்திற்குத் தையல் போட்டு, ஒரு தூக்கம் தூங்கி எழுந்ததுமே அவருக்குச் சுய நினைவு வந்து விட்டதாம்!" என்றாள்.

கோவிந்தனின் கண்கள் விரிந்தன. "என்ன!"

"அதற்கப்புறம் போட்டதெல்லாம் வேஷமாம்! செந்திலும் அண்ணாவும் படுக்கைக்கு அருகில் நின்றபடி டாக்டர் குருநாதனோடு தனித் தனியே பேசியதைக் கேட்ட பிறகு, அவர் மனம் ஒரேயடியாக மாறிவிட்டதாம். சுயநலக்கார செந்திலோடு சேர்ந்தது எவ்வளவு தவறு என்று தெரிந்து போயிற்றாம். அவருடைய பிடியிலிருந்து தப்புவதற்கு, இதுதான் ஒரே வழி என்று முடிவு பண்ணி, சுய நினைவு திரும்பாததுபோலவே கடைசிவரை நடித்திருக்கிறார்!"

"என்னால் நம்பவே முடியவில்லையே!"

"கனகசபையின் பணத்தையெல்லாம் திருடி, காருக்குப் பின்னாலிருக்கிற பெட்டியில் வைத்திருந்தாராம் உங்கள் தம்பி. பெட்டிச் சாவி, ஸ்விட்ச் கீயோடு வளையத்தில் தொங்கிக் கொண்டிருந்ததாம். எங்கோ ஓர் இடத்தில் ரயில்வே கேட் அடைத்திருந்தபோது, மற்ற இருவரும் தூங்குவதாக நினைத்துக்கொண்டு, செந்தில் இறங்கிக் கொஞ்சதூரம் போய்விட்டு வந்திருக்கிறார். அதற்குள் அப்பா பெட்டியைத் திறந்து, தோல் பையை எடுத்து, சாலையை அடுத்தாற்போலிருந்த புதருக்குள் போட்டுவிட்டாராம்—எவனாவது அதிர்ஷ்டக்காரனுக்குக் கிடைக்கட்டும் என்று!"

"அப்படியானால் உன் அம்மாமீது கார்..."

கேள்வியை முந்திக்கொண்டது பாப்பாவின் விளக்கம். "அப்போது அவர் உண்மையிலேயே தூக்கத்தில் இருந்திருக்கிறார். விபத்தைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை."

கோவிந்தனால் வியப்புக் கடலினின்று மீள முடியவில்லை. "உனக்குமேல் இருப்பார் போலிருக்கிறதே உன் அப்பா! அவரைக் கங்கிராஜுலேட் பண்ண வேண்டும். இப்போது அவர் எங்கே?"

"இது தெரியவில்லையா!" என்றாள் பாப்பா. "தானே ஏன் தோல் பையைக் கண்டுபிடிக்கும் அதிர்ஷ்டக்காரராக இருக்கக் கூடாதென்று கிளம்பி விட்டார்."

ஒரு விநாடி ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த கோவிந்தன், தாமோதரத்தின் தந்திரத்தை நினைத்துச் சிரிக்க ஆரம்பித்தான். வயிற்றைப் பிடித்துக் கொண்டு விழுந்து விழுந்து சிரிக்கலானான்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்றாள் துளசி, ஆப்பிள் பழத்தின் தோலைச் சீவிக்கொண்டே.

மேகமற்ற தெளிந்த வானத்தில் நிலா நீந்திக் கொண்டிருந்தது. பரந்து கிடந்த புல் விரிப்பு உள்ளங்காலில் சில்லென்று உறைத்தது. பாங்க் காரியதரிசியின் தோட்டத்தில், செயற்கைத் தடாகமொன்றின் கரையில் அமைந்திருந்த பாறைமீது துளசிக்கு எதிர்த்தாற்போல் உட்கார்ந்திருந்த ரத்தினம், "இருபத்து நாலு மணி நேரத்துக்குள் என்னவெல்லாம் நடந்துவிட்டது! அதை நினைத்துத்தான் சிரித்தேன்," என்றான்.

"எல்லாம் கதை மாதிரி இருக்கிறது. இல்லை அத்தான்?"

"ஆமாம்."

"என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கிற அன்பு உள்பட. அப்படித்தானே?"

அவள் பழத்தை நறுக்க ஆரம்பித்தாள். வளையல்கள் கலகலத்தன.

அவன் நீண்ட மூச்சாக இழுத்துவிட்டுத் தாழ்ந்த குரலில் சொன்னான். "உன்னிடத்தில் நான் வைத்திருக்கும் அன்பு,

## குமாஸ்தான்

அழகான டைப்பிஸ்டு கூறினாள்: "என் மேஜையை இங்கே கொண்டு வந்து போட்டுக் கொண்ட பிறகு ரொம்ப உற்சாகமாயும் மனசுக்கு இன்பமாயும் இருக்கிறது, சார்."

"ஹி, ஹி," என்றார் மானேஜர்.

'இங்கே காற்று எப்படி ஜிலுஜிலுவென்று வருகிறது! ஆகா!" என்று முடித்தாள் அழகி.

இன்று நேற்றுபிறந்ததல்ல துளசி.புல்லும் செடியும் முளைப்பதற்கு முன்பே, பூமியும் சந்திரனும் உண்டாவதற்கு முன்பே அது பிறந்துவிட்டது. அது பூரணமானது, அழியாதது. நாம் மறைந்தாலும் அது மறையாது."

"விசித்திரமான அன்புதான் உங்களுடையது!"

அவள் நீட்டிய ஆப்பிள் துண்டைச் சுவைத்தபடி, "அதிலென்ன சந்தேகம்!" என்றான் அவன்.

"காதலர் என்றால், காதலியின் கண்ணையும் மூக்கையும் கூந்தலையும் வர்ணிப்பார்கள். நீங்கள்தான் எனக்கு உருவமே கிடையாதென்று சொல்லிவிட்டீர்களே!"

"இப்போதும் சொல்கிறேன். என் துளசிக்குத் தோற்றமே கிடையாது, அவள் தோற்றத்துக்கு அப்பாற்பட்டவள். என் நெஞ்சுக்குள் நிறைவு காணும் போதெல்லாம், உள்ளத்தில் இன்பம் சுரக்கும் போதெல்லாம், உன்னதமான, உயர்ந்த உணர்ச்சி உதிக்கும் போதெல்லாம் நான் துளசியைக் காண்கிறேன், கலக்கிறேன், சுவைக்கிறேன்."

தொண்டை கரகரக்க, "அத்தான்!" என்றாள் துளசி, புளகாங்கிதம் அடைந்தவளாய்.

அதற்குள், "ரத்தினம்! ரத்தினம்!" என்று பதட்டத்துடன் அழைத்தபடி பாங்க் காரியதரிசி ஓடிவந்தார். "செந்தில் வீட்டில் ஏதோ கலாட்டாவாம்! போனில் சொன்னார்கள். வா வா!"

எல்லோருமாகக் காரில் ஏறும்பொழுது "ஏன், என்ன நடந்ததாம்?" என்றான் கோவிந்தன்.

ரத்தினம் ஆக்ஸிலரேட்டரை அழுத்தினான்.

"என்னவென்று கேட்பதற்கு முன்னால் போனை வைத்துவிட்டார்கள்," என்றார் பாங்க் காரியதரிசி.

'கலாட்டா' என்று போனில் சொன்னவர், மிகைப்படுத்தவில்லை.

ஐவரும் அந்த வீட்டை அடைந்த போது, சாத்தப்பட்டிருந்த செந்திலின் அறைக் கதவை உலக்கை கொண்டு பெயர்க்கும் முயற்சி நடந்து கொண்டிருந்தது.

உள்ளே இருவர் மூர்க்கமாகக் கட்டிப் புரண்டு சண்டையிட்டுக் கொண்டிருப்பதும் கேட்டபோது துளசிக்கு உடல் நடுங்கிற்று.

ஒரு வழியாகக் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே சென்றதும்—

"செந்தில்!" என்று அலறினான் ரத்தினம்.

செந்தில் மல்லாந்து கிடக்க, அவன் மார்பில் உட்கார்ந்தபடி அவன் கழுத்தை நெரித்துக் கொண்டிருந்தது, ரத்தம் தோய்ந்த ஜிப்பாவுடனிருந்த ஒரு பருத்த உருவம்.

தடதடவென்று புகுந்தார்கள் எல்லோரும்.

அவர்கள் கனகசபையை அப்புறப் படுத்த வேண்டிய அவசியமிருக்கவில்லை. வஞ்சம் தீர்க்கும் வரை உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருந்தவன், வேலை முடிந்ததும் தானே உருண்டு கட்டை போல் விழுந்தான்.

ரத்தினம் பரபரப்புடன் செந்திலின் மார்பைத் தொட்டுப் பார்த்தான். மூக்கின் கீழ் கண்ணாடி வைத்துப் பார்த்தான். "செந்தில்! செந்தில்!" என்று உலுக்கிப் பார்த்தான்.

செந்தில் பேசவில்லை.

அமைதி.

வெகு நேரத்துக்கு அந்த முகத்தையே நோக்கிக்கொண்டிருந்த ரத்தினம், நிமிர்ந்தான். வேதனை நிரம்பிய அவன் விழிகள், சூழ்ந்து நிற்போரை மெல்லத் துழாவி, கோவிந்தனின் கண்களைச் சந்தித்தன.

'செந்திலைக் கொல்ல வேண்டுமென்று துடித்தாயே! உன் எண்ணத்தை வேறொருவன் முடித்துவிட்டான். திருப்தி தானே?' என்று கேட்பது போலிருந்தது அவற்றின் பாவம்.

கோவிந்தன் தலையைத் தாழ்த்திக் கொண்டான்.

ரத்தினத்தின் விழிகள் நிரம்பின.

துளசி விசும்பினாள்.

யாரோ போலீசுக்குப் போன் செய்வது, அடுத்த அறையிலிருந்து கேட்டது.

முற்றும்



சிக்கனம் அளிக்கும் வனஸ்பதியில் சமைத்த உணவுகள் ருசிவாய்ந்தவை மற்றும் சத்து அளிப்பவை என்பது விஷயம் தெரிந்த இல்லாள்களுக்குத் தெரியும்

# அவள் குடித்தனம் ஆரம்பித்த நாளிலிருந்து 7,300 தடவைகள் சமைத்துள்ளாள்

### வனஸ்பதி உபயோகித்தால் இல்லாள்களுக்கு மிகக் குறைந்த செலவில் அதிக போஷாக்கு வாய்ந்த உணவுகளைச் சமைக்கமுடியும்

அனுதினம் இரண்டு தடவைகள் சமைப்பது, வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுவது, குழந்தைகளை 'கட்டி மேய்ப்பது'—ஒரு இல்லாளின் அலுவல்களுக்கு கணக்கேது, வழக்கேது! மற்றும் குடும்பத்தினர் வீடு திரும்பும்பொழுது, அனுதின அலுவல்களை முடித்து, உற்சாகத்துடன் இருக்க வேண்டும். இதற்கெல்லாம் அவளுக்கு ஏராளமான சக்தி அவசியம்.

**இல்லாளின் வரப்பிரஸாதம்**

விஷயம் தெரிந்த இல்லாள்களுக்கு இந்த சக்தி அவர்கள் உணவிலிருந்து, அதிலும் முக்கியமாக, உணவிலுள்ள கொழுப்பு சத்திலிருந்து கிடைக்க வேண்டுமென்பது தெரியும். கொழுப்பு சத்து சக்தி அளிப்பதோடுமட்டுமின்றி, விடமின் "ஏ" மற்றும் "டி"யின் குணங்களை தேகத்திற்கு கிடைக்க உதவவும், வியாதிகள் மற்றும் களைப்பு ஏற்படாமல் தடுக்கவும் செய்கிறது. உணவில் இந்த கொழுப்பு சத்தை நிறையச் சேர்ப்பதற்காக இல்லாள்களில் பெரும்பாலோர் உணவுகளை தயார்செய்ய வனஸ்பதியை உபயோகிக்கிறார்கள். சுத்தமானதும், போஷாக்கு சத்து வாய்ந்ததுமான இந்த தாவர கொழுப்பின் ஒவ்வொரு அவுன்ஸிலும் ஆரோக்கியமளிக்கும் விடமின் "ஏ" 700 இன்டர்நேஷனல் யூனிட் சேர்ந்துள்ளது. வனஸ்பதியின் விலை மிகவும் குறைவானதால், அதை உபயோகித்தால், இதர உணவு பொருள்களை வாங்க அதிக பணம் மிச்சமாகும்! இந்தக் காரணங்களினால்தான் வனஸ்பதி இல்லாளின் வரப்பிரஸாதம் எனப் புகழ் பெற்றுள்ளது. நீங்களும் எல்லாச் சமையலுக்கும் சுத்தமான இந்தத் தாவர கொழுப்பு சத்தை உபயோகியுங்கள்!



## வனஸ்பதி இல்லாளின் வரப்பிரஸாதம்

தி வனஸ்பதி மான்யுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா ஸ்தாபனத்தினால் வெளியிடப்பட்டது

WMA. 4594

